# தென்மேற்கு ஆசிய வரலாறு

[HISTORY OF SOUTH WEST ASIA]

கா. அசதுல்லா




தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க.வெ.) வரிசை எண் — 691

# தென்மேற்கு ஆசிய வரலாறு

[பட்டப்படிப்பிற்குரியது]

(திருத்தப்பட்ட பாடத்திட்டத்தின்படி வெளியிடப்படுகிறது)

ஆசிரியர்

**கா. அசுதுல்லா, எம்.ஏ.,**
துணைப் பேராசிரியர், வரலாற்றுத்துறை,
புதுக் கல்லூரி,
சென்னை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

# பதிப்புரை

தென்மேற்கு ஆசிய வரலாறு என்ற இந்நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 691ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 726 நூல்கள் வெளிவந்துள்ளன. இந்நூல் மைய அரசு, கல்வி, சமூக நல அமைச்சகத்தின் 'மாநில மொழியில் பல்கலைக் கழக நூல்கள் வெளியிடும் திட்டத்'தின் கீழ் வெளியிடப்படுகிறது.

மேலாண்மை இயக்குநர்
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

# பொருளடக்கம்

# தோற்றுவாய்

## தென்மேற்கு ஆசியா

**புவியியல் கூறுகள்**

தென்மேற்கு ஆசியாவின் பரந்த நிலப்பரப்பில் துருக்கி, பாரசீகம், சவூதி அரேபியா, இராக், ஏமன், சிரியா, லெபனுன், இஸ்ரேல், ஜோர்தான், சைப்ரஸ், உம்மான்,




படம் 1.

மஸ்கத், கதர் மற்றும் சிற்றரசுகள் பற்பல அடங்கியுள்ளன. இவற்றின் எல்லைகளைச் சுற்றிலும் மத்தியதரைக் கடல், கருங் கடல், காஸ்பியன் கடல் (Caspian Sea), செங்கடல் போன்ற

பல கடல்கள் சூழ்ந்துள்ளன. இந் நிலப்பரப்பின் பரப்பளவு 27,46,000 சதுர மைல்களாகும். மொத்த மக்கள்தொகை ஏறக்குறைய 96 இலட்சமாகும்.

பாலஸ்தீனம் குன்றுகளும், பள்ளத்தாக்குகளும், தொடர்ந்து நீண்ட தொடர்ச்சி மலைகளும் சூழத் தோற்றமளிக்கும். காஸ்பியன் கடலைச் சூழ்ந்த சில நிலவெளிகளும், பாலஸ்தீனத்தின் சில பாகங்களும் கடல் மட்டத்திலும் தாழ்வாக உள்ளன. மேலும், ஆங்காங்கே அமைந்துள்ள சில மலைகள் 10,000 அடிக்கு மேல் உயரமுள்ளவை.

அனட்டோலியா (Anatolia), பாரசீகம் போன்ற பாகங்களின் சங்கிலி கோத்தது போன்றுள்ள மலைத் தொடர்களின் நடுவே பீடபூமிகள் அமைந்துள்ளன. அரேபியா முழுதும், இராக்கின் பெரும் பகுதியும், பாரசீகத்தின் மத்திய பாகத்தின் பெரும் பகுதியும், கிழக்குப் பிரதேசமும், தென்மேற்கு ஆசியாவின் மூன்றில் இரண்டு பாகத்தை அளாவியுள்ள பாலைவனப் பகுதிகளாகும். இப் பாகத்தின் வருடாந்தர மழையின் அளவானது நான்கு அங்குலத்திற்கும் குறைவானது. அரேபியாவிலும் பாரசீகப் பகுதிகளிலும் விஸ்தாரமாகக் காய்ந்துள்ள புல்வெளிகளும், வடக்கு இராக்கிலும் சிரியாவிலும் செழிப்பான புல்வெளிகளும் காணப்படுகின்றன.

மேற்கு ஈரானின் சாக்ரூாஸ் (Zagros) மலைகளிலும், துருக்கியின் தென் கிழக்கிலுள்ள குர்தீஸ்தான் (Kurdistan) மலைகளிலும், இராக்கின் வட கிழக்கிலும், துருக்கியின் வடகடற்கரையிலுள்ள மலைப் பகுதிகளிலும், காஸ்பியன் கடற்கரைப் பாகங்களிலும் மிக அடர்ந்த செழிப்பான செவ்வகில் (Cedar) மரங்கள் முதலியன நிறைந்த காடுகள் காணப்படுகின்றன. தென்மேற்காசிய நாடுகளின் மக்கள் தொகை நாட்டுக்கு நாடு வேறுபட்டிருக்கின்றன. இப் பிரதேசத்தின் மக்கள் தொகையில் மூன்றில் ஒரு பகுதியினர் துருக்கி நாட்டிலேயே உள்ளனர். தென்மேற்காசியாவின் கிராமச் சுற்று வட்டாரங்களிலேயே மக்கள் தொகை அதிகமாக உள்ளது. இருப்பினும், அனேக பெரும் நகரங்களும் பட்டணங்களும்கூட அங்கு உள்ளன. இராக்கின் தலைநகரமான பாக்தாதும், ஈரானின் தலைநகரான தெஹ்ரானும் அவற்றுள் முக்கியமானவையாகும்.

மத்தியதரைக் கடலின் கிழக்குக் கோடியில் பைரூத், ஹலப் (அலெப்போ), திமஷ்க் (டமாஸ்கஸ்), ஜெரூசலம், ஹைஃபா,

தெல் அவீவ் போன்ற சிறு சிறு நகரங்களும் உண்டு. ஒன்றரை இலட்சம் மக்கள்தொகையுள்ள மக்காவும் (Mecca), அதைவிடக் குறைந்த மக்கள்தொகையுள்ள மதீனாவும் (Medina), ரியாதும் (Riyadh), ஜித்தாவும் (Jiddah) சவூதி அரேபியாவிலுள்ள முக்கிய நகரங்களாகும்.

## மூன்று மதங்களின் பிறப்பிடம்

யூத மதம் (Judaism), கிறிஸ்தவ மதம் (Christianity), இஸ்லாம்(Islam) என்னும் மூன்று முக்கிய மாதங்களின் பிறப்பிடமாக விளங்கி நிற்கின்றது இத் தென்மேற்கு ஆசியப் பிரதேசம். ஜெரூசலம் (Jerusalem), பெத்லஹேம் (Bethleham), நாஸரத் (Nazareth), மக்கா, மதீனா போன்ற உலகப் பிரசித்தி பெற்ற புனித நகரங்களில் மேற்கூறிய மூன்று மதங்களின் மத நிறுவனங்கள் அமைந்துள்ளன.

## அரசியல் முக்கியத்துவம்

மேற்கில் ஐரோப்பாவும், கிழக்கில் ஆசியாக் கண்டத்தின் பெரும் பாகமும், தெற்கில் ஆப்ரிக்காவும் உள்ள நிலவியல் அமைப்பின் இடையில் அமைந்துள்ள தென்மேற்காசியா, உலக வரலாற்றுத் தொடக்க காலத்திலிருந்து, மிகவும் முக்கிய பங்கேற்று வந்துள்ளதை உலக வரலாற்று வளர்ச்சி எடுத்தியம்புகின்றது.

அஸ்ஸீரியா (Assyria), பாரசீகம் (Persia), கிரீஸ் (Greece) ஆகிய நாடுகள் தென்மேற்கு ஆசியாவின் பிரதேசத்தைச் சேர்ந்த பெரும் பாகங்களைத் தங்களது ஆட்சிக்கு உட்படுத்தி ஆண்டு வந்துள்ளதை வரலாறு எடுத்துக் காட்டுகிறது. கி.பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்து தென்மேற்கு ஆசியாவின் பெரும் பகுதியை முஸ்லிம்கள் ஆண்டு வந்திருப்பதையும் வரலாற்றிலிருந்து நாம் அறிகிறோம். பல நூற்றாண்டுகளுக்குப் பிறகு, கிறிஸ்தவர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையே கசப்பான மோதல் ஏற்பட்ட காலத்திலும்கூட, இப் பிரதேசத்தை முஸ்லிம்களே ஆண்டு கொண்டிருந்தனர் என்பதையும் வரலாறு நிரூபிக்கிறது.

கி.பி. 19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து இப் பிரதேசத்தை அடக்கியாள மிகச் சக்திவாய்ந்த மேற்கத்திய நாடுகள் ஒன்றுடனொன்று போட்டி போட்டுக்கொண்டு போராடி வந்திருப்பதும், குறைந்த பட்சம் சில இராணுவ

முக்கியத்துவம் பெற்ற இடங்களையாவது பிடித்துக்கொள்ள வேண்டுமென்று அவை முயன்று வந்திருப்பதும் வரலாற்றில் தெள்ளத்தெளிய காணக் கிடைக்கின்றன.

**இனப் பிரிவுகள்**

மூன்று வெவ்வேறு இனங்கள் (Races) தங்கள் தங்கள் பேரரசுகளை அவ்வப்போது இப் பிரதேசத்தில் நிலைநாட்டி, வளர்த்துச் செல்வாக்கைப் பெற்றுள்ளன. அவையாவன:

(1) பாரசீகப் பேரரசு - Persian Empire.

(2) அராபியப் பேரரசு - Arab Empire.

(3) உதுமானியப் பேரரசு - Ottoman Empire.

பாரசீகர்களும் துருக்கர்களும் காகேசிய இனப் (Caucasian) பிரிவினராவர்.

அராபியர்களும் யூதர்களும் சேம் வம்சம் (Semitic) என்னும் இனத்தைச் சார்ந்தவராவர்.

இம் மூன்று பெரும் பேரரசுகளை நிருமித்து ஆட்சி செலுத்திய வர்கள், முறையே தென்மேற்காசியாவில் வசித்துவரும் ஈரானி யர்கள், அராபியர்கள், துருக்கியர்கள் என்ற வெவ்வேறு இனப் பிரிவுகளைச் சேர்ந்தவர்களாவர். மற்றொரு நான்கா வது இனப் பிரிவினர்க்கு யூதர்கள் (Jews) என்று பெயர். யூதர்கள் தங்களுக்கென்று பேரரசு எதையும் நிறுவவில்லையாயினு லும், தென்மேற்காசிய வரலாற்று வளர்ச்சியில் இவர்களுக்கு முக்கியப் பங்குண்டு என்பதை எவராலும் மறைத்து விட இயலாது. உதாரணமாக, யூதர்களுக்கும் அராபியர்களுக்கு மிடையே அண்மையில் கடும் போர்கள் மூண்டன. முடி வென்ன? யாரும் ஒருவரை யொருவர் ஒழித்துக்கட்டிவிட முடியாதபடி நடுநிலைமையில் போர் நின்றது. 'வாழ்! வாழ விடு!' என்பதே வரலாறு விளக்கும் உண்மை.

இத் தென்மேற்காசியப் பிரதேசத்தில் யூத மதம், கிறிஸ்தவ மதம், இஸ்லாம் என்னும் மூன்று பெரும் மதங்கள் தோன்றி வளர்ந்தன என்பதை முன்பே குறிப்பிட்டிருக்கிறோம். இப் பிரதேசத்தில் தோன்றிய பழம் பெரும் கலாசாரங்கள் மக்க ளறிவை வளர்க்க உதவின. மேலும், இம் மதங்களும் கலா சாரங்களின் வளர்ச்சியுடன் கூட, அயல்நாடுகளின் படை

யெடுப்புகளாலும், 'பழையன கழிந்து புதியன புகுந்தன' என்ற பழமொழிப்படி புதுப்புது கருத்துகளையும் எண்ணங்களையும் சிந்தனை சக்திகளையும் அடையப் பெற்று, மேன்மேலும் செழுமையுடன் தலைதூக்கி நிற்க ஆரம்பித்தன. இதன் விளைவாக, தென்மேற்காசிய மக்கள் சமுதாயத்தில் புதுப்புது புரட்சிகள் விளையத் தொடங்கின.

கி.பி. ஏழாம் நூற்றாண்டில் தோன்றிய இஸ்லாம் மதம், அத்தகைய புரட்சிகளுள் தலையானது. இதை வெற்றிகரமாய் மண்ணிடை நிலைநாட்டியவர் கடவுளின் தூதரான முகம்மது நபியவர்கள் ஆவார்கள். எந்தப் பீரங்கிக் குண்டுகளோ, எந்தப் புது அரசியல் இலட்சியங்களோ, கொள்கைகளோ தோற்றுவிக்க முடியாத சக்தி வாய்ந்த பெரும் அதிர்ச்சியை உயர்வு, தாழ்வு, பிளவுகள் மலிந்த மக்கள் மத்தியில் இஸ்லாம் உண்டுபண்ணி விட்டது. நபி நாயகம் பிரசாரம் செய்த இஸ்லாமிய புதுக் கருத்துகளான, 'கடவுள் மனித சமுதாயத்தின் இணையிலாத் தலைவன்; அவன் படைத்த எல்லா மனித வர்க்கமும் உயர்வு தாழ்வற்ற ஏக சகோதரர்கள்' என்பன போன்ற புரட்சிகரமான புது உபதேசங்கள் அராபியர்களை விழிப்படையச் செய்தன. ஆதலால், தென்மேற்காசியாவின் வரலாற்றை ஆழ்ந்து படிக்கு முன், அரேபியாவின் பழைய சூழ்நிலைகளைப் பற்றியும், நபி நாயகம்பற்றியும், கி.பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்து பத்தாம் நூற்றாண்டு வரை இஸ்லாம் எப்படி, எங்கெல்லாம் பரவிற்று என்பதைப்பற்றியும் முதலில் தெரிந்து கொள்வது மிகமிக அவசியமாகும். அப்பொழுதுதான், தென்மேற்காசிய வரலாற்றில் பங்கேற்ற இனங்களையும், வீரத் தலைவர்களையும், சமுதாயங்களையும் நிழற்படமெடுத்தது போல் உண்மை தெற்றென விளங்கும்.

## அரேபியா

### புவியியல் கூறுகள்

உலக தீபகற்பங்களிலெல்லாம் பெரியது அரேபியா ஆகும். தென்மேற்காசியாவின் தென்மேற்குக் கோடியில் இஃது அமைந்துள்ளது. இதன் வடக்கில் சிரியா நாட்டுப் பாலைவனமும், தெற்கில் இந்துமாக் கடலும், கிழக்கில் பாரசீக வளைகுடாவும், மேற்கில் செங்கடலும் எல்லையாக அமைந்துள்ளன. அரேபியாவின் முக்கிய மாநிலங்கள் ஹிஜாஸ் (Hijaz), ஏமன் (Yemen), ஹத்ரமவ்த் (Hadramaut) என்பன ஆகும். ஹிஜாஸ் என்ற மாநிலத்தில்தான் இஸ்லாம் பிறந்தது. இம் மாநிலத்தில்

தான் மக்கா, மதீனு, தாயிஃப் போன்ற உலகப் புகழ் வாய்ந்த நகரங்கள் உள்ளன. இப் பிரசித்தி பெற்ற மாநிலத்தில் பல இன




படம் 2.

மக்கள் வாழ்ந்தனர். அவர்களுடைய எழுச்சியும் வீழ்ச்சியும் அற்புதமானவை. இவ்விதமாக, அரேபியாவின் வரலாற்றில் வாழ்ந்த பலவித இனங்களில் இஸ்மாயீலிகள் (Ismaelites) என்

பவர்களும் ஓரினத்தினராவர்.[1] இவர்கள் இஸ்மாயீல் என்பவருடைய சந்ததிகளேயாவர். இத் தலைமுறையினர்களில் தோன்றிய குறைஷ் (Quraish) என்பவரின் வழி வந்தவர்கள் 'குறைஷிகள்' என்று அழைக்கப்படுவார்கள்.

## இஸ்லாம்

### பிறப்பும் விரிவான வளர்ச்சியும்

கி.பி. 570-ல், புகழ் வாய்ந்த மக்கா நகரில், குறைஷி வம்சக் குடும்பத்தில், ஆமினு என்னும் மாதுக்குக் குழந்தை ஒன்று பிறந்தது. அக் குழந்தையின் பாட்டனுரான அப்துல் முத்தலிப் (Abdul Muttalib) என்பவரால், அக் குழந்தைக்குப் 'புகழ்ச்சிக்குரியவர்' என்னும் பொருளுள்ள முகம்மது (Muhammad) என்று பெயரிடப்பட்டது. முகம்மது பிறப்பதற்கு முன்னமே, அவருடைய தந்தையான அப்துல்லா (Abdullah) காலமாகி விட்டார். முகம்மதுக்கு ஆறு வயதான போது அவருடைய அன்னையாரும் மரணமடைந்தார். அதன் பிறகு, அப்துல் முத்தலிப் என்னும் பாட்டனுரே குழந்தை வளர்ப்பின் பொறுப்பை ஏற்றுர். ஆனுல், சில வருடங்களில் (கி.பி. 579) அப் பாட்டனுரும் இறக்கவே, முகம்மது தம் பெரிய தந்தையாகிய அபூத்தாலிப் என்பவரால் பாதுகாக்கப் பெற்றுர்.

சிறுவரின் நன்மையில் அக்கறையுள்ளோரெல்லாம் ஒருவர் பின் ஒருவராகக் காலஞ்சென்று விடவே, அனுதையான அச் சிறுவர், கண்டோரெல்லாம், கேட்டோரெல்லாம் வியக்கும் வண்ணம், தமது எளிமையான, அடக்கமான, உண்மையான, கண்ணியமான நடை உடை பாவனைகளால் 'அல் அமீன்' (Al Amin) அதாவது, 'நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்' (Trust worthy) என்று எல்லோராலும் புகழப்படும் அளவுக்கு உயர்ந்துவிட்டார்.

குழந்தைப் பருவத்திலேயே எல்லோராலும் போற்றப்படும் அளவுக்கு உயர்ந்துவிட்ட அவ் வுத்தமச் சிறுவர் பிற்காலத்தில்

[1] இப்ராஹீம் நபி (ஆபிரஹாம் தீர்க்கதரிசி) என்னும் முதுபெரியாரின் மூத்த மைந்தர் இஸ்மாயீல் என்பவராவார். இவருடைய வழித்தோன்றல்கள் 'பனீ இஸ்மாயீல்' என்று அராபிய மொழியிலும், Ismaelites என்று ஆங்கிலத்திலும் அழைக்கப்படுவர். இப்ராஹீம் நபியின் மற்றொரு மைந்தரான இஸ்ஹாக் என்பவரின் மைந்தர் யாக்கூப் 'இஸ்ராயீல்' என்ருெரு சிறப்புப் பெயர் பெற்றிருந்தார். இவருடைய வழித்தோன்றல்கள் 'பனீ இஸ்ராயீல்' என்று அராபிய மொழியிலும், Israelites என்று ஆங்கிலத்திலும் அழைக்கப்படுவர்.

புகழ்வாய்ந்த இலட்சியங்கள், கொள்கைகள் அடங்கிய ஒரு சிறந்த மதத்துக்கும் நாகரிகத்துக்கும் தலைமை வகித்துப் பழைய உலகத் தோற்றத்தையே மாற்றிப் புது உலகம் தோன்றக் காரணமாகிவிட்டார் என்பதில் வியப்பு என்ன இருக்க முடியும்! தம் வியாபார காரியாதிகளின் நிர்வாகியாக முகம்மது என்ற இவ் வுத்தம வாலிபரை நியமித்துக்கொண்ட கதீஜா என்ற பண்பு மிக்க சீமாட்டி, முகம்மதின் உத்தமத்தன்மையைக் கண்டு, யாவரையும் போலவே வியப்புற்று, இறும்பூதெய்தி அவரையே மணந்தும் கொண்டார் (595 கி.பி.).

இயற்கையாகவே, அவ்வப்போது ஆழ்ந்த சிந்தனையில் மெய்ம்மறந்துவிடும் குணம் படைத்த முகம்மது, மக்கா நகரின் அருகிலுள்ள ஹிரா (Hira) என்னும் மலைக் குகைக்குச் சென்று, அங்கு ஏகாந்தமாக அமர்ந்த வண்ணம், கடவுள் பிரார்த்தனை செய்த வண்ணம், தம்மையே மறந்து மணிக்கணக்கில் இருந்துவிடுவார். இவ்விதமாக, அவர் நாள்தோறும் அம் மலைக் குகைக்குச் சென்று, மனவொருமைப்பாட்டுடன் பிரார்த்தனையை ஏறத்தாழப் பதினைந்து ஆண்டுகள்வரை நடத்திவரும் காலத்தில், ஓர் இருளிரவில் திடீரென்று பின்வரும் குரல் ஒன்று ஒலித்தது:

'உன்னைப் படைத்த இரட்சகனின் பெயரைக் கொண்டு ஓதுவாயாக!'

அசரீரியின் இக் குரல் கேட்டு மிகவும் அச்சமுற்றுவிட்ட அவர் தமது இல்லம் திரும்பி, உடம்பைப் போர்த்துக் கொண்டு படுத்துவிட்டார். பிறகு ஆறு மாதம் சென்று முன் அசரீரிக் குரலொலி மீண்டும் கேட்டது:

'போர்த்துக் கொண்டிருப்பவரே! எழுந்திரும்! எல்லோருக்கும் எச்சரிக்கை செய்யும்!' இக் கட்டளையைக் கேட்டு எழுந்த அவர் அன்றுதொட்டு மக்களின் குருட்டுப் பழக்க வழக்கங்களை இடித்துக்காட்டி, அவற்றையெல்லாம் கைவிடும்படி வெளிப் படையாக உரத்த குரலில் போதிக்கலானார். மேலும் அவர் உபதேசித்தார்:

'இறைவன் ஒருவனே! எல்லா மக்களும் ஒருவருக்கொருவர் சமம்; உயர்வு தாழ்வற்றவர். நல்லது செய்பவன் நல்லவனாவான்; தீயது செய்பவன் தீயவனாவான். அவனவன் புரியும் செயல்களுக்கும் அவனவனே பொறுப்பாவான்; உருவ வழிபாடு செய்தல் கூடாது; மதுவருந்தலாகாது; சூதாடக்

கூடாது; விதிகளுக்கு மாருக, சட்டத்திற்கு விரோதமாக, அனு மதிக்கப்படாத ஆண் பெண் உடலுறவு தகாது; வட்டி வாங்கக் கூடாது; பிறர் பொருளை அபகரிக்கலாகாது; அடிமைகளை, அனுதைகளைத் துன்புறுத்தக் கூடாது...' இப் புதிய தெம்பூட்டும், தட்டியெழுப்பும் கருத்துகள் மக்கள் மனத்தில் ஆழமாகப் பதிந் தன. சிலர் அவர் உபதேசித்த போதனைகளை ஏற்று, அவ ருடைய சீடர்களாயினர்.

**நபி நாயகமும் அவரைப் பின்பற்றியோரும்:** வேண்டாத காரியங்களைச் செய்து பழகியவர்கள், அவற்றைக் கைவிட இஷ்டப்படாத, ஒழுக்கங்கெட்ட, மனிதத்தன்மையற்ற, விலங் கினுங் கொடிய தீயவர்கள் நபி அவர்களையும், அவர்தம் சீடர் களையும் பலமுறை பல விதத்தில் துன்புறுத்தியும், அவமானப் படுத்தியும், சித்திரவதைக்கு உள்ளாக்கியும், பல துன்பங்களை யும் தொல்லைகளையும் விளைவித்தார்கள். காரணம், அவர்க ளுடைய தீய செயல்களுக்கும், கெட்ட பழக்க வழக்கங்களுக் கும் நபி நாயகமவர்களின் உபதேசங்கள் முட்டுக்கட்டையா யிருந்தன!

மக்காவின் சமுதாய மக்கள் நபி நாயகமவர்களின் புதிய உபதேசங்களையும் அவற்றின் பலா பலன்களையும் முளையிலேயே கிள்ளி யெறிய முயன்றனர். ஆனால், இஸ்லாம் மதம் அசைக்க முடியாத பெரும் மலைபோல் நின்று, 23 ஆண்டுகள்வரை எல்லை யற்ற துன்பங்களை, மனக் கசப்புகளை, எதிர்ப்புகளையெல்லாம் சமாளித்து, இறுதியில் வெற்றி பெற்று மக்களிடையே பரவிய வண்ணம் காட்சியளித்தது. பொறுமையையும், அன்பையும், உயர்ந்த தன்மையையும் கடைப்பிடித்து, எதிர்த்து நின்ற அனைத்துப் பகைவர்களையும் மனம் மாறச் செய்தது இஸ்லாத் தின் வியப்புமிகு மாபெரும் சாதனையாகும். குறைந்த காலகட்டத் துக்குள்ளேயே அரேபியா முழுவதும் இஸ்லாமிய மதக் கோட் பாட்டை ஏற்றுக்கொண்டு விட்டது. இது அரேபியாவின் வர லாற்றிலேயே காணுத ஒரு வியப்புமிக்க பெரும் அதிசயமாகும்.

இறைவன் ஒருவனே என்பதையும், மக்களிடையே அமைதியையும், உலக மக்கள் அனைவரும் சமமானவர்கள் என் பதையும், சகோதரர்கள் என்பதையும், இஸ்லாம் மத நிறுவ னத்தின் மூலம் நிலை நிறுத்திவிட்டார், நபி நாயகம். சோதனைகள் பலவற்றைச் சமாளித்து, துன்பங்கள் பலவற்றைப் பொறுத்து, சாதனைகள் பல புரிந்து, மாக்களாக வாழ்ந்தவர் களை மக்களாக வாழச் செய்து, எல்லா இடுக்கண்களினூடேயும்

இணையற்ற வெற்றி பெற்ற நபிகள் தம் அறுபத்து மூன்றும் வயதில் கி.பி. 632-ல் இவ்வுலக வாழ்வை நீத்தார்.

## கலீஃபாக்களின் தோற்றமும் வரலாறும் (கி.பி. 632—661)

### கலீ:.பா அபூபக்கர் (கி.பி. 632—634)

நபிகள் காலமான பின், ஒரு முக்கிய பிரச்சினை தலையெடுத்தது. நபிகளுடைய தெய்விகப் பணி முடிவுற்றது; ஆனால், அவர் நிறுவிய அரசியல் அமைப்பு முடிவடையவில்லை. இப் பெரும் பணியை ஏற்க எவரைத் தலைவராய் அமர்த்துவது என்ற ஒரு பெரும் பிரச்சினை எழும்பியது. நபிகளுக்கு ஆண் சந்ததி கிடையாது. மேலும், தமக்குப் பின் வாரிசு யார் என்பதையும் உறுதியாக நபிகள் கூறவில்லை. ஆதலால், வயதில் மூத்தவரும், மிகவும் அனுபவமுடையவரும், நபிகளுடைய நெருங்கிய நண்பரும், மாமனாரும், மக்கா மாநகரத்திலே மக்களிடையே நிகரற்ற செல்வாக்குடையவராய்த் திகழ்ந்தவருமான அபூபக்கர் (Abu Bakr) என்பவரை, கலீஃபாவாக [பிரதிநிதி—(Caliph)] மக்கள் தேர்ந்தெடுத்துக் கொண்டனர். இரண்டரை ஆண்டுகள் வரை கலீஃபாவாக ஆட்சி செலுத்திய அபூபக்கர், சண்டைகள், சச்சரவுகள், புரட்சிகள் முதலியவற்றை அடக்குவதிலேயே தம் முழு நேரத்தையும் செலவழிக்க வேண்டியிருந்தது. பெரும் இடுக்கண்களையும் தொல்லைகளையும் சமாளித்து, தீயதை அழித்து, நல்லதை நிலைநாட்டி, இஸ்லாத்தின் முதல் வெற்றிக் கொடியை அவர் நிலைநாட்டினார். இஃது இவருடைய மாபெரும் சாதனையாகும். இதை யாராலும் மறக்க முடியாது. எளிய தோற்றமும், உயர்ந்த எண்ணங்களும் கொண்டிருந்த இவர் தூய வாழ்வு வாழ்ந்தார். தமக்குப் பின் கலீஃபாவாக அமர, உமர் (Umar) என்பவரை இவர் நியமித்திருந்தார். இஸ்லாமியக் குடியாட்சியின் முதல் கலீஃபாவான அபூபக்கர் காலமான பின், உமர் இரண்டாம் கலீஃபாவானார்.

### கலீ:.பா உமர் (கி.பி. 634—644)

உமருடைய காலத்தில்தான் பாரசீகம், சிரியா, பலஸ்தீனம், இராக், எகிப்து, ஜெரூசலம் போன்ற சிறப்பு மிக்க நிலப் பகுதிகளை முஸ்லிம்கள் வென்றனர். இஸ்லாமியப் பேரரசு இவர் காலத்தில்தான் உருவாயிற்று. அதன் முழுப் பெருமையும் இவரையே சாரும். ஒழுக்கத்தின் சின்னமாக, கடமையின் பிம்பமாக, இஸ்லாம் மதத்தின் ஒப்பற்ற தலைவராக விளங்கினார்,

கலீஃபா உமர். இவ்விதமாக, பன்னிரண்டு ஆண்டு காலத்துக் குள்ளாகப் பாரசீக, பைஜான்ஷியப் பேரரசுகளுக்கு முஸ்லிம்கள் உரிமையாளர் ஆயினுர்கள். இத்தகைய பெருஞ் சாதனைகளைச் செய்து காட்டிய கலீஃபா உமர், கி.பி. 644-ல், ஒரு கொடியவ னுல் கொலை செய்யப்பட்டார்.

### கலீ:ஃபா உதுமான் (கி.பி. 644—656)

தமக்குப் பின் கலீஃபாவாக வர வேண்டியவரை மக்கள் ஒன்றுகூடித் தங்களுக்குள்ளேயே இன்னுரென்று தீர்மானித்துத் தேர்ந்தெடுத்துக் கொள்ளட்டுமென்று இவர் விரும்பினுர்; பிறகு ஆறு பேரடங்கிய ஒரு குழுவை நியமித்தார். ஆனுல், தம் சொந்த மகனைக்கூட அக் குழுவில் ஓர் அங்கத்தினராக உமர் நியமிக்கவில்லை. என்னே அவரது அரசியல் ஒழுக்கம்! கலீஃபா உமர் நியமித்த அக் குழுவானது முடிவில் உதுமான் என்பவரைக் கலீஃபாவாகத் தேர்ந்தெடுத்தது. உதுமானின் காலத்தில்தான், ஆப்கானிஸ்தானத்திலுள்ள பல்க் (Balkh), ஹீரட் (Herat), காபூல் (Kabul), கஜனி (Ghazni) போன்ற இடங்களையும், தென் பாரசீகத்திலுள்ள கிர்மான் (Kirman), சிஸ்டான் (Sistan) என்னும் இடங்களையும், ஆப்ரிக்காவிலுள்ள பர்க்காவையும் (Barca), மத்தியதரைக் கடலிலுள்ள சைப்ரஸ் (Cyprus) என்ற தீவையும் முஸ்லிம்கள் வென்றனர். கலீஃபா உதுமான் காலத் தில் இஸ்லாமியப் பேரரசு மேலும் விரிவடைந்தது. உமரைப் போலவே, உதுமானும் ஒரு பகைவனுல் கி.பி. 656-ல் கொலை செய்யப்பட்டார்.

### கலீ:ஃபா அலீ (கி.பி. 656—661)

கலீஃபா உதுமான் கொலைக்குப் பின், நபிகளின் பெரியப் பாவின் மகனும், நபிகள் மகள் ஃபாத்திமாவின் கணவருமான அலீயை (Ali) ஒருமனதாகத் தங்கள் கலீஃபாவாக மக்கள் ஏற்றுக்கொண்டனர். இந்தக் காலக் கட்டத்தில்தான் அவருக் கும் சிரியாவின் ஆளுநரான முஆவியாவுக்கும் (Muawiyah) உள்நாட்டுப் போர் மூண்டது. இதன் விளைவாக, முஆவியா தானே சிரியாவின் கலீஃபாவெனப் பிரகடனப்படுத்திக் கொண் டான். இப் போரால் முஸ்லிம்களின் ஒற்றுமை பாதிக்கப்பட்டது. அதே காலக் கட்டத்தில்தான் கூஃபா (Kufa) என்ற இடத்தில், அப்துர் ரஹ்மான் இப்னு முல்ஜம் (Abdur Rahman ibn Muljam) என்ற ஒரு கொடியவனுல், கி.பி. 661-ல், கலீஃபா அலீ கொலை செய்யப்பட்டார்.


முஸ்லிம் பேரரசு
கி.பி. 750-ல்
அந்தலூசியா
இத்தாலி
மத்தியதரைக் கடல்
டமாஸ்கஸ்
பாகதாத
குராசான்
ஆப்பிரிக்கா
எகிப்து
அரேபியா
மதீனா
மக்கா
அரபிக கடல்

படம் 3.

அலீ வரையிலான நான்கு கலீஃபாக்களை (அபூபக்கர், உமர், உதுமான், அலீ ஆகியவர்களை) இஸ்லாமிய வரலாறு, 'வைதிகப் பண்புள்ள கலீஃபாக்கள்' (The Orthodox Caliphs) எனப் புகழ் கிறது. கலீஃபா அலீயின் மரணத்தோடு, இஸ்லாமிய கலீஃபாக் களின் ஜனநாயக ஆட்சி முடிவடைகிறது.

**உமையாக்கள்** (கி.பி. 661—750)

நபிகளின் பாட்டனாரான அப்துல் முத்தலிபின் ஒன்றுவிட்ட சகோதரர் உமையா (Ummayah) என்பவராவார். அவருடைய சந்ததிகள்தாம் உமையாக்கள் (Ummayads) என்பவர்கள் ஆவார்கள். முஆவியா உமையா மரபில் தோன்றியவராவார். கலீஃபா அலீயின் மரணத்திற்குப் பின், முஆவியா ஆட்சியைக் கைப்பற்றித் தம் வமிசத்தை வேரூன்றச் செய்த பின், அவரும் அவருடைய சந்ததியார்களும் கி.பி. 683வரை ஆட்சி புரிந்தார் கள். அதற்குப் பின்னர், அதே மரபில் தோன்றிய மர்வான் இப்னு ஹக்கம் (Marwan ibn Hakam) என்பவரும், அவருடைய சந்ததியார்களும் கி.பி. 683-லிருந்து கி.பி. 750வரை ஆட்சி புரிந்தனர் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. முஆவியா காலத்திலிருந்து கலீஃபா என்பவர் தேர்ந்தெடுக்கப்படும் முறை கைவிடப்பட்டு, தலைமுறை தலைமுறையாக இளவரசர்கள் அரியணை ஏறும் கெட்ட வழக்கம் நடைமுறைக்குக் கொண்டு வரப்பட்டு விட்டது.

**அப்பாஸீகள்** (Abbasids) (கி.பி. 750—1258)

நபிகளின் சிற்றப்பாவான அப்பாஸ் (Abbas) என்பவரின் சந்ததியினரே அப்பாஸீகள் ஆவர். உமையாக்களிடத்திருந்து ஆட்சியைக் கைப்பற்றிய பின், அப்பாஸீகள் கி.பி. 750 முதல் கி.பி. 1258வரை ஆண்டனர். அப்பாஸீகளின் நீண்ட கால இவ் வாட்சியை இரு பகுதிகளாகப் பிரிக்கலாம். முதற் பகுதி, கி.பி. 750 முதல் கி.பி. 842வரையிலும், இரண்டாம் பகுதி கி.பி. 842 முதல் 1258வரையிலும் நீடித்தன. கி.பி. 1258-ல் தான் மங்கோலியர்கள் ஹிலாகூ கான்(Hulagu Khan)என்பவரின் தலைமையில் பாக்தாதைச் சூறையாடினார்கள். அப்பாஸீ வம் சத்தின் முதல் எட்டு கலீஃப்பாக்கள் (கி.பி. 750—842) திறமை யாக ஆட்சி புரிந்தார்கள். ஆனால், கி.பி. 842-க்குப் பிறகு வந்த கலீஃபாக்கள், துருக்கிய அல்லது பாரசீக சுல்தான்களின் கைப்பாவைகளாகவே மாறிவிட்டனர். இந்த அன்னிய சுல்தான்களே அப்பாஸீ பேரரசுமீது உண்மையில் ஆட்சி செலுத்தினார்கள். சுல்தான்கள் என்பவர்கள் யாவர்? அவர்கள்

எவ்வாறு அரசியல் முக்கியத்துவம் பெற்றுர்கள் என்பதைச் சிறிது ஆராய்வோம்.

## சுல்தான் (Sultan)

மிகத் திறமை வாய்ந்த கலீஃபா மாமூன் என்பவருக்குப் (Caliph Mamun) பிறகு வந்த கலீஃபாக்கள் திறமையற்றவர்களாகையினுல், அராபியரல்லாத தங்கள் துருக்கி மற்றும் பாரசீகத் தளபதிகளின் கைப்பாவைகளாக மாறிவிட்டனர். பலமிக்க இத் தளபதிகள், ஆட்சியையும் கலீஃபாக்களையும் ஆட்டிப் படைத்தனர். கி.பி. 842-க்குப் பிறகு அப்பாஸீ வம்ச கலீஃபாக்களின் வரலாறு என்பதெல்லாம் உண்மையில், பாக்தாதிலும் மற்றவிடங்களிலும் ஆட்சி செலுத்திய சுல்தான்களின் எழுச்சியும் வீழ்ச்சியும்பற்றிய வரலாறேயாகும். கி.பி. 842 முதல் 847வரை ஆண்ட கலீஃபா வத்தீக் (Wathiq) என்பவரே முதன் முதலாகத் தம் துருக்கியக் காவலாளர்களின் தலைவனுயிருந்த ஆஷ்னுஸ் (Ashnas) என்பவனுக்கு 'சுல்தான்' என்ற பட்டத்தை வழங்கினுர். அதன் சடங்கு பின்வருமாறு: முதலில் சுல்தானுக நியமிக்கப்பட்டவர் விலையுயர்ந்த ஆடைகள் அணிந்து, மாணிக்கக் கற்கள் பதித்த கிரீடம் சூட்டிக்கொண்டு, அரைக்கச்சை (Belt) கட்டி, அதிகாரங்களின் சின்னமாகத் தங்கம், வெள்ளி வைத்து இழைக்கப்பெற்ற கொடியைத் தாங்கிக் கொண்ட பிறகு, 'சுல்தான்' என்று கலீஃபாவினுல் பட்டம் வழங்கப்பட்டு, உயர்த்தப்பட்டார். இவ்வாறு உயர்த்தப்பட்டவர் கலீஃபாவின் கையைத் தொட்டு முத்தமிடுவதுடன் சடங்கு முடிவடைந்தது. சுல்தான் என்னும் பட்டமும் தலைமுறை தலைமுறையான குடும்ப பாத்தியதை பெற்றது என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

# 1. அப்பாஸீ ஆட்சியில் இராணுவ சுல்தான்களின் எழுச்சியும் வீழ்ச்சியும்

அப்பாஸீ வம்சத்தினரை ஆட்டிப் படைத்த சுல்தான்கள் ஐந்து வம்சத்தினர் ஆவார்கள். அவர்கள் முறையே,

(1) புவாஹித் சுல்தான்கள் (Buwayhid Sultans)

(2) சல்ஜூக் சுல்தான்கள் (Saljuk Sultans)

(3) குவாரிஸம் ஷாக்கள் (Khwarizam Shahs)

(4) கஜினி, கோரி சுல்தான்கள் (Ghaznavid and Ghorid Sultans)

(5) மம்லூக் சுல்தான்கள் (Mamluke Sultans) ஆவர்.

## I. புவாஹித் சுல்தான்களின் ஆதிக்கத்தில் அப்பாஸீ வம்ச கலீஃபாக்கள்—945-1055 கி.பி.

| | | |
|---|---|---|
| கலீஃபா முஸ்தக்ஃபி | — | Caliph Mustakfi |
| கலீஃபா முத்தீக் | — | Caliph Mutiq |
| கலீஃபா தாயீ | — | Caliph Tai |
| கலீஃபா காதிர் | — | Caliph Qadir |
| கலீஃபா கய்யூம் | — | Caliph Qaiyum |
| கலீஃபா முக்ததீ | — | Caliph Muktadi |

கி.பி. 842-ல் கலீஃபா முத்தாஸிம் காலமான பிறகு அரியணை ஏறிய கலீஃபாக்கள் பலமற்றவர்களாகவும், திறமையற்றவர்களாகவும், உதவாக்கறைகளாகவும் காட்சியளித்தார்கள்

என்று ஏற்கெனவே படித்திருக்கிறோம். கலீஃபாக்களின் வல்லமையற்ற நிலையைப் பயன்படுத்திக்கொண்டு சுல்தான்களே எதேச்சாதிகாரிகளாக ஆகிவிட, கலீஃபாக்கள் வெறும் அலங்கரிக்கப்பட்ட கைப்பாவைகளாகத் தாழ்ந்துவிட்டனர். கி.பி. 945-ல், புவாஹித் வம்ச சுல்தான்கள் பாக்தாதில் ஆட்சி செலுத்திய அப்பாஸீ வம்ச கலீஃபாவான முஸ்தக்ஃபி என்பவரைக் கைப்பாவையாக்கி, அரசியல் ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டனர். இவர்களே பேரரசின் தலைநகரான பாக்தாதில் அமர்ந்து எல்லா அரசியல் அலுவல்களையும் செயலாற்றி வந்தனர். இவர்களில் சில முக்கியமான சுல்தான்களின் பெயர்கள்:

(1) முயீஜ்ஜுத் தௌலா - Muizzud Dawlah

(2) அஜீஜுத் தௌலா - Azeezud Dawlah

(3) ஷராஃபுத் தௌலா - Sharafud Dawlah

## முயிஜ்ஜுத் தௌலா (கி.பி. 945—949)

பாரசீகத்தை ஆண்ட பழைய சாஸானிய (Sassanid) வம்சத்தைச் சேர்ந்தவராகச் சொல்லிக் கொண்ட அலீ-பின்-புவே (Ali-bin-Buwayh) என்பவரின் சந்ததிகள்தாம் இப் புவாஹித் சுல்தான்கள் ஆவர். காஸ்பியன் கடலுக்குத் தென் பாகத்திலுள்ள, உயர்ந்த மலைப் பிரதேசங்களைச் சார்ந்த, போரையே தொழிலாகக் கொண்ட ஒரு பிரிவினரின் இராணுவத் தலைவராக விளங்கியவர், அலீ-பின்-புவே என்பவராவார். இவருடைய மூன்று மைந்தர்களான அஹ்மத் (Ahmad), ஹசன் (Hasan), அலீ (Ali) ஆகியோர் தெற்கே படையெடுத்து, பாரசீகப் பிரதேசங்களான இஸ்ஃபஹான் (Isfahan), ஷீராஜ் (Shiraz), குஜிஸ்தான் (Kuzistan), கர்மான் (Karman) என்னுமிடங்களை வென்று, கி.பி. 945-ல் பாக்தாத் நகரை நோக்கிப் பாய்ந்தனர்.

பாக்தாத் நகரைக் காவல் காத்த துருக்கிப் படையினர்க்குள்ளாகவே சச்சரவுகளும் சண்டைகளும் மூண்டு ஒற்றுமை குலையவே, கலீஃபா முஸ்தக்ஃபியை அந்தரத்தில் விட்டுவிட்டு, நிலைகுலைந்து, ஆளுக்கொரு திக்காக ஓடி விட்டனர். உதவுவாரில்லாத கலீஃபாவுக்குத் தம் கதி அதோகதி யாகும் போல் தோன்றவே, ஷீஆ (Shia) பிரிவைச் சேர்ந்த வெற்றி வீரர் அஹ்மதின் தலைமையிலான புவாஹிதுகளைத் தம் புது அரசியல் எஜமானர்களாக அவர் ஏற்றுக் கொண்டார்.

அலீ-பின்-புவேயின் மூத்த மைந்தரான வீரர் அஹ்மதுக்கு 'முயீஜ்ஜுத் தௌலா' என்றும், இரண்டாவது மைந்தரான அலீக்கு 'இமாதுத் தௌலா' என்றும், மூன்றாவது மைந்தரான ஹஸன் என்பவருக்கு 'ருக்நுத் தௌலா' என்றும் புதுப் பட்டங்களையும் பெயர்களையும் சூட்டிக் கௌரவித்தார், கலீஃபா முஸ்தக்ஃபி. அன்றிலிருந்து, முயீஜ்ஜுத் தௌலா தம்மையே பாக்தாதுக்கு மன்னராக்கிக் கொண்டதுடன், கலீஃபாவுக்கும் எஜமானராக்கிக் கொண்டார். இவ்வாறு, சந்தர்ப்பச் சூழ்நிலையால், கலீஃபா சுல்தானின் கைப் பொம்மையானார். மேலும், இப் புது சுல்தான், கர்பலா (Karbala) என்ற இடத்தில் கி.பி. 680-ல் படுகொலை செய்யப்பட்ட (நபிகள் நாயகத்தின் பேரர்) ஹுஸைனும் மற்றும் அவருடைய சுற்றத்தாரும் சீடர்களும் பொருட்டான ஞாபகார்த்தமாக முஹர்ரம் (Muharram) பத்தாம் நாளைத் துக்க நாளாக எல்லோரும் அனுசரிக்கும்படி செய்து விட்டார்.

இவ்வளவெல்லா மிருந்தும், தமக்கெதிராகச் சதி செய்வதாகச் சந்தேகித்து, கலீஃபாவையே இந்த சுல்தான் அரியணையிலிருந்து இறக்கியதோடு நில்லாமல், அவருடைய கண்களைப் பறித்துக் குருடராகவும் ஆக்கி விட்டார். முத்தீக் என்ற மற்றொருவரைப் புதுக் கலீஃபாவாக முயீஜ்ஜுத் தௌலா ஏற்றும் கொண்டார். இவ்விதமாக, கி.பி. 945-லிருந்து கி.பி. 1055 வரை, ஒரு நூற்றாண்டுக்கு மேலாகப் புவாஹித் வம்ச பரம்பரை தான் வைத்ததே சட்டமென்று ஆண்டு வந்தது. 'நினைத்ததை முடிப்பவர் நாம்' என்ற கொள்கையில் எதேச்சாதிகார ஆட்சி செலுத்தினர், புவாஹித் சுல்தான்கள். பாக்தாதைப் புறக்கணித்து, ஷீராஜ் என்ற இடத்துக்கு அவர்கள் தலைநகரை மாற்றினார்கள். புதுத் தலைநகருக்குக் கலீஃபாவையும் கூட்டிச் சென்றனர்.

## அஜீஜுத் தௌலா (கி. பி. 949—983)

ருக்நுத் தௌலாவின் மைந்தரான அஜீஜுத் தௌலாவின் ஆட்சிக்காலத்தில்தான் புவாஹித் வம்ச ஆட்சியின் புகழ் உச்ச கட்டத்தை எட்டிப்பிடித்தது. புவாஹித் வம்சத்தைச் சேர்ந்த அரசர்கள் யாவரிலும் மேன்மையான புகழ் பெற்றவராகத் திகழ்ந்ததுடன் மட்டுமின்றி, அக்கால கட்ட சகாப்தங்களின் வேறு பல அரசர்களையும் புகழில் மிஞ்சியவராக விளங்கினார் என்றும்கூட அஜீஜுத் தௌலாவைக் குறிப்பிடலாம்.

அவர் பாரசீகத்தை மாத்திரமின்றி, இராக்கையும் இணைத்துத் தம் ஆளுகையின்கீழ்க் கொண்டுவந்தார்.

### மணம் செய்வதிலும் ராஜதந்திரம்

தாயீ (Tai) என்ற கலீஃபாவின் செல்வியை அவர் மணந்ததோடு நில்லாமல், கூடவே, தம் மற்றொரு மனைவியின் செல்வியைத் தம் மாமனுரான கலீஃபா தாயீக்கே மணம் செய்வித்து, தமக்குப் பின் வரும் சுல்தான் கலீஃபாவின் சந்ததியாகவுமிருக்க ராஜதந்திர ஏற்பாடு செய்தார், சுல்தான் அஜீஜுத் தௌலா. சுல்தானின் இச் செய்கையானது அவருடைய அரசியல் ஞானத்திற்கு ஒரு சிறந்த எடுத்துக் காட்டாகும்.

### 'ஷஹின்ஷா' என்ற பட்டம் பெறுதல்

இஸ்லாமிய வரலாற்றிலேயே ஷஹின்ஷா (சக்கரவர்த்தி), அதாவது, 'அரசர்க்கும் அரசன்' (பேரரசன்) என்ற பட்டத்தைப் படைத்துக் கொண்டதில் முதலானவர் அஜீஜுத் தௌலா ஆவார். ஷீராஜ் என்ற புதுத் தலைநகரில் தமது தர்பாரை அவர் நடத்தினுலும், பழைய தலைநகரான பாக்தாதில் அனேக அழகான கட்டடங்களைக் கட்டி, மேலும் அழகுபடுத்தினுர். அஜீஜுத் தௌலாவுக்குப் பின் அவருடைய மூத்த மகனுன ஷராஃபுத் தௌலா அரியணை ஏறினுர். ஷராஃபுத் தௌலாவுக்குப் பின் அவருடைய தம்பியான பஹாவுத் தௌலா ஆட்சி புரிந்தார். அவர்களுக்குப் பின் வந்த புவாஹித் வம்ச அரசர்களுக்குள் சச்சரவுகளும் சண்டைகளும் மூண்டு ஒற்றுமை குலையலாயிற்று. முடிவில், கி.பி. 1055-ல், புவாஹித் வம்சத்துக் கடைசி சுல்தானுன மாலிக் அல் ரஹீம் என்பவர், சல்ஜூக் தலைவரான துக்ரில் பேக் (Toghril Beg) என்பவரால் ஒழிக்கப்பட்டார். பிறகு புவாஹித் ஆட்சி முடிவடைந்து, பாக்தாதில் சல்ஜூக் வம்ச ஆட்சி ஆரம்பமாயிற்று. மற்றும், அப்பாஸீ வம்ச கலீஃபாவுக்கு சல்ஜூக் தலைவர்களே புது எஜமானர்களாயினர்.

## II. சல்ஜூக் சுல்தான்களின் ஆதிக்கத்தில் அப்பாஸீ வம்ச கலீஃபாக்கள் (கி.பி. 1063—1174)

துருக்கியர்கள் என்பவர்கள் யார்? என்பது வரலாற்று மர்மம் வாய்ந்ததாயுள்ளது. கி.பி. ஆரும் நூற்ருண்டில் சீன மொழியில் இத் துருக்கியர்களுக்குப் பெயர் 'துகுயே' (Tu-kue) என ஆரம்பித்ததாகத் தெரிகிறது. கி.பி. பத்தாம் நூற்ருண்டில்

தான் 'துருக்கியர்' என்ற சொல் இஸ்லாமிய மூல நூல்களில் இடம் பெறுகிறது. சித்தியர்களோ (Scythians) அல்லது ஹூணர் களோ (Huns) தாம் அவர்களின் மூதாதைகளெனத் தோன்று கிறது. ஆக்ஸியானா அக்கரைப் பிரதேசம் (Trans-Oxiana)[1] என்ற நிலவெளியே துருக்கியர்களின் தாய்நாடாகும். துருக்கி யர்கள் பல இனங்களாகப் பிரிந்திருந்தனர். அவ் வினங்களுள் முக்கியமானது 'ஓகஸ்' (Oghuzz) என்ற இனமாகும். அவ் வோகஸ் இனத்துச் சந்ததிகள்தாம் இப் புது ஆட்சியாளர் களான சல்ஜூக் வம்சத்தினராவர்.

சல்ஜூக் வம்சத்தின் மூதாதையின் பெயர் 'துகாக்' (Duqaq). அவருடைய மைந்தரே சல்ஜூக் (Saljuk). இவரி லிருந்துதான் சல்ஜூக் வம்சம் தோன்றிற்று. 'சல்ஜூகைட்ஸ்' என்றும், சல்ஜூக் துருக்கியர்கள் என்றும் அவ் வம்சத்தினர் புகழ் படைத்தார்கள். கி.பி. பத்தாம் நூற்றாண்டின் கடைசிப் பத்தாண்டுகளில்தாம் சல்ஜூக் வம்சம் இஸ்லாம் மதத்தைத் தழுவியிருக்க வேண்டுமென வரலாற்றாசிரியர்கள் கணிக் கின்றனர். புதிய மதத்துக்கு மாறிய பிறகு, மதம் மாறாத மற்றைய துருக்கியர்களின் பிரதேசங்களி லொன்றான கிவா (Khiva)வைக் கைப்பற்றினர், சல்ஜூக்குகள். இவர்கள் கி.பி. 1042-ல் க்வாரிஸம் என்ற பிரதேசத்தையும் ஆக்கிரமித்துக் கொண்டு, மதம் மாறாத துருக்கியர்களை அங்கிருந்து விரட்டி விட்டனர். மூசா (Musa), மீக்காயீல் (Mikail), இஸ்ராயீல் (Israil) என்ற மூன்று பேர் சல்ஜூக்கின் மைந்தராவர். மீக்காயீல் என்ற இரண்டாவது மகனுக்கு டோக்ரில் பேக் (Toghril Beg), சக்ரி பேக் (Chaghri Beg) என்ற இரண்டு மைந் தர்கள் பிறந்தனர். இவர்கள் சல்ஜூக்கின் பேரப் பிள்ளைகள் ஆவர். இவ்விரண்டு பேரப்பிள்ளைகளும் இஸ்லாமிய வரலாற்றில் மாபெரும் சாதனைகளை ஆற்றியவர்களாவார்கள்.

### சல்ஜூக் துருக்கியர்களின் எழுச்சி

கஜ்னியை ஆண்ட சுல்தான் மஹ்மூத், விவேகமற்ற அரசி யல் தந்திரத்தைக் கடைப்பிடித்துத் தமக்குச் சொந்தமாயிருந்த குராசான் (Khorasan) பிரதேசத்தில் சல்ஜூக்குகளைக் குடி யேறி வசிக்க அனுமதித்துவிட்டார். கி.பி. 1030-ல் அவர் காலமான பிறகு, இடத்தைக் கொடுத்தால் மடத்தையே பிடித் துக் கொண்ட பேராசைக்காரனைப் போல், குராசான் தங்களுக்

[1] 'டிரான்ஸ் ஆக்ஸியானா' என்பது ஆக்ஸஸ் அல்லது அமுதரியா என்ற நதிக்கு அக்கரையிலுள்ள பகுதி என்று பொருள்.

குரியதே என அடம்பிடிக்க வாரம்பித்தனர், சல்ஜூக்குகள். அவர்கள் கி.பி. 1040-ல் சுல்தான் மஹ்மூதின் மைந்தராகிய சுல்தான் மசூதை (Sultan Masud) ஹீரட் (Herat) என்னுமிடத்தில் தோற்கடித்தனர். சுல்தான் மசூதைத் தோற்கடித்த பின், சல்ஜூக்குகள் டோக்ரில் பேகைத் தங்கள் தலைவனைத் தேர்ந்தெடுத்தனர்.

டோக்ரில் பேக் விரைவில் குராசான், மர்வ் (Merv), நிஷாப்பூர் (Nishapur), பல்க் (Balkh), ஜுர்ஜான் (Jurjan), தப்ரீஜ்ஸ்தான் (Tabaristan), க்வாரிஸம் (Khwarism), ஹம்தான் (Hamdan), ரே (Ray), இஸ்ஃபஹான் (Isfahan) போன்ற இடங்களை யெல்லாம் தமது ஆட்சியின்கீழ்க் கொணர்ந்தார்; கி.பி. 1055-ல் பாக்தாதையும் எதிர்ப்பேதுமின்றிக் கைப்பற்றிக் கொண்டார்.

**கலீ:.பா அல் கய்யூம் வரவேற்பு**

கி.பி. 1031 முதல் கி.பி. 1075வரை கலீஃபாவா யிருந்த அல் கய்யூம் (Al-Qaium), மாபெரும் வெற்றி வீரர் டோக்ரில் பேகுக்குப் பெரும் வரவேற்பளித்து, 'கிழக்குக்கும் மேற்குக்கும் அரசன்' என்ற மகத்தான பட்டத்தையும் அளித்துக் கௌரவித்தார். இப்படியாக, புவாஹித் வம்ச ஆட்சி மறைந்த பின்னர், சல்ஜூக்குகளின் ஆட்சி ஆரம்பமாயிற்று. அதோடு, கலீஃபாவும் சல்ஜூக்குகளுக்கு அடிமையானூர். சல்ஜூக் சுல்தான்களில் மிக முக்கியமானவர்கள்:

(1) டோக்ரில் பேக்.

(2) அல்ப் அர்ஸலான்.

(3) மாலிக் ஷா.

## சல்ஜூக் சுல்தான்களின் ஆதிக்கத்திலிருந்த அப்பாஸீ கலீஃபாக்களான அல் கய்யூம் முதல் முஸ்தாதி வரை—கி.பி. 1063—1174

**1. டோக்ரில் பேக்**

டோக்ரில் பேக் ஆட்சிக்கு வந்தபோது, கலீஃபாவின் அதிகாரமும் செல்வாக்கும் மிகவும் நலிவுற்றுப்போன நிலையில் இருந்தன. ஸ்பெயின் தேசத்தில் உமையாக்களும், எகிப்திலும் ஆப்ரிக்காவிலும் ஃபாத்திமா வம்ச (Fatimids) கலீஃபாக்களும் போட்டி அரசாட்சிகளை நிருமித்துக் கொண்டார்கள். அரசிய

விலும் இராணுவத்திலும் அராஜகம் தலைவிரித்தாடிற்று. இஸ்லாமிய பேரரசே மெல்ல மெல்லச் சிதறுண்டு போகிற நிலைமையில், மதப் பிரிவுகளும் உட் சண்டைகளும் மேலும் மேலும் சச்சரவுகளையும் மோதல்களையும் அதிகரிக்கச் செய்தன.

சக்தி முற்றுமிழந்த நலிவுற்ற நிலைமையிலிருந்த இஸ்லாமிய பேரரசிலிருந்து, தாங்கள் முன்னர் இழந்துவிட்ட பிரதேசங்களை மீட்க இதுதான் பொன்னான தருணம் என்று ரோமானியர்கள் திட்டமிட்டனர். இத் திட்ட நோக்கத்துடன் ரோமானியப் படை ஆர்மீனியாவுக்குள் நுழைந்தபோது, டோக்ரில் பேகின் படையால் அது தோற்கடிக்கப்பட்டதுமன்றி, புதிதாக வெல்லப்பட்ட பிரதேசங்களிலிருந்தும் ரோமானியர்கள் விரட்டியடிக்கப்பட்டனர். அவர்களுடைய கனவு நனவாகவில்லை. ஆனால், இச் சமயத்தில் திடீரென்று எதிர்பாராத விதமாக, கி.பி. 1063-ல் டோக்ரில் மரணமடைந்தார். அவருக்குப் பின் அவருடைய தம்பி மகனான மாவீரர் அல்ப் அர்ஸலான் அரியணை ஏறினார்.

## 2. அல்ப் அர்ஸலான் (கி.பி. 1063—1072)

சுல்தான் டோக்ரில் பேக் காலமான பிறகு, அல்ப் அர்ஸலான் கி.பி. 1063-ல் பட்டத்துக்கு வந்தார். ‘வீரர்களிடையே சிங்கம்’ என்ற புகழைப் பெற்றவர் இவர். இப்னுல் அதீர் (Ibnul Athir) என்ற வரலாற்று ஆசிரியர் ஒருவர் அல்ப் அர்ஸலானை இவ்வாறு புகழ்கிறார்:

‘பெருந்தன்மை வாய்ந்தவர், தரும சிந்தனையாளர், அறிவு சால் அரசர், இரக்க குணம் படைத்தவர், தைரியசாலி, பெண்களை ஆபத்தேதும் நேராமல் பாதுகாப்பவர், ஏழைகளைக் காப்பாற்றுபவர்.’

### ரோமானியப் பேரரசுடன் போர்

சுல்தான் அல்ப் அர்ஸலான் தம் பெரிய தந்தையாகிய டோக்ரில் பேக் காண்பித்துச் சென்ற வழியில் நடந்தார். ரோமானியர்கள்மீது இவர் மீண்டும் போர் தொடுத்தார்; எதிரியைத் தோற்கடித்து ஜார்ஜியாவையும் (Georgia) ஆர்மீனியாவையும் (Armenia) வென்றார். இத் தருணத்தில், டயோஜெனீஸ் ரோமனஸ் (Diogenes Romanus) என்ற ரோமானிய அரசரின் தலைமையில் அனைத்து இராணுவத் தளவாடங்களுடனும் கூடிய மிகப் பெரிய படையானது பாக்தாதைத் தரைமட்டமாக்கி, மேற்காசியா முழுவதையும் ரோமானிய பேரரசின் கீழ்க்

கொண்டு வந்துவிட வேண்டுமென்று சூளுறவு கொண்டு, ஆசியா மைனரில் நுழைந்தது.

### மான்ஸிகர்ட் போர் (கி.பி. 1071)

ரோமானியப் படைக்கும் முஸ்லிம் படைக்கும் இடையே ஆர் மீனியாவிலுள்ள மான்ஸிகர்ட் என்னுமிடத்தில் கி.பி. 1071-ல், பயங்கரப் போர் நீண்டநாள் தொடர்ந்து நடந்தது. இறுதி யில் முஸ்லிம் படை வென்றது. ரோமானிய மன்னர் முஸ்லிம் களின் கைதியானார். வெற்றி பெற்ற சுல்தான் தோற்றுப்போன மன்னரை விடுதலை செய்தார். ஆனால், அந்த ரோமானிய மன்னர் கான்ஸ்டாண்டிநோப்பில் நகரை அடையுமுன், அவ ருடைய குடிமக்களே அவரைச் சிம்மாசனத்தை விட்டிறக்கிய துடன், அவரைக் கைது செய்து, கண்களைப் பிடுங்கிக் குருட ராக்கித் தண்டித்து விட்டனர். எனினும், தோற்றுப்போன அந்த ரோமானிய மன்னரைக் காப்பாற்ற வேண்டுமென்றே சுல்தான் விரும்பினார். ஆனால், இவர் உதவிக்குப் போகு முன் னரே, ரோமானிய மன்னர் ரோமானியர்களாலேயே கொல்லப் பட்டுவிட்டார்.

### ஆசியா மைனரில் ரூம் (Rum) சுல்தான்களின் ஆட்சி நிறுவப்பெறல்

இஸ்லாமிய வரலாற்றில் மான்ஸிகர்ட் வெற்றியானது, சீரழிந்து கிடந்த அப்பாஸியப் பேரரசுக்குப் புத்துயிரும் புது அந்தஸ்தும் ஊட்டுவதாக அமைந்தது. ஆசியா மைனரின் ஆட்சியை சுல்தான் அல்ப் அர்ஸலான் தம் உறவினரான சுலைமான் இப்னு குத்லுமிஷ் (Sulayman-ibn-Kuthlumish) என்பவ ரிடம் ஒப்படைத்தார். அவரோ, முதலில் தம் படையை ஹெல் லஸ் பாண்ட்டுக்கும் (Hellaspont), அங்கிருந்து மத்தியதரைக் கடல் நோக்கியும் நடத்திச் சென்று வீரத் திக்விஜயம் செய்தார். ரோமானியப் பேரரசு நடுநடுங்கிப் போய், தலைவணங்கி, அவ ருக்குக் கப்பம் கட்டுவதற்கு ஒப்புக்கொண்டது. கி.பி. 1077-லிருந்து ரூம் (Rum) சல்ஜூக் சுல்தான்களின் ஆட்சிக்கு, நைசியாவைத் (Nicea) தலைநகராகக் கொண்டு, சுலைமான் அடிக்கல் நாட்டினார். அதிலிருந்து, அவருக்கும் அவருடைய சந்ததியார்களுக்கும் 'ரூம் நாட்டு சல்ஜூக் சுல்தான்கள்' (Saljuk Sultans of Rum) எனப் பெயராயிற்று.

### சுல்தான் அல்ப் அர்ஸலானின் சிறப்பு

சுல்தான் அல்ப் அர்ஸலான் சிறந்த நீதிமான்; குடி மக்களுக்கு நன்மை செய்வதையே நோக்கமாகக் கொண்டவர்.

அவருடைய பிரதம அமைச்சர் காஜா ஹசன் என்பவராவார். இவரை 'நிஜாமுல் முல்க்' (Nizam-ul-Mulk) அதாவது 'நாட்டுக்கு வழிகாட்டி' என்று எல்லோரும் அழைப்பர். வரலாற்றில் நிஜாமுல் முல்க் என்றே இவர் போற்றப்படுகிறுர். ஈரானிய வரலாற்றில் இவரே மிகவும் கீர்த்தி மிக்கவராகத் திகழ்ந்தவர் என்று கூறலாம். ஆட்சி முறைகளைத் தீட்டுவதில் இவர் மாபெரும் வல்லுநர்; சிறந்த கல்விமான்; கலைஞர்களைப் போற்றி ஆதரவு காட்டுவதில் நிகரற்று விளங்கியவர். கி.பி. 1072-ல், சுல்தான் அல்ப் அர்ஸலான் குற்றவாளி ஒருவனுல் தாக்கப்பெற்றுக் கொலை செய்யப்பட்டார்.

### 3. சுல்தான் மாலிக் ஷா (கி. பி. 1072—1092)

சுல்தான் அல்ப் அர்ஸலானின் மரணத்துக்குப் பின், அவருடைய மைந்தர் மாலிக் ஷா அரியணை ஏறினுர். தம் தந்தையின் கொள்கைகளையும் முறைகளையும் இவர் கடைப்பிடித்ததோடு, தம் தந்தையின் சாதனைகளையும்விடச் சில விஷயங்களில் மிஞ்சினுரென்னலாம். மற்றெல்லா சல்ஜூக் சுல்தான்கள் காலத்தையும்விட, மாலிக் ஷா காலத்திலேதான் பேரரசு அதிகமாக விரிவடைந்தது. அவருடைய அரசு, காஷ்காரிலிருந்து (Kashgar) ஜெரூசலம் (Jerusalem)வரை நீண்டும், கான்ஸ்டாண்ட்டிநோப்பிலி லிருந்து (Constantinople) காஸ்பியன் கடல் (Caspian Sea) வரை அகன்றும் விரிந்திருந்தது. அவருடைய ஆட்சியின் ஆரம்பக் கட்டத்தில் சில கலகங்களால் அந் நாடு சற்றே அமைதி இழந்தது. ஆனுல், சுல்தான் மாலிக் ஷா, அக் கலகங்களையெல்லாம் அடக்கி, அமைதியை நிலைநாட்டினுர். இஸ்லாமிய பண்பாட்டுக்கு இவர் வழங்கியுள்ள சாதனைகளைப் பற்றி மற்ருேர் அத்தியாயத்தில் ஆராய்வோம்.

#### மாலிக் ஷாவின் புகழ்

டஸ் (Tus) என்ற இடத்தில் நடந்த ஒரு நிகழ்ச்சியிலிருந்து, சுல்தான் மாலிக் ஷாவின் பெருந்தன்மையையும் உயர்ந்த இலட்சியங்களையும் நாம் பரக்கக் காணலாம். ஒரு நாள் தம் தொழுகைப் பிரார்த்தனைக்குப் பிறகு இவர் தம் பிரதம அமைச்சரிடம் பின்வருமாறு சொன்னுராம்:

'இன்று இறைவனிடம், "முஸ்லிம் மக்களை ஆளும் தகுதி என்னைவிட என்னை எதிர்த்துக் கலகம் செய்யும் என் சகோதரனுக்கே உண்டானுல், அச் சகோதரனுக்கே வெற்றி கிட்டட்டும்!" என்று வேண்டிக் கொண்டேன்.'

அரசியல் அறிவும், கருணையுள்ளமும், ஆதரவு நல்கும் பெற்றியும், பெருந்தன்மையும், நீதி மனப்பான்மையும், தாராளச் சிந்தையும் அவர் படைக்கப் பெற்றிருந்ததோடு, புகழிலும் பல அரசர்களையும் மிகைத்தவராயிருந்தார். மற்றும், கடமையின் சின்னமாக, கண்ணியத்தின் ஓவியமாக, கட்டுப்பாட்டின் உருவமாகவும் அவர் திகழ்ந்தார். அவரது இருபதாண்டு ஆட்சியில் மக்கள் நல்வாழ்க்கை வாழ்ந்தனர். அமீர் அலீ என்னும் உலகப்புகழ் வாய்ந்த வரலாற்றாசிரியர் இவருக்குப் புகழ் மாலை சூட்டுகிறார்.[1]

### பாக்தாதுக்குத் தலைநகர் மாற்றம்

பழையபடி பாக்தாதுக்கே மீண்டும் பேரரசின் தலைநகரை மாற்றிய சல்ஜூக் சுல்தான்களில் இவரே முதலானவராவார். வெள்ளிக்கிழமை குத்பா ஓதும் போது, கலீஃபாவின் பெயருடன் தமது பெயரையும் இணைத்துக் குறிப்பிடுமாறு இவர் கட்டளை பிறப்பித்தார்.

### ராஜதந்திரத் திருமணம்

கி.பி. 1087-ல், சுல்தான் மாலிக் ஷாவின் செல்வியைக் கலீஃபா முக்ததி மணந்ததில், இவருடைய ராஜதந்திரம் வெளியாகிறது. பிறக்கும் வாரிசு, இரு பட்டங்களுக்கும்[2] உரிமை பாராட்டலாமல்லவா? ஆனால், சுல்தானின் இக் கனவு சில நிகழ்ச்சிகளால் நனவாக வில்லை.

### கொலை இயக்கம் அல்லது ‘அசாசின் இயக்கம்’ (Assassin Movement)[3]

சுல்தான் மாலிக் ஷாவின் ஆட்சியில் ஒரு முக்கிய இயக்கம் எழுச்சியடைந்தது. இக் கொலைக் கஞ்சா இயக்கத்தின் தலைவர்

[1] Syed Amir Ali, ‘A Short History of the Saracens’, p. 316.

[2] முஸ்லிம்களின் மதத்தலைமையும், அரசாங்கத் தலைமையும்.

[3] அபினி என்னும் போதைப் பொருள் அரப் மொழியில் ‘ஹஷீஷ்’ என்று அழைக்கப்படும். படுகொலை நிகழ்த்தும்போது உதிரம் சிந்துவதைக் கண்டு நெஞ்சம் துணுக்குறா திருப்பதற்காகவும், இறுதி நேரத்தில் மனம் நெகிழ்ந்து கொலையைக் கைவிட்டுப் புறமுதுகிட்டு ஓடிவந்துவிடாதிருப்பதற்காகவும், போதை ஏற்றி மூளையை மயக்குறச் செய்து போய்த்தெம்பைப் பெற்றுக்கொள்வதற்காக, வாடகைக்கு அல்லது கூலிக்கு அமர்த்தப் பெறும் கொலைகாரப் பயல் ஹஷீஷை (அபினியை) வாயில் போட்டு விழுங்கி முழுப் போதையுடன் சென்று, படுகொலையைப் பக்குவமாகத் தீர்த்துக் கட்டிவிட்டுத் திரும்புவான். நெஞ்சமஞ்சாமல் கூலிக்குக் கொலை செய்பவன் ஹஷீஷ் போதையில் குத்திக் கொல்வதால் ‘ஹஷீஷ் சாப்பிட்டவன் செயல்’ என்று அக் கொலை அழைக்கப்பெறும். இதுவே ஆங்கிலத்தில் Assassination என்று மருவிவிட்டது. (ஆங்கில அகராதி காண்க).

ஹசன்-பின்-சபா (Hasan-bin-Saba) என்பவராவார். இவர் நிஜாமுல் முல்க் என்பவருக்கும், உமர் கையாம் (Omar Khayyam) என்பவருக்கும் சக மாணவராவார். இவர் பாரசீகத்தில் டஸ் (Tus) என்னுமிடத்தில் பிறந்தவர். இவர் இளைஞராயிருந்த போது, இஸ்லாமிய மறைபொருளான, 'Islamic Esoterics' என்ற பாடத்தைப்பற்றி ஆராய, எகிப்திலுள்ள தர்க்கக் கல்லூரியில் சேர்ந்து படித்தார். படிப்பை முடித்துக் கொண்டு பின்பு இவர் இஸ்லாமிய மதப் பிரசாரகராகச் சேவை புரிந்தார்.

**கிளர்ச்சியால் அதிர்ச்சி**

இத்தகைய இஸ்லாமிய நாஸ்திகர்களாலும், பகுத்தறிவு வாதிகளாலும் இஸ்லாமிய உலகத்தில் மிகவும் குழப்பமும் அமைதியின்மையும் தோன்றியெழலாயின. கி.பி. 1090-ல், 'அலாமத்' (Alamut) என்னும் பலம் வாய்ந்த மலைக்கோட்டையை ஹசன் பின் சபா தமது வசமாக்கினர்.

'எதையும் நம்பாதீர்கள்! எதற்கும் அஞ்சாதீர்கள்!' என்ற குரலெழுப்பிக் கொண்டு, இவ் வியக்கத்தினர் பட்டணங்களுக்குள்ளும் கிராமங்களுக்குள்ளும் நுழைந்து, குழப்பங்களையும் கலகங்களையும் விளைத்து விட்டார்கள். துரோகம், விஷம், பிச்சுவா போன்றவற்றைக் கொண்டு கொலை செய்வதை ஒரு கலையாக்கிக் கொண்டனர், இவ் வியக்கத்தினர்.

**மாலிக் ஷாவின் எதிர்ப்பு**

இச் சமுதாய விரோதிகளையும் சட்டத்தின் எதிரிகளையும் நசுக்க, சுல்தான் மாலிக் ஷா இரு படைகளை ஏவினர். ஆனல், அதற்குள் அவர் காலமாகி விட்டார் (1092-ல்). சுல்தானின் பிரதம அமைச்சரான நிஜாமுல் முல்க், ஹசன் பின் சபாவின் சீடன் ஒருவனல் கி.பி. 1092-ல் குத்திக் கொலை செய்யப்பட்டார். பல மேதைகளும் அறிஞர்களும் இவ்விதமாகப் படுகொலை செய்யப்பட்டனர். பாமர மக்கள் சட்டத்தின் இவ் விரோதிகளால் கொடுமைக்கு ஆளாக்கப்பட்டனர். நாட்டில் குழப்பம் தலைவிரித் தாடிற்று. முடிவில், இப் பயங்கரக் கிளர்ச்சியானது ஹிலாகூ கான் (Hulagu Khan) என்பவனல் ஒடுக்கப்பட்டது.

ஹசன் பின் சபாவின் தலைமையில் தோன்றிய கொலை இயக்கத்தால் எழுந்த கலகங்களாலும் கிளர்ச்சிகளாலும்

பெரிதும் அதிர்ச்சியுற்று அகால மரணமடைந்த சுல்தான் மாலிக் ஷாவின் மறைவுக்குப் பிறகு சல்ஜூக் சுல்தான்களின் புகழும் பெருமையும் மங்கி மறைந்தன. மற்றும், மாலிக் ஷாவின் மக்களுக்குள் ஏற்பட்ட உள்நாட்டுக் கலகங்களாலும் பூசல் களாலும் மத்திய ஆட்சி ஆட்டங் கண்டது. நேர்முகமாகவும் மறைமுகமாகவும் புதுக் கிளர்ச்சிக்காரரான ஹசன் பின் சபா வின் கைவலுத்து, அவருடைய கொடிய திட்டங்கள் பல வெற்றி யடைந்தன.

பாக்தாதில் ஆட்சி நிகழ்த்திய அப்பாஸீ வம்ச கலீஃபாவின் திறமையின்மையாலும், பிரிவினைக் கோட்பாடுகளின் தோற்றத் தாலும், நாட்டிலேற்பட்ட குழப்ப நிலையாலும் முஸ்லிம்கள் வலு விழந்தனர். இதன் விளைவாக, இஸ்லாமிய பேரரசு பல சிறு சிறு நாடுகளாகச் சிதறுண்டு போக ஆரம்பித்தது. பாரசீகம், இராக், சிரியா ஆகிய நாடுகளின் நலிவுற்ற நிலையைப் பயன் படுத்திக் கொண்டு, ஹசன் கட்சிக்காரர்கள் பலம் பொருந் திய பல அரண்களைக் கைப்பற்றினர்.

#### ஐரோப்பியர்கள் பிரவேசம்

இஸ்லாமிய பேரரசின் ஒப்பற்ற தலைநகரான பாக்தாதிலும் முஸ்லிம்களின் மத்தியிலும் ஏற்பட்ட இப் பிரிவால், அமைதி யின்மையால், கிறிஸ்தவர்கள் 'புண்ணிய பூமி'யை (Holy Land) முஸ்லிம்களிடத்திருந்து மீட்க ஆவலுற்றனர். எனவே, ஐரோப்பியர்கள் முனைந்து 'சிலுவைப் போர்களை' (Crusades) நிகழ்த்தக் களத்தில் குதித்து விட்டார்கள். அவற்றைப்பற்றி அடுத்த அத்தியாயத்தில் ஆராய்வோம்.

## III. குவாரிஸம் ஷாக்கள் (Khwarism Shahs)

இன்று கிவா (Khiva) என்றழைக்கப்படும் பிரதேசம் அன்று குவாரிஸம் என்று அழைக்கப்பட்டது. இது ருசியா நாட்டிலுள்ள உஸ்பெக்கின் (Uzbek) ஒரு மாவட்டமா யிருந்துகொண்டிருக் கிறது. அமுதரியா அல்லது ஆக்ஸஸ் (Oxus) என்ற ஆற்றின் வடக்குக் கரையிலுள்ள இதன் வரலாறு பழமையானது. கி.பி. எட்டாம் நூற்றுண்டின் ஆரம்பத்தில் குதைபா (Kutaybah) என்ற ஓர் உமையா வமிச ஆளுநரால் இந் நாடு வெல்லப்பட்டது. அதன் பின்பு, கி.பி. பத்தாம் நூற்றுண்டில், குவாரிஸம் அப்பா ஸிய பேரரசின் ஒருமா நிலமாயிற்று. அப்பாஸிய கலீஃபாக்களின் பலமும் செல்வாக்கும் குறையவே, அம் மாநிலத்தின் ஆளுநர் சுதந்தரமாக அதிகாரம் செலுத்த முற்பட்டார். கி.பி. 1017-ல்,

கஜனி மஹ்மூதும், கி. பி. 1037-ல் டோக்ரில் பேகும் முறையே குவாரிஸப் பிரதேசத்தை ஆக்கிரமித்தனர்.

### சமையற்காரருக்குக் குவாரிஸம் நாட்டை அளித்தல்

கி.பி. 1072 முதல் 1092 வரை ஆண்ட சல்ஜூக் சுல்தான் மாலிக் ஷா, தம் சமையற்காரரான நுஷ்தகீன் (Nushtagin) என்ற அடிமைக்குக் குவாரிஸம் நாட்டைப் பரிசாக அளித்தார். நுஷ்தகீனின் மகனான குத்புதீனுக்கு, சுல்தான் சஞ்சார் (Sultan Sanjar) 'குவாரிஸம் ஷா' என்ற பட்டத்தை வழங்கினார். சிறிது காலத்தில் இவ் வம்ச அரசர்கள் சுதந்தர மன்னர்களாயினர்; பாக்தாத் கலீஃபாக்களைச் சிறுகச் சிறுகத் தம் கைப் பாவைகளாக்கிக் கொண்டனர்.

### அலாவுத்தீன் முகம்மது (கி.பி. 1200—1220)

சுல்தான் டகாஷ் (Takash) காலமான பிறகு அவருடைய மைந்தராகிய அலாவுத்தீன் முகம்மது என்பவர் பட்டத்துக்கு வந்தார். இவர் ஒரு மாவீரர் ஆவார். கி.பி. 1219 வரை, அதாவது மத்திய ஆசியாவில் செங்கீஸ்கான் தோன்றும் வரையில், இவருடைய செல்வாக்குக்கும் வல்லமைக்கும் வேறெவரும் நிகரில்லை எனலாம். பல்க் (Balkh), ஹீரட் (Herat) ஆகியவற்றை வென்று, குராசானையும் (Khorasan), மசாந்தரான் (Mazanderan), கெர்மான் (Kerman), கஜனி (Ghazni) முதலிய பகுதிகளையும், இறுதியாக ஆக்ஸியானு அக்கரைப் பிரதேசத்தையும் (Trans-Oxiana) தமது ஆட்சிக்குள் கொண்டு வந்தார். குவாரிஸம் நாட்டுத் துருக்கியர்கள் ஷீஆ (Shia) பிரிவினர் ஆவர் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. ஆதலால், பாக்தாதிலுள்ள சுன்னீ (Sunni) பிரிவைச் சார்ந்த அப்பாஸீ வம்ச கலீஃபாவை நீக்கிவிட்டு, ஒரு ஷீஆவைக் கலீஃபாவாக ஆக்க முயன்றார், அலாவுத்தீன் முகம்மது. அந் நோக்கத்தோடு கி.பி. 1214-ல், பாக்தாதிலுள்ள கலீஃபா அல்-நாசிரை (Al Nasir) எதிர்க்கப் புறப்பட்டார் அலாவுத்தீன். ஆனால், அவருடைய முயற்சி தோல்வியடைந்தது. மறுபடியும் முயற்சி செய்தார். ஆனால் மீண்டும் தவிர்க்க முடியாத, எதிர்க்க முடியாத மங்கோலியப் பெரும் படை தடையாக நின்றது.

### செங்கீஸ்கானுக்குக் கலீஃபா அல்-நாசிர் அழைப்பு

தம்மை அரியணையிலிருந்து விரட்ட முயன்ற குவாரிஸம் ஷாவான அலாவுத்தீன் முகம்மதுவை எதிர்த்துத் தம்மைக்

காப்பாற்றும்படி, கலீஃபா அல்-நாசிர் மங்கோலியத் தளபதி செங்கீஸ்கானுக்குத் தூது விடுத்தார் என்று கூறப்படுகிறது. அது மெய்யோ பொய்யோ, நாம் இங்கு அதுபற்றி வாதாடுவதற் கில்லை. தற்சமயம், ஈரானியப் பிரதேசத்தின்மீது நிகழ்த்தப் பெற்ற மங்கோலியப் படையெடுப்பைப்பற்றி நாம் தெரிந்து கொள்வோம். கி.பி. 1218ஆம் ஆண்டில் செங்கீஸ்கானின் அரசும் அலாவுத்தீன் முகம்மதுவின் அரசும் அடுத்தடுத் திருந்தன.

**மங்கோலியப் படையெடுப்பு—கி.பி. 1218**

குவாரிஸம் மன்னரான அலாவுத்தீன் முகம்மது இழைத்து விட்ட ஒரு தவற்றினால், இஸ்லாமிய மேற்கு ஆசியா எலும்புக் கிடங்கோ என்று கருதப்படும் அளவுக்கு அதைச் சவக் காட்சிச் சாலையாக்கிய காட்டுமிராண்டித்தனமான மங்கோலியப் பெரும் புயல் என்னும் மூர்க்கத்தனமான பயங்கரப் படையெடுப்பு நிகழலாயிற்று. கி.பி. 1218-ல் குவாரிஸம் அரசரின் பெரும் படை, மங்கோலியச் சேனை என்னும் பெரும் வெள்ளத் தால் அடையாளம் தெரியாமல் அழிந்தொழிந்து போயிற் றென்னலாம். இஸ்லாமிய உலகத்தின் பல அழகு மிக்க, செல் வாக்குடைய, பண்பாட்டின் உறைவிடமாக விளங்கிய சிறப்பு மிக்க நகரங்கள் எல்லாம் தரைமட்டமாக்கப்பட்டன. மக்களெல் லாம் வாள்களுக்கு இரையாயினர். பூங்காக்களைப் போல் அமைந்திருந்த நகரங்கள் எல்லாம் சுடுகாடுகளைப் போல் காட்சியளித்தன.

குவாரிஸம் அரசு நாசமாக்கப்பட்டது. அலாவுத்தீன் குடும் பத்தினர் பிடிபட்டார்கள். ஆண்கள் எல்லாரும், ஒருவரைத் தவிர, கொல்லப்பட்டனர். அலாவுத்தீன் முகம்மது இக் கொடிய இராணுவப் புயலிலிருந்து தப்பினுரெனினும், முடிவில் காஸ்பியன் கடலின் ஒரு தீவில் ஒளிந்து திரிந்து, இறுதியில் மனமுடைந்து வீர மரணமடைந்தார் (கி.பி. 1220). மரண மடைந்த அம் மன்னரின் மூன்று மைந்தர்களில் ஒருவர் மட்டும் (ஜலாலுத்தீன்) மங்கோலியர்களை எதிர்த்துப் போராடி இரண்டு வெற்றிகளையும் பெற்ருர். இறுதியில், செங்கீஸ்கான் காலமான பிறகு (1217) ஆக்ஸியானு அக்கரைப் பிரதேசக் கடைசி வீரரான மாவீரர் ஜலாலுத்தீன், துரோகி ஒருவனுல் கொலை செய்யப்பட்டார். மங்கோலியப் படையெடுப்பினுல் இஸ்லாமிய நாகரிகமும் கலாசாரமும் அழிந்துபட்டன; பல கோடி மக்கள் வாளுக்கிரையாயினர். சுருக்கமாகச் சொன்

ஞல், இப் படையெடுப்பால் இஸ்லாமிய உலகமே பாதிக்கப் பட்டுவிட்டது.

## IV. கஜனி குல சுல்தான்கள் (The Ghaznavid Sultans)

இந்தியாவின்மீது படையெடுத்த முதல் முஸ்லிம் வெற்றி வீரர்கள் அராபியர்களே ஆவார்கள். ஆனால், இப் படையெடுப்பு, லேன்பூல் (Lanepoole) என்னும் வரலாற்ருசிரியர் கூறுவது போல, இந்திய வரலாற்றில் ஒரு நிகழ்ச்சியே யொழிய, முக்கியமானதோர் ஊடுருவலன்று. அராபியர்கள் ஆரம்பித்ததைப் பூர்த்தி செய்து, இந்தியாவின் பல பாகங்களையும் தமதாக்கிக் கொண்டவர்கள் துருக்கியர்களே ஆவார்கள்.

ஒன்பதாம் நூற்ருண்டின் பிற்பாதியிலிருந்துதான் பாக்தாதின் கலீஃபாக்களின் ஆதிக்கத்தைத் துருக்கியர்கள் தங்கள் அதிகாரத்துக்கு உட்படுத்திக்கொண்டார்கள். அதற்குப் பிறகுதான் இவர்கள் கிழக்குத் திசையில் பற்பல வம்சாவளி ஆதிக்கங்களை ஏற்படுத்திக் கொண்டார்கள். இதில் முக்கியமானது கஜனி குலமாகும். இக் குலத்தை நிறுவியவர் சுபுக்திஜீன் (Subuktigin) ஆவார். இவரால் தோற்றுவிக்கப் பட்ட சிறு அரசு காலப்போக்கில் ஆப்கானிஸ்தானையும், பஞ்சாபையும் உள்ளடக்கிய கஜனிப் பேரரசாக வளர்ச்சியடைந்தது. அப்பாஸிய கலீஃபாக்களின் தலைமையை ஏற்ற இவ் வம்ச சுல்தான்களில் மிகவும் செல்வாக்கும் புகழும் வாய்க்கப்பெற்றவர் சுல்தான் மகமூத் (Sultan Mahmud) ஆவார்.

ஆப்கானிஸ்தானிலுள்ள கஜனு (Ghazna) என்னுமிடத்தைத் தமது அரசின் தலைநகரமாக்கிக்கொண்டு மகமூத் ஆண்டதால், இவருக்குக் கஜனி மகமூது என்று வரலாற்றில் பட்டப் பெயர் வழங்கியது. நாம் முன்பு கூறியபடி, இக் குல ஆட்சியைத் தோற்றுவித்த சுபுக்திஜீனின் மூத்த குமாரரே மகமூத். இவரது காலத்தில்தான் கஜனி பேரரசாக வளர்ந்து, பின்பு மசூது என்பவருக்குப் பிறகு அழிவு பெறத் தொடங்கியது. இம் மூவருடைய காலத்தில் அப்பாஸிய கலீஃபாக்களாக விளங்கியவர்கள்:

கலீஃபா அல்-தாயீ,

கலீஃபா அல் காதர்,

கலீஃபா அல் கையூம் ஆவார்கள்.

**சுல்தான் சுபுக்திஜீன் (கி.பி.977—997)**

தமது தீவிர முயற்சியாலும் திறமையாலும் அடித்தளத்தி லிருந்து உச்ச கட்டத்திற்கு உயர்ந்தவர் சுபுக்திஜீன். அலப்திஜீன் (Alptigin) என்பவரிடம் அடிமையாயிருந்து, தமதறிவின் ஆக்கத்தால் இவர் உயர்ந்து பல பதவிகளை அடைந் தார். மேலும், சுபுக்திஜீனின் திறமையைப் பாராட்டி அவர்மீது திருப்தியடைந்து, தம் மகளையே அவருக்கு மணம் செய்து கொடுத்தார் அலப்திஜீன். அவரது பெருந்தன்மையும், உயர்ந்த எண்ணமும், வேற்றுமை பாராட்டாத்திறனும் மெச்சத் தக்கவை. போரிலும் வீரன்! ஆட்சியிலும் தீரன்! ஆட்சிப்பீட மேறிய சில காலத்துக்குள்ளாகவே, லம்கான் (Lamghan), சிஸ்டான் (Sistan), குராசான் (Khorasan) ஆகிய பிரதேசங் களைத் தமதாக்கிக் கொண்டார் சுபுக்திஜீன்.

மேலும், இந்திய மன்னர்களிலொருவரான ராஜ ஜெயபால் (Raja Jayapal) என்பவரைத் தோற்கடித்து மாபெரும் வெற்றி யடைந்தார் சுபுக்திஜீன். போரிலே தோற்றுப்போன ராஜா ஜெயபால் சுபுக்திஜீனுக்கு இருநூறு போர் யானைகளையும், ஏராள மான செல்வத்தையும் அளித்தார். அதோடு, சுபுக்திஜீனுக்குக் கப்பம் கட்டவும் இசைந்தார், ராஜா ஜெயபால். இவ் வெற்றி யைப்பற்றிக் கேள்வியுற்ற அப்பாஸிய கலீஃபா அல் தாயீ, ‘பேரரசின் உபகாரி’ என்ற பொருள் கொண்ட ‘நசீருத் தௌலா’ என்ற உயர் பட்டத்தை சுபுக்திஜீனுக்கு அளித்துக் கௌரவித்தார். சுபுக்திஜீன் இருபதாண்டு காலம் திறமையாக ஆட்சி செலுத்தி, தமது அரசை மேலும் விரிவாக்கி, இறுதியில் கி.பி 997-ல் காலமானார்.

**சுல்தான் மகமூத் (கி.பி. 998—1030)**

கஜனி குலத்திலேயே தலைசிறந்த புகழீட்டியவர் சுல்தான் மகமூத் ஆவார். சுபுக்திஜீனின் குமாரர்களில் இவரே மூத்தவ ராவார். மகமூத் சளைக்காது போராடும் போர்வீரர் மாத்திர மல்லர்; மகா அஞ்சா நெஞ்சத் தளபதியுங்கூட; வழிகாட்டும் மக்கள் தலைவருங்கூட. தம் நாட்டில் தமது செல்வாக்கையும் திறமையையும் நிலைநாட்டிவிட்டு, இந்தியாவின் பக்கம் திரும் பினார், மகமூத். செல்வம் கொழிக்கும் இந்தியா அவரது ஆசையைத் தூண்டியது. மேலும், மகமூத் மேற்காசியாவிலும் தமது பேரரசை விரிவாக்க விரும்பினார்; அதற்கெல்லாம் வேண்டிய செல்வங்களும் வசதிகளும் தமது நாட்டில் போதிய அளவு இல்லையென முடிவுக்கு வந்தார். ஆகவே, இந்தியாவின்

செல்வத்தைக் கொண்டு தமது கனவுகளையெல்லாம் நனவாக்க விழைந்தார் அவர்.

தமது பேரரசு விரிவடைந்தால்தான் இஸ்லாம் மதமும் பரவச் சுலபமான வழிபிறக்குமென்று, தம் மக்களையும் தம் வீரர்களையும் நம்பும்படி செய்து ஊக்குவித்தார், உற்சாகப்படுத்தினார் மகமூத். தாம் கண்ட கனவை நனவாக்க, தமது சிறப்பை நிலைநாட்ட, மகமூத் இந்தியாவின்மீது பதினேழு முறை படையெடுத்தார். தமது சுயநலத்திற்காகத் தம் அரசியல் கொள்கைகளுக்கு மதச்சாயமிட்டு, 'மதத்திற்காகப் போராடுகிறோம்!' என்று மக்களையும் படையையும் ஏமாற்றி, பயங்கரப் போர்களில் ஈடுபட்டார் அவர். ஆதலால், மகமூத் இஸ்லாம் மதத்தைப் பரத்துவதற்காகப் பதினேழு முறை இந்தியாவின்மீது படையெடுத்தார் எனக் கூறுவது உண்மையன்று. அதற்கு மாறாக, இந்தியாவின் பெருஞ்செல்வத்தை அடையத்தான் படையெடுத்தார் என்பது வரலாற்றை ஆராய்ந்து பார்த்தால் நன்கு விளங்கும்.[1] மகமூதின் வீரச்சிறப்புகளைக் கேள்வியுற்ற அப்பாஸீ கலீஃபா அல் காதர், அவருக்குப் 'பேரரசிற்கு வலது கரம் போன்றவர்' என்றும், 'நம்பிக்கையின் பாதுகாவலன்' (Custodian of the Faith) என்றும் புகழ்ந்து பட்டங்கள் வழங்கினார். சுல்தான் மகமூத் பல போர்களில் ஈடுபட்டுப் பல வெற்றிகளைக் கண்டார்; ஆயினும், அவர் பஞ்சாப் எல்லையைத் தாண்டி மேலும் கிழக்கே சென்று வெற்றியடைந்த நாடுகளைத் தமது அரசுடன் இணைக்கவில்லை.

**சுல்தான் மகமூத் இழைத்த பிழை**

இவ்வாறு அவர் பஞ்சாபில் போராடிக் கொண்டிருந்த போது, அவரது நாட்டெல்லைக்கு மேற்கேயுள்ள ஆக்ஸியானு அக்கரைப் பிரதேசத்தை ஆக்கிரமித்துக் குடியேறிவிட்டது, ஒரு துருக்கிய பெருங் கூட்டம். இதை அனுமதித்ததுதான் அந்த சுல்தான் இழைத்த பெரும் அரசியல் பிழையாயிற்று. இத்துருக்கியர்கள் செலுத்திய கப்பத்திலும், இவர்கள் காண்பித்த ராஜவிசுவாசத்திலும் மயங்கி, சுல்தான் மகமூத் இவர்களை விரட்டியடிக்கும் எண்ணத்தைக் கைவிட்டார். அது மாத்திர

[1] டாக்டர் C. K. கரீம் என்பவர் 'What happened in Indian History' என்னும் தமது ஆராய்ச்சி நூலில், மகமூத் கஜனி பேராசையே உருவாகிக் கொள்ளையில் ஈடுபட்டாரன்றி, நேர்மையான முஸ்லிமாக வாழ்ந்து இஸ்லாத்தை மக்களிடையே பரத்த வேண்டுமென்று கிஞ்சித்தும் கருதவேயில்லை என்பதைத் தக்க ஆதாரங்களுடன் பக். 122—127-ல் விளக்கியுள்ளார்.

மன்று; மேலும், ஒரு பெரும் பிழையும் அவர் புரிந்துவிட்டார். ஆக்ஸியாறு அக்கரைப் பிரதேசத்திலுள்ள துருக்கியர்களின் பெரும் கூட்டத்தைக் குலைக்க வேண்டுமென்றும், அவர்களை வலுவிழக்கச் செய்ய வேண்டுமென்றும் நோக்கங்கொண்டு, சல்ஜூக் (Saljuk) என்ற துருக்கிய தளபதியின் தலைமையிலிருந்த ஒரு துருக்கிய இனத்தையே குராசான் என்ற நாட்டுக்கு அவர் நாடு கடத்திவிட்டார். இவ்வாறு அவர் நாடு கடத்தியதால் அவருக்குப் பின் ஆட்சி செய்த அவர் வழித்தோன்றல்களுக்குப் பேராபத்தும் பெருஞ் சேதமும் ஏற்பட்டுவிட்டன. சல்ஜூக் துருக்கியர்கள் வலிமை மிக்கவர்களாக வளர்ந்து, தங்கள் எஜமானர் மீதே கத்தி எடுக்க முனைந்துவிட்டனர். கி.பி. 1030-ல் சுல்தான் மகமூத் காலமானார்; அவருடைய மகன் சுல்தான் மசூத் (Masud) ஆட்சிப் பீடம் ஏறினார்.

### சுல்தான் மசூத் (கி.பி. 1030—1040)

தம் தந்தையின் மரணத்துக்குப் பின் சுல்தான் மசூத் ஆட்சிப்பீடம் ஏறினார். அப்பாஸிய கலீஃபா அல் கையூம், வழக்கம் போல அவரையும் ஆசீர்வதித்தார். சுல்தானும் கலீஃபாவுக்கு ஏராளமான சன்மானங்களளித்தார். வீரத்தின் திருவுருவம் சுல்தான் மசூத் என்றாலும், அரசியல் விஷயங்களில் சிறிது விவேகமற்றவர். பிறர் உபதேசத்தைக் கேட்பது அவர் இயல்பன்று. ஒத்துப்போகும் தன்மையும் அவருக்கில்லை.

### ஹீரட் போர் (கி.பி. 1040)

சுல்தான் மசூதுக்கும் சல்ஜூக் சுல்தானுக்குமிடையே பிணக்கு ஏற்பட்டது. அதன் விளைவாக, ஹீரட் என்ற இடத்தில் நடந்த கடும் போரில் சுல்தான் மசூத் கொல்லப்பட்டார். அதன் பின், கஜனி சுல்தான்களின் செல்வாக்கு மங்கத் துவங்கியது. கஜனி குலக் கடைசி சுல்தானை குஸ்ரோ மாலிக் (Khusro Malik) போரில் தோற்றதோடு, முகம்மது கோரியால் கொல்லப் பட்டார், கி.பி. 1201-ல். இவ்வாருக, கஜனி குல சுல்தான்களின் ஆட்சி முடிவடைந்தது.

### கோரி குல சுல்தான்கள் (The Ghorid Sultans)

கஜனி குல சுல்தான்களைத் தொலைத்தவர்கள் துருக்கியர்களுமல்லர்; இந்துக்களுமல்லர்; ஆனால், கோரி குல சுல்தான்களே! ஆப்கானிஸ்தானின் மேற்குப் பகுதியான மலைப் பிரதேசத்துக்குத்தான் கோர் (Ghor) எனப் பெயர். கி.பி. 11-ம் நூற்றாண்டின் ஆரம்பக்கட்டத்தில்தான் கோர் என்ற சிறு அரசு

ஒன்றை சுல்தான் மகமூத் வென்றார். அன்றிலிருந்து கி.பி. 12-ம் நூற்றாண்டின் மத்திய காலம் வரையில் கோர் நாட்டு அரசர்கள் கஜனி குல சுல்தான்களுக்குக் கப்பம் கட்டி வந்தனர். இந்தக் காலக் கட்டத்தில்தான் மகமூத் குலமும் மரணப் படுக்கையில் கிடந்தது. கோரிகள் (Ghorids) கஜனி குல சுல்தான்களுக்கு மரண அடி அடித்து, அவர்களுடைய அரசையும் கைப்பற்றினர். கோரிகளிலெல்லாம் தலைசிறந்தவர் முயீஜுத்தீன்-பின்-சாம் (Muizzuddin-bin-Sam) என்னும் முகம்மது கோரி ஆவார்.

**முகம்மது கோரி** (Muhammad of Ghor)

கோரி குலத்தினர், கஜனி குல சுல்தான்களின் சிற்றரசர்களாக வெகுகாலம் இருந்து வந்தனர். கி.பி. 12-ம் நூற்றாண்டின் இரண்டாம் கட்டத்தில், அலாவுத்தீன் ஹுசேன் என்ற கோரி அரசர் கஜனி நகர்மீது படையெடுத்து, அதை அழித்தார். முகம்மது கோரி என்ற அவர் சகோதரருடைய குமாரர் கஜனியை வென்று, அதைத் தமது ஆட்சியின்கீழ்க் கொண்டு வந்தார். மேலும், விடாமுயற்சியாலும் திறமையாலும் இருபதாண்டுக்குள், பஞ்சாப், முல்தான், சிந்து ஆகிய பிரதேசங்களையும் தமது அரசுடன் அவர் இணைத்துக்கொண்டார். அதன் பின்னர்த்தான் அவர் இந்தியாவின்மீது படையெடுத்தார்.

**இராஜபுத்திர அரசுகளுடன் போர்**

இந்தியாவின் மத்திய பாகத்தில் பல இராஜபுத்திர அரசுகளிருந்தன. கி.பி. 1191ஆம் ஆண்டில் முகம்மது கோரி இந்தியாவின்மீது படையெடுத்து, பிரிதிவிராஜ் என்ற புகழ் மிக்க இராஜபுத்திர அரசனோடு மோதிப் போரிட்டுத் தோல்வியடைந்தார். இத் தோல்வியால் முகம்மது கோரிக்குப் பல பெரும் துன்பங்கள் விளைந்தன; ஆனாலும், அவர் நம்பிக்கையைக் கைவிடவில்லை, சோர்வடைந்து விடவுமில்லை. அடுத்த ஆண்டே (1192-ல்) மறுபடியும் விடாமுயற்சியுடன் இந்தியா மீது படையெடுத்தார். முன் தோற்ற தரேன்—(Tarain) என்னும் இடத்திலேயே அதே இராஜபுத்திர படைகளைத் தோற்கடித்துவிட்டு டில்லிக்கும் அவர் சுல்தான் ஆனார். இதைத் தொடர்ந்து, அஜ்மீர் (Ajmer), கனூஜ் (Kanauj) ஆகிய அரசுகளைக் கைப்பற்றியதுடன், கி.பி. 1194-ல் காசி (Benares) வரை கூடத் தம் ஆதிக்கத்தை அவர் பரவச் செய்தார்.

அவருடைய அறிவும் ஆற்றலும் மிக்க அடிமைத் தளபதிகள் வட இந்தியா முழுவதும் தம் ஒப்பற்ற தலைவரின் ஆட்சியையும்

அதிகாரத்தையும் நிறுவினர். வட இந்தியாவில் முதன் முதலாக முஸ்லிம் அரசு உருவாக அடிக்கல் நட்டவர் சுல்தான் முகம்மது கோரி ஆவார் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. கி.பி.1206-ம் ஆண்டு முதல் கி.பி. 1857ஆம் ஆண்டு வரை டில்லியில் முஸ்லிம் அரசர்களே ஆட்சி செலுத்தினர் என்ருல் அப்பெருமை முகம்மது கோரியையே சாரும்.

**கிழக்கில் வெற்றி! மேற்கில் தோல்வி!**

கிழக்கில், அதாவது இந்தியாவில், வெற்றி மேல் வெற்றி கிடைத்துக் கொண்டிருக்கையில், மேற்கில், அதாவது ஆப் கானிஸ்தானுக்கு மேற்கிலுள்ள பிரதேசங்களில் முகம்மது கோரிக்குத் தோல்வி மேல் தோல்வி ஏற்பட்டு வந்தது. துருக்கி யர்கள் அங்கே முகம்மது கோரியின் படையைத் தோற்கடித்து அவருடைய செல்வாக்கையும் பலத்தையும் ஒடுக்கிக்கொண் டிருந்தார்கள்.

**ஆளுநர்களின் புரட்சி**

முகம்மது கோரியின் பேரரசுக்குள்ளடங்கிய கஜனி, முல்தான், லாகூர் ஆகிய மாநில ஆளுநர்கள் அவரை எதிர்த் துப் புரட்சி செய்தனர். ஆனல், கோரியின் படை லாகூரில் மூண்ட கலகத்தையும் புரட்சியையும் ஒடுக்கிவிட்டது. மற்ற விடங்களில் தோன்றிய புரட்சிகளை அவரால் ஒடுக்க முடிய வில்லை. இதனல், முகம்மது கோரியின் செல்வாக்கும் வலிமை யும் மேற்கு நாடுகளில் குறையவாரம்பித்தன.

**முகம்மது கோரியின் பயங்கர முடிவு**

இந்தியாவில் தமது அதிகாரத்தை நிலைநாட்டிவிட்டுத் தமது நாடான ஆப்கானிஸ்தானுக்குத் திரும்பிக்கொண்டிருக்கும் வழி யில் அவரைக் கக்கர்ஸ் (Gakkars) என்ற இனத்தினர் கி.பி. 1206-ல் கொலை செய்து விட்டனர். அவர் மரணத்திற்குப் பின்பு கோரி குலப் பேரரசு அழிவுற்றது.

**மதிப்பீடு**

டாக்டர் ஹபீபுல்லா என்னும் ஒரு வரலாற்ருசிரியர் கூறு கிருர்:

'முயீஜுத்தீன்-பின்-சாம் எனப் பேர் படைத்த சுல்தான் முகம்மது கோரி, முஸ்லிம் வரலாற்றில் எத்தகைய இடத்தை வகிக்கிருரென்பதைப்பற்றி, நேர் முரணன இரு கருத்துகள்

இருக்க இடமேயில்லை. கஜினி மகமூத் போலன்றி, முகம்மது கோரி, எது முடியும் எது முடியாது என்ற முன் பின் யோசனை செய்து, அதை நிறைவேற்றும் வல்லமையும் படைத்தவர்; இந்தியாவின் அழுகிப்போன அலங்கோல அரசியல் நிலைமைகளை உற்று நோக்கி, அதற்குகந்தாற்போல், தமது திட்டவட்டமான இராணுவ மார்க்கங்களை அமைத்துக்கொண்டார் அவர். இந்தியாவில் முகலாயப் பேரரசை நிறுவிய பாபருக்கு எத்தகைய அரசியல் விவேகம் இருந்ததோ, அத்தகைய திறனும் அறிவும் இவரிடமும் காணப்பட்டன. இவர் முன் வைத்த காலைப் பின் வைக்காமல், தாம் எண்ணித் துணிந்த செயல்களையும் திட்டங்களையும் நிறைவேற்றுவதில் தளரா ஊக்கமுடையவர்; அதனால், இங்கொன்றும் அங்கொன்றுமாக ஏதோ சில தோல்விகள் நேர்ந்தனவென்றாலும், விடா முயற்சியால், மாற்று வழிகளால், தோல்வியைக் கொண்டே வெற்றிக்கு வழி வகுத்து வெற்றி பெறும் அபார ஆற்றல் படைத்தவர். இவரை எதிர்த்துப் போராடிய இவரைவிட எத்துணையோ திறமைசாலியான குவாரிஸம் ஷாவோடு ஒப்பிட்டுப் பார்த்தால், இவருடைய பேரரசு சிறிது காலத்துக்குத்தான் தாக்குப் பிடிக்குமென்று நினைத்திருப்பார்கள், வரலாற்றுப் பலன்களைக் கணிப்பவர்கள். ஆனால், நடந்ததென்ன! பாபருடைய முகலாயப் பேரரசு அவருக்குப் பின்பும் நீடித்ததே போல், இவருடைய (முகம்மது கோரி) இந்தியப் பேரரசும், இவருக்குப் பின்பும் தொடர்ந்து நீடித்ததைப் பார்க்கிறோம். இவருடைய கோரி குலத்தினால் தொடர்ந்து ஆள முடியாவிட்டாலும், இவரால் பயிற்சியளிக்கப்பட்டுத் தேர்ந்தெடுக்கப்பட்ட அய்பக் (Aibak), யல்தூஜ் (Yalduz), தோக்ரில் (Toghril) போன்ற வல்லவர்கள் தாம், இவருடைய வெற்றிகளுக்குப் பெரிதும் காரணமாயிலங்கினார்கள் என்பதையும் பார்த்தோம். ஒவ்வோர் ஆண்டும் இவர் ஜக்சர்த்தீஸ் (Jaxartes) நதிக்கரையிலிருந்து யமுனை நதிக்குப் படையெடுத்ததைக் கவனிப்பவர்களுக்கு இவருடைய இராணுவ ஆற்றலின் கூர்மை விளங்காமல் போகாது. இராணுவ வெற்றிகளிலும் பேரரசை விரிவடையச் செய்வதிலுமே தமது வாழ்நாளெல்லாம் ஈடுபட்டிருந்ததால், கல்வி, கலாசாரம், கலை போன்ற துறைகளில் இவருக்கு அக்கறையே இல்லாமற் போய் விட்டதென்று கூறிவிட முடியாது. இவரது அவையை அலங்கரித்த அறிஞர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் ஃபக்ருத்தீன் ராஜீயும் (Fakhruddin Razi) நிஜாமி யூருகியுமாவர். இவர்களும் இவர்

களைப் போன்ற மற்றும் பலரும் தங்கள் புரவலரான முகம்மது கோரியை வாயார வாழ்த்திச் சென்றிருக்கின்றனர்.'[1]

டாக்டர் வித்யா தார் மஹாஜன் கூறுகிறார்: 'முகம்மது கோரி ஒரு கூர்மதி வாய்ந்த ராஜதந்திரியாக இருந்தார். எல்லாவித நண்பர்களையும் பகைவர்களையும் கவர்ந்து செயல்படுத்தும் திறமை மிக்கவராகத் திகழ்ந்தார். தம்முடைய பகைவர்களின் குறைகளைக் கண்டு அவற்றினைத் தமது நலன்களுக்குப் பயனுடையனவாக்கிக் கொண்டார். சில சமயங்களில் அவர் கொடூரமானவராய் இருந்தார். ஆனால், அதே சமயத்தில் அவர் அன்புடையவராயும், தாராள மனப்பான்மை யுடையவராயும் இருந்தார் என்பது மறக்க முடியா உண்மையாகும். ஆதலால், அவருடைய அரசியல் விவகாரங்களில் அவர் அணுகிய முறையானது நன்கு ஆராயப்பட்ட உண்மைக்கும் செயல்முறைக்கும் உகந்ததாய் இருந்தது என்பதில் வியப்பொன்றுமில்லை.'[2]

## V. மம்லூக் சுல்தான்கள் (The Mamluk Sultans)

அயல்நாடுகளிலிருந்து வந்து எகிப்தில் குடியேறிய மம்லூக் சுல்தான்களின் வம்சம், அடிமை வம்சத்திலிருந்து வளர்ந்தது. அவ் வடிமைகள் பல இனங்களைச் சார்ந்தவர்கள். அவர்கள் முதலில் எகிப்திய இராணுவத்தில் சேர்ந்து முன்னுக்கு வந்தவர்கள். அவர்கள் கி.பி. 1175 முதல் 1192வரை எகிப்தில் ஆண்ட புகழ் பெற்ற சுல்தானை சலாஹுத்தீனின் ஆதரவாலும், அவருடைய குலத்தைச் சார்ந்த ஐயூபி (Ayyubid) இளவரசர்களின் அன்பாலும் ஆரம்பத்தில் அரச பரம்பரையின் மெய்க்காப்பாளர்களாகி (bodyguard), விரைவில் ஒரு பெரும் சேனையாகவே உருவெடுத்து விட்டனர்.

முன்பின் தெரியாத அயலாருக்கு ஆதரவளித்து ஆபத்தில் சிக்கிக் கொண்ட பாக்தாத் கலீஃபா இழைத்த பிழையையே இவ்வெகிப்து நாட்டின் சுல்தான்களும் இழைத்து ஆபத்துக்குள்ளாயினார்கள். 'நேற்றைய அடிமைகள்! இன்று இராணுவத் தளகர்த்தர்கள்! நாளைய சுல்தான்கள்!' என்று பேராசிரியர் ஹிட்டி இவர்களைப்பற்றிக் கூறுகிறார்.[3]

இவ்வாறாக, இம் முன்பின் தெரியாத அடிமைப் பரம்பரையினர் முன்னேறினர். அவர்களுடைய வரலாற்றை இப்போது ஆராய்வோம்.

[1] Dr. Habibullah, 'Foundation of Muslim Rule in India'.
[2] Dr. V. D. Mahajan, History of India, p. 67.
[3] *அராபிய வரலாறு, ஒன்பதாம் பதிப்பு, பக்கம், 672.*

மம்லூக் சுல்தான்கள் இரண்டு வம்சங்களைச் சேர்ந்தவர்கள். அவையாவன:

(1) பஹ்ரீ மம்லூக் வம்சம் (Bahri Mamluks)

(2) புர்ஜீ மம்லூக் வம்சம் (Burji Mamluks)

## பஹ்ரீ மம்லூக்குகள் (கி.பி. 1250 முதல் 1390 வரை)

பஹ்ரீ மம்லூக்குகள் என்றால் கடலையடுத்து வசித்தவர்கள் என்பது பொருள்.[1] அவர்களுக்குத் துருக்கியர்களுடனும் மங்கோலியர்களுடனும் குருதித் தொடர்புண்டு. அவர்கள் ஆரம்ப காலக் கட்டத்தில், ஐயூபி சுல்தான்களின் மெய்க்காப்பாளர்களாகச் சேவை புரிந்தார்கள். ஐயூபி சுல்தானான (Ayyubid Sultan) அல் சாலிஹ் என்பவர், தம்முடைய மெய்க்காப்பாளர்களை எகிப்து நாட்டு நீல நதியிலுள்ள அல்-ரௌதா (al-Rawdah) என்ற தீவில் கட்டப்பட்ட இராணுவத் தளங்களில் வசிக்கச் செய்ததிலிருந்துதான் அவர்களுக்கு பஹ்ரீ மம்லூக்குகள் எனப் பெயர் வந்தது. பஹ்ரீ சுல்தான்களில் மிக முக்கியமானவர் ஐவர் ஆவர். அவர்கள்:—

(1) ஐபக் (Aybak)—கி.பி. 1250—1257.

(2) குத்தூஸ் (Qutuz)—கி.பி. 1259—1260.

(3) பேபர்ஸ் (Baybars)—கி.பி. 1260—1277.

(4) கலாவூன் (Qalawun)—கி. பி. 1279—1290.

(5) அல் நாசிர் (Al Nasir)—கி. பி. 1293—1340.

மம்லூக் வம்ச ஆட்சியை நிறுவியவர் ஒரு பெண் சுல்தான் ஆவார்.[2] அவர் பெயர் ஷஜருத்துர் (Shajar-ul-Durr)[3] ஆகும். இவர் எகிப்து நாட்டு சுல்தானான அல் சாலிஹ் என்பவரின் விதவையாவார். ஷஜருத்துர், முதலில் ஓர் அடிமையாயிருந்தவர். துருக்கி அல்லது ஆர்மீனியாவைச் சேர்ந்த ஓர் அடிமைப் பெண் என்று கூறப்படுகிறது.[4] இவளுக்கு சுல்தான் அல் சாலிஹிடம் பணி புரியும் வாய்ப்புக் கிடைத்தது. அம் மன்னரால் அடிமை நிலையிலிருந்து விடுதலை செய்யப்பட்டு, அவரையே

[1] எகிப்து நாட்டு நீல நதிக்கு 'பஹ்ருன் நீல்' என்று அரப் மொழியில் பெயர். அந்த பஹ்ரின் (கடல் போன்ற நதியின்) தீவில் வாழ்ந்த மம்லூக்குகள் 'பஹ்ரீ'கள் என்று அழைக்கப்பட்டனர் என்பதே சரியான விளக்கமாகும்.

[2] கி. பி. 1249-ல்.

[3] 'முத்துத் திவலை' என்பது பொருள்.

[4] இவ் வீராங்கனை பற்றிய தமிழ் நவீனமொன்று உள்ளது. ஆசிரியர், N. B. அப்துல் ஜப்பார் வரைந்தது.

(சுல்தானையே) இவள் மணந்து கொண்டாள். கணவர் சாலிஹ் (al-Saleh) காலமான பின்னர், இவள் தானே ஆட்சிப் பொறுப் பேற்று, 'சுல்தானு ஷஜருத்துர்' என்ற பட்டத்துடன் எகிப்தில் ஆட்சி செலுத்தினாள். மேலும், இவள் தன் பெயரில் நாணயங் களையும் வெளியிட்டாள். ஷஜருத்துர் மிகவும் திறமையும் வீர மும் வாய்ந்தவள்; அரசியல் திறனும் இராஜதந்திரமும் மிகுந் தவள். இவளுக்கு உதவியாக முஈஜுத்தீன் ஐபக் (Aybak) என் பவரை அமீர்கள்[1] (Amirs) தேர்ந்தெடுத்தனர். ஐபக் என்ற அவ் வுதவியாளரையே ஷஜருத்துர் மறு கணவனுக மணந்து கொண்டாள். மணந்த பின்பும், இவளே எகிப்தின் அரசியாக ஆண்டாள். ஆனால், இவ் விணைப்பாட்சி நெடுநாள் நீடிக்க வில்லை. ஷஜருத்துர் முடிவில் கொல்லப்பட்டாள்.[2]

## 1. சுல்தான் ஐபக் (கி.பி. 1250-1257)

மம்லூக் சுல்தான்கள் வரிசையில் இவரே முதல்வர். தமது ஆரம்ப ஆட்சிக் காலத்தில், வாரிசு உரிமை வாய்ந்திருந்த சிரி யாவின் ஐயூபி வம்சம் என்ற ஒரு வம்சத்தை ஒடுக்கிக் கொண்டே, தாம் புதிதாக நிருமித்துக்கொண்ட அரசைப் பலப் படுத்திக் கொண்டார், சுல்தான் ஐபக் (Sultan Aybak).

இவர் தமக்கேற்பட்ட எதிர்ப்புச் சக்திகளை யெல்லாம் ஒடுக்கி, நசுக்கி, தம்மையே எதேச்சாதிகார அரசராக்கிக் கொள்ள முனைந்தார். இதை அமீர்கள் (Nobles) எதிர்த்தனர். அவரோ, எதிர்ப்புகளை யெல்லாம் நசுக்கி, சின்னுட்களில் எகிப்திய சிம்மாசனத்தைத் தமக்கே உரிமையாக்கிக் கொண் டார். முடிவில், ஐபக் அவருடைய மனைவி ஷஜருத்துர்ரின் தூண்டுதலால் கொலை செய்யப்பட்டார். பட்டத்துக்கு வந்த ஐபக்கின் மகன் அல் மன்சூர் அலீ (al Mansur Ali), அரசப்பிரதி நிதியான (regent) குத்தூஸ் (Qutuz) என்பவரால் சிம்மா சனத்திலிருந்து இறக்கப்பட்டார்.

## 2. குத்தூஸ் (கி.பி. 1259-60)

அல் மன்சூர் அலீயை இறக்கிய குத்தூஸ் எகிப்திய சிம்மா சன மேறி, புகழீட்டிக் கொண்டார். இவர் காலத்தில்தான் ஹிலாகூ (Hulagu) என்பவருடைய மங்கோலியப் படையால் எகிப்துக்கு உண்மையான ஆபத்து ஏற்பட்டது.

[1] பெருங்குடி மக்கள் என்று பொருள்.

[2] ஐபக்கின் முதல் மனைவியின் அடிமைகள் அரசியைக் கொன்று விட்டனர்.

**ஹிலாகூ தூதுக் குழு கொலை**

எகிப்திய சுல்தான் குத்தூஸின் உத்தரவால் ஹிலாகூவின் தூதுக் குழு ஒன்று கொலை செய்யப்பட்டது. மங்கோலியப் படை எகிப்து நோக்கிப் பாய்ந்தோடியது. பாலஸ்தீனப் பட்டண மான ஐன் ஜாலூத் (Ayn Jalut) என்னுமிடத்தில் இப் பிரச்சினை முடிவு கட்டப்பட்டது. சுல்தான் குத்தூஸின் (Qutuz) தளபதி பேபர்ஸ் என்பவரின் தலைமையிலான படை மங்கோலியர்களைத் தோற்கடித்தது. மேலும், வீரர் பேபர்ஸ், மங்கோலியர்களை அலெப்போ (Aleppo) என்ற எல்லையையும் கடந்தோடச் செய்து, சிரியா, இராக் போன்ற பிரதேசங்களிலிருந்தும் விரட்டி யடித்தார். மங்கோலியப் படைகளால் பல நாடுகள் அல்லலுற்ற தைப் போன்று எகிப்தும் அல்லலுக்கிரையாகாமல் இவர் தடுத் தார். கொடியவர்களான மங்கோலியர்களை ஒடுக்கி நாடு காத்த மாவீரர் பேபர்ஸ் தமது அரிய சாதனைக்குக் கைம்மாருக, சுல்தான் தம்மை அலெப்போவிற்கு ஆளுநராக்குவாரென்று எதிர்பார்த்து ஏமாந்தார். ஏமாற்றம் சினமாக மாறியது. கி.பி. 1260ஆம் ஆண்டு இவர் சுல்தானைக் கொலை செய்துவிட்டு, தாமே அரியாசனத்தின்மீது அமர்ந்தார்.

## 3. சுல்தான் பேபர்ஸ் (கி.பி. 1260-1277)[1]

அடிமைப் பிறப்பிலிருந்து அரசப் பதவிக்கு முன்னேறியவர் பேபர்ஸ் (Baybars). தமது சொந்த முயற்சியாலும் ஆற்றலாலும் ஆட்சிப் பீடமென்னும் உயர்ந்த அந்தஸ்துக்கு இவர் உயர்த்தப் பட்டார். இவரொரு சிறந்த வீரர்; விடா முயற்சிக்காரர்; அர சியல் திறன் மிக்கவர்; கண்டோர் வியக்கும் தோற்றமுடைய வர். இவர் தம்மீது ஆட்சி செலுத்திய சுல்தானுன குத்தூஸைக் கொலைசெய்து தாமே அரசாட்சியைக் கைப்பற்றினுர். பதினேழு ஆண்டுகள்வரை இவர் எகிப்தில் சிறப்புமிக்க ஆட்சி செலுத் தினுர்.

**மம்லூக்குகளிலெல்லாம் மாவீரன், மாமேதை, சுல்தான் பேபர்ஸ்**

மம்லூக் வம்ச சுல்தான்க ளனைவரிலும் இவரே தலை சிறந்தவர். பல பகைவர்களை எதிர்த்துப் படைகள் பல திரட்டி எதிரிகளை முறியடித்த பலப்பல வெற்றிகள் மட்டுமல்ல அவர்தம் புகழுக்குக் காரணம்! காட்டுமிராண்டியான மங்கோலியர்களின் முரட்டுத்தனமான தாக்குதல்களினின்றும் தம் பிரதேசங்களைத்

[1] ஜாஹிர் ருக்னுத்தீன் அல் பேபர்ஸ் என்னும் இவரது ஆரம்ப கால வாழ்க்கை விவரமும் முற்சொன்ன 'ஷஜருத்துர்' நவீனத்தில் இடம் பெற் றிருப்பதைக் காண்க,

தற்காத்துக் கொள்ள அவர் காட்டிய வீராதி வீரமும், தீராதி தீரமும் கூடத்தாம் காரணம்.

### ஐன் ஜாலூத் போர்: மங்கோலிய முதுகெலும்பு முறிவு

இவர் அதிதீரத்துடன் போராடி, உலக வரலாற்றில் கீர்த்தி பெற்று விளங்கும் ஐன் ஜாலூத் என்னும் போரில் மங்கோலியர்களின் முதுகெலும்பை ஒடித்து, எகிப்து, சிரியா, இராக் நாடுகளை மங்கோலியர்களுடைய நாச வேலைகளிலிருந்து காப்பாற்றினர். ஹஷீஷிகள் (Assassins) என்னும் படுகொலை புரியும் கொலைஞர் இயக்கத்தையும் இவர் ஓரே மூச்சில் தொலைத்துக் கட்டினர். இச் சாதனைகளால் இவர் தம்மை இரண்டாம் சலாஹுத்தீன் (Saladin II) என்றும் கூட நிரூபித்து விட்டார் எனலாம். பேபர்ஸ் மங்கோலியர்களை வென்றது மட்டுமின்றி, சுல்தானு ஷஜருத்துர்ரின் சேனுதிபதியாக இருந்த காலத்திலேயே சிலுவைப் போர் வீரர்களைப் பல போர்க்களங்களில் தோற்கடித்து மாபெரும் வெற்றிகளை ஈட்டினர். ஜெர்மானிய இனக் குழுவினரான ஃபிராங்குகள் (Franks) என்பவர்களின் முதுகெலும்பை ஒடித்த புகழ் பேபர்ஸையே சாரும்.

### உள்நாட்டில் கவனம்

வெளிநாட்டுப் பகைவர்களை ஒடுக்கி அமைதி நிலவச் செய்த பின், அரசு பீடத்தில் தமது அதிகாரத்தைப் பெருக்கிக் கொள்வதிலும், அரசாங்க விஷயங்களைச் சீர்படுத்துவதிலும் தமது முழுக் கவனத்தையும் செலுத்திஞர் சுல்தான் பேபர்ஸ். மேலும், தமது அரசுரிமைக்குச் சட்டபூர்வமாகவும் சமய சார்பாகவும் அங்கீகாரம் பெறும் நோக்கத்துடன், முன்னுள் அப்பாஸிய கலீஃபாவின் நெருங்கிய உறவினர் ஒருவரை ஆடம்பரத்துடன் அழைத்து வரவேற்று, அவருக்கு அல் முஸ்தன்ஸிர் (Al Mustansir) என்று பட்டஞ் சூட்டி, அவரை எகிப்துக்குக் கலீஃபாவாக ஆக்கி, அவரது கையாலேயே, 'எகிப்துக்கும், சிரியாவுக்கும், ஹிஜாசுக்கும், ஏமனுக்கும் (Yemen), யூஃப்ரடீஸ் (Euphrates) நதி பாயும் பிரதேசங்களுக்கும் தாமே சுல்தான்' என்னும் அங்கீகாரத்தையும் பெற்றுக் கொண்டார் இந்த சுல்தான் பேபர்ஸ்.

அல் முஸ்தன்ஸிர் காலமான பின்பு, அதே அப்பாஸீ குலத்தைச் சேர்ந்த அல் ஹக்கீம் (Al Hakim) என்பவரை பேபர்ஸ் எகிப்தின் புதிய கலீஃபாவாக ஏற்றுக்கொண்டார். ஆனல், இந்த கலீஃபா ஓர் அதிகாரமும் பெற்றிராமற்போய்,

சுல்தானின் கைப்பாவையாயினர். இவருடைய வழித்தோன்றல்கள் இரண்டரை நூற்றாண்டுகள்வரை பெயரளவில் மட்டுமே கலீஃபாக்களாக (Caliphs) இருந்துவந்தனர்.[1]

**பேபர்ஸின் சாதனைகள்**

மங்கோலிய அரசுடனும் வேறு சில ஐரோப்பிய அரசுகளுடனும் அரசியல்-வியாபாரத் துறைகளில் பல முக்கியமான உடன்படிக்கைகளைச் செய்து கொண்டது பேபர்ஸின் சில அரிய சாதனைகளாகும்.

புகழ்மிக்க இராணுவ வீரராகவும், அரசியலில் மிகப்பெருந் தீரராகவும் திகழ்ந்த சுல்தான் பேபர்ஸ், தமது சேனையைப் பல விதங்களில் பலப்படுத்தினர்; கப்பற் படையையும் சீர்திருத்தினர்; சிரியாவின் கோட்டை கொத்தளங்களை வலுப்பம் மிக்கனவாக மாற்றியமைத்தார்; பொதுமக்களின் நலனுக்காகப் பல முன்னேற்றமான சீர்திருத்தங்களையும் செய்தார். இவர் பல நீர்ப்பாசனக் கால்வாய்களை வெட்டினர்; பல துறைமுகங்களைப் புதுப்பித்துப் பலப்படுத்தினர்; அனேக போக்குவரத்துப் புதுப் பாதைகளை நிறுவினர்; பல மசூதிகளை நிருமித்து அழகுபடுத்தினர். மேலும், இவர் சமயத்தைப் பரப்பும் நோக்கத்துடனும், ஏழைகளின் துன்பம் துடைக்கும் விருப்புடனும் பல அறக்கட்டளைகளை நிறுவினர்.

காஹிரா என்னும் கெய்ரோவிலிருந்து (Cairo) திமஷ்க் (Damascus) வரையில், முன்னெப்பொழுதையும் விட, தபால் போக்குவரத்துகளைத் திறம்படவும், விரைவுடன் செயலாற்றும் முறையிலும், பத்திரமாக நடந்தேறும் வகையிலும் சீர்திருத்தியமைத்தார். மேலும், நான்கு வகைகளில் இஸ்லாமியப் பண்பாட்டைப் பின்பற்றியவர்களின்[2] திருப்திக்காக, நான்கு விதமான சட்டப் பரிபாலனத்திற்கென்று, நான்கு சட்ட நிபுண நீதிபதிகளை இவர் நியமித்தார். பேராசிரியர் ஹிட்டி கூறுகிறர்: 'அவர் கொண்டிருந்த மதப்பற்றையும் ஆர்வத்தையும், இஸ்லாம் மதத்துக்காக அவர் கிறித்தவர்களுடன் பேராடிப் புகழீட்டிய

[1] 'உதுமானிய துருக்கியர் வரலாறு' என்னும், தமிழ்நாட்டுப் பாட நூல் நிறுவன வெளியீட்டு நூலில் இந்த கலீஃபாக்கள்பற்றிய விவரங்கள் நன்கெடுத்துத் தொகுக்கப்பட்டுள்ளன.

[2] ஹனபி, ஷாபி, ஹன்பலி, மாலிக்கி என்னும் நான்கு வகையில் இஸ்லாம் பின்பற்றப்படுகிறது. இவை நான்கு இமாம்கள் (தலைவர்கள்) வகுத்துத்தந்த பாதைகளாம். 'இந்திய இசுலாமியர் சட்டம்' என்னும் தமிழ்நாட்டுப் பாட நூல் நிறுவன வெளியீட்டில் இதன் முழு விவரமும் காணப்பெறும்.

தையும் கவனிக்குங்கால், ஹாரூன் அல் ரஷீதின் சேவைக்கும் புகழுக்கும் இணைத்ததன்று சுல்தான் பேபர்ஸின் புகழ் என்பது நன்கு விளங்காநிற்கும்.'[1]

## 4. கலாவூன் (கி.பி. 1279-1290)

சுல்தான் பேபர்ஸுக்குப் பின் மிகவும் புகழ் பெற்றுத்திகழ்ந்த மம்லூக் சுல்தான் கலாவூன் (Qalawun) என்பவர் ஆவார். இவரும் பேபர்ஸ் போன்றே மிகவும் கீழ் மட்டத்திலிருந்து மேல் மட்டத்துக்கு உயர்ந்தவர். தம் பாதுகாப்பாளரான (Guardian) சலாமிஷ் (Salamish) என்பவரை இவர் அரியணையிலிருந்து நீக்கிவிட்டுப் பட்டத்துக்கு வந்தார்.

இவர் அரியணைமீது ஏறியவுடனேயே பாரசீகத்திலிருந்த மங்கோலிய இனத்தவரான இல் கான்கள் (Il Khans of Persia) என்னும் அதிபர்கள் அவருடைய சிரியா நாட்டை மிரட்ட ஆரம்பித்தனர். ஹிலாகூ கானின் மகனும் பேரனும், ரோமாபுரிப் போப்புடனும் மற்றும் சில ஐரோப்பிய அரசர்களுடனும் உடன்படிக்கை செய்துகொண்டு, சிரியாவிலிருந்து எகிப்தியர்களை விரட்டியோட்டிட முனைந்தனர். ஆனால், இப் பெருந் திட்டம் தோல்வியுற்றது.

இப்பெருந் திட்டம் தோல்வியுற்றதற்கு முக்கிய காரணம், கி.பி.13-ம் நூற்றாண்டின் கடைசிக் கட்டத்தில் மங்கோலியர்கள் இஸ்லாம் மதத்தை ஏற்றுக்கொண்டுவிட்டதேயாகும்.[2] மேலும், அவர்களுடனும், பைஜான்ஷியப் பேரரசருடனும் (Byzantine Emperor) சில ஐரோப்பிய அரசுகளுடனும் உடன்படிக்கை மூலம் நட்புப்பூண்டு, நல்லுறவுகளை நிலைநாட்டிக்கொண்டு, தமது அந்தஸ்தைப் பலப்படுத்திக் கொண்டார் சுல்தான் கலாவூன். இலங்கையின் (Ceylon) அரசன் கூட, சுல்தானுடைய தர்பாருக்குத் தன் நல்லெண்ணத் தூதுக் குழுவொன்றை அனுப்பி வைத்தான்.

தமது ஆட்சியின் கடைசிப் பகுதியில், கிறித்தவர்களுக்குத் தமது நாட்டில் எவ்விதப் பதவியும் அளிக்கப்பட மாட்டாதென

[1] அராபிய வரலாறு, ஒன்பதாம் பதிப்பு, பக்கம் 676.

[2] இஸ்லாம் மதத்தையும், அதன் புகழ்மிக்க பண்பாட்டையும், கலாசாரத்தையும் கி. பி. 1258-ல் நசுக்கிப் பெரும்பாழ் செய்தவர்களான இம் மங்கோலியர்கள் அரை நூற்றாண்டுக்குள் (கி. பி. 1295) இஸ்லாம் மதத்தின் வீரர்களாகவும், அதன் கலாசாரத்தைக் கைதூக்கி விடும் சிறந்த தலைவர்களாகவும் அடியோடு மாறினர். இந் நிகழ்ச்சியானது வரலாற்றில் ஒரு வியத்தகு நிகழ்ச்சியாகும்; இஸ்லாமிய வரலாற்றில் ஒரு குறிப்பிடத்தக்க அருஞ் செய்தியுமாகும்.

உத்தர விட்டார் சுல்தான் கலாவூன். இவ் வுத்தரவுக்கு ஒரு காரணம், சிலுவைப் போர்கள் (Crusades) நடந்த சமயத்தில் கிறித்தவர்கள் முஸ்லிம்களுக்கு இழைத்த தீங்குகளும் கொடுமைகளும் கொலைகளும் எல்லையற்றவையாகும். இவருக்கு முன் ஆட்சி செலுத்திய சுல்தான் பேபர்ஸ், இச் சிலுவைப் போர்வீரர்களைப் பல களங்களில் தோற்கடித்து வெற்றியுற்றார். அவரைப் போலவே கலாவூனும் பல வெற்றிகளைப் பெற்றார். கிறித்தவர்களின்மீது வெறுப்படைந்த சுல்தான் கலாவூன் தம் நாட்டில் அவர்களுக்கு எவ்விதப் பதவியும் சலுகையும் வழங்கப்படமாட்டாவென்று உத்தரவு பிறப்பித்துவிட்டார் போலும்!

**கலாவூனின் சாதனைகள்**

சுல்தான் கலாவூன் ஒரு சிறந்த போர் வீரரும், அரசியல்வாதியும், இராஜதந்திரம் மிக்கவரும் மட்டுமின்றித் தம் குடிமக்களின் நல்வாழ்வில் பெரும் அக்கறையும் கொண்டிருந்தார். அலெப்போவிலும் திமஷ்கிலும் (Damascus) உள்ள கோட்டை கொத்தளங்களைப் புதுப்பித்தார்; கெய்ரோவில் ஒரு சிறந்த மருத்துவ மனையையும் அதற்குள் ஒரு பள்ளிக்கூடத்தையும் ஒரு மசூதியையும் நிறுவினார். பல்வேறு உடற்கூற்று நோய் ஒவ்வொன்றுக்கும் பல பிரிவுகளை மருத்துவ மனையில் கட்டியதோடு, பல மருத்துவ ஆய்வுக் கூடங்களையும் (Laboratories), ஒரு மருந்தகத்தையும் (Dispensary),[1] குளிக்கும் அறைகளையும் (Baths), பல சமையற்கூடங்களையும், பண்டகசாலைகளையும் கூட அவர் நிறுவினார். அவரது புகழ்வாய்ந்த மருத்துவ மனையில் பல மருத்துவ நிபுண சிகாமணிகளுடன், அவர்களுக்கெல்லாம் மேலாக ஒரு கல்வி நிலையத் தலைவரும் (Dean) இருந்தார். தற்காலத்தில் மருத்துவக் கல்லூரிகளில் நிகழ்வது போன்றே, அந்தத் தலைவரும் பேருரை மண்டபத்தில் மருத்துவ ஆராய்ச்சிபற்றிய பேருரைகளை நிகழ்த்தி வந்தார்!

## 5. அல் நாசிர் (கி.பி. 1293-1340)

சுல்தான் கலாவூனுக்குப் பின் அவருடைய குமாரர் அல் அஷ்ரஃப் என்பவர் பட்டத்துக்கு வந்தார். இவருடைய ஒரே சாதனை 'அக்கா' (Akka) என்ற துறைமுகப் பட்டினத்தை

[1] உலக வரலாற்றில், பொதுமக்கள் நலனுக்காகவென்று முதன் முதலாக மருத்துவசாலைகளை (Public Dispensaries and hospitals) நிறுவியவர்கள் முஸ்லிம் மன்னர்களே ஆவர். இன்று நாம் மருத்துவசாலைகளில் காணும் பல்வேறு பிரிவுகளும் ஆய்வுக்கூடங்களும், அன்று சுல்தான் கலாவூன் வழிகாட்டிச் சென்ற முன்மாதிரியையே அடிப்படையாய்க் கொண்டவை என்பதை நினைவிலிருத்துதல் முக்கியமாம்.

1291-ல் வென்றதுதான். அல் அஷ்ரஃபுக்குப் பின் அவருடைய இளைய சகோதரர் அல் நாசிர் பட்டத்துக்கு வந்தார். எல்லா சுல்தான்களுள்ளும் இவரேதாம் மிக நீண்ட காலம் ஆட்சி செலுத்தினர்.

இவர் காலத்தில்தான் கஜன் மகமூத் (Ghazan Mahmud) தலைமையில் மங்கோலியப் படையெடுப்பு ஒன்று நிகழ்ந்தது. கி.பி. 1299-ல் எகிப்திய படை முழுத் தோல்வி யடைந்தது. மீண்டும் கி.பி. 1300-ல், மங்கோலியர்கள் திமஷ்கைக் (Damascus) கைப்பற்றினர்கள். கைப்பற்றப்பட்ட அந் நகரம் அழிக்கப்படவில்லை, கொள்ளையடிக்கப்படவுமில்லை யென்றலும், சிரியாவின் வட பாகம் சூறையாடத்தான் பட்டது. எனினும், கி.பி. 1303-ல் மங்கோலியப் படையெடுப்பு இறுதியாக முறி யடிக்கப்பட்டு நசுக்கப்பட்டது. அப்பொழுது நிகழ்ந்த ஒரு பெரும் போரில் மங்கோலியப் படையெடுப்பை சுல்தான் அல் நாசிர் வீரத்துடன் எதிர்த்துப் போராடி முறியடித்தார். அது மாத்திரமின்றி, கஜன் மகமூதுக்குப் பின் அரியணை ஏறிய எத் தலைவனும் மீண்டுமொருமுறை எகிப்தின் திசை நோக்கிப் பார்க் கும் அளவுக்குத் துணிச்சல் கொள்ள முடியா அளவுக்குச் செய்து விட்டார், சுல்தான் அல் நாசிர்.

**அல் நாசிருடைய களியாட்ட வாழ்க்கை**

ஆடம்பரத்திலும், பணத்தைப் பாழாக்கும் சிற்றின்பக் கேளிக்கைகளிலும் மற்றும் பல விளையாட்டுகளிலும் மூழ்கிவிட்ட வர் சுல்தான் அல் நாசிர் ஆவார். சலிப்பின்றி அவர் களியாட்ட வாழ்க்கை வாழ்ந்தார். பல விளையாட்டுகளில் அவர் வல்லவர்; வேட்டையாடுவதில் கைதேர்ந்தவர்; குதிரைகள் என்றல் அவ ருக்கு விருப்பம் அதிகம். அழகிய பல கட்டடங்களை அமைத்த சிறப்பு அவருக்குண்டு. இவையன்றி, மக்களுடைய நல்வாழ்வில் அவர் மிகவும் அக்கறை காண்பித்தார். பலப் பல பொதுநலச் சாதனங்களையும் அவர் இயற்றுவித்தார். பொது மக்களுக்காகக் குளியல் அறைகள் பல நிருமித்ததுடன், குளங்கள் பலவற்றை வெட்டினர்; பள்ளிக்கூடங்கள், மடங்கள், பள்ளிவாசல்கள் பலப் பல கட்டுவித்தார்; நீர் ஊற்றுகள் பலவற்றையும் ஆங் காங்கே அமைத்தார். இத்தகைய ஊதாரிச் செலவுகளால் வரிச்சுமை தாங்க முடியாமல் மக்கள் அவதிப்பட்டார்கள். இதற்கிடையில், அல் நாசிர் மரண மடைந்தார். அவர் மரணத் துக்குப் பின் நாட்டில் அமைதி சீர்குலைந்தது. உள்நாட்டுச்

சச்சரவுகளும், கலகங்களும், பஞ்சங்களும், கொள்ளை நோய்களும் (plague) பொது மக்களை வாட்டி வதைத்தன.

**பன்னிரண்டு பொம்மை சுல்தான்கள் (கி.பி. 1340—1382)**

இறுதிப் பன்னிரண்டு பஹ்ரீ சுல்தான்கள் வெறும் பதுமைகளாக ஆட்சி செலுத்தினர். எவருமே பாராதபடி, பாராட்டாதபடி அவர்கள் அரியணை ஏறினார்கள், எவருமே கருதிப் பாரா முறையில் புதைகுழியி லிறங்கினார்கள். பஹ்ரீ வம்சத்துக் கடைசி சுல்தான் அல் சாலிஹ் ஹாஜி இப்னு ஷஅபான் (al Salih Haji ibn Shaban) என்பவராவார். இரண்டே ஆண்டுகள் (கி.பி. 1380—82) மட்டுமே இவர் ஆட்சி புரிந்தார். இவரை அரியணையிலிருந்து கீழே இறக்கிவிட்டுப் பட்டத்துக்கு வந்தவர் பர்குக் (Barquq) என்பவராவார். அவர் தோற்றுவித்த வம்சமே புர்ஜீ மம்லூக் வம்சம் ஆகும்.

## புர்ஜீ மம்லூக் வம்சம் (கி.பி. 1382-1516)

பஹ்ரீ மம்லூக் வம்சத்தைத் தொடர்ந்து வந்தது புர்ஜீ மம்லூக் வம்சம் (Burji Mamluks) ஆகும். இவர்களுடைய முன்னோர்கள் சர்க்கேசிய வட்டார அடிமைகள் (Circassian slaves) ஆவர்.[1] இருபத்துமூன்று புர்ஜீ வம்ச சுல்தான்கள் எகிப்துமீது 135 ஆண்டு காலம் வரை ஆட்சி செய்தனர்.

**அரசுரிமை**

காலஞ் சென்றுவிட்ட மன்னரின் மகனுக்கன்று அரசுரிமை! இப் பழக்கம் இக் குலத்தினரால் அசட்டை செய்யப்பட்டது. வல்லோன் வகுத்ததே வாய்க்கால் என்பது போன்று, கை வலுத்தவனே ஆட்சிப் பீடத்தைக் கைப்பற்றுவான். இராணுவ வம்சத்தினர்க்கெல்லாம் சம அந்தஸ்து வழங்கப்பட்டது. அவர்களுள் எவன் மிக அதிகமான செல்வாக்கைப் பெற்றுள்ளானோ அவனுக்குத்தான் சிம்மாசனம் என்கிற முறையைப் புர்ஜீ மம்லூக் சுல்தான்கள் கடைப்பிடித்தார்கள். இக் கொடிய முறையால் நாட்டில் சண்டைகளும் கலகங்களும் மூண்டு, அமைதி குலைந்தது. சுல்தான் செல்வாக்கு மிக்கவனாக இருந்த பொழுதிலும், அவனையும் அவனது ஆட்சியையும் ஆட்டிப் படைத்தது, ஒரு சிறு இராணுவக் குழுவேயாகும். இச் சிறு இராணுவக் குழுவினால் நாட்டில் சச்சரவுகளும், சண்டைகளும்,

[1] ருசியாவிலுள்ள சர்க்கேசிய பகுதிக்குரிய காக்கேசிய (Caucasian) மரபுக்குடியினர் இவர்கள்.

துரோகமும் மலிந்தன. புர்ஜீ மம்லூக் சுல்தான்களில் இருவரே முக்கியமானவர். அவர்கள் சுல்தான் காயித் பேயும் (Qait Bay), சுல்தான் கோரியும் ஆவர்.

### சுல்தான் காயித் பே (கி.பி. 1468-1495)

புர்ஜீ வம்ச மன்னர்களுள் இவர் பதினெட்டாவது சுல்தான் ஆவார். மேலும், மற்றவர்களினும் இவரே மிக நீண்ட நாள் வரை ஆட்சி செலுத்தினர். இவரும் ஆரம்பத்தில் ஓர் அடிமையா யிருந்து, பின்னர் அரசராக உயர்ந்தார். சுல்தான் பர்ஸ்பே (Sultan Barsbay) என்பவரால் இவர் ஐம்பது வெள்ளி நாணயங் களுக்கு விலேக்கு வாங்கப்பட்டவராவார். பின்னர், சுல்தான் ஜக்மக் (Sultan Jaqmaq) என்பவரால் இவர் அடிமை விடுதலே அளிக்கப்பட்டார். தமது விடாமுயற்சியால், ஆற்றலால் படிப் படியாய் முன்னேறி, இறுதியில் கி.பி. 1468-ல், இவர் அரியா சனத்தின் மீதே அமர்ந்து விட்டார்.

இவருடைய காலத்தில் உதுமானிய துருக்கியர்கள் (Otto-man Turks) எகிப்தை மிரட்டிய வண்ணமிருந்தனர். சுல்தான் காயித் பே எகிப்தில் ஆட்சி செலுத்தி வந்தபோது, உதுமானிய சுல்தான் இரண்டாம் பாயஜீத் (Bayazid II) என்பவர் துருக்கி யில் ஆட்சியில் அமர்ந்திருந்தார். உதுமானிய துருக்கர்களுக்கும் மம்லூக் சுல்தான்களுக்கும் ஏற்பட்ட பிணக்கு, ஆசியா மைனரி லும் (Asia Minor)சிரியாவிலுமிருந்த அவ் விரு பேரரசுகளுடைய சிற்றரசுகளுக்கிடையேயும் அடிக்கடி சண்டை சச்சரவுகளே மூட் டியவண்ண மிருந்தது. முடிவில், இரண்டாம் பாயஜீத் எகிப்து மீது படையெடுத்தார். ஆனல், காயித் பே தமது திறமையினல் துருக்கியைப் பணியவைத்து, சமாதானம் செய்து கொண்டார். இவ் வெற்றிக்குப் பின் காயித் பே காலமானர்.

### சுல்தான் கோரி (கி.பி. 1500-1516) (Sultan Ghori)

இவரும் தமது வாழ்வின் ஆரம்பக் கட்டத்தில் ஓர் அடிமையா யிருந்து, தமது திறமையாலும் முயற்சியாலும் படிப்படியாக முன்னேறி, பின்னர் சுல்தானுனர். பல நற்பண்புகளேப் பெற் றிருந்தவராயினும், இவரிடம் சில குறைகள் காணப்பட்டன. இவர் ஆளும் திறமை படைத்தவராயினும், அரசியல் தந்திரமில் லாதவர்; மக்களுக்குண்டான பிரச்சினேகளேக் கூர்ந்து கவ னித்து, தக்கதெது தகாததெது என்று அலசி ஆராய்ந்து பார்க் கும் விவேகமில்லாதவர். மேலும், முக்கியமில்லாத விஷயங்

களுக்காக இவர் தமது பொன்னுன காலத்தையும் செல்வத்தையும் துறந்தார்.

**கோரி செய்த தவறு**

முதலில் தமது நாட்டில் இவர் தமது நிலையை வலுப்படுத்திக் கொள்ளாமல், தம்முடைய பழைய எதிரியான உதுமானிய வம்சத்தினரின் பேரரசுடன் இணைந்திருந்த தமது எல்லைப் பிரதேசத்தை மேலும் வலிமையுள்ளதாக்கிக் கொள்ளாமல், இந்தியா நோக்கிச் சென்று கொண்டிருந்த போர்ச்சுகீசியக் கப்பற் படைகளைத் தாக்கித் தடை செய்வதில் தமது இராணுவப் பலத்தையும், மக்கள் வரிப் பணத்தையும் அனுவசியமாகச் செலவிட்டார். தாம் அரசியல் விவேக மில்லாதவரென்பதை இவர் இவ்வாறு நிரூபித்துவிட்டார்.

இந்தியா முதலிய கிழக்கு நாடுகளுடன் வர்த்தகம் செய்யும் உரிமை தமக்கே ஏகபோகச் சொந்த மென்றும், அதனுல் போர்ச்சுகல் போன்ற நாடுகளின் போட்டா போட்டியை அனுமதிக்க முடியாதென்றும் சுல்தான் கோரி பிடிவாதம் பிடித்து, முடிவில் போர்ச்சுகீசியரால் தோற்கடிக்கப்பட்டார்.

இதற்கப்புறமாவது இந்த சுல்தானுக்கு அறிவு வந்ததா என்ருல், அதுதான் இல்லை! சூழ்நிலைக் கேற்றவாறு தம்மைச் சரிப்படுத்திக் கொள்ளும் விவேகம் இவருக்கில்லை; இராஜதந்திரமுமில்லை. முரட்டுச் சுபாவம் மிக்க இவர் முன் வைத்த காலைப் பின் வைப்பதா? என்று அகம்பாவங் கொண்டார்.

**மற்ருெரு முட்டாள்தனம்: பாரசீகத்தோடு இரகசிய உறவு**

இவர் இழைத்த மற்ருேர் அறிவற்ற செயலால் உதுமானியப் பேரரசர்களின் தீராக் கோபத்துக்குத் தம்மையும் எகிப்தையும் ஆளாக்கிக் கொண்டார்.

அக் காலத்தில் பாரசீக அரசராயிருந்த ஷா இஸ்மாயீல் (Shah Ismail 1500—1524) ஷீஆப் பிரிவைச் சேர்ந்தவர். அவரே சஃபாவித் (Safavid) வம்சத்தை நிறுவியவராவார். அவர் துருக்கியரை விஷத்தினும் கொடியவர்கள் எனக் கருதினுர். அப்படிப்பட்டவரை இரகசியமாக ஆதரித்து வந்தார் கோரி. உதுமானிய துருக்கியர்களோ தீவிரமான ஸுன்னீகள் (Sunnis). ஆதலால், பாரசீகத்தின் அரசரான ஷா இஸ்மாயீலை அவர்கள் தங்கள் பிறவி விரோதியாகக் கருதினுர்கள்.

**சால்திரான் போர், கி.பி. 1514 (Battle of Chaldiran)**

சால்திரான் என்னுமிடத்தில் உதுமானியப் பேரரசராகிய முதலாம் சலீம் (Salim I) ஷா இஸ்மாயீலைத் தோற்கடித்தார்.[1] தம்முடைய அந்தரங்க இந் நண்பனின் பெருந்தோல்வி, சுல்தான் கோரியின் வயிற்றைக் கலக்கிவிட்டது. தாமிழைத்து விட்ட தவற்றுக்காக, அந்த உதுமானிய சுல்தானிடம் மன்னிப்புக் கேட்கவும் முனைந்தார் இந்த எகிப்து மன்னர். ஆனால், பேரரசர் சலீமோ கொஞ்சமும் மசியவில்லை. வெள்ளம் வரும் போது அணைகட்ட ஆரம்பித்தால், என்ன பலன்?

**மர்ஜ் தாபிக் போர், 1516 (Battle of Marj Dabiq)**

உதுமானியப் பேரரசின் பெருஞ்சேனைக்கும் எகிப்திய படைக்கும் அலெப்போ அருகிலுள்ள மர்ஜ் தாபிக் என்ற இடத்தில் கடும் போர் நிகழ்ந்தது.

தமது வாழ்வின் அந்திமக் கட்டத்திலிருந்த சுல்தான் கோரி தாமே தம் பெரும் படைக்குத் தலைமை வகித்து, களத்திலும் குதித்து, ஓர் இளஞ் சிங்கம் போலே தீரமாய்ப் போராடினார். ஆனால், எகிப்திய படை தோற்றது; சுல்தான் கோரியும் போர்க் களத்திலே வீர மரணமடைந்தார்.

**மம்லூக் வம்ச ஆட்சியின் முடிவு**

இத் தோல்விபற்றிப் பேராசிரியர் புகாரீ வரைகின்றார்: 'இதோடு எகிப்திய நாட்டின் தலைநகரான கெய்ரோ உதுமானியப் பேரரசின் காலடியில் வீழ்ந்தது, கி.பி. 1517-ல். அதோடு மம்லூக் வம்ச ஆட்சியும் மறைந்தது.'

## முடிவுரை

மம்லூக் சுல்தான்கள் எகிப்தை இருநூற்று எழுபத்தைந்து ஆண்டுகள் வரை ஆட்சி புரிந்தனர். இந் நீண்ட இரண்டே முக்கால் நூற்றாண்டு கால ஆட்சியில் சில சுல்தான்களின் காலத்தில் மட்டுமே சற்று அமைதி நிலவியதென்னலாம். மற்றக் காலமெல்லாம் சண்டையும் சச்சரவுமாகிய அமைதி குலைந்த நிலைமையையே கண்ட அந் நாடு வலிமை குன்றிப் போன நிலைமையில் காட்சியளித்தது.

[1] பாட நூல் நிறுவனத்தின் வெளியீடாகிய 'உதுமானிய துருக்கியர் வரலாறு' என்னும் நூலில் முழு விவரமும் பரக்கக் காணலாம்.

இவ்வளவு துன்ப மயமான அமைதியற்ற நிலைமையிலும், குருதி வெள்ளப் பெருக்குக்கிடையிலும், எகிப்தில் இஸ்லாமிய மதமும், கல்வியும், கலாசாரமும் நன்கு வளர்ந்திருந்தமை மிகவும் ஆச்சரியத்தையே ஊட்டுகின்றன. மேலும், கல்வி வாசனையற்ற பல சுல்தான்கள் கூட, கலை, கலாசாரம், சிற்பம், இஸ்லாமிய இலக்கியம் போன்ற துறைகள் மேன்மேலும் வளர்ச்சி பெறவும், அத் துறைகளில் நிபுணத்துவம்மிக்க வல்லுநர்கள் ஆக்கமும் ஊக்கமும் பெற்று உயர்ந்தோங்கவும் அரும்பாடுபட்ட அருமையான தியாகங்கள் உணர்ச்சியூட்டுகின்றன.

கலாவூன், அல் நாசிர், காயித் பே, கோரி போன்ற சுல்தான்கள் அழகுக்கு அழகு செய்யும் மாபெரும் மசூதிகளை நிருமித்து, கல்லறைகள் பலப்பல அமைத்து, சிங்கார சிற்பக்கலைகளை வளர்த்து, இஸ்லாமிய உலகுக்குப் பெரும் புகழையும் சிறப்பையும் ஈட்டித் தந்தனரென்றால் அது மிகையாகாது.

உள்நாட்டுக் கலகங்களொருபுறம்; வெளிநாட்டுப் படையெடுப்புகள் மற்றொருபுறம்; கொலை, கொள்ளைகள் இன்னொருபுறம்—இப்படிப்பட்ட சூழ்நிலையிலும் எகிப்தின் தலைநகரமான கெய்ரோ இஸ்லாமிய கலாசாரத்திற்கும், இஸ்லாமிய இலக்கியங்களுக்கும் இஸ்லாமிய உலகின் அரியணையாகத் திகழ்ந்தது எனலாம்.

**இஸ்லாமிய இலக்கிய மாமேதைகள்**

இப்னு கல்லிகான் (Ibn Khallikan), இப்னு கல்தூன் (Ibn Khaldun), மக்ரீஜி (Makrizi), சுயூத்தி (Suyuti), மற்றும் இவர்களை நிகர்த்த இஸ்லாமிய பற்கலை கலாரத்தினங்கள், பல்வேறு நாடுகளிலுமிருந்து வந்த கலைவல்லுநர்கள் ஆகியோரெல்லாம் மம்லூக் சுல்தான்களின் அவைகளை அலங்கரித்தனர்.

கல்வி வாசனையற்ற பெருங் கசடர்களேயாயினும், கொள்ளை கொலை முதலிய பாதகங்களுக்கு அஞ்சாதவர்களேயாயினும், கொஞ்சமும் நெஞ்சிரக்கமின்றிக் குருதி வெள்ளங்களைப் பெருக்கெடுத்தோடச் செய்த பெரும் பித்தர்களேயாயினும், சித்திரக் கலை, இலக்கியக் கலை, இலக்கணக் கலை ஆகியவற்றின் வளர்ச்சியிலும், அக் கலைவல்லுநர்களை ஆதரிப்பதிலும், கெய்ரோவை அழகுபடுத்துவதிலும், புகழீட்டுவதிலும் புர்ஜீவம்சத்து மம்லூக் சுல்தான்கள் காண்பித்த பெரும் ஆர்வம் ஈடிணை

யற்றது. எகிப்தும் கெய்ரோவும் மங்காப் பிரகாசமாகக் காட்சி யளிப்பதற்கு அவர்களின் சாதனைகளே காரணமாகும்.

'பண்பாட்டுக் குறைவும் குருதி வேட்கையும் முழுமையாக இருந்தபொழுதிலும், அவர்களுடைய ஆழ்ந்த கலை நாகரிகம், கட்டடக் கலை, பாராட்டு உணர்வு ஆகியவை நாகரிகமடைந்த எந்த அரசமரபிற்கும் ஓர் அணியாக அமைந்திருக்கும்; இன்றும் கெய்ரோ (Cairo) முஸ்லிம் உலகத்தின் வனப்புமிகு காட்சி யரங்குகளில் ஒன்றுக இருந்து வருகிறது.'[1]

1 பேராசிரியர் புகாரீ அவர்கள் எடுத்துக் காட்டும் மேற்கோள் இது. காண்க; 'பொது இஸ்லாமிய வரலாறு' பக்கம், 211,

# 2. அப்பாஸியர்களின் காலத்தில் இராணுவ மோதல்கள்

## 1. ஆசியா மைனரில் பைஜான்ஷியப் பேரரசுடன் போர்

கி.பி. 330-ல், 'கான்ஸ்டாண்ட்டிநோப்பிள்' என்று இப்பால் அழைக்கப்பட்ட பைஜான்ஷியம் (Byzantium) நகரை ரோமாபுரியின்பேரரசரான கான்ஸ்டண்ட்டைன் (Constantine) என்பவர் தமது அகன்ற பேரரசின் கிழக்குப் பிரதேசத்துக்குத் தலைநகராக்கிக் கொண்டார். பைஜான்ஷியம் என்ற அந் நகருக்கு இப்பால் கான்ஸ்டாண்ட்டிநோப்பிள் (Constantinople) எனப் புதுப் பெயரிடப்பட்டது; அத்துடன், அதுவே கிழக்கு ரோமப் பேரரசின் தலைசிறந்த நகரமாகவும் ஆகிவிட்டது. அந் நாளிலிருந்து (கி.பி. 330 முதல்) ஆயிரமாண்டு காலத்துக்கு அங்கே கிறித்தவ மதமும் கிரேக்க நாகரிகமும் புத்துணர்வு பெற்றுப் புகழோங்கி வளர்ந்தன. பண்டைக் காலத்திலிருந்தே எகிப்தியர்களும் (Egyptians), சுமேரியர்களும் (Sumerians), பாபிலோனியர்களும் (Babylonians) அராபியர்களுடன் வியாபாரம் செய்து வந்துள்ளனர்.

பண்டைக் கிரேக்க-ரோமானிய இலக்கியங்களில் அரேபியா பற்றியும் அராபியர்களைப்பற்றியும் எத்தனையோ சான்றுகளும் சாட்சியங்களும் மலிந்துகிடக்கின்றன. பைஜான்ஷியத்திலிருந்து இந்தியாவுக்கும் சீனுவுக்கும் போக, இடையே உள்ள அரேபியாவைக் கடந்துதான் செல்லவேண்டியிருந்ததுடன், மேல் நாடுகளுக்கு அவசியமான பலப்பல விளைபொருள்களும் அரேபியாவில் கிடைத்தன.

**ரோமானியர்-அரேபியர் மோதலுக்குக் காரணங்கள்**

மேல் நாட்டில் வசிப்போர் கீழ் நாடுகளுக்குச் செல்ல இடையே உள்ள அரேபியாவைக் கடந்துதான் போயாக வேண்டுமென்ற முக்கியமான புவியமைப்புப் பிரதேசத்தில் அரேபியா இயற்கையாகவே அமைந்திருப்பதாலும், அதனல் ஏற்றுமதி இறக்குமதி, போக்குவரத்துச் செல்வழிகளெல்லாம் (Routes) அராபியர்களின் கட்டுப்பாட்டி லிருந்ததாலும், பல நூற்றண்டு காலமாகவே அராபியர்களுக்கும் அராபியரல்லாத வர்களுக்கும் இஸ்லாமிய மத வளர்ச்சிக்கு முன்பிருந்தே மோதல் களும் மாறுபாடுகளும் இருந்தே வந்தன. கீழ் நாடுகளின் ஏற்றுமதி இறக்குமதி, போக்குவரத்துச் செல்வழிகளை அராபியர் ஆதிக்கத்திலிருந்து கைப்பற்றுவதற்காக, அகஸ்டஸ் சீசர் (Augustus Caesar) என்கிற ரோமானியப் பேரரசனின் காலத்தில் அராபியர்கள்மீது ரோமானியப் படையெடுப்பு ஒன்று நிகழ்ந்தது இதற்கொரு சான்றகும்.

அரேபியாவைத் தங்கள் பேரரசில் இணைத்துக் கொள்ள வேண்டுமென்ற ரோமானியர்களின் பேராசையும், அதை எதிர்த்துப் போராட வேண்டுமென்ற அராபியர்களின் சுதந்தர வேட்கையும் பல போர்களுக்கும் போராட்டங்களுக்கும் காரணமாயிருந்தன.

**ரோமானிய-அராபிய போராட்டங்கள்—நான்கு காலகட்டம்**

(1) முதற் கலீஃபாக்களின் காலத்தில் பைஜான்ஷியப் பேரரசுடன் நிகழ்ந்த மோதல்.

(2) உமையாக்களும் பைஜான்ஷியப் பேரரசும்.

(3) அப்பாஸியரும் பைஜான்ஷியப் பேரரசும்.

(4) சல்ஜூக் துருக்கியரும் பைஜான்ஷியப் பேரரசும்.

இவ்வாருக, ரோமானிய—அராபிய போராட்டங்களையும் போர்களையும் நான்கு தலைப்புகளின்கீழ்ப் பிரிக்கலாம்.

**முதலாவது கால கட்டம்**

கி.பி. ஏழாம் நூற்றண்டில் இஸ்லாம் எழுச்சியுற ஆரம்பிப்ப தற்கு முன்பாகவே ரோமானியர்களுக்கும் அராபியர்களுக்கு மிடையே மோதல்கள் இருந்து வந்தன என்பதை முன்னரே படித்தோம். சிரியாவில் திமஷ்க் (Damascus) என்னுமிடத்தில்

அராபிய தூதுவரொருவர் ஒரு கிறித்தவ அரசரால் படுகொலை செய்யப்பட்டமைக்காக நஷ்டஈடு கோரி நபி நாயகம் தம் மறைவுக்குச் சற்று முன்பே சிரியாவின்மீது படை யொன்றை அனுப்ப உத்தரவு பிறப்பித்திருந்தார். ஆனால், அத் திட்டம் நிறைவேறுவதற்குள், கி.பி. 632-ல் நபி நாயகம் காலமானார்.

ஆதலால், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட முதல் கலீஃபா வான அபூபக்கரின் முயற்சியால் நபி நாயகம் அவர்களின் திட்டம் நிறைவேறியது. உசாமா (Osama) என்ற தளபதியின் தலைமையில் சென்ற அவ் வராபிய நஷ்டஈட்டுப் படைக்கு வெற்றி கிட்டியது. மெசபொட்டேமியாவுக்கும் (Mesopotamia) சால்தியாவுக்கும் (Chaldea) மேற்கிலுள்ள பரந்த பிரதேசம் முழுமையும் பைஜான்ஷியப் பேரரசின் ஆளுகையின் கீழிருந்தது.

முஸ்லிம்களடங்கிய ஒரு படையின் வெற்றியால் சிரியா தேசத்தினர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் பகைமை மூண்டு, எல்லைப்புறங்களில் எதிரெதிர் மோதல்களும் தாக்குதல்களும் நிகழவாரம்பித்தன. சிரியாவின்மீது படையெடுத்த மற்றொரு படையால் முஸ்லிம்கள் தோல்வியடைந்தனர். இரண்டாவது கலீஃபாவான உமரின் காலத்தில் பகைமை உச்ச கட்டத்தை எட்டிற்று. வரலாற்றுப் புகழ் படைத்த யர்முக் நதிக்(Yarmuk)[1] கரைப் பிரதேசப் பெரும்போரில் ரோமானியப் படைக்குப் பெருந் தோல்வி ஏற்பட்டு, சிரியா தேசம் முழுவதும் முஸ்லிம்களின் ஆதிக்கத்துக்குள் வந்து அடங்கியது (கி.பி. 638-ல்). ஜெரு சலம் (Jerusalem) நகரமும் கி.பி. 638-ல் சரணாகதியடைந்தது. முஸ்லிம்களால் தோற்கடிக்கப்பட்டாலும் ரோமானியர்கள் அதைரியப்படவுமில்லை, அலுத்துப்போகவுமில்லை. ஹெராக்ளியஸ்(Heraclius) என்ற ரோமானியப் பேரரசர் ஒரு பெருஞ்சேனையுடன் முஸ்லிம்களை எதிர்த்துப் போர்க்களத்தில் குதித்தார். அந்தப் பெரும் போரிலும் முஸ்லிம்களே வென்றதுடன், பல ரோமானிய நகரங்களும் பட்டினங்களும் முஸ்லிம்களின் வசமாயின.

மூன்றாவது கலீஃபாவான உதுமான் காலத்திலும் பைஜான்ஷியப் பேரரசின் படையெடுப்புகள் முறியடிக்கப்பட்டன. ஆப்ரிக்காவிலுள்ள திரிப்போலியும் (Tripoli), பர்க்காவும் (Barca), மத்திய தரைக் கடலிலுள்ள சைப்ரஸ் (Cyprus) என்ற தீவும் முஸ்லிம்களின் ஆதிக்கத்துக்குள்ளாயின. எகிப்து நாட்டை

[1] ஜோர்தான் நதியினுடைய கிழக்கு உபநதி இது—The Eastern tributary of the Jordan.

மீட்க வந்த ஒரு பெரும் ரோமானியக் கப்பற்படை கி.பி. 652-ல் சிதறுண்டுவிட்டது. மற்ருெரு பைஜான்ஷியக் கப்பற்படையும் அதேபோல் கி.பி. 655-ல் நிர்மூலமாயிற்று.

### இரண்டாவது கால கட்டம்

நான்காவது கலீஃபாவான அலீ கி.பி. 661-ல் படுகொலை செய்யப்பட்டதன்பின், நபி நாயகத்தின் பாட்டனுரின் ஒன்று விட்ட சகோதரரான உமையா என்பவரின் சந்ததியாரின் கைக்கு அரசியல் செல்வாக்கு மாறியது. உமையா வம்ச நிறுவன ராகிய முஆவியா பதவிக்கும் செல்வாக்குக்கும் வந்து தம்மை உறுதிப்படுத்திக் கொண்டவுடன் பைஜான்ஷியப் பேரரசுக்கெதி ராகப் போர் தொடங்கினர். மும்முறை கான்ஸ்டாண்ட்டிநோப் பிள் தாக்கப்பட்டது. (கி.பி. 669; 674-80; 716-717). ஆனால், வெற்றிகிட்டவில்லை. உக்பா (Okba) என்ற உமையா வம்சத் தளபதியின் தலைமையில் சென்ற சேனை ரோமானியர்களைத் தோற்கடித்த வகையில், ஆப்ரிக்கா உமையாக்கள் பேரரசின் மாநிலமாகியது.

### மூன்ருவது கால கட்டம்

கி.பி. 750-ல் அரசியல் ஆட்சி நாம் முன்பு கூறியது போல், அப்பாஸிப் பரம்பரையினரின் கைக்கு மாறிற்று. இப் புது வம்சத் தின் முதலிரண்டு கலீஃபாக்களான அஸ் ஸஃப்ஃபாவும் (as-Saffah), அல் மன்சூரும் (al-Mansur) தங்கள் பரம்பரை எதிரி யான பைஜான்ஷியப் பேரரசைத் தாக்கப் போதிய அவகாசத் தைப் பெற்றுக் கொண்டனரில்லை. ஏனெனில், உள்நாட்டில் தோன்றிய சச்சரவுகளையும் கலகங்களையும் அடக்கித் தங்கள் ஆட்சியை உறுதிப்படுத்திக் கொள்வதிலேயே தங்கள் அதிக நேரத்தைச் செலவழிக்க வேண்டிய கட்டாயம் அவர்களுக்கு நேர்ந்தது.

அராபிய நாட்டின் உள்நாட்டுக் குழப்பங்களால் விளைந்த அமைதியின்மையைக் கண்டு, ஆசியா மைனர், அர்மீனியா போன்ற நாடுகளின் எல்லைப் புறங்களில் தம் கிழக்குப் பிரதேசப் பேரரசு எல்லையை மேலும் விஸ்தரித்துக் கொள்ள, பைஜான் ஷியப் பேரரசரான கான்ஸ்டண்ட்டைன் முயற்சி எடுத்தார்.

இதைக் கண்ணுற்ற மூன்ருவது அப்பாஸிய கலீஃபாவான அல் மஹ்தீ (al Mahdi), பைஜான்ஷியப் பேரரசின்மீது போர் தொடுத்தார். அவருடைய மகனான ஹாரூன் (Harun) என்பவர் ரோமானியரை இருமுறை தோற்கடித்து வெற்றி பெற்ருர்.

போரிலே தோற்ற ரோமானியர், கலீஃபாவிடம் அமைதியை வேண்டினர்; போர் நிறுத்தப்பட்டது; அமைதி நிலவியது. அப்பாஸிய கலீஃபாவுக்குக் கப்பம் கட்டத் தயார் என்று பைஜான்ஷியப் பேரரசி ஐரீன் சம்மதித்ததால், இரு பேரரசுகளுக்கு மிடையே சமாதானம் ஏற்பட்டது.

ஆனால், பைஜான்ஷிய குடிமக்கள் அந்தச் சமாதான உடன்படிக்கைக்குச் சம்மதமளிக்காமல், சிறிதும் சிந்திக்காமல், அவசரப்பட்டு, இரக்கமற்ற முறையில் அரசியைப் பதவி நீக்கம் செய்து, அவளுடைய பிரதம அமைச்சரான முதலாம் நைசிஃபோரஸ் என்பவரை (Nicephorus I) அரியணை மீது ஏற்றினர். இவர் பதவியேற்றவுடன், அரசியின் கப்பம் செலுத்தும் ஒப்பந்தத்தை பைஜான்ஷியப் பேரரசு ரத்துசெய்து விட்டதென்று கலீஃபா ஹாரூன் ரஷீத் என்பவருக்குக் கடிதம் வரைந்தார். இதற்கு ஹாரூன் எழுதிய பதில் கடிதம் வரலாற்றுச் சிறப்புமிக்கது. அதன் பின்னர், ஹாரூன் பலமுறை பலவிடங்களில் பைஜான்ஷியப் பேரரசரைத் தோற்கடித்தார். ஒவ்வொரு தோல்விக்குப் பிறகும் அப் பேரரசர் சமாதானம் கோருவார்! ஒவ்வொரு முறையும் ஹாரூன் சரி என்று சம்மதிப்பார்.[1]

கலீஃபா மாமூன் (Mamun) காலத்திலும் அவருடைய சகோதரர் கலீஃபா முத்தாஸிம் (Mutasim) காலத்திலும் மறுபடியும் உடன்படிக்கைகள் மீறப்பட்டு, போர் தொடங்கி, ரோமானியர் தோற்கடிக்கப்பட்டனர். முடிவில், பைஜான்ஷியப் பேரரசர் தியோஃபிலஸ் (Theophilus) கப்பம் செலுத்தச் சம்மதித்துச் சமாதான உடன்படிக்கை செய்து கொண்டார். இத்தகைய தலைமுறை தலைமுறையான சச்சரவும் சண்டைகளும் பிற்காலத்திலும்—கி.பி. 847-லிருந்து 950 வரையில்—அப்பாஸிய கலீஃபாக்களின் பாரம்பரிய சகாப்தத்திலும் வெற்றியும் தோல்வியுமாக மாறி மாறி நிகழ்ந்த வண்ணமே இருந்தன. பைஜான்ஷியப்

[1] மாணவர்கள் ஒரு விஷயத்தை நினைவில் இருத்திக் கொள்ளுதல் வேண்டும். அதாவது, முஸ்லிம்கள் இறைவன் மீதும், அவனுடைய தூதர்களாகிய நபிமார்கள் மீதும், அந் நபிமார்கள் வாயிலாக அருளப்பட்ட எல்லாத் திருவேதங்களின் மீதும் அசையா உறுதி நம்பிக்கை கொண்டவர்கள். ஈஸா (Jesus) என்பவர் ஒரு நபி; அவர் கொணர்ந்த வேதம் இன்ஜீல் என்பது உண்மையாகையால் அவரையும் அவரது கோட்பாடுகளையும் ஏற்று நடக்கும் உத்தமக் கிறித்தவர்களும் தங்கள் சகோதரர்களே என்றுதான் உண்மை முஸ்லிம் கருதுவார். இக் கருத்தையே அப்பாஸி வம்ச கலீஃபாக்களும், ஐயூபி வம்ச சுல்தான்களும் ஏற்றிருந்தனர். ஆனால், பல கிறித்தவர்கள் வீணே முஸ்லிம்கள் மீது பழிதீர்த்தனர். இதுவே வரலாற்று உண்மையாகும்.

பேரரசு அப்பாஸியரின் தாக்குதல்களுக்கு வளைந்து கொடுத்ததே தவிர, ஒழிந்து போக வில்லை.[1]

**நான்காம் கால கட்டம்**

கி.பி. பத்தாம் நூற்றுண்டு முடியும் தறுவாயில், துருக்கியர்கள் இஸ்லாமிய மதத்தைத் தழுவினுர்கள். சல்ஜூக் (Saljuk) என்ற தங்கள் பெருந் தலைவரின் ஆணைப்படி, துருக்கியர்கள் குராசான் (Khorasan) என்ற பிரதேசத்தில் குடியேறினுர்கள். விரைவில், வலிமையிலும் மக்களினப் பெருக்கத்திலும் அவர்கள் முன்னேற்றம் பெற்று, சுல்தான் மசூத் (Masud) என்ற கஜனி வம்ச சுல்தானைக் கி.பி. 1040-ல் தோற்கடித்தனர்.

**டோக்ரில் புகழேணி**

சல்ஜூக்கின் பேரர், துருக்கியரின் ஒப்பற்ற தலைவர், டோக்ரில் (Toghril) என்பவராவார். இவர் காலத்தில்தான் துருக்கியர்கள் ஆசியாவிலேயே பீடுகெழு பெருமைமிக்க அரசியல் சக்தியாக மாறினுர்கள். டோக்ரில் 11-ம் நூற்றுண்டின் பிற்பகுதியில், அப்பாஸிய பேரரசைக் காப்பாற்றி, புவாஹித் சுல்தானின் ஆட்சியை ஒழித்து, அப்பாஸீ கிலாஃபத்தின்[2] பாதுகாவலரானுர். 'கிழக்கு மேற்கு நாடுகளின் சுல்தான்' என்ற பெரும் பட்டத்தை டோக்ரிலுக்குச் சூட்டினுர், அப்பாஸீ கலீஃபாவான அல் கையூம். இவ்வாறு, பண்டைக் காலத்திலிருந்து அராபிய வம்சத்தினருடன் தொடர்ந்த பைஜான்ஷியரின் பகைமைக்கும் சண்டை சச்சரவுகளுக்கும் சல்ஜூக் வம்சம் வக்காலத்து வாங்கிக் கொண்டது போலாயிற்று.

அப்போது பலப்பல உட் பூசல்களாலும் சண்டைகளாலும் இஸ்லாமிய உலகம் பலம் குன்றிக்கிடந்தது. கிலாஃபத்தின் (Caliphate) இந்தப் பலஹீனத்தைத் தக்க வாய்ப்பென்று கொண்டு, பைஜான்ஷியப் பேரரசு தன் ஆசிய எல்லைப் பிரதேசங்களை விரிவாக்க முனைந்தது. ஆனுல், அந்த முயற்சி தோல்வியடைந்தது. காரணம், கி.பி. 1060-ல் டோக்ரில் பைஜான்ஷியப் பேரரசின் மீது போர் தொடுத்து, ஆசியா மைனரிலிருந்து ரோமானியர்களை விரட்டியடித்து விட்டார். ஆனுலும், ஆசியா மைனர் முழுவதிலும் தமது வெற்றிக் கொடியை நாட்டுவதற்கு

[1] பைஜான்ஷியர்கள் உதுமானிய துருக்கியர்களாலேயே அடியுடன் அடக்கப்பட்டனர். 'உதுமானிய துருக்கியர் வரலாறு' என்னும் நூலில் முழு விவரம் காண்க.

[2] கலீ:பா (Caliph) ஆட்சிக்கு அராபிய மொழியில் 'கிலா:பத்' என்று பெயர். இதுவே ஆங்கிலத்தில் Caliphate என்று மருவிற்று.

முன்பே கி.பி. 1063-ல் மறைந்து விட்டார் சுல்தான் டோக்ரில்.

**பைஜான்ஷியப் பேரரசின் மறைவு**

டோக்ரிலின் சகோதரர் மகனான அல்ப் அர்ஸலான் (Alp Arsalan) என்பவரின் காலத்தில்தான், கி.பி. 1071-ல், மான்ஸி கர்ட் என்ற இடத்தில் நடந்த கடும் போரில், பைஜான்ஷியர்களை முழுக்க முழுக்கத் தோற்கடித்தார் சுல்தான் அல்ப் அர்ஸலான். அதோடு ரோமப் பேரரசரும் கைதானார். ஆசியாவிலிருந்தே பைஜான்ஷியப் பேரரசு மறையலாயிற்று.

**பைஜான்ஷியம் மறுபடியும் கப்பம் கட்டுதல்**

அல்ப் அர்ஸலானின் மகனான மாலிக் ஷா (கி.பி. 1072-92) காலத்தில் பைஜான்ஷியப் பேரரசர்கள் கப்பங் கட்டவும் உடன் பட்டார்கள். இவ்வளவு காலம் தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து போராடியும் கூட, அந்தப் பேரரசின் தலைநகரான கான்ஸ்டாண்ட்டிநோப்பிள் முஸ்லிம்களின் தாக்குதல்களுக்குச் சற்றும் அசைந்து கொடுக்கவுமில்லை; ஆட்டங் கொடுக்கவு மில்லை; பண்டைய கலீஃபாக்களால் ஆசியா மைனருக்குள் காலடி எடுத்து வைக்கவும் முடியவில்லை. ஆனால், இப் போராட் டங்களின் ஒரு முக்கிய விளைவு என்னவென்றால், ஆசியா மைனர் பிற்காலத்தில் முஸ்லிம்களின் ஆதிக்கத்துக்குள்ளா யிற்று. இது சுல்தான் அல்ப் அர்ஸலான் சாதித்த மாபெரும் வெற்றியாகும். தம் சகோதரர் மகனான அதி வீரர் சுலைமான் இப்னு குத்லுமிஷ் (Sulayman ibn Kutlumish) என்பவரை ஆசியா மைனரின் அதிபராக்கினார், சுல்தான் அல்ப் அர்ஸலான். அவரோ கி.பி. 1077-ல் ஆசியா மைனரில் ஒரு புது வம்சத்தை நிறுவினார். இப் புது அரசுக்கு 'ரூம் சுல்தானியம்' என்பது பெயராகும்.[1]

சுலைமானும் அவருடைய பிற்சந்ததியார்களும் கி.பி. 1077 முதல் 1300 வரை அதன்மீது ஆட்சி செலுத்தினர். அதற்குப் பிறகு, கி.பி. 14ஆம் நூற்றாண்டின் முதற்பகுதிக் கால கட்டத்தில் அவர்களின் மற்றொரு பிரிவினரான உதுமானிய துருக்கியர்களின் கைக்கு ஆட்சி மாறிற்று.

[1] அராபியர்கள் ஆசியா மைனரை (Asia Minor) ரூம் (Rum) என அழைத்தனர். சுல்தான்களின் ஆதிக்கத்துக்கு இது உட்பட்டபின் Sultanat-i Rum (சல்தனத்தெ ரூம்) என்று அழைக்கப்பட்டது.

**கான்ஸ்டாண்ட்டிநோப்பிள் இஸ்தம்பூல் ஆயிற்று (கி.பி. 1453)**

கடைசியாக, இரண்டாம் முகம்மது என்ற உதுமானிய சுல்தான் கி.பி. 1453-ல், கான்ஸ்டாண்ட்டிநோப்பிளை வென்று, அதற்கு இஸ்தம்பூல் (Istanbul) என்ற புதுப் பெயரை இட்டார். இதுதான் நெடுகவே உதுமானியப் பேரரசின் தலைநகராய் விளங்கிற்று.[1]

## 2. சிலுவைப் போர்களும் லத்தீன் அரசுகளும் (The Crusades and the Latin Kingdoms)

கீழை நாடுகளுக்கும் மேலை நாடுகளுக்குமிடையே நீண்ட காலம் வரை தொடர்ந்து நிகழ்ந்த போர்களின் ஓர் அங்கமே 'சிலுவைப் போர்கள்' ஆகும். முதலில் கிரேக்கர்களும் பாரசீகர்களும், பின்னர் ரோமானியர்களும் அராபியர்களும் ஒருவரை எதிர்த்தொருவர் மோதிக் கொண்டதெல்லாம் இத் தொடர் கதையின் ஆரம்பக் கட்டமெனலாம்.

இப் பண்டைய பகைமையுணர்ச்சி மோதல்களின் விளைவாகக் கி.பி. 11ஆம் நூற்றுண்டு முடியுந்தறுவாயில் கிறித்தவர்களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையே மூண்டுவிட்ட பெரும் மத வெறிப் போராட்டங்கள் இருநூறு ஆண்டு காலத்துக்கு, இடையிடையே விட்டு விட்டு, காட்டுத் தீப்போல் தொடர்ந்து நீடித்தன. இப் போராட்டங்களைத்தான் 'சிலுவைப் போர்கள்' (Crusades) என்கிறோம். இச் சிலுவைப் போர்களின் காரணமாக, ஐரோப்பிய வரலாறே ஆசிய வரலாற்றின் ஒரு பகுதியாக ஆகி விடுகிறது. மதப் பற்றும், மத வேறுபாடும், மதவெறிகளும், அரசியல் பொருளாதாரப் போட்டிகளும்தாம் இச் சிலுவைப் போர்கள் மூண்டதற்கான முக்கிய காரணங்கள் எனலாம்.

தங்கள் கிறித்தவ மதத்தின் பிறப்பிடமான பாலஸ்தீனம் (Palestine) இஸ்லாம் தோன்றியதிலிருந்து முஸ்லிம்களின் ஆதிக்கத்திலிருந்து வந்ததைத் தங்கள் வயம் மீட்பித்துக் கொள்ள வேண்டுமென்று கிறித்தவர்கள் விரும்பினர். அன்றியும், இன்றைய நாடுகளாக விளங்கும் சிரியா, எகிப்து, ஜோர்தான் (Jordan), துருக்கி, லெபனன், இஸ்ரேல்

[1] இரண்டாம் முகம்மது கான்ஸ்டாண்ட்டிநோப்பிளைக் கைப்பற்றி, ஒரு நவீன சகாப்தத்தையே உலக வரலாற்றில் உண்டுபண்ணி விட்டார். முழு விவரம் 'உதுமானிய துருக்கியர் வரலாறு' என்னும் நூலில் அடங்கியுள்ளது.

என்னும் நிலப்பகுதிகளையும்கூட முஸ்லிம்களின் ஆதிக்கத்திலிருந்து மீட்பிக்க அவர்கள் விழைந்தனர்.

### சிலுவைப் போருக்கு முன்பிருந்த நிலை

கி.பி. பத்தாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் இஸ்லாமிய உலகம் அப்பாஸீ கிலாஃபத் (Abbasid Caliphate) என்றும், ஃபாத்திமா கிலாஃபத் (Fatimids) என்றும் இரு பிரிவுகளாகப் பிரிந்திருந்தது. அராபியர், பாரசீகர், துருக்கியர் ஆகியோர் அப்பாஸீ கிலாஃபத்தின் ஆதிக்கத்தின்கீழ் இருந்தனர். எகிப்துவாசிகளும், வட ஆப்ரிக்க மக்களும் ஃபாத்திமா கிலாஃபத்தின் ஆட்சியில் அடங்கியிருந்தனர்.

சுல்தான்கள் என்பவர்கள் அப்பாஸீ வம்ச கலீஃபாக்களைத் தலையாட்டிப் பதுமைகளாக்கிக் கொண்டார்களென்பதை முன்னரே விவரித்தோம். சல்ஜூக் சுல்தான்களின் ஒரு கிளை ஆசியா கண்டத்தையும் அதைச் சார்ந்த பேரரசு நிலப்பரப்பையும் ஆண்டு வந்தது. சல்ஜூக் வம்சத்தின் மற்றொரு கிளையோ, சிரியாவையும் பாலஸ்தீனத்தையும் ஆண்டு வந்தது. அக்காலகட்டத்தில் பாலஸ்தீனத்தில் அராஜகம் தாண்டவமாடிற்று.

### ஐரோப்பாவின் நிலை

கி.பி. 11-வது நூற்றுண்டில் பொது மக்களிடையே வலுப்பமிக்க மத வைராக்கிய நம்பிக்கை வேரூன்றியிருந்த தென்னலாம். ஆட்சிப் பீடத்தின் மீதும் ஆலயப் பீடத்தின் மீதும் ஆதிக்கம் செலுத்த வேண்டும் என்னும் கடும் போட்டிப் பூசல்கள் எழுந்தன. ஆலயத்தின் ஆதிக்கத்துக்கு உட்பட்டதுதான் அரசு என்ற கொள்கையுடையது ரோமன் கத்தோலிக்க ஆலயக் குருபீடம். இதை நிருபிக்கும் நோக்கத்துடனேயே, போப்பாண்டவர் முஸ்லிம் நாடுகளுக்கெதிராகச் சிலுவைப் போர் நிகழ்த்தியாக வேண்டுமென்று பிரசாரம் செய்தார். அக்காலத்தில் உலக கிறித்தவ மதவாதிகளுக்குள்ளேயே இரு பிளவுகள் நிலவின: (1) கான்ஸ்டாண்ட்டிநோப்பிளைத் தலைமைப் பீடமாகக் கொண்ட 'The Eastern Church' என்னும் கிழக்குப் பிரதேச ஆலய ஆட்சித் துறையினர், (2) ரோமாபுரியைத் தலைமைப் பீடமாகக் கொண்ட 'The Western Church' என்னும் மேற்குப் பிரதேச ஆலய ஆட்சித் துறையினர். ஐரோப்பாவிலுள்ள கிறித்தவர்களையாவது ஒரு கொடியின்கீழ் ஒன்று திரட்ட வேண்டுமென்பது போப்பாண்டவரின் பேரவா. அந்

நோக்கத்துடன்தான் முக்கியமாக அவர் சிலுவைப் போராட்டத்தை மூட்டி விட்டு அதற்கு ஆதரவளித்தார்.

மற்றும், கி.பி. 11-ம் நூற்றுண்டின் கிறித்தவ உலகம், வானத்தினின்று இறங்கி ஏசுநாதர் ஜெருசலத்துக்கு உடனடியாக வரப் போகிருரென்று மனமார நம்பிற்று. ஆதலால்தான், கோடிக் கணக்கான அனைத்துலக மக்கள் எல்லாத் திசைகளிலிருந்தும் ஜெருசலத்தை நோக்கி யாத்திரை மேற்கொண்டார்கள். வழியிலேயே மாண்டவர் பலர்; துருக்கியர்களின் கொள்ளைக்கும் கொலைக்கும் ஆளானேர் சிலர்.

### கிறித்தவ யாத்திரிகர்கள் பிரசாரம்

ஜெருசலம் சென்று மாண்டவர் போக, ஐரோப்பாவுக்கு உயிருடன் மீண்ட யாத்திரிகர்கள், பக்திப் பேராவல்மிக்கு வாய்திறந்தபடியும் கண்கலங்கியும் செவிமடுக்க வாரம்பித்த கிறித்தவ மத பக்தர்களின் கூட்டங்களில், துருக்கியர்களின் பயங்கரமிக்க கொடுங்கோலாட்சியில் ஜெருசலத்தில் வாழும் கிறித்தவக் குடிமக்கள் படும் துன்பங்களையும், தொல்லைகளையும் பற்றி வக்கணையாக மிகைபடுத்தி எடுத்துரைத்தனர். கதை கற்பிக்கப்பட்டுக் கற்பனையலங்காரமாக வருணிக்கப்பட்ட இவற்றை உண்மையென நம்பிய போப்பாண்டவரும் கிறித்தவ புண்ணிய பூமியான ஜெருசலத்தைக் கொடிய துருக்கியரின் ஆட்சியிலிருந்து உடனே மீட்பித்துவிட வேண்டுமென்று ஐரோப்பிய கிறித்தவர்களுக்கு ஆக்கினை பிறப்பித்து விட்டார். போப்பாண்டவரின் புனிதக் கட்டளைக்கு இணங்கி, கிறித்தவர்கள் மதப் போருக்குத் தயாராகி விட்டார்கள்.

## சிலுவைப் போர்: முக்கிய காரணங்கள்

(1) கிழக்குப் பிரதேசங்களில் இஸ்லாமிய அரசுகள் நாள்தோறும் விரிவடைந்து வருவதைத் தடுத்துவிட வேண்டுமென்று கத்தோலிக்க மதபீடம் கருதியதுதான் சிலுவைப் போர்கள் மூள்வதற்கு முதற் காரணமாயிலங்கிற்று என்னலாம்.

(2) ஆசியா மைனரில் நிலவிய சல்ஜூக் சுல்தான்களின் ஆதிக்கத்தால், ஐரோப்பாவிற்கும் ஆசிய நாடுகளுக்குமிடையே வெகுகாலமாக நடந்துவந்த வணிகப் பொருள்களின் போக்குவரத்துக் குறைந்து, இத்தாலி நாட்டில் செல்வங் கொழிக்கும் வளமிக்க துறைமுகங்களாயிலங்கிய வெனீஸ், ஜெனேவா போன்ற இடங்களில் வாணிபம் நலிய ஆரம்பித்தது. அதன்

விளைவாக, அவ் விடங்களிலிருந்த பெரும் பணக்கார வணிகர் களின் சீரும், செல்வாக்கும், சிறப்பும் குன்றத் தொடங்கின. எனவே, பொருளாதாரத் துறையின் சரிவுப்பாதையில் வீழ்த் தாட்டப்பட்ட ஐரோப்பியர்கள் சல்ஜூக் சுல்தான்களின்மீது பொருமையும் ஆத்திரமும் கொண்டனர்.

(3) கி.பி. 11–வது நூற்றுண்டின் மத்திய காலகட்டத்தில் முஸ்லிம் நாடுகளின் ஆட்சியும் செல்வாக்கும் நலிவுற்றுக் கொண்டிருந்தன. இந் நலிவைக் காரணமாகக் கொண்டு, கிறித்தவர்கள் தாங்கள் முன்னர் இழந்த நிலப்பரப்புகளை முஸ்லிம்களிடத்திருந்து மீட்டுக் கொண்டனர். இவ் வெற்றி யின் தைரியத்தால், ஐரோப்பிய கிறித்தவர்கள் தங்கள் புண்ணிய பூமியான ஜெரூசலத்தையும் முஸ்லிம்களின் பிடியி னின்று விடுவிக்க விழைந்தனர். மேலும், கத்தோலிக்கர்களின் கிறித்தவ மதத்தில் நம்பிக்கையற்ற முஸ்லிம்களையும்[1] யூதர்களை யும்கூடக் கிறித்தவர்களாக்கலா மென்றும், தங்கள் மதத்தை மேலும் பரப்பலாமென்றும் நம்பினர்.

(4) இத்தகைய ஒரு மதப் போரின் விளைவாகத் தங்களுக் குப் பெரும் செல்வமும் புகழும், செல்வாக்கும் நிலப்பரப்பும் கிடைக்குமெனப் பல ஐரோப்பிய கிறித்தவ செல்வந்தர்கள் எதிர்பார்த்தனர். உதாரணத்துக்கு, நார்மண்டியின் நார்மன்கள் (Normans) என்ற இனத்தினர் இத்தாலியின் தென்பிரதேசத்தி லும், சிசிலித் தீவிலும் (Sicily) சீரும் சிறப்பு மிக்க செல்வாக் குடன் பல்லாண்டுகளாக அரசபோக வாழ்வு வாழ்ந்து வந்த னர். அவர்கள் மத்தியதரைக் கடலைக் கடந்து, ஆசியா மைனரையும் ருசி பார்க்கலாமென்று ஆர்வமும் ஆசையும் கொண்டு விட்டதில் என்ன ஆச்சரியமிருக்க முடியும்!

(5) ஐரோப்பிய கிறித்தவப் பாமர மக்களின் கோடிக் கணக்கான ஏழை மக்களின் உள்ளங்களுக்குள் சிலுவைப் போராட்டங்கள் பல ஆசைக் கனவுகளை அரும்பச் செய்தன.

(6) மதப் பற்றும் மத வெறியும் சிலுவைப் போருக்கு ஒரு முக்கிய காரணமாகும். அதனுடன், அரசியல் ஆட்சி, ஆதிக் கத்தின்மீது பேராசை, மேன்மேலும் செல்வங்களைக் குவித்துக் கொள்ள வேண்டுமென்ற பேராவல், பாராத புதிய நிலங்களைப்

[1] முஸ்லிம்கள் இயேசுவையோ அவர் போதித்த நன்மார்க்கத்தையோ என்றைக்கும் எதிர்த்ததில்லை. ஆனால், அவருடைய பெயரால் மாதாகோவில் பிற்காலத்தில் உற்பத்தி செய்துகொண்ட செயற்கை ஆலய வழிபாட்டையே எதிர்க்கிறார்கள்.

பார்க்க வேண்டுமென்ற வேட்கை ஆகியவையும் சிலுவைப் போராட்டங்களுக்கு முக்கிய காரணங்களாகும்.

(7) சிலுவைப் போராட்டங்களுக்கு முதற் காரணமாய் விளங்கிய அலெக்சியஸ் காம்மெனஸ் (Alexius Commenus) என்பவர், கி.பி. 1094-ம் ஆண்டில் இப் பெரும் போருக்கு நிரம்ப இராணுவ உதவியும் ஏராளமான பொருளாதார உதவி யும் தேவைப்படுகின்றன என்னும் வேண்டுகோளை ரோமாபுரிக் குச் (Rome) சமர்ப்பித்தபோதுதான், அதுவரை வாய் திறவாது இருந்த சிலுவைப் போராட்டமென்னும் எரிமலை வெடித்துச் சிதறியது.

**போப்பாண்டவரின் ஆசீர்வாதம்**

அலெக்சியஸ் காம்மெனஸின் வேண்டுகோளுக்கு இணங்கி, உடனடியாகக் கி.பி. 1095-ல் கிறித்தவ மதவாதிகள் தங்கள் புனிதச் சபையைக் கூட்டினார்கள். அந்தக் காலகட்டத்தில் போப்பாண்டவராக விளங்கிய இரண்டாம் அர்பன் (Urban II) என்பவர், சிலுவைப் போராட்டத்தைத் தொடங்கி வைத்து ஆசீர்வாதம் வழங்கினார். 'நம் புனிதமிக்க கிறித்தவ மதத்தைத் தோற்றுவித்த தேவ குமாரன் ஏசுநாதரின் கல்லறை (Sepulchre) யுள்ள நாட்டைக் கவர்ந்து, அதை நெடு நாளாக ஆக்கிரமித்துக் கொண்டுள்ள கொடிய துருக்கர்களை எதிர்த்துப் போராட உலகக் கிறித்தவர்களே ஒன்று சேருங்கள்!' என வீர முழக்கம் செய் தார் போப். மேலும், அவர் 'போரில் உயிர்த் தியாகம் புரிவோர் பெறப் போவது பரமண்டலப் பரலோக வாசமே!' என்றும் மத வெறியூட்டி முரசு கொட்டினார். இவ்வாறாக, முதற் சிலுவைப் போர் ஆரம்பமாகி, பின் பயங்கரமாகப் பதினேழு முறை வரை தொடர்ந்தது. ஆனால், அவற்றுள் மிக முக்கியமானவை மூன்றே. அவையாவன:

(1) கி.பி. 1096—1099

(2) ,, 1147—1149

(3) ,, 1189—1192

## முதலாவது சிலுவைப் போர் (1096-99)

கான்ஸ்டாண்ட்டிநோப்பிளில் கூடிய கிறித்தவ சிப்பாய் களின் கூட்ட எண்ணிக்கை 1,50,000. காடை போன்ற இப் பெரும் படைக்குத் தளபதிகளாக விளங்கியவர்கள், காட்ஃபிரே

(Godfrey), பால்ட்வின் (Baldwin), ரேமாண்ட் (Raymond) என்போர் ஆவர். அடுத்த ஆண்டிலேயே (கி.பி. 1097-ல்) அப் படை தென்திசை நோக்கிப் பாய்ந்து நிகேயியா (Nicaea), எஸ்கி ஷெஹர் (Eski Shehir), டார்சஸ் (Tarsus) என்னுமிடங் களைக் கைப்பற்றிற்று. அங்கிருந்து, பால்ட்வின் தலைமையிலான படையின் ஒரு பிரிவு, ஆர்மீனியாவையும் (Armenia), வட சிரியாவிலுள்ள எடெஸ்ஸா (Edessa) வையும், கி.பி. 1098-ல் பிடித்தது. இவ் விடத்தில்தான் முதல் லத்தீன் அரசு உருவா யிற்று. இந்த லத்தீன் அரசுக்கு பால்ட்வின் மன்னரானார்.

அப் படையின் மற்றொரு பிரிவினர், வட சிரியாவின் தலைநக ரான அந்த்தாக்கியா (Antioch) என்னுமிடத்தை ஏழு மாதங் கள் வரை முற்றுகையிட்டு, முடிவில் 1098-ல் துரோகிகளின் உதவியால் அதைப் பிடித்தார்கள். இப்படியாக, அந்த்தாக் கியா இரண்டாவது லத்தீன் இராஜ்ஜியமாகியது. இதற்கு போஹிமாண்ட் (Bohemond) என்பவர் தலைவரானார்.

**ஜெருசலம் பிடிபட்டது (கி. பி. 1099-ல்)**

ஜெருசலம் பிடிபட்டதும், சுமார் 70,000 பேர்களை, அவர் கள் கிறித்தவரா, முஸ்லிமா என்றுகூடப் பாராமல் கண்மூடித் தனமாய்ப் படுகொலை செய்தார்கள், கிறித்தவப் படையினர். அமைதியின் தூதன், இரக்கத்தின் ஓவியம், அன்பின் உருவம், பாசத்தின் சிகரமென்றெல்லாம் வருணிக்கப்படும் ஏசுநாதர் பிறந்த புண்ணிய பூமியில் உதிரம் ஆறுகப் பெருக்கெடுத் தோடியது. எங்கு நோக்கினும் இரத்தம் தான்! எங்குப் பார்த் தாலும் மலைபோல் பிணக்குவியல்கள்தாம் காட்சியளித்தன. வர லாறு காணுத மாபெரும் மனித அழிவு (Genocide) மனிதனுல் மதத்தின் சார்பில் மிகக் குரூரமாக நிகழ்த்தப்பட்டது. இவ் வாறுக, ஜெருசலம் மூன்றுவது லத்தீன் இராஜ்ஜியமாகியது. காட்ஃபிரே (Godfrey) என்பவர் அதன் அரசரானார். இவ் வாறே, கொள்ளைகளும் கொலைகளும் தொடர்ந்து, திரிபோலி (Tripoli) என்ற பிரதேசம் டான்கிரட் (Tancred) என்ற தளபதி யின் கீழ் நான்காவது லத்தீன் இராஜ்ஜியமாகியது. மக்கள் பிணக்குன்றுகளாகக் குவிக்கப்பட்டனர். டயர் (Tyre) என்ற நகரமும் சிடான் (Sidon) என்ற நகரமும் பிடிபட்டு, அவை இடு காடாக மாற்றப்பட்டன.

இப்படியாக, முஸ்லிம்கள் அமைதியுடன் ஆட்சிபுரிந்து வந்த நிலப்பரப்பில் நான்கு லத்தீன் கிறித்தவ அரசுகள் 'சமா தான இளவரசர்' (Prince of Peace) என்னும் காருண்யமிக்க

ஏசுநாதரின் பெயரால் பிணமண்டலமாகத் திடீர்க்காட்சியளித்த தோடு, முதல் சிலுவைப் போர் கிறித்தவர்களின் வீர வெற்றி யாக முடிவுற்றது.

## இரண்டாவது சிலுவைப் போர் (கி.பி. 1147-49)

வரலாறு காணுக் கொலைகள், கொள்ளைகள், காட்டு மிராண்டித்தனங்கள், சித்திரவதைகள் ஆகிய பயங்கர அட்டூழி யங்களுக்கு முஸ்லிம்களைச் சிலுவைப் போர் வீரர்கள் இரை யாக்கி மனித வேட்டையாடிக் கொண்டிருந்த போதெல்லாம், இஸ்லாமிய உலகத் தலைநகரான பாக்தாத் (Baghdad) கண் மூடிக் குருடாகவும், காதுமூடிச் செவிடாகவும் காட்சியளித்தது. காரணமென்ன? அப்பாஸி வம்சக் கையாலாகா கலீஃபா, சுய நலமும் பொறுமையுமே உருவான சுல்தான்கள், ஒற்றுமை குலைந்து போன நிலை இத்தனையும் போதாவா? இப் பரிதாப நிலையில், நேற்றுவரை தங்கள் நிலமாயிருந்த ஜெருசலத்தை, அன்னிய நாடுகளின் சிலுவைப் போர்ப்படை சீறிவந்து ஆக்கிர மித்தபோது, எப்படி ஒற்றுமை குலைந்திருந்த முஸ்லிம்களால் அதை எதிர்த்துத் தடுத்திருக்க முடியும்?

ஜெருசலத்தை இழந்து, துணையேதுமின்றித் துன்பப்பட்டு, ஆதரவுமின்றி, கொடுமைக்கு ஆளாகி, தலை குனிந்தவர்களாய்ப் பாக்தாது கலீஃபாவிடம் உதவி கோரி வந்த முஸ்லிம்களின் கண்ணைத் துடைத்து அனுதாப ஆறுதல் சொல்ல முடிந்ததே யொழிய, எக்காளம் செய்யும் எதிரியை எதிர்க்கக் கூடிய நடவடிக்கை ஒன்றையும் அவரால் மேற்கொள்ள முடியவில்லை.

### நம்பிக்கையின் நல் நட்சத்திரம்

இக்கட்டான இக் காலகட்டத்தில் தான், இமாதுத்தீன் ஜங்கி (Imad-al-Din Zangi) என்ற மாவீரர் கி.பி. 1127-ல் இருள் சூழ்ந்த இஸ்லாமிய வானத்தில் தோன்றி, கிறித்தவ மதத்தின் பெயரால் நிகழ்ந்த அட்டூழியங்களையும் ஆர்ப்பாட்டங்களையும் முதல் முதலாக எதிர்க்க முனைந்தார். அவரே 'ஜங்கி வம்சம்' என்னும் ஒரு புதிய ஆளும் பரம்பரையையும் நிறுவியவராவார். சிலுவைப் போர்ப் படையின் ஒரு பிரிவான ஃபிராங்குகள்[1] (Franks) படையை வன்மையுடன் எதிர்த்துப் பல விடங்களில் அவர்களைத் தோற்கடித்து, பல கோட்டை கொத்தளங்களின்

[1] கி.பி. 6-ம் நூற்றூண்டில் ஃபிரான்சு நாட்டை வென்று பரவிய ஜெர்மானிய இனக் குழுவினருள் ஒரு பிரிவினர், Franks எனப்படுவர்.

மீது வெற்றிக் கொடிகளை ஏற்றிப் பட்டொளி வீசப் பறக்க விட்டார், இமாதுத்தீன் ஜங்கி.

**எழில் நகர் எடெஸ்ஸாவின் வீழ்ச்சி (கி.பி. 1147)**

கிறித்தவ உலகத்திலேயே மிக எழில் சூழ்ந்த நகராக மிளிர்ந்த எடெஸ்ஸா (Edessa)வை 1147-ல் பிடித்ததுதான் வீராதி வீரராகிய ஜங்கியின் இணையிலாச் சாதனையாகும். ஆனால், அத்தகு மாவீரரின் முடிவு மிகப் பரிதாபகரமானது. பகைவரின் தூண்டுதலால், ஜங்கி தூக்கத்திலிருந்த போது ஓர் அடிமையால் கொலை செய்யப்பட்டார். அவருக்குப் பின் அவர் மைந்தரான நூருத்தீன் மகமூத் (Nuruddin Mahmud) அரியணை ஏறினார்.

**தந்தையை விஞ்சிய தனயன்**

நூருத்தீன் மகமூத் அலெப்போ (Aleppo) நகரின் சிங்காசன மேறியதும், எடெஸ்ஸா நகரின் கிறித்தவர்கள் கிரேக்கப் படையுடன் சேர்ந்து கொண்டு கலகம் செய்து, காரணமேது மின்றி அங்கிருந்த முஸ்லிம்களைப் படுகொலை புரிந்து, அவர் களைக் கொள்ளையிட்டதோடு எடெஸ்ஸாவையும் மீட்பித்துக் கொண்டனர். நூருத்தீனே உடனுக்குடனே கிறித்தவப் புரட்சிக்காரர்களையும் கிரேக்கப் படையையும் சேர்த்துத் தோற் கடித்து, மீண்டும் எடெஸ்ஸாவில் வெற்றிக் கொடியை உயர்த்தி ஏற்றினார். நூருத்தீன் தந்தையின் பொருத்தமிக்க வாரிசாகக் காட்சியளித்தார்.

எடெஸ்ஸாவின் எதிர்பாராத இரண்டாவது திடீர் வீழ்ச்சி ஐரோப்பிய கிறித்தவ உலகத்துக்குப் பேரதிர்ச்சியை விளைக் கவே, இரண்டாவது சிலுவைப் போர்ச் சங்கநாதம் முழங் கிற்று. ஜெர்மன் பேரரசரும்[1] ஃபிரெஞ்சு மன்னரும்[2] பெரும் படையுடன் புறப்பட்டுப் பாலஸ்தீன சிரியா நாடுகளுக்குள் பிரவேசித்தனர்.

தம்பியுடையான் படைக்கஞ்சான் என்றபடி, சைஃபுத்தீன் (Saifud-Din) என்ற வீரத் தம்பியின் துணையுடன் மாவீரர் நூருத்தீன் சிலுவைப் படைகளைத் தோற்கடித்தார். கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லையே என்ற பெரும் ஏமாற்றத்

[1] ஜெர்மன் பேரரசர் மூன்றும் கான்ராடு—Conrod III.

[2] ஃபிரெஞ்சு மன்னர் ஏழாம் லூயீ—(Louis VII). Both of them led a large army of 900,000 men into Palestine and Syria, but were defeated by Nuruddin and Saifud Din.

துடன் ஜெர்மன் பேரரசரும் ஃபிரெஞ்சு மன்னரும் தத்தம் நாடு திரும்பினர்.

**ஹாரிம் (Harrim) கோட்டைப் போர்**

புகழ்வாய்ந்த ஹாரிம் கோட்டைச் சுவர்களையடுத்து நடந்த போரில், எதிரியின் கூட்டு நேசப் படைகளான ஃபிரெஞ்சு, கிரேக்கர் படைகளை நூருத்தீன் தோற்கடித்த துடன், அவர்கள் வயமிருந்த பல கோட்டை கொத்தளங்களை யும் கைப்பற்றிக் கொண்டார். ஆயினும், பொதுவாகப் போரின் பலாபலன்களை எடை போட்டுப் பார்க்கும் போது, இரண்டாவது சிலுவைப் போர் எக் கட்சியினர்க்கும் வெற்றி தோல்வியிலா நிலையில் முடிந்ததெனலாம்.

## மூன்றாவது சிலுவைப் போர் (கி.பி. 1189-1192)

இக் காலகட்டத்தில் எகிப்தின் ஃபாத்திமா கிலாஃபத் (Fatimid Caliphate) மரணப் படுக்கையில் கிடந்து, இறக்கும் தறுவாயில் இருந்ததெனலாம். கொள்கையில்லா, மனச்சாட்சி மருந்துக்குமில்லா அன்றைய எகிப்தின் அமைச்சர், உள்நாட்டுப் பகைவர்களிடத்திருந்து ஆட்சியைக் காப்பாற்றிக்கொள்ளும் நோக்கங் கொண்டு, நூருத்தீனை உதவிக்கழைத்தார்.

ஷிர்க்குஹ் (Shirkuh) என்ற தம் வீரத் தளபதியை ஒரு படை யுடன் அனுப்பி வைத்தார் நூருத்தீன். எகிப்தை ஷிர்க்குஹ் நெருங்க நெருங்க, எகிப்தின் பகைவர்கள் ஓட்டம் பிடித்துத் தப்பினர். ஆனால், நன்றிகெட்ட எகிப்திய அமைச்சரோ, ஃபிராங்க்கிய (Franks) படையின் உதவியுடன் தளபதி ஷிர்க்குஹை எகிப்தை விட்டகலச் செய்தார். பெரும் எதிர்ப்புக் கிடையே ஷிர்க்குஹ் எகிப்தை விட்டு வெளியேறினாராயினும், சீக்கிரமாகவே ஒரே ஓர் ஆயிரம் பேர் கொண்ட குதிரைப் படையுடனே எகிப்துக்கு மீண்டும் வந்து, ஃபிராங்க் படையை யும் எகிப்துப் படையையும் சேர்த்துத் தோற்கடித்தார்.

ஆயினும், மறுபடியும் அத் துரோகச்சிந்தைமிக்க எகிப்து அமைச்சர், ஃபிராங்க்குகளின் உதவியுடன் எகிப்திய கலீஃபா வுக்குத் தொல்லை தரலாயினர். அதிஅவசரமாகக் கெய்ரோ வின் கலீஃபா ஆட்சிப்பீடம் மறுபடியும் நூருத்தீனை உதவிக்கு வரும்படி அழைத்தது; நூருத்தீனும் அப்படியே அதை ஏற்று உடனே எகிப்துக்குள் பிரவேசிக்கவே, ஃபிராங்க்கியர் படை கெய்ரோவை விட்டு ஓட்டம் பிடித்தது.

ஷிர்க்குஹ் எகிப்தின் தலைவரானார். ஆனால், மாவீரரான ஷிர்க்குஹ் இரண்டு மாதங்களில் இறக்கவே, அவருடைய சகோதரர் ஐயூப் என்பவரின் மைந்தரான சலாஹுத்தீன் எகிப்தின் புதிய பிரதமரானார் (1169). பின்னர், இவர் கி. பி. 1175-ல் தம்மை எகிப்தின் சுதந்தரமுள்ள சுல்தானெனப் பிரகடனப் படுத்திக்கொண்டார்.

## ஜெருசலம் மீட்பு (கி. பி. 1189)

கி.பி. 1187-ல், ஹிட்டின் (Hittin) என்னுமிடத்தில் வெற்றிவாகை சூடிய சலாஹுத்தீன் விரைவாகவே ஜெருசலத்தையும் மீட்பித்தார்; அன்றியும், அந்த்தாக்கியா (Antioch), திரிப்போலி (Tripoli), டயர் (Tyre) ஆகிய நகரங்களையும் சிலுவைப் போர் வீரர்களைத் தோற்கடித்து, தமதாட்சியின்கீழ்க் கொண்டுவந்தார். அதன் பின்னர், சலாஹுத்தீன் ஜெருசலத்தின் பக்கல் தமது கவனத்தைத் திருப்பினார். தீவிர முற்றுகைக்குப் பின், இப் புனித நகரம் வீழ்ச்சியடைந்தது. அறுபதாயிரம் கிறித்தவப் போர் வீரர்களும் ஆயிரக்கணக்கான மக்களும் இந் நகரத்திலிருந்தனர். சுல்தான் நினைத்திருந்தால், அவர்களைக் கொன்று குவித்திருக்கலாம். ஆனால், அவர் அவ்வாறு செய்யவில்லை. இரக்கத்தின் திருவுருவமான சுல்தான் சலாஹுத்தீன், ஆயிரக்கணக்கான முஸ்லிம்களின் உயிரை அநியாயமாய்ப் போக்கிய கிறித்தவப் போர் வீரர்களுக்கு மன்னிப்பு அளித்தார். அவருடைய பெருந்தன்மையையும், தாராள மனப்பான்மையையும் கிறித்தவ உலகமே அன்றும் போற்றிற்று, இன்றும் போற்றுகிறது.

## மும்முடி மன்னர்களின் பங்கு

தத்தம் நாட்டு மக்களிடையே பெருஞ் செல்வாக்கும், பெரும் வல்லமையும் பெற்றிருந்த கிறித்தவ மும்முடி மன்னர்களான ஜெர்மானிய ஃபிரெடரிக் பார்பரோசா, இங்கிலாந்தின் ரிச்சர்டு, ஃபிரான்ஸின் ஃபிலிப் அகஸ்டஸ் என்ற மாபெரும் மூவேந்தர்களும் இம் மூன்றாவது சிலுவைப் போரில் பங்குகொண்டார்கள். இம் மூன்று பெரும் மன்னர்களின் கூட்டணி பெயரளவில் மட்டும் பிரகாசமாக இருந்ததேயொழிய, குறிப்பிடத்தக்க சாதனை எதனையும் அது சாதிக்கவில்லை. இம் மூன்று பெரும் மன்னர்களில், ஜெர்மன் பேரரசரான ஃபிரெடெரிக் பார்பரோசா நீரில் மூழ்கி மாண்டார். ஃபிரெஞ்சு மன்னர் ஃபிலிப் அகஸ்டஸ் எவரிடமும் சொல்லிக்கொள்ளாமல் தமது தாய்நாட்டுக்குத் திரும்பிவிட்டார், இங்கிலாந்து ரிச்சர்டைத் தனியே விட்டுவிட்டு!

முஸ்லிம்களின் கரத்திடை ஜெருசலம் வீழ்ந்தது வீழ்ந்ததுதான்! மறுபடியும் அது சிலுவைப் போர் வீரர்களால் மீட்கப்படாமலே போய்விட்டது. ஆனால், ஒரே ஒரு சாதனையை மட்டும் சிலுவை வீரர்கள் ரிச்சர்டின் தலைமையில் நிறைவேற்றிக்கொண்டனர். அதாவது, ஆக்கர் (Acre) என்ற சிரியா நாட்டிலுள்ள ஒரு சிறு கோட்டையை அவர்கள் கைப்பற்றிக்கொண்டனர். கன்னெஞ்சினராகிய இக் கிறித்தவர்கள், அமைதியை விரும்பித் தங்கள் போர் ஆயுதங்களை விட்டெறிந்துவிட்ட முஸ்லிம்களைச் சிறிதும் இரக்கமற்ற முறையில் கொன்று குவித்தனர். அக் கிறித்தவர்களின் வஞ்சகத்துக்கும் துரோக மனப்பான்மைக்கும் ஆக்கரின் படுகொலை ஓர் எடுத்துக்காட்டாகும்.

### ரிச்சர்டும் சலாஹுத்தீனும்

சிங்க நெஞ்சம் படைக்கப் பெற்ற வீரக்தின் சின்னமான இங்கிலாந்தின் ரிச்சர்டு மன்னருக்கு ஒரே ஓர் எதிரியாக விளங்கியவர் சலாஹுத்தீன்தாம்! மாவீரரான சலாஹுத்தீனைத் தோற்கடித்துப் புண்ணிய பூமியான ஜெருசலத்தை மீண்டும் மீட்டு, அதைக் கிறித்தவர்களின் ஆட்சியின் கீழ்க் கொண்டு வந்துவிட வேண்டும் என்று தாம் கண்ட கனவு நனவாக முடியாதென்பதைக் கண்டறிந்த ரிச்சர்டு, சலாஹுத்தீனுடன் அமைதியொப்பந்தம் செய்துகொள்ள விரும்பினார். மேலும், தம் தாய்நாடாகிய இங்கிலாந்தில் அரசியல்நிலை மிகவும் மோசமாகி விட்டமையால், தமதில்லம் திரும்பிவிடத் துடித்தார் ரிச்சர்டு. ஆதலால், அவர் சுல்தான் சலாஹுத்தீனுடன் அமைதி உடன்படிக்கையொன்றைக் கி. பி. 1191-ல் செய்து கொண்டு, சிங்க இதயம் நலிந்து, ஆட்டுக்குட்டி இதயத்துடன் இங்கிலாந்து திரும்பினார். இவ்வாறாக முடிந்தது, வரலாற்றுப் பெருமைமிக்க மூன்றாவது சிலுவைப் போர்.

மூன்றாவது சிலுவைப் போர் முஸ்லிம்களுக்குப் பெரும் வெற்றியாகவே முடிந்தது. இவ் வெற்றிக்கு முக்கிய காரணமாகத் திகழ்ந்தவர், மாவீரர் சலாஹுத்தீன் ஆவர். இங்கிலாந்து அரசரான ரிச்சர்டுடன் ஒப்பந்தம் செய்து கொண்ட இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர், கி.பி. 1193-ல் அந்த ஐயூபி வம்ச நிறுவனராகிய சலாஹுத்தீன் காலமானார். வரலாறு காணாத ஒரு மாமன்னரை, மாமல்லரை, முஸ்லிம்கள் இழந்துவிட்டனர்.

சுல்தான் சலாஹுத்தீன் மறைவுக்குப் பின்னர், அவருடைய சந்ததியினர் ஒற்றுமையைக் கைவிட்டு, சண்டை சச்சரவுகளில் இறங்கி நலிவடைந்தனர். இறுதியில், கி.பி. 1229-ஆம் ஆண்டில்

கிறித்தவ மன்னரான இரண்டாம் ஃபிரெடெரிக்குக்கு, அல் காமில் ஐயூபி (al Kamil) ஓர் உடன்படிக்கைமூலம் ஜெருசலத்தையும் மற்றும் பல கடற்கரைப் பட்டினங்களையும் அளித்தார். சலாஹுத்தீன் மறைந்த நாற்பது ஆண்டுகளுக்குள் மீண்டும் ஜெருசலம் கிறித்தவரின் கைக்கு மாறியது, வீரத்தால் அல்ல! கி.பி. 1252-ல் மம்லூக்குகள் எகிப்தில் தங்கள் ஆட்சியை நிறுவினர். அவர்களுள் மூன்றாவது[1] மம்லூக் சுல்தானை பேபர்ஸ் (Baybars) பாலஸ்தீனத்திலுள்ள (Palestine) பல நகர்களைக் கைப்பற்றியதுடன் அந்த்தாக்கியாவையும் (Antioch) மீட்டார். பல போர்க்களங்களில் பேபர்ஸ் ஃபிராங்க் (Franks) படைகளைத் தோற்கடித்தார்.[2] பேபர்ஸின் இவ் வெற்றிகள் ஃபிராங்க் படையின் முதுகெலும்பை ஒடித்தன. அவருடைய வாரிசுகள் எகிப்திலிருந்த சிலுவை வீரர்களை மேலும் விரட்டியடித்து, பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதியில் (கி.பி 1291-ல்) அவர்களை நாடு கடத்தியே விட்டனர்.

## சிலுவைப் போர்களின் விளைவுகள்

(1) ஆசியா கண்டத்தின் மத்திய கிழக்குப் பிரதேச இருநூற்றாண்டு வரலாறுமீது, சிலுவைப் போராட்டங்கள் தொடர்ந்து நடந்தாலும், இராணுவ ரீதியாக நோட்டமிடும் போது, எவ்வித விளைவையும் அவை தோற்றுவிக்கவில்லை என்பது வரலாற்று ஆராய்ச்சியாளர்க்கு விளங்காது போகாது.

(2) கீழை நாட்டு மக்களும் மேலைநாட்டு மக்களும் முதன் முறையாக நேருக்கு நேர் சந்தித்து ஒருவரை மற்றவர் நன்றாகப் புரிந்து கொள்ளும் சந்தர்ப்பமும் வாய்ப்பும் கிட்டின வென்பது மறைக்க முடியாத உண்மையாகும்.

(3) மதப் பற்றோ மத வெறியோ ஒருபுறமிருந்தாலும், இரு சாராரின் பரஸ்பர கலாசார நாகரிகங்களைப் பொறுத்தவரை, உள் ளடிப்படையிலாவது அவர்கள் பரிவர்த்தனை செய்து கொண்டிருப்பர்.

(4) கீழை நாடுகளுக்கும் மேலை நாடுகளுக்குமிடையே போக்குவரத்தும், வாணிபமும் வர்த்தகமும் வளர்ந்தோங்கப் பல புதிய வழிகள் கண்டுபிடிக்கப்பட்டன.

[1] சுல்தானை ஷஜருத்துர்ரை அடிமை அரசியெனக் கொண்டால், பேபர்ஸ் நான்காம் மம்லூக் சுல்தான் ஆவார்.

[2] முன் பக்கம் 42 பார்க்க.

(5) மேலும், சர்க்கரை, சமையலுக்கான வாசனைத் திரவியங்கள், நவநாகரிக மோப்பமிக்க வாசனைப் பொருள்கள், இலவங்கப்பட்டை, சுக்கு இஞ்சி போன்றவை, உயர்ந்த ரகக் கம்பளங்கள், நேர்த்தியான பட்டாடைகள், பலவகைப் புதுத் துணிமணிகள், ஜப மாலைகள் ஆகிய கீழ்நாட்டு உற்பத்திப் பொருள்கள் மிக அதிகமாக ஐரோப்பாவில் தேவைப்பட்டன. ஆதலால், இதன் விளைவாக வர்த்தகம் பெருகிற்று. செல்வமும் செல்வாக்கும் படைத்தவர்கள் அரசியலில் பங்கு கொண்டார்கள்.

(6) வியாபாரம் விரிவடைந்து சிறப்புறும் பொழுது நகரங்கள் தோன்றுவது இயற்கை. பணம் படைத்த வியாபாரிகள் சமுதாயத்திலும் அரசியலிலும் செல்வாக்குப் பெற்றனர்.

(7) இருநூறுண்டுகளாக, விட்டு விட்டு, ஆனலும் தொடர்ந்து நடந்த இப் பயங்கரச் சிலுவைப் போராட்டங்களின் மற்ருெரு முக்கிய விளைவு, பாரம்பரிய நில முதலாளித்துவத்துக்கு ஒரு முடிவு காணப்பட்டது. மேலும், உழுது உழுது உருக் குலைந்த, நிலத்துக்கு உரிமையற்ற பாரம்பரிய விவசாயிகளின் அடிமைத்தனமும் நீக்கப்பட்டது.

(8) அரசர்களின் கை ஓங்கியதுடன், சட்டத்தின்முன்னே மனித குலச் சமத்துவம் அவசியம்தான் என்னும் கொள்கையும் வளர ஆரம்பித்தது. இவ் வுயர்ந்த மானிட தர்மக் கொள்கையின் அடிப்படையில் பல ஐரோப்பிய நாடுகளில் புதிய சட்ட திட்டங்கள் உருவாக ஆரம்பித்தன. இது சிலுவைப் போர்களினுல் தோன்றிய மற்ருெரு முக்கிய விளைவாகும்.

(9) அறிவிலக்கியங்களுக்கும், முன்னேற்றக் கருத்து வளர்ச்சிகளுக்கும், ஆராய்ச்சிகளுக்கும் வழி பிறந்தது. புத்துணர்ச்சிகளுக்கும், அனைத்துத் துறைச் சீர்திருத்தங்களுக்கும் ஒளிச் சுடர் உட்புகுந்து விட்டது.

(10) வைத்ததே சட்டம், நினைத்ததே நீதி என்றெல்லாம் எதேச்சாதிகாரக் கோலோச்சி வந்த போப்பாண்டவரின் மகிமையும் மதிப்பும் செல்வாக்கும் குறைய வாரம்பித்ததுடன், ஆராய்ச்சியோடு கூடிய பகுத்தறிவைப் பயன்படுத்துவதுதான் சிறப்பாகும் என்னும் உணர்ச்சியும் ஒவ்வொருவரின் உள்ளத்தின் கண்ணும் உறுதிப்பட ஆரம்பித்தது.

(11) விஞ்ஞானம், அறிவோடுகூடிய வேதாந்தம் போன்ற அறிவுத் துறைகளில் ஐரோப்பிய நாடுகளுக்கு அராபிய இலக்கியங்கள் உயர்ந்த, முன்னேற்றமிக்க கருத்துகளை எடுத்து வழங்கின. இதனுல், கீழை நாட்டு மக்களின் தாய்மொழிகளையும் இலக்கியங்களையும் ஆராயும் வாய்ப்பும், வசதியும், அவசியமும் ஐரோப்பிய வித்வான்களுக்கும் விவேகிகளுக்கும் ஏற்பட்டுவிட்டன. மேலும், கலை, கலை அறிவு, சிற்ப அறிவு முதலிய துறைகளிலும் மேலை நாடுகள் முஸ்லிம் நாடுகளுக்குப் பலவிதத்திலும் பெரிதும் கடமைப்பட்டுள்ளன.

(12) இராணுவத் துறையிலும் மேலை நாடுகள் முஸ்லிம்களிடத்திருந்து பலப்பல புதிய பாடங்களைக் கற்றுக்கொண்டன. கோட்டை கொத்தளங்களை மாட மாளிகைகளை நிறுவும் கலைகள், முற்றுகையிடும் முறைகள், போர்த் தந்திரங்கள், சுரங்கம் மூலம் வெடி வைத்துத் தகர்க்கும் இராணுவ நுட்பங்கள், அஞ்சற் கடிதங்களைக் கௌவிச் செல்லும் புருப் பயிற்சிகள், தற்காப்புக்கான உலோகக் கவசங்கள் முதலிய முஸ்லிம் கண்டுபிடிப்புகளை ஐரோப்பிய நாடுகள் கற்றுக்கொண்டன.

(13) இரு நூருண்டுகள் வரை நடைபெற்ற சிலுவைப்போர்களால், கிறித்தவர்களும் முஸ்லிம்களும் பரஸ்பரம் ஒருவரையொருவர் கடுமையாக வெறுக்கத் தொடங்கவே, இத் தொடர் விரோதங்களால் இஸ்லாத்தைப்பற்றியும், அம் மத நிறுவனரான நபி நாயகம்பற்றியும் பலப்பல தப்பெண்ணங்கள் ஐரோப்பாவில் பரவின. இச் சிலுவைப் போராட்ட கால கட்டங்கள் தாம் இவற்றுக்கான முக்கிய காரணமென்ருலும் மிகையாகாது.

(14) இத்துணைக் கடும் வெறுப்புமிக்க புகைச்சல்களிடையிலும் எத்தனையோ நல்ல நன்றியுள்ள பாரபட்சமற்ற கிறித்தவ ஆத்மாக்களும், அறிவாளிகளும், ஆராய்ச்சியாளர்களும் இருந்துதான் வந்தார்கள். அவர்கள் புகழோங்கும் இஸ்லாமிய கையெழுத்துப் பிரதிகளை மொழிபெயர்த் திருக்கிருர்கள். எத்தனையோ இஸ்லாமிய வைத்திய நிபுணர்கள் கிறித்தவ நோயாளிகளின் தீராத நோய்களை யெல்லாம்கூடத் தீர்த்துக் குணப்படுத்தி யிருக்கிருர்களென்று கிறித்தவர்களே சான்று பகர்ந்துள்ளனர்.

(15) இப் புகைச்சல்களினூடே முஸ்லிம்களும் கிறித்தவர்களும் தங்களிடையே கலப்புத் திருமணங்களும் செய்துள்ளனர். இதற்குச் சான்று, சிரியா, லெபனுன் முதலிய நாடுகளில்

எத்தனையோ நீலக்கண் படைத்த அழகு நல்லாள்களைப் பரவலாகப் பார்க்கலாமே!

(16) தங்கள் புண்ணிய பூமியான பாலஸ்தீனையும், ஜெருசலத்தையும் முஸ்லிம்களிடத்திருந்து நிரந்தரமாக மீட்க முடியாமற் போனாலும் 'எல்லாம் நன்மைக்கே!' என்ற அனுபவப் பழமொழிப்படி, சிலுவைப் போரின் நீண்டகாலக் கைகலப்பால், குறிப்பாக மேற்கு ஐரோப்பாவுக்கு இவ்வளவுதானென்று எடை போட இயலாத எத்தனையோ நன்மைகளும் பலாபலன்களும் விளையாமல் போகவில்லை யென்பது மட்டும் மறுக்கவியலா உண்மை என்னலாம்.[1]

சுருங்கச் சொல்லின், சிலுவைப் போர்கள் ஆரம்பமாகுமுன் முழு ஐரோப்பா கண்டமுமே 'Dark Ages' என்னும் கும்மிருட்டில் குருட்டுத்தனமாய் முடங்கிக் கிடந்தது. அந்த இருள் சூழ்ந்த உள்ளமும் புறமும் ஒருங்கமைந்த ஐரோப்பியர், ஒளி மிக்க மேற்காசிய முஸ்லிம்களின் ஆட்சியுடன் மோத வந்து தோல்வி கண்டு, இங்கிருந்து ஞானச் சுடர் என்னும் தீச்சுடரைத் தீவர்த்திகளாகத் தூக்கிச் சென்று தங்கள் நாடுகளிலும் வெளிச்சம் பரவுமாறு செய்து கொண்டார்கள்!

## 3. அப்பாஸியரின் காலத்தில் மங்கோலியப் படையெடுப்பு
## (Conflict with the Mongols under the Abbasids)

மத்திய ஆசியாவின் (Central Asia) பரந்து விரிந்த புல் வெளிகளில் ஆயிரமாயிரம் ஆண்டுகளாக, நிரந்தரமாக வாழுமிடம் இன்னதுதான் என்று அறிந்திராத மங்கோலியர்களென்னும், ஊர் ஊராகச் சுற்றித் திரிந்தே வயிறு வளர்த்து வந்த கூட்டத்தவர்கள், அதாவது, அநாகரிகம் பிடித்த காட்டுமிராண்டிகள் தங்கள் கால்நடைகளை இடம் விட்டு இடம் மேய்த்துக்கொண்டே வருவதும் போவதும் திரிவதுமாக வாழ்ந்து வந்தனர் என்னலாம் (தற்கால நம் நாட்டு நரிக் குறவர்களைப் போல்). ஹூணர்கள் (Huns), துருக்கியர்கள் (Turks), மங்

[1] இன்னும் அதிகத் தகவல்களுக்குக் கீழ்க்காணும் நூல்களைக் காண்க: (1) Mills—History of the Crusades, (2) T. A. Archer—The Crusades, (3) Ernest Barker—The Crusades, (4) Steven Runciman—History of the Crusades. 'சிலுவைப் போர்கள் நிகழ்ந்திராவிடில், ஐரோப்பா கண்டம் இன்னம் ஓராயிரம் ஆண்டுகள் கடக்கும் வரை அறிவுச்சுடரையோ, நாகரிகத்தையோ பெற்றுக்கொண்டிருப்பது முடியாது' என்பது பல கிறித்தவர்களே மனமொப்பிய உண்மையாம்.

கோலியர்கள் (Mongols) என்னும் முப் பிரிவினரும் பொதுவாக ஓரின மக்களே எனக் கொள்ளலாம். நாகரிகமே இன்னதென்று அறியாத இயற்கைப் பிறவிகள் என்றுங்கூட அவர்களைச் சொல்லி விடலாம். இத்தகையவர்களில் ஒரு பிரிவினரான ஹூணர்கள் என்பவர்கள்தாம் மாபெரும் ரோமானிய பேரரசைத் தவிடுபொடியாக்கினர். துருக்கியர்களென்னும், அத்தகையோர் போன்ற மற்றொரு காட்டுமிராண்டிப் பிரிவினர்தாம் நாகரிகமடைந்திருந்த முஸ்லிம்களைத் தோற்கடித்துவிட்டிருப்பினும், பிற்காலத்தில் இஸ்லாம் மதத்தையே தழுவி, இஸ்லாத்தின் கலாசாரப் பண்புகளைப் பிரதிபலிக்கும் வீரர்களாகக் காட்சியளிக்கக்கூடிய அளவுக்கு முன்னேறியும் விட்டனர்.

**மங்கோலியர் யார் ?**

ஹூணர்களென்போருக்கும் துருக்கியர்களுக்கும் பின்னர், 13ஆம் நூற்றாண்டில் மத்திய ஆசிய வரலாற்றில் காட்சியளித்த மற்றொரு நாடோடிக் கூட்டத்தினராகிய காட்டுமிராண்டிப் பிரிவினர் 'மங்கோலியர்' எனப்படுவோர் ஆவர்.

'மங்கோல்' என்ற சொல், 'வீரம்' என்னும் பொருள் பயக்கும் 'மாங்க்' (Mong) என்ற மூலச் சொல்லிலிருந்து பிறந்து, வீரர்கள் என்ற பொருளைத் தரும் 'மங்கோல்' என்றாயிற்று. மத்திய ஆசியாவின் கிழக்குப் பிரதேசத்திலுள்ள பீடபூமிதான் மங்கோலியர்களின் இருப்பிடம். மங்கோலியரும் துருக்கியரும் ஒரே இனத்தினரே. ஆனால், இருவரிடையேயும் அதிக வேற்றுமையுண்டு. அதாவது, வரலாற்று வளர்ச்சியில், துருக்கியர்கள் முஸ்லிம்களின் அண்மையில் நெருங்கி நட்புப் பூண்டு, கால அடைவில் இஸ்லாம் மதத்தையே ஏற்றுக் கொண்டவர்கள்; ஆனால், மங்கோலியரோ கடைசிவரையில் தாங்கள் பிறந்த மேனியான காட்டுமிராண்டிகளாகவே நீடித்து முஸ்லிம்களை எதிர்த்துப் போராடி நிரந்தரப் பகைவர்களானவர்கள்.

**செங்கீஸ்கானின் தலைமையின்கீழ் மங்கோலியரின் எழுச்சி**

மாபெரும் இராணுவத் தலைவனான செங்கீஸ்கானைத் (Chengiz Khan)[1] தலைவனாகக் கொண்டு மங்கோலியர்கள் ஒன்று திரண்டு, மத்திய ஆசியாவை வென்று, அங்கு வெற்றிக் கொடி நாட்டி, மத்திய கிழக்குப் (Middle East) பிரதேசத்தின் மீது மேலும் தொடர்ந்து படையெடுத்து, ருசியா (Russia) நாட்டின் தென் எல்லையையும் எட்டிவிட்டனர்.

[1] Genghis Khan' என்றும் இவன் அழைக்கப்படுவான்.

**செங்கீஸ்கான் (கி.பி. 1162—1227)**

தன் பெற்ருேர்களிட்ட தீ-மூ-சின் (Ti-mu-Chin) என்ற பெயரை உதறி எறிந்துவிட்டு, 'செங்கீஸ்கான்' என்ற பெரும் வீரப் பெயரைச் சூட்டிக்கொண்ட இப் பெரும் மங்கோலிய நாட்டு மாவீரன் பிறந்தது கி.பி. 1162-ல். இவன் தந்தையின் பெயர் யேசுகாய் (Yesugai); தாய், ஓயிலன் (Hoelun) என்பவள் ஆவாள். வீரம், தந்திரம் இரண்டும் ஒருங்கிணைந்தன வென்ருல், சக்தியும் செல்வாக்கும் முன்னேற்றமும் சுயமே வளராவா, என்ன?

'மங்கோலியர்கள்' என்னும் பெயரை உச்சரிக்கும் போதே உலகம் நடுநடுங்கும் வண்ணம் பெருங் கிலி உண்டுபண்ணியவன் செங்கீஸ்கான்.

உலகப் பிரசித்தி பெற்ற, நவநாகரிகப் பேரெடுத்த சீனுவின் நிகரற்ற தற்காப்புக்கான நீண்ட பெருஞ் சுவரை (The Great Wall of China) இடித்துத் தள்ளியவன் அவனே! பாருக்கெல்லாம் பெரும் பேரரசாயிலங்கிய சீனப் பேரரசு முழுவதும் திக் விஜயம் செய்ததோடல்லாமல், சீனுவுக்குள்ளேயே ஆளும் வம்ச மொன்றை நிறுவியவன் என்ற பெயரையும் பெற்ருன் செங்கீஸ்கான். சீனப் பேரரசுக்கே வாரிசுமாகி, கிழக்கில் திபேத், மேற்கில் சிங்கியாங் என்ற எல்லைகள் வரையில் அவன் ஆட்சி புரிந்தான். இவ்வளவு பரந்த சீனப் பேரரசைக் கட்டியாளவே நேரம் பற்ருமலிருந்த செங்கீஸ்கானுக்கு, இன்னமும் தொலைவில் மேற்கிலுள்ள நாடுகள்மீது பாயவேண்டிய அவசியமிருந்திருக்கக் கூடும் என்று எண்ணிப் பார்க்க இடமில்லை.

**முஸ்லிம்களுடன் மோதக் காரணங்கள்**

சீரும் சிறப்பும், செல்வாக்கும் அமைதியும் தவழ ஆட்சி செய்த முஸ்லிம் நாடுகள்மீது மங்கோலியர்கள் படையெடுத்ததேன்? காரணங்கள் பல:

(1) தம் பரம எதிரியான குவாரிஸம் ஷா அலாவுத்தீனை ஒடுக்கவும், தம்மைப் பாதுகாத்துக் கொள்ளவும் சுயநலத்துடன் மங்கோலியர்களின் உதவியை நாடினுர் அப்பாஸிய கலீஃபாவான அல் நாசிர் (கி.பி. 1179—1225) என்றும் ஒரு காரணம் கற்பிக்கப்படுகிறது.[1]

[1] ஆனுல், தற்கால ஆராய்ச்சியாளர்கள், இக் காரணத்தைச் சந்தேகித்து நிராகரிக்கிருர்கள். (முன் பக்கம் 30 காண்க.)

(2) தன் நாட்டுக்கும் குவாரிஸம் நாட்டுக்கும் இடையே போக்குவரத்து, ஏற்றுமதி இறக்குமதி, வாணிபம் முதலிய வசதிக்கென வர்த்தகத் தூது கோஷ்டி யொன்றைச் செங்கீஸ் கான் அனுப்பி வைத்ததாகவும், அதை ஓர் ஒற்றர் கோஷ்டி எனச் சந்தேகித்து, அக் கோஷ்டியினரின் சொத்து சுகங்களைக் கைப்பற்றிக் கொண்டதுடன், அவர்கள் அனைவரையும் முஸ்லிம் கள் படுகொலை செய்து விட்டதாகவும், அதற்குக் காரணமான முஸ்லிம் ஆளுநரையும் ஏனைய அதிகாரிகளையும் தன்னிடம் ஒப்படைக்கும்படி செங்கீஸ்கான் கோரியதாகவும், அதைக் குவாரிஸம் ஷா நிராகரித்து விட்டதாகவும், அதனுல் மூண்ட செங்கீஸ்கானின் கோபாக்கினிதான் முக்கிய காரணம் என்ப தாகவும் சொல்லப்பட்டு வருகிறது.

(3) தன் பரந்த பேரரசின் இராணுவப் படைகளின் பிறவிக் குணங்களான கொள்ளை, கொலை மற்றும் இரத்தக் களரிகளுக்கு வாய்ப்பு உண்டுபண்ணித் தராவிட்டால், தினவெடுத்த அம் மங்கோலியப் படைவீரர்கள் தங்களுக்கிடையே புரட்சிகளும் கலகங்களும் விளைத்து விடுவர்; இறுதியில், ஒற்றுமையும் குலைந்து, பெரும் பேரரசேயுங்கூடச் சிதறுண்டு போய்விடக் கூடும்; எனவே, போர்ப்பசியே உருவான மங்கோலிய இராணுவச் சக்திகளை எவர் மீதேனும் ஏவிவிட்டால் மட்டுமே விபரீதத்தினின்று தான் தப்ப முடியும், சமாளிக்க முடியும் என்னும் ஒரு பயங்கர முடிவுக்கு வந்த செங்கீஸ்கான், முஸ்லிம் நாடுகளின்மீது தன் காட்டுமிராண்டி மூர்க்கர்களைத் திருப்பி விட்டிருக்க வேண்டுமென்பது மற்ெருரு காரணமாயிருக்கலா மென்று கருதப்படுகிறது.

(4) இஸ்லாமிய நாடுகளின் செழிப்பும், அவை பெற்றிருந்த செல்வாக்கும் செல்வங்களும் கூட அந்த முரட்டுச் செங்கீஸ் கானின் பேராசைகளைத் தூண்டிவிட்டிருக்கவும் கூடும். தன் படைகளுக்குக் கொள்ளையடிப்பதற்கான ஓர் அரிய சந்தர்ப்ப மும், தனக்கு அதிக செல்வாக்கும் செல்வமும் கிடைக்கும் நல் வாய்ப்பும் கிட்டும் எனக் கருதி அவன் தன் கவனத்தை முஸ்லிம் நாடுகளின்மீது திருப்பினுன் என்று கூறப்படுகிறது.

எக்காரணமோ, அக் கொடியவன் சினத்துக்கு முடிவென்ன வென்ருல், வரலாற்றில் முஸ்லிம்கள் அடைந்த துன்பத்திற்கு ஓர் எல்லையே இல்லை, கி.பி. 1219 முதல் 1224வரை! எது காரணமோ, எது காரணமில்லையோ, செங்கீஸ்கானின் சினத் தால் முஸ்லிம் மக்களினம் பட்ட பாடும், துன்பமும் வார்த்தை

களால் வருணிக்க முடியா. மனிதர் வாழ்ந்த இடங்களில் ஆங்காங்கே பிணமலைகளென, சித்திரவதைக்காளாகி, தலை வேறு முண்டம் வேறெனப் பிய்த்து எறியப்பட்டு, மக்கட் பிணம் பெருங் குவியல்களாகக் குவிக்கப்பட்டுக் கிடந்தன. இம் மனிதப் பிணமலைகளைக் கண்டு உளம் பூரித்துவிட்டானும், கொடியவன் செங்கீஸ்கான்!

செங்கீஸ்கானின் ஐந்து ஆண்டு படையெடுப்பின் விளைவாக எங்கு நோக்கினும் உதிர ஆறுகள், பிணமலைகள் காட்சியளித்தன. அவனுடைய கால வரலாற்றின் கரைகளில் இரத்த அலைகள் வந்து மோதின. ஐந்தாண்டு காலம் (கி.பி. 1219—1224) வரை செங்கீஸ்கானின் படையெடுப்பைச் சுவைத்த நிலப் பரப்பு முழுதுமே மனித இனம் இல்லாமல் சுத்தமாகத் துடைத்தழிக்கப்பட்டது. அந்த அரக்கனின் குதிரைப் படை மூர்க்கர்களின் குளம்படி ஓசை இன்னும் மத்திய ஆசியாவின் செவிகளை நடுங்க வைத்துக் கொண்டிருக்கிறது! ஆண், பெண், முதியவர்கள், குழந்தைகள் என்ற வித்தியாசமேதுமின்றி, அவர்களை வாள் வீச்சுக்கு இரையாக்கினுன் அந்த அரக்கன். பூஞ்சோலைகளாக இருந்த இடங்களெல்லாம் இடுகாடாகக் காட்சியளித்தன.

செங்கீஸ்கானின் அரக்கர் கூட்டமாகிய கொடிய மங்கோலியப் படையினுடைய இவ் வரலாறு காணாத மனித இரத்தப் பெரு வெள்ளம் மங்கோலியாவிலிருந்து தொடங்கி ஈரானிய பீடபூமியில் கரை புரண்டு, ருசியாவிலுள்ள கீவ் (Kiev) நகரத்தின் வாசலையும் தொட்டது. இதற்குள், அழகு நகர்களாகக் காட்சியளித்துக் கொண்டிருந்த பல்க் (Balkh), புகாரா (Bokhara), சமர்க்கந்து (Samarqand), மெர்வ் (Merv), ஹீரட் (Herat), நிஷாப்பூர் (Nishapur), ரே (Ray) போன்ற வனப்பு மிக்க பேரெழில் நகரங்களெல்லாம் சூறையாடப்பட்டன. அந் நகரங்களின் மாட மாளிகைகள் தகர்த்துத் தரைமட்டமாக்கப்பட்டன. மக்கட் கூட்டம் வேட்டையாடப்பட்டது. அழகு திருக்கோலம் கொண்டிருந்த நகரங்கள் யாவும் புகை மண்டிய சுடுகாடுகளாக்கப்பட்டன. இஸ்லாமிய உலகத்தின் கலை அழகுக்கு அத்தாட்சியாக நின்ற குவாரிஸம் (Khwarism) என்ற நகரம் இருந்ததற்கான சுவடே இல்லாமல் மண்ணோடு மண்ணாகப் புதைக்கப்பட்டு விட்டது. குவாரிஸம் ஷாவின் அரச குடும்பத்தின் ஆண்களெல்லாரும் கூரிய வாள்களுக்கு இரையாயினர்; பெண்டிரெல்லாம் அடிமைகளாக்கப்பட்டனர். குவாரிஸம் ஷாவின் மூன்றே மக்கள் மட்டும் தப்பிப் பிழைத்தோடிவிட்டனர். அவர்களிலும், ஜலா


மங்கோலியப் படையெடுப்பு
கருங்கடல்
புருஸா
அன்கரா
ஸ்மர்னா
1400-2
சிவாஸ்
உஸ்மானிய
துருக்கி
அலெப்போ
1260, 1281,
1299
ஹோம்ஸ் 1281
டமாஸ்கஸ்
மர்ஜ அஸ்ஸப்பர் 1303
ஐன்ஜாலூட் 1260
மத்தியதரைக்
கடல்
மாம்லூக் சுல்தான்
காஸ்பியன் கடல்
காஸ்வீன்
கும்
பாக்தாத்
1219 - 22
நிஷாபூர்
மேர்வ்
ஹிராட்
போகாரா
சமர்கந்த்
தாஷ்கன்ட்
பல்க்
பெஷாவர்
கஜ்னா
லாகூர்
கொள்ளையிடப்பட்ட நகரங்கள்
போர்க்களங்கள்

படம் 6.

லுத்தீன் (Jalaluddin) என்ற ஒரே ஒரு வீர மகனே அத்தகு கொடிய மங்கோலியர்களையும் எதிர்த்துப் போராடி, சிங்கமெனச் சீறிப் பாய்ந்து இருமுறை தோற்கடித்து வாகை சூடினார். அவர் தந்தை அலாவுத்தீன் முகம்மதோ உளமுடைந்து, அழுவாரற்று, தொழுவாரற்று, அடக்கம் செய்யும் ஆளற்று, காஸ்பியன் கடல் (Caspian Sea) தீவொன்றில் பிணமானார்.

வீராதி வீரரும், குவாரிஸம் தேசத்துச் சிங்கமுமான ஜலாலுத்தீன் முன்னம் இழந்த தம் தந்தையின் அரசின் சில பாகங்களை வென்று பெற்று, அரசை மீட்கத் தீவிர முயற்சிகள் செய்து கொண்டிருந்த போது, மங்கோலியப் பெரும் படை மறுபடியும் ஜலாலுத்தீனின்மீது பாய்ந்து, அவரைக் குர்தீஸ்தான் (Kurdistan) என்னும் மலைப்பிரதேசத்துக்கு ஓடி ஒளிந்து கொள்ளுமளவுக்கு விரட்டி விட்டது. அத்தகைய பரிதபிக்கத் தக்க நிலையில், ஆளின்றி, ஆதரவின்றி, துணையேதுமின்றி, துணிவே துணை என்று தனியாக உதவியற்றிருந்த சமயத்தில், ஜலாலுத்தீனை எவனோ ஒரு துரோகி கோழைத்தனமாகக் கொலை செய்து விட்டான். ஒரு வேளை செங்கீஸ்கானுடைய ஓர் ஒற்றனே கொன்றிருக்கக் கூடுமென்று ஊகிக்கலாமே யொழிய, திட்டவட்டமாக உறுதிப்படுத்த முடியாது.

இறுதி வினாடி வரையில் சுத்த வீரராகப் போராடி, சரணடையாமல், தோல்வியையும் சந்திக்காமல், தலைசிறந்த பெருமை மிக்க சிறப்புமிகு வணங்காமுடித் தீரராக வீர மரணமடைந்தவர் குவாரிஸம் ஷா வம்சத்தில் ஜலாலுத்தீன் ஒருவரே!

**செங்கீஸ் மரணம் (கி.பி. 1227)**

மத்திய ஆசியாவையும், பாரசீகத்தையும், இஸ்லாமிய உலகத்தின் பல அழகு மேடைகளையும் பரந்த ஒரு பிணக்காடாகவும் இடுகாடாகவும் மாற்றிய அரக்கனாகிய, மங்கோலிய இனத்தின் பெருந் தலைவனான செங்கீஸ்கான் இறுதியாகத் தன் தாய் நாட்டுக்குத் திரும்பினான். 'இறைவனின் சாபம்' (லஃனத்துல்லா) என்று அழைக்கப்பட்ட இப் பயங்கரப் பேய் மனிதன் கி.பி. 1227-ல் தனது அறுபத்தைந்தாம் வயதில் மாண்டு ஒழிந்தான்.

**அவனது பயங்கரச் செயல்கள்**

செங்கீஸ்கானின் பயங்கரச் செயல்களுக்கு எவ்விதத்திலும் நியாயம் கற்பிக்க முடியாது. அவனால் மனித இனம் பிடி சாம்பலாக்கப்பட்டது. பகுத்தறிவும் பச்சாத்தாபமுமற்ற படுகொலைகள்,

கொள்ளைகள், மான ஈனமற்ற மாபாவங்கள், கொடிய அக்கிரமங்கள் ஆகிய இவற்றினுக்கு விளக்கம் கற்பிக்கவே இயலாது. அவனழித்த கலைப் பொக்கிஷங்கள் கணக்கிலடங்கா. செங்கீஸ் கானின், குருதி உறையச் செய்யும் கொடூரமிக்க வரலாற்றைப் படிக்கப் படிக்க உள்ளமே பதறித் துடிக்கும்; உடல் நடுங்கும்; இரத்தக் கண்ணீர் வழிந்தோடும். இருப்பினும், வரலாற்றின் விசித்திரப் போக்கு மாற்ற முடியாதது என்றுதான் கூற வேண்டும். அப்பாஸிய கலீஃபா அப்பொழுது எப்படியோ மங்கோலியரின் கொடுமைக்கு இரையாகாது தப்பியது வியப்பிலும் வியப்பே! ஆனால், பாட்டனாகிய செங்கீஸ்கானால் செய்ய முடியாததை, அவனுடைய பேரனாகிய ஹிலாகூ கான் (Hulagu Khan) சாதித்துவிட்டான்! முப்பது ஆண்டுகள் கழித்து, கி.பி. 1258-ல், அப்பாஸியப் பேரரசின் ஒப்பற்ற தலைநகரான பாக்தாத் (Baghdad) அந்த ஹிலாகூவினால் சூறையாடப்பட்டு, அழிக்கப்பட்டது![1]

[1] இன்னும் அதிக விவரங்களுக்குப் பின்வரும் நூல்களைக் காண்க:
(1) Howorth—History of the Mongols. (2) Encyclopaedia Britannica—Section, Mongols. (3) Encyclopaedia of Islam— Section, Mongols. (4) J. J. Saunders—The History of the Mongols. (5) Bertold Spuler—History of the Mongols.

# 3 அப்பாஸீ கலீஃபாக்களின் சரிவும் வீழ்ச்சியும்
## (Decline and Fall of the Abbasids)

அப்பாஸியர்கள் என்பவர்கள் நபி நாயகமவர்களின் சிற்றப்பாவான அப்பாஸ் (Abbas) என்பவரின் வழித்தோன்றல்கள் என்றும், அவர்களுக்கு முன் கலீஃபாக்களாக விளங்கிய உமையாக்கள் (Ummayads) என்பவர்களைத் தீவிரமாக எதிர்த்துப் பிரசாரம் செய்து, அவர்களைத் தோற்கடித்து, கி.பி. 750-ல் கலீஃபாப் பீடத்தைக் கைப்பற்றி, கி.பி. 1258ஆம் ஆண்டுவரை'தொடர்ந்து பாக்தாதைத் தலைநகராகக் கொண்டு செங்கோலோச்சினார்கள் என்றும் முன்பே குறிப்பிட்டுள்ளோம்.

தங்களுக்கு விரோதமாயிருந்த பிரதேசத்தில் அப்பாஸியர்கள் மக்களின் மனத்தை வசீகரிக்கும் விதத்தில் பல சுவையான பொய்ப் பிரசாரங்களைச் செய்து அரசியல் குழப்பங்களை விளைவித்து, உமையா வமிசக் கலீஃபாக்களின் ஆட்சியைக் கவிழ்த்து ஆட்சிப் பீடத்தைக் கைப்பற்றினர். பின்பு அவர்கள் தொடர்ந்து ஐந்து நூற்றாண்டுகள் வரை சிறப்பாக ஆட்சி புரிந்தார்கள்.

அப்பாஸியர்களின் பொய்ப் பிரசாரங்களை எத்தனை பிரிவினர் நம்பி ஆதரித்தார்களோ, அத்தனை பிரிவினர்களும் தங்கள் அபிலாசைகள் நிறைவேறாத காரணத்தால், நாளுக்கு நாள் அப்பாஸீகள் மீது அதிருப்தி யடையலானார்கள். பழைய நம்பிக்கையும் ஆதரவும் கோபக்கனலாக மாறி, அப்பாஸீப் பீடத்தைச் சுற்றி நாலாபக்கமும் விரோதிகள் முளைத்து எதிர்க்கக் கிளம்பினார்கள்.

இவ்வாறாக, ஒற்றுமையில்லாத, ஒருவரையொருவர் எதிர்க்கும் மனப்பான்மையும், சண்டை சச்சரவு எதிர்ப்புகளும், நாடு

பிளவுண்ணும் அளவுக்குப் பீடிக்கப்பட்ட உட் காய்ச்சல்களும், அயல்நாட்டுப் படையெடுப்புகளும் அப்பாஸீ ஆட்சிப் பீடத்தை நாளாவட்டத்தில் உளுத்துப்போகுமாறு செய்து, முடிவில் படு வீழ்ச்சிக்கும் வழிவகுத்து விட்டன. உமையாக்களைத் தொலைப் படுத்தி, அப்பாஸீகள் கலீஃபாப் பீடத்தை ஆக்கிரமித்து ஆட்சி புரிந்ததானது உலக வரலாற்றிலேயே மிகவும் புகழ்மிக்க சாதனை தானென்பதில் ஐயமேதுமில்லை தான். ஆனால், இறுதியில், உமை யாக்கள் எவ்வெக் காரணங்களால் வீழ்ச்சி யடைந்தார்களோ, ஏறத்தாழ அதே காரணங்களாலேயே அப்பாஸீகளின் செல் வாக்கும் ஆட்சியும் கவிழ்ந்து போயின என்னலாம்.

## அப்பாஸீகளின் வீழ்ச்சிக்கு முக்கிய காரணங்கள்

(1) ஃபாத்திமாவின் வாரிசுகளுக்கும் (Fatimids) அப்பாஸீ சந்ததியார்க்கும் (Abbasids) இடையே முளைத்த விரோதங்கள்.

(2) அராபியர்களுக்கும் அராபியர் அல்லாதவர்களுக்கு மிடையே நிகழ்ந்த மோதல்கள்.

(3) பைஜான்ஷியப் பேரரசுடன் நிகழ்ந்த போர்.

(4) 'எதையும் நம்பாதே! எதற்கும் அஞ்சாதே!' என்ற மத நம்பிக்கையற்ற கட்சியினரான ஹஷீஷிகளின் (Assassin) தீவிரமான பிரசாரங்கள்.

(5) இஸ்லாத்தின் ஏகோபித்த ஒற்றுமைக்குக் கேடு உண்டு பண்ணிவிட்ட சிறு சிறு இனப்பிரிவுகளும், சிறு வம்சங்களும்.

(6) புதுப்புது சமுதாயக் கொள்கைகளும் மக்கள் ஒழுக்கத் துக்கான சீர்திருத்தக் கிளர்ச்சிகளும்.

(7) கையாலாகாத கலீஃபாக்கள்.

(8) மங்கோலியப் படையெடுப்பு.

இவை ஒவ்வொன்றையும்பற்றிப் பின்னே ஆராய்வோம்:

## (1) ஃபாத்திமாவின் சந்ததிகளுக்கும் அப்பாஸ் சந்ததிகளுக்கும் இடையே மோதல்

நபி நாயகத்தின் சிறிய தந்தையாகிய அப்பாஸின் சந்ததிகளும், நபி நாயகத்தின் குமாரியான ஃபாத்திமா (Fatima) வின் சந்ததிகளுமாகிய இரு பிரிவினரும், அவரவர்கள் சார்பில் இமாமத் (Imamat)[1] உரிமைகளுக்கும் கலீஃபாப் பீட உரிமைகளுக்கும் தாங்கள்தாம் சரியான வாரிசு என்றும்,

[1] Spiritual head or Religious head (மதத் தலைவர்.)

முன்பு கலீஃபாப் பீடத்தை ஆக்கிரமித்துக் கொண்டிருந்த உமையாக்களுக்கு எந்த விதமான சட்ட சம்மதமான உரிமையோ வாரிசுரிமையோ கிடையாதென்றும் கிளர்ச்சிகள் பல செய்தனர். இவ்விரு கட்சியினரிலும் கூட, ஃபாத்திமாக் கட்சிக்கே இஸ்லாம் மதத்துக்குத் தலைமை தாங்கும் தகுதியும் யோக்கியதையும் உண்டென்று பெரும்பான்மையான மக்கள் ஆதரவு தெரிவித்தார்கள்.

இதைக் கண்ணுற்ற சந்தர்ப்பவாதிகளான அப்பாஸீகளோ சந்தர்ப்ப வேடம் புனைந்து, ஃபாத்திமாக்களுக்கு முதலில் இரக்கம் காண்பித்து அவர்களை ஆதரித்தனர். இவ்விரு வமிசத்தினர்களும் ஒத்துழைத்து, உமையாக்களை ஆட்சிப் பீடத்திலிருந்து அகற்ற முயன்றனர். இவ் வொருமித்த எதிர்ப்பால் உமையாக்கள் விரட்டப்பட்டவுடன் அப்பாஸீ வமிசத் தலைவரான அஸ் ஸஃப்ஃபா (as-Saffah) என்பவர் தம்மையே கலீஃபாவாகப் பிரகடனம் செய்து கொண்டு, ஃபாத்திமாக்களின் உரிமைகளை நிராகரித்து விட்டார். காரணம், ஃபாத்திமாக் கட்சியினர் எதிர்காலத்தில் தங்களுக்கு மாறான எதிர்க் கட்சியாக ஆகிவிடக் கூடுமென்றும், ஆட்சிப்பீடத்துக்கே போட்டியிடும் வாய்ப்புப் பெற்று விடுவார்களென்றும் முளையிலேயே அப்பாஸீகள் அவர்களைக் கிள்ளி யெறிந்து விட்டனர். மேலும், ஃபாத்திமாக் கட்சியினர் மீதே பொதுமக்களாதரவு இருப்பதையும் அவர்கள் கண்டுகொண்டனர். ஆடம்பரமின்மை, உன்னதப் போக்கு, சாந்த குணம், சத்தியம் தவறாமை ஆகிய நல்லொழுக்கங்களை ஃபாத்திமாக் கட்சியினரிடம்தாம் மக்களால் காண முடிந்தது.

இத்தகைய போற்றற்குரிய குணங்களுக்கும் அப்பாஸீக் கட்சிக்கும் வெகு வெகு தூரம்! அதனால், ஃபாத்திமாக் கட்சியினரைப் பலவிதத்திலும் ஒடுக்க, நசுக்க, அழிக்க முனைந்தனர் ஆட்சிப்பீட அதிகார மமதை பூண்ட அப்பாஸீகள். கடமை, கண்ணியம், கட்டுப்பாடு எனும் மூன்று பண்புகளும் ஒருங்கிணைந்த ஃபாத்திமா சந்ததியார்களைப் பயங்கரக் காட்டுமிராண்டித்தனமாகக் கொடுமைக்கு ஆளாக்கினார், நான்காவது அப்பாஸீ கலீஃபாவான ஹாதி (Hadi) என்பவர். இறுதியாக, ஹசன் (Hasan)[1] சந்ததியைச் சேர்ந்த இத்ரீஸ்[2]

[1] திருநபியவர்களின் பேரப் பிள்ளையும், அலீ-ஃபாத்திமா தம்பதியின் மூத்த மைந்தருமாகிய ஹஸன் என்பவர் ஷீஆப் பிரிவினரின் இரண்டாவது இமாம் (தலைவர்) ஆவார்.

[2] இத்ரீஸ் என்பவர் அந்த ஹஸனின் வழித் தோன்றலாவார். இவருடைய வாரிசுகள் Idrisid Dynasty என்று ஆங்கிலத்தில் அழைக்கப்படுகின்றனர்.

என்பவரின் பெயரிலிருந்து உருவான இத்ரீஸி என்ற ஒரு தனி வமிசம் நிறுவப்பட்டதுடன், எகிப்திலும் மற்ற வட ஆப்ரிக்க நாடுகளிலும் வேரூன்றிய சுதந்தரமான ஃபாத்திமா கிலாஃபத் (Fatimid Caliphate), அப்பாஸீ கிலாஃபத்திலிருந்து தன்னைத் துண்டித்துக் கொண்டு விட்டது. அதுவரையில் இஸ்லாமிய உலகத்துக்கு ஒரே கிலாஃபத் பீடம் இருந்தது போய், இப்பால் இரு கலீஃபாப் பீடங்கள் உருவெடுத்து விட்டன. இவற்றிலிருந்து அப்பாஸீகளுக்கும் ஃபாத்திமாக்களுக்கும் இடையே எந்த அளவுக்குப் பகைமை முற்றிவிட்டதென்பது தெற்றெனவிளங்கும்.

## (2) அராபியர்க்கும் அராபியரல்லாதார்க்கும் மோதல்

உமையா வமிச ஆட்சி அப்பாஸிய ஆட்சியாக மாறிய பெரும் புரட்சிக்கு வழிகாட்டிகளாயிருந்தவர்கள், பாரசீகர்களும் குராசானியர்களுமே ஆவர். ஆதலால், அப்பாஸீப் பேரரசில் அவ்விரு இஸ்லாமிய இனத்தவர்களும் முக்கிய பதவிகள் வகித்தனர். இதனால் அராபியர்கள் அதிருப்தியுற்று, அப்பாஸீ கலீஃபாக்களின் அன்புக்கும் ஆதரவுக்கும் பாத்திரர்களாகி விட்ட பாரசீகர்களை வெறுத்தனர்.

### அப்பாஸீ கலீஃபாக்களின் துரோகமும் சமய சந்தர்ப்பப் போக்கும்

இரண்டாவது அப்பாஸீ கலீஃபா மன்சூரின் (Mansur) சிறிய தந்தையாகிய அப்துல்லா-பின்-அலீ (Abdullah bin Ali) என்பவரின் எதிர்ப்பும், அப்பாஸீ புரட்சியின் பிரதம பிரசாரகரான அபூ முஸ்லிம் குராசானி (Abu Muslim Khorasani) படுகொலை செய்யப்பட்டதும், மனச் சாட்சி சிறிதுமின்றிப் பாரசீகர்களின் உதவி கொண்டு அராபியர்களை அடக்க அப்பாஸீ கலீஃபாக்கள் கொண்ட துரோக எண்ணமும், அவ்வெண்ணத்தை ஈனத்தனமாக அவர்கள் செயல்படுத்த முற்பட்டதும், முடிவில், தங்களைப் பதவிப் பீடத்திலமர்த்தி ஆதரித்த அந்தப் பாரசீகர்களையே படுகொலை புரிந்து தங்கள் ஆட்சியை மேலும் பலப்படுத்திக் கொள்ளத் தொடங்கிய முறைகளும் மிக மிகக் கீழ்த்தரமான செயல்களாகும்.

### பர்மக்கீகள் (Barmakids)

பல்க் (Balkh) என்ற ஊரிலுள்ள பௌத்தர்களின் மடத்தின் பிரதம மதகுருவாக பர்மக் (Barmak) என்பவர் ஒருவர் இருந்தார்; அவர் இஸ்லாம் மதத்தைத் தழுவினர். 'பர்மக்கீகள்' என்னும் அவருடைய சந்ததியினர் அப்பாஸீ ஆட்சியைத்

தாங்கும் தூண்களாகி, அல்லும் பகலும் அந்த கலீஃபாக்களின் பெயரும் புகழும் சிறப்பும் மேலோங்கி உயரப் பாடுபட்டார்கள், உழைத்தார்கள். ஆனால், அவர்கள் திடீரெனப் பொறாமைத் தீக்கு இரையாகி, கலீஃபா ஹாரூன் ரஷீத் (Harun al-Raschid) என்பவரால் அழிக்கப்பட்டனர். பர்மக்கீகள் பாரசீகர்கள் ஆவர். இப்படியாக, அராபியர்களுக்கும் பாரசீகர்களுக்கும் இடையே கருத்து மோதல்கள் ஏற்பட்டு, ஆட்சி ஆட்டங் கண்டது. மேலும், பாரசீகர்கள், அராபியர்கள் ஆகியவர்களின் எதிர்ப்பு அணியை மட்டந்தட்ட, துருக்கியர்களைக் கொண்ட நிரந்தர மான ஒரு தற்காப்புப் படையை நிறுவினார் கலீஃபா முத்தசிம் (Mutasim). அது தற்கொலை செய்து கொள்வதற்கு ஒப்பாயிற்று.

கடைசியில், குயில் போல் உருவம் செய்ய முயன்ற சிற்பி குரங்குருவம் செய்து முடித்தது போல், நினைக்கும் கேடு தனக்கே என்றது போல், இந்தத் துருக்கியர்ப் படையாலேயே அப்பாஸீகள் வீழ்ச்சியடையலானார்கள் என்பதை இனிப் பார்க்கப் போகிறோம்.

## (3) பைஜான்ஷியப் பேரரசுடன் போர்

இஸ்லாம் மதம் உதயமாகு முன்பே, நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக, முற்குறிப்பிட்டவாறு ரோமானியர்களுக்கும் அராபியர்களுக்குமிடையே சண்டை சச்சரவுகளும், வேற்றுமை களும் மலிந்து இருந்தன. இப் பழைய விரோதம், வியாபார விஷயமானதும், அரசியல் விஷயமானதுமாகும். நாம் முன்பே விவரித்ததுபோல், கீழ்நாடுகளுக்கும் மேல்நாடுகளுக்கும் நடந்த ஏற்றுமதி இறக்குமதி, போக்குவரத்துகளின் நெடும் பாதைக ளெல்லாம் அராபியர்களின் அதிகாரத்துக்கும் ஆதிக்கத்துக்கும் அடங்கி இருந்தன. அராபியர்களின் இந்த ஏகபோகத் தனியுரி மையை ஒழிக்க வேண்டுமென்பதும், அராபியாவைப் பிடித்து அடிமையாக்கி, அதைத் தன் வியாபார வேட்டைக்காடாக ஆக்கிவிட வேண்டுமென்பதும் ரோமானியரின் பேரவா ஆகும். ஆனால், சுதந்தரப் பறவைகளான அராபியர்கள் இப் போக்கை எதிர்த்தார்கள். இந்தப் பாரம்பரிய முரண்பாட்டுக்கும் சண்டை சச்சரவுகளுக்கும், இஸ்லாமிய மதத்தைத் தழுவிய அராபிய முஸ்லிம்களும் வாரிசுகளானார்கள். இம் மோதல் தொடர்ந்து கி.பி. 1453 வரை நடந்தது. இக் காரணமாக, அப்பாஸீ ஆட்சி சரியத் தலைப்பட்டு, கடைசியில் கவிழவும் நேர்ந்தது.

## (4) அசாசின் இயக்கம்

சல்ஜூக் சுல்தானுகிய மாலிக்ஷாவின் காலத்தில் 'அசாசின்' (Assassin) என்ற ஒரு கொடிய நவீனக் கிளர்ச்சி தலைதூக்க ஆரம்பித்தது. இதன் தலைவனுன ஹசன்-பின்-சபாவைப் பற்றியும், அவன் நிறுவிய பயங்கரக் கொலை இயக்கத்தைப் பற்றியும் ஏற்கெனவே முதல் அத்தியாயத்தில் படித்துள்ளோம்.[1] இவ்வியக்கத்தின் தோற்றத்தால் இஸ்லாமிய உலக ஒற்றுமை குலைந்தது. நாட்டில் பிளவுகளும், கலகங்களும், குழப்பங்களும் தலைதூக்கின. மேலும், இவ்வியக்கத்திஞல் முஸ்லிம் சமுதாயத்தில் பெரும் பீதி ஏற்பட்டு, அப்பாஸியர்களின் ஆட்சி ஆட்டம் கண்டது. அப்பாஸியப் பேரரசு வீழ்ச்சியடைவதற்கு 'அசாசின் இயக்கம்' ஒரு முக்கிய காரணமாகும்.

## (5) இஸ்லாமிய உலகத்தில் சிறு வம்சங்களின் எழுச்சியும் பிரிவுகளும் பிளவுகளும்

அப்பாஸீ குலத்தின் முதல் ஏழு கலீஃபாக்கள் மிகவும் திறமைசாலிகளாய் விளங்கிஞர்கள். அவ்வேழு கலீஃபாக்களும் ஏறத்தாழ ஒரு நூற்றுண்டுவரை திறம்பட ஆட்சி செலுத்தினர். ஆஞல், கலீஃபா அல் வத்தீக்கின் (al-Wathiq, 842—847) மறைவுக்குப் பின்னர் ஆட்சிப் பீடமேறிய அப்பாஸீ கலீஃபாக்கள் திறமையற்றவர்கள், அரசியல் விவேகமற்றவர்கள் ஆவர். அவர்கள் கடமையைப் புறக்கணித்துக் காம வேட்டையில் ஈடுபட்டனராதலால், நாளுக்கு நாள் அவர்களுடைய பெருமையும் சிறப்பும் ஆதிக்கமும் பலம்குன்ற ஆரம்பித்தன. இப் பயனற்ற கலீஃபாக்களைத் தந்திர முறையால் பயன்படுத்தி, அராபியரல்லாத துருக்கியர்கள் தங்கள் ஆதிக்கத்தை விரைவில் நிலைநாட்டிக் கொண்டனர். இத் துருக்கிய தளபதிகள் தங்களை எதேச்சாதிகாரிகளாகவும் சுல்தான்களாகவும் பிரகடனப்படுத்திக் கொண்டதுடன், கலீஃபாக்களைத் தங்கள் கைப்பாவைகளாகவும் ஆட்டிவைக்க ஆரம்பித்தார்கள்; நினைத்தவர்களை 'அரசனுக்கும்' சக்தியும் பெற்றுவிட்டார்கள். அறிவும், வல்லமையும், அஞ்சா நெஞ்சமும் படைத்த ஆளுநர்கள்கூட, தட்டிக் கேட்க ஆளில்லாதபடி தங்கள் தங்கள் மாநிலங்களுக்குத் தாங்களே சுல்தான்களென்று பிரகடனப் படுத்திக்கொண்டு ஆட்சி புரியத் தலைப்பட்டனர். கிழக்கில் இந்தியா, மேற்கில் எகிப்து ஆகிய பரந்த அப்பாஸியப் பேரரசெங்கும் குறுகிய

[1] பக்கம், 26, 27 பார்க்க.

காலத்துக்கேனும் பலப்பல சர்வ சுதந்தரச் சிறு அரசுகள் முளைத்துக் கொண்டன. உதாரணமாக, தாஹிரீகள் (Tahirids), ஸஃப்ஃபாரீதிகள் (Saffarids), சாமானீகள் (Samanids), துலுனீகள் (Tulunids), புவாஹிதுகள் (Buwahids), சல்ஜூக்குகள் (Saljuk) என்ற பெயர்களில் அச் சிறு அரசுகள் ஆட்சி நடத்தின.

தலைநகரான பாக்தாதில் கூட, அப்பாஸீ கலீஃபாவுக்குப் பெயர் விலாசமில்லையென்று ஆகிவிட்டது! இதுவுமில்லாமல், முத்தஜீலாக்கள் (Mutazalites), ஷீஆக்கள் (Shias), இஸ்மாயீலீகள் (Ismailites), அசாசின்கள் (Assassins), காரிஜீகள் (Kharijites), இன்னோரன்ன இஸ்லாமிய பிரிவுகளாலும் பிளவுகளாலும் இஸ்லாமிய சமயத்தின் சில செயல்முறைக் கோட்பாடுகளின் அடிப்படையில் பிரிவுகள் தோன்றி, அப் பிரிவுகளுக்கிடையே ஏற்பட்ட சச்சரவுகளால் இஸ்லாத்தின் ஒற்றுமையே குன்ற ஆரம்பித்தது.

## (6) சமுதாய ஒழுங்கீனங்கள்

அயல் நாடுகளில் குடியேறி ஆட்சி செலுத்திய அராபியர்கள் அவ்வந் நாட்டுப் பெண்களை மணந்து கொண்டதால் பிறந்த சந்ததிகளிடம் அராபிய வீரம் மறைந்து, அகோரமே காட்சியளிக்கத் தொடங்கிற்று. மற்றும், எண்ணிலடங்கா வைப்பாட்டிகள், குடிப் பழக்கங்கள் முதலியவற்றாலும் குடும்பக் கௌரவம், கண்ணியம், பாசம், பண்பு இவையெல்லாம் வலிமை குன்ற ஆரம்பித்தன எனவே, அரச குடும்பங்களில் முளைத்த வாரிசுரிமைப் பொறாமைகளாலும் போட்டிகளாலும் சதிகளாலும் உருவாகிவிட்ட போராட்டங்களாலும், பூசல்களாலும் அப்பாஸியப் பேரரசின் வீரம் கற்பூரமாய் எரிந்து, கரிப்புகையாகி நாசமாயிற்று.

## (7) கையாலாகாத கலீஃபாக்கள்

ஆரம்ப காலக்கட்ட அப்பாஸிய கலீஃபாக்களான அஸ்-ஸஃப்ஃபாவிலிருந்து (as-Saffah) அல் வத்தீக் (al Wathiq) வரையிலானவர்கள் மாமேதைகளாகவும், மாவீரர்களாகவும், மிக்க அரசியல் அனுபவம் பெற்றவர்களாகவும் திகழ்ந்தனர். இக் கலீஃபாக்கள் ஏறத்தாழ ஒரு நூற்றாண்டு காலம் வரை ஆண்டனர். அவர்களுடைய ஆட்சியில் மக்கள் சீருடனும் சிறப்புடனும் நல்வாழ்வு வாழ்ந்தனர்; நாட்டில் அமைதி நிலவியிருந்தது. ஆனால், கி.பி 847-க்குப் பின்னர் வந்த வழித்தோன்றல்களோ, விவேகமற்ற, வீரமற்ற, வலிமையற்ற, வகையற்றவர்

களாக, பரிதபிக்கத்தக்கவர்களாகக் காட்சியளித்தார்கள். ஒரு சிலரைத் தவிர்த்து மற்ற எல்லா கலீஃபாக்களுமே அப்பாவி அவதாரங்களாகத்தாம் இருந்தார்கள். இத்தகைய தலைமைப் பீடத்தின் நலிவுற்ற நிலையால் அரசியல் அராஜகம், சமுதாயத் தடுமாற்றம், பொருளாதாரச் சீர்கேடு, சமயப் பிளவுகள், சச்சரவுகள், சண்டைகள் ஆகிய எல்லாம் தோன்றி, இறுதியில் அப்பாஸிய கிலாஃபத்தும் (Caliphate) பேரரசும் பயங்கர முடிவில் ஒழிந்து பட்டன.

## (8) மங்கோலியப் படையெடுப்பு

ஏற்கெனவே அழிவை நோக்கிச் சரிந்து சென்று கொண்டிருந்த அப்பாஸிய கலீஃபாக்களின் ஆட்சி, இறுதியில் கொடிய மங்கோலியப் படையெடுப்பால் தன் முடிவை விரைந்து தேடிக் கொண்டது.

## II. அப்பாஸியர்களின் காலத்தில் பண்பாட்டுக்கு சுல்தான்களின் பங்களிப்பு
## (Sultans contribution to culture under Abbasids)

கி.பி. 1258-ல் ஹிலாகூ கான் (Hulagu Khan) என்ற மங்கோலியக் காட்டுமிராண்டிப் பேரரசன் இஸ்லாமிய உலகின் தலைநகரமாயிருந்த பாக்தாத் (Baghdad) நகரைப் பாழாக்கிய நாள் வரை, அது உலகப் பல்கலைக் கலாசார அரியணையாகவே பிரகாசித்து நின்றதென்றால் மிகையாகாது.

கி.பி. 842-ல் கலீஃபாவாயிருந்த வத்தீக் (Wathiq) என்பவர் காலத்தில்தான் முதன் முதலாக 'சுல்தான்' என்ற பெயர் படைத்த அரசப் பதவி பிறந்தது என்று வரலாற்றில் கேள்விப் படுகிறோமென்பதை நாம் ஏற்கெனவே கூறியது நினைவிருக்கும்.

நாளாக ஆக, கொஞ்சம் கொஞ்சமாக இந்த சுல்தான்களே சர்வாதிகாரிகளாகி விடவே, கலீஃபாக்கள் வெறும் அலங்காரப் பதுமைகளாகக் காட்சியளித்தனர். இவ்வளவு வல்லமைமிக்க ஆட்சியாளர்களாக ஆகியும், சமுதாயத்துக்கு நன்மை பயக்கும், மக்களை அறிவாளிகளாக்கும் கலை மற்றும் கலை அறிவுகளின் வளர்ச்சிக்கோ, கலாசார மேம்பாட்டுக்கோ உற்சாக மூட்டத் தவற வில்லை இந்த சுல்தான்க ளென்பதை நினைவில் கொள்ள வேண்டும். இம் முக்கியமான கலாசார முன்னேற்றம்

பற்றிக் கீழ்வரும் சில தலைப்புகளின்மூலம் சற்று விவரமாக ஆராய்ந்து தெரிந்து கொள்வோம்:

(1) கலாசார முன்னேற்றத்திற்குப் புவாஹித் (Buwayhid) சுல்தான்கள் ஆற்றிய சேவை.

(2) சாமானீ (Samanid) சுல்தான்களின் கால கலாசார முன்னேற்றம்.

(3) கஜனவீ (Ghaznavid) சுல்தான்களின் உபயம்.

(4) சல்ஜூக் (Saljuk) சுல்தான்களின் கலாசாரப் பணி.

### (1) கலாசார முன்னேற்றத்திற்குப் புவாஹித் சுல்தான்களின் சேவை

புவாஹித் சுல்தான்களைப்பற்றி முதலாவது அத்தியாயத்தில் படித்துள்ளோமல்லவா? அவ் வமிச நிறுவனரின் பெயர், அலீ பின் புவே (Ali bin Buwayh). அவருடைய மகன்களான அஹ்மத், ஹசன், அலீ என்போர் மெல்ல மெல்ல அப்பாஸிய கலீஃபாக்களுக்கும் அவர்களுடைய இராச்சியத்துக்கும் எஜமானர்களாகி விட்டார்கள். ஒரு நூற்றுண்டுக்கு மேலேயே தங்களை எவருமே தட்டிக் கேட்க முடியாவண்ணம் இவர்கள் ஆட்சி செலுத்தினர். சில சுல்தான்கள் கன்னெஞ்சர்களா யிலங்கினரெனினும், அக்கிரமக்காரர்களேயாயினும், குடிமக்கள் நல்வாழ்வை அனுபவித்தனர். மேலும், அறிவியல், இலக்கியம் ஆகிய துறைகளில் அபிவிருத்தியும் முன்னேற்றமும் காணப் பட்டன. சுல்தான் அஜீஜுத் தௌலாவின் ஆட்சியின்போதும், அவருடைய குமாரர்களுடைய ஆட்சிக் காலத்திலும் அரசியல் துறை, மற்றும் கலாசாரத் துறைகளில் நல்ல முன்னேற்றம் ஏற் பட்டிருந்தது.

சுல்தான் அஜீஜுத் தௌலா என்பவர் புவாஹித் சுல்தான் களிலெல்லாம் தலைசிறந்தவராயிருந்தாரென்பது மாத்திரமின்றி, அந்தச் சகாப்த காலத்திலிருந்த மற்றைய அரசர்களினும் மாபெரும் மேதையாகத் திகழ்ந்தார். ஷீராஸ் (Shiraz) என்ற புதுத் தலைநகரில் அவர் தமது தர்பாரை நடத்தினுரென்றுலும், பழைய தலைநகரான பாக்தாதிலும், பேரரசின் ஏனை முக்கிய நகரங்களிலும் மனோரம்மியமான பலப்பல மசூதிகள், மருத்துவ மனைகள், பொதுக் காரியாலய மாளிகைகள், கல்லூரிகள் முதலிய வற்றை நிறுவினுர். பொது அறிவு வளர்ச்சிக்கும் அவர் பல வழி களில் ஊக்க மூட்டினுர்.

கீர்த்திமிக்க அவருடைய பாக்தாத் மருத்துவமனையின் அமைப்பும் நிருவாகமும் இணையற்றனவா யிருந்தன. நடமாட முடியாத நோயாளிகள் (In-Patients) மருத்துவமனையிலேயே தங்கியிருந்து மருத்துவ சிகிச்சை பெறவும், உணவு படுக்கை வசதிகளுடன் குளிக்கும் வசதிகளைப் பெற்றுக் கொள்ளவும் வழி உண்டுபண்ணப் பட்டது. மற்றும், அவர்கள் நன்கு கவனித்துப் பராமரிக்கப்பட்டனர். நடக்க முடிந்த நோயாளிகள் (Out-patients) மருத்துவ சிகிச்சை மட்டும் அளிக்கப்பட்டு வீட்டுக்கு அனுப்பப்பட்டனர்.

**கலாசார சேவை**

மஸ்ஊதி (Masudi), அபுல் ஃபராஜ் (Abul Faraj), முத்தன்னபி (Mutannabi), மிஸ்கவே (Miskawayh) முதலிய பற்பல கலா மேதைகளும் சிறந்த அறிஞர்களும் புவாஹித்களின் அரசவையை அலங்கரித்திருந்தார்க ளென்பதிலிருந்து, கலாசார முன்னேற்றமும் நன்கு போற்றப்பட்டு வந்தது என்பது தெளிவாகிறது. இப்னுஸ் ஸலாம் (Ibn-us-Salam), அப்துர் ரஹ்மான் சூஃபி (Abdur Rahman Sufi), அப்துல் வஃபா (Abdul Wafa) போன்ற அறிவியற்றுறை விற்பன்னர்களும் புகழுடன் வாழ்ந்துள்ளனர். அவர்கள் விட்டுச் சென்ற அபார சாதனைகள் பிற்கால ஐரோப்பிய விஞ்ஞானிகளைத் தூண்டிவிடு மளவுக்கான முன்மாதிரிகளாகவும், ஆராய்ச்சி அடிப்படைகளாக வும் உதவின.

ஷீராஸ் தலைநகரருகே ஓடும் பெந்தமீர் (Bendemir) என்னும் நதியின் நீர்ப்பாசனக் கால்வாய்களை மேலும் ஆழமாய்த் தோண்டி, அகலமாக்கி, கப்பல்களையும் அவற்றினூடே ஓட்டிக் காட்டிய பொறியாளர்களும் இருந்துள்ளார்கள். இச் சாதனையால், பருவ மழை வெள்ளப் பெருக்கினுல் மக்களுக்கும் பயிர் பச்சைகளுக்கும் விளைந்துவந்த தொல்லைகளும் துன்பங் களும் அபாயங்களும் நிறுத்தப்பட்டு, விவசாய முன்னேற்றமும் விருத்தியாகி, பஞ்சமும் பட்டினியும் நீக்கப்பட்டன.

அஜீஜுத் தௌலாவின் குமாரராகிய ஷராஃபுத் தௌலா (Sharafud Dawlah) தலைநகரில் வானிலை ஆய்வுக்கூடம் (Observatory) ஒன்றை நிறுவி, விஞ்ஞான ஆராய்ச்சிகளை ஊக்குவித்தார். அஜீஜுத் தௌலாவின் மற்ருெரு மகனுன பஹாவுத் தௌலா (Bahaud Dawlah) என்பவர் பாக்தாதில் இலக்கியச் சபை ஒன்றை நிலைநாட்டி, அதில் சுமார் பத்தாயிரம் அதி அற்புதமான கையெழுத்துப் பிரதி நூல்களை எங்கெங்கிருந்

தெல்லாமோ சேகரித்து எடுத்து வந்து, அவற்றை ஆராய ஏற்பாடு செய்தார்.

**தூய சகோதரர்கள் சங்கம்**

மற்றும், இப் புவாஹித் சகாப்தத்தில்தான் '**தூய சகோதரர்கள் சங்கம்**'(Brethren of Purity)என்ற ஒரு சங்கம் தோன்றிப் பொது மக்களின் அறிவு வளர்ச்சிக்குப் பல துறைகளிலும் பெரும் சேவை செய்யவாரம்பித்தது. இவ்வாருக, இஸ்லாமிய கலை, விஞ்ஞானம், இலக்கியம் ஆகிய துறைகளிலெல்லாம் புவாஹித் சுல்தான்கள் மிகவான அக்கறை கொண்டு தொண்டாற்றினர்.

**(2) சாமானீ சுல்தான்கள் கால கலாசார முன்னேற்றம்**

கி.பி. 742-ல் ஆட்சி செலுத்திய உமையா வமிச கலீஃபா ஹிஷாம் (Hisham) என்பவரின் காலத்தில் இஸ்லாம் மதத்தைத் தழுவிய சாமான் (Saman) என்ற ஈரானியருடைய சந்ததியார்க்குத்தாம் சாமானீ சுல்தான்கள் எனப் பெயர். இவர்களுள் தலை சிறந்த புகழ் வாய்க்கப்பெற்றவர்கள், இரண்டாவது நாசர் (Nasr II), முதலாம் இஸ்மாயீல் (Ismail I), இரண்டாவது நூஹ் (Nuh II) ஆகியோராவர்.

இவர்கள் வெற்றி வீரர்களாக விளங்கியது மட்டுமின்றி, கலாசாரத்தின் காவலர்களாகவும் திகழ்ந்தார்கள். சுல்தான் இஸ்மாயீலின் தர்பாரிலிருந்த அல்-ஜைஹானி (al-Jayhani) என்ற மாபெரும் மேதை வருணித்து எழுதிய வரி இயல் நூலில், அக்கம் பக்கத்து நாடுகளில் நிலவிய நிலைமைகளையும் சிறப்புகளையும் ஒப்புவமையுடன் மிகவும் சுவைபட விளக்குகிருர். மற்ருெரு சரிநிகர் சமானமான அறிஞரான அல்-பல்கீ (al Balkhi) என்பவர் வரைந்த, தேசப்படம் வரைதல் (Cartographical) துறைபற்றிய உயர்தர நூலால் பலப்பலர் ஈர்க்கப்பட்டு, அக்கலை வளர்ச்சி மேம்பாடடைந்தது.

இரண்டாவது நாசர் அவையை அலங்கரித்த முதல் பாரசீகக் கவிச் சக்கரவர்த்தியான ரூதாகி (Rudaki) என்ற உணர்ச்சி யூட்டும் சக்திமிக்கவரால் யாக்கப்பட்ட கவர்ச்சி, புரட்சி நூல்கள் பிற்கால கவிகளுக்கு ஒரு முன்மாதிரியாய் அமைந்தனவெனில் மிகையாகாது. அவரைப் போன்ற ஈடிணையற்ற உணர்ச்சி மிக்க கவிஞர்கள் அக்கால அரேபியாவில் மட்டுமின்றி, பாரசீகத்திலும் வேறெங்கும் இருந்ததில்லை எனலாம். சமஸ்கிருதத்திலுள்ள பஞ்ச தந்திரத்தை 'கலீலா வ திம்னு' (Kalila wa Dimna)

என்ற பெயரில் தயாரித்த அவருடைய பாரசீக நூல் மூலம் அவர் அழியாப் புகழ் பெற்ருர்.

சுல்தான் மன்சூர் ஊட்டிய உற்சாக ஊக்கத்திஞல், அவருடைய பிரதமரான பாலாமி (Balami) என்பவர் அராபிய மொழியிலிருந்து மொழிபெயர்த்த பாரசீக மொழியிலான 'உலக வரலாறு' (World History) என்ற நூல், வரலாற்று வளர்ச்சிகளை நன்கு சித்திரிப்பதன் காரணமாக, நிகரற்ற வரலாற்று நூலெனப் பெயரெடுத்தது.

சாமானீ சுல்தான்களின் ஆசியாலும் ஆதரவாலும் புவி இயலும் (Geography) விஞ்ஞான விளக்க எல்லைகளை எட்டியதென்னலாம். அவர்களின் சகாப்தத்தில், தலைநகரான புகாரா (Bokhara) இலக்கிய வளர்ச்சியின் சிகரமாகப் பிரகாசித்தது. தம்முடைய காவலரான (Patron) சுல்தான் மன்சூரின் பெருமைக்கு உபயமாகத் தமது கீர்த்தி வாய்ந்த மருத்துவ நூலைச் சமர்ப்பித்தார், அல் ராஜி (al Razi) என்ற மாபெரும் மருத்துவ மேதை.

புகழ்மிகு வேதாந்தவாதியான அபு அலீ சிநா (Abu Ali Sina or Avicenna) என்பவர், சுல்தான் இரண்டாம் நூஹ் என்பவரின் அழைப்புக்கிணங்க, புகாராவைத் தமது இருப்பிடமாக்கிக் கொண்டார்.

இவ்வாருக, இந்த சாமானீ சுல்தான்கள் சகலவித அறிவு வளர்ச்சி, கலாசாரங்களின் முன்னேற்றத்துக்கு மிகமிக ஆர்வத்துடன் பாடுபட்டார்கள். இதைத் தொடர்ந்து, கல்வி கலை முதலிய கலாசாரங்களை மேலும் மேலும் முன்னேற்றிஞர் கஜனி மகமூத்.

### (3) கஜனவீ சுல்தான்களின் கலாசாரப் பணிகள்

சாமானீகளின் வீழ்ச்சிக்குப் பின், கஜனவீகளின் ஆட்சி தொடங்கியது. சுபுக்திஜீன் என்பவர்தாம் இவ் வமிசத்தினைத் தோற்றுவித்தவராவார். அவரைத் தொடர்ந்து அவருடைய சந்ததியினராகிய 16 பேர் ஒருவர் பின் ஒருவராக, கஜனியின் அரியணைமீது ஏறிஞர்கள்.

சுபுக்திஜீனின் மகஞன மகமூத் கஜனி என்பவரே எல்லோரிலும் மேம்பாடுடையவர். அவருடைய காலத்தேதான், சிறு அரசாகவிருந்த கஜனி ஒரு பெரிய பேரரசின் தலைநகரமான

துடன், சர்வ கலைகளும் சிறப்புப் பெற்றுப் புகழடையும் மைய மாகவும் விளங்கிற்று. செங்கற்களால் கட்டப்பட்ட ரோமாபுரி யைப் பளிங்குக் கற்களால் கட்டிவிட்டுப் போனதாக ரோமப் பேரரசர் அகஸ்டஸ் சீசர் (Augustus) பூரிப்படைவாராம்! அதே போல், ஆதியில் குடிசைகளாகக் காட்சியளித்த கஜனியை மாட மாளிகை கூட கோபுரங்களாக மாற்றியமைத்து விட்டதாக, சுல்தான் மகமூத் கஜனியைப்பற்றி வரலாற்ருசிரியர்கள் சொல் வார்கள், புகழ்வார்கள்.

அம்மட்டோ! கல்வி, கலை, கலாசாரப் பிரியரான அவர் அறிவாலயம் ஒன்றை நிறுவியதுடன், தமது அவையில் சிறப்பு வாய்ந்த அறிஞர்களையும் புலவர்களையும் போற்றி ஒளிவீசிடச் செய்தார். தலைமுறை தலைமுறையான பாரசீக இஸ்லாமிய கலா சாரங்களை எவ்வாறு சாமானீ சுல்தான்கள் முன்னேற்றமடையு மாறு செய்தார்களோ அவ்வாறே அக் கலாசாரங்களைத் தொடர்ந்து ஊக்குவித்து, ஆதரவளித்து வளர்த்தார் சுல்தான் மகமூத்.

உத்பீ (Utbi), அல் பைரூனீ (al Biruni), ஃபிர்தௌசீ (Firdausi), ஃபாரபீ (Farabi), ஃபாருக்கி (Farruki), அன்சாரீ (Ansari) ஆகிய பெரு ஞானிகளான வேதாந்திகள், கவிகள், வரலாற்ருசிரியர்கள், வான சாஸ்திரிகள், கணித மேதைகள் ஆகியோர் சுல்தான் மகமூத் கஜனியின் ஆட்சித் திறமைக்குப் புகழ் மாலை சூட்டியதுடன், அது மக்களறிவை விருத்தியடையச் செய்வதாகவும் திகழ்ந்ததாகப் போற்றுகிருர்கள். செல்வத்தை நேசித்துச் சேகரித்த அளவுக்கு அதை மக்களின் நன்மைகளுக் காகவும் தாராளமாகச் செலவழித்தார், சுல்தான் மகமூத் கஜனி.

### நூல் நிலையம்

கஜனியில் ஒரு சிறந்த பல்கலைக்கழகம், எல்லோராலும் போற்றப்படும் ஒரு நூல் நிலையம், படையெடுத்துச் சென்று வென்ற நாடுகளிலிருந்து திரட்டப்பட்ட புதுமைப் பொருள்கள் நிறைந்த கண்கவர், உள்ளம் கவர் கண்காட்சி சாலை யொன்று ஆகியவற்றை நிறுவினர் சுல்தான் மகமூத். பூங்காவையும் தோட்டத்தையும் அலங்கரிக்கும் ரோஜா மலர்கள் போல், தலை நகரெங்கும் வண்ண வண்ணமான கட்டடங்களையும், ஆகாய மளாவும் அரண்களையும் நிருமித்து அகில உலக நகரங்களையும் விஞ்சும் எழில்மிகு நகரமாக ஆக்கினர் கஜனியை! இவையெல் லாம் கஜனவீகளின் கலாசாரக் காணிக்கைகளாகும்.

### (4) சல்ஜூக் சுல்தான்களின் கலாசார ஆர்வம்

சல்ஜூக் சுல்தான்களின் வம்ச எழுச்சி, வளர்ச்சிபற்றியெல்லாம் நாம் ஏற்கெனவே படித்துத் தெரிந்திருக்கிறோம். இவ் வமிசத்தைத் தோற்றுவித்தவரான டோக்ரில் பேக் (Toghril Beg) என்பவர் எத்தகைய நீதிமான், தாராளச் சிந்தனையாளர், பெருந்தன்மை மிக்க ஆட்சியாளர், கல்வி அறிவு வளர்ச்சிகளில் அக்கறை காண்பித்தவர் என்பனவற்றை யெல்லாமும் கூடப் படித்துள்ளோம். தாம் தொடுத்த போர்களில் வெற்றி வாகை சூடிய பின்னர், அந்த சுல்தான் தமது வெற்றியின் சின்னங்களாக ஆங்காங்கே மசூதிகளும் பள்ளிகளும் பலப்பல நிறுவுவார். இத்தகைய கலாசார வளர்ச்சியின் உச்ச கட்டம் சுல்தான் அல்ப் அர்ஸலான் (Alp Arslan) என்பவரின் குமாரராகிய மாலிக் ஷாவின் (Malik Shah) ஆட்சியில்தான் எட்டிற்று.

#### சுல்தான் மாலிக் ஷா

தீரமும், வீரமும், விவேகமும், ஆளும் திறமையும் ஒருங்கே பெற்றவரென்றால், மாலிக் ஷாவைத்தாம் உதாரணமாகச் சொல்ல வேண்டும். இவர் தம் தந்தையின் பேரறிவுசால் பிரதம அமைச்சரான (வஜீர்) நிஜாமுல் முல்க் (Nizamul Mulk) என்பவரின் யோசனை, துணை, புத்திமதிகளைப் பெரிதும் மதித்து நடந்து, தமது பேரரசை விசாலமாக்கினார், வளர்த்தார்; வளம் பெற, சிறப்புப் பெற ஆண்டார். தம் பிரஜைகளின் பொருளாதார வளர்ச்சியையே கருத்தில் கொண்டு தமது ஆட்சி முறைகளை வகுத்துக் கொண்டவர் சுல்தான் மாலிக் ஷா.

தலைநகரே கதி என்று சில பல அரசர்களைப்போல் தூங்கிக் கொண்டிராமல், தமது பரந்த பேரரசெங்கும் அடிக்கடி பிரயாணம் செய்வதையே வழக்கமாய்க்கொண்டு, தம் பிரஜைகளின் நலன்களை லாப நஷ்டங்களை நேரில் கண்டு விசாரித்து, ஆக வேண்டுவனவற்றை உடனுக்குடனே செய்வார், இப் புகழ்மிக்க குணக்குன்று, கருணைக் கடல், சுல்தான் மாலிக் ஷா.

அப்பாஸீ வமிச கலீஃபாக்களான ஹாரூன் ரஷீத், மாமூன் போன்ற மாமேதா விலாசங்களின் முன்மாதிரி வழி நின்று, பரந்த பாலைவன ரஸ்தாக்களில் சாரி சாரியாகப் 'பாலைவனக் கப்பல்கள்' என்ற பேர் படைத்த ஒட்டகப் பட்டாளங்களின் மீதேறிச் சென்ற ஏற்றுமதி இறக்குமதி வர்த்தகர்கள், யாத்திரிகர்கள் ஆகிய பிரயாணிகளுக்கான இன்றியமையாத பலப்பல சௌகரியங்களான சகாயங்களை, நலன்களைப் பாதுகாப்பதற்

காக, வழி நெடுக ஆங்காங்கே சகல தளவாடங்களுமுள்ள சத்திரம் சாவடிகளேயும் நிர்மாணித்துப் பெரிதும் பாதுகாத்துப் பரிபாலனம் செய்தார், சுல்தான் மாலிக் ஷா!

தமது பரந்த பேரரசிலிருந்த மாநிலங்களொவ்வொன்றுக்கும் நேரில் சென்று, அவசியமான பாலங்கள், பள்ளிகள், பள்ளிவாசல்கள், கால்வாய்கள், மருத்துவ மனேகள், அத்தியாவசியமான வழிநடைப் பாதைகள் நிறுவ ஏற்பாடு செய்து, தம் குடிமக்களின் சுக துக்கங்களுக்கு அவ்வப்போது பரிகாரம் தேடித் தருவதைத் தமது முதல் முக்கிய கடமையாகக் கொண்டு இவர் உழைப்பார்.

'பாத்திரமறிந்து பிச்சையிடு!' என்ற பழமொழிக் கிணங்க, ஏழைப் பங்காளனுக, பெரும் வள்ளலாக இவர் தயங்காது கொடுத்து, வாரி வழங்கும் வள்ளலென நல்லோரும் வல்லோரும் எல்லோரும் போற்றிப் புகழுமளவுக்குப் பெரும் பெயர் படைத்தார். இத்தகைய கருணேக் கடலான காவலர்கள் வெகு சிலரையே வரலாற்றிலும் அன்றுட வாழ்க்கைகளிலும் நாம் காணமுடியும். தந்தைக்கேற்ற தனயன் போல, தம் தந்தையின் மறுபதிப் பென, இவர் பேரும் புகழும் பெருமையும் பெற்ற பேரரசராக விளங்கினுர், சுடரொளி வீசினுர்.

மாலிக் ஷாவின் இருபது ஆண்டு ஆட்சி, சல்ஜூக் சுல்தான்களின் கால கட்ட ஆட்சி முழுதுக்குமே மணி மகுடம் வைத்தாலெனத் திகழ்ந்தது! ரோமானியப் பேரரசோ, அல்லது அராபிய ஆர்ப்பாட்ட ஆட்சிச் சிறப்போ இணே காண்பிக்க முடியா வகையில் எல்லாவற்றையுமே மாலிக் ஷாவின் ஆட்சி மிஞ்சி விட்டதென்னலாம்! மாட்சி, மக்கள்நலப் பாதுகாப்பு, வர்த்தக அபிவிருத்தி, கைத்தொழில்கள் வளர்ச்சி, பல்கலேப் பராமரிப்பு, இலக்கிய ஏற்றம் ஆகியனவெல்லாம் ஆலமரம்போல் தழைத்தோங்கிப் படர்ந்துவிட்டன.

ஆசியாவெங்கும் பூத்துக் காய்த்துப் பழுத்த பூங்காக்கள் போன்ற அழகுக்கு அழகு செய்யும் நகரங்கள் இவருடைய பரந்த பேரரசுக்கு மேலும் மேலும் அழகை வளர்த்துக் கொண்டே போயினவென்னலாம். புகழ்மிகு கவியரசனும், மாபெரும் கணித மேதையுமான உமர் கய்யாம் (Omar Khayyam) என்பவர், அவருடைய அவையை அலங்கரித்த பேரொலியாயும் பேரொளியாயும் விளங்கினுர். மாலிக் ஷாவின் விருப்பப்படி, 'ஜலாலியன் நாட்காட்டி' (Jalalian Calendar) என்ற பெயருடன் அவர் படைத்த

கால அட்டவணை உமர் கய்யாமுடைய கணித மேதாவிலாசத்துக்கொரு சாட்சியாகும். அதற்கு முன்னிருந்த 'கிரிகரிய நாட்காட்டி'யை (Gregorian Calendar) விட மிகவும் சிறந்து விளங்கியது, உமர் கய்யாம் வகுத்த இப்புதிய நாட்காட்டி. அல்ஜீப்ரா (Algebra)[1] என்னும் குறிக்கணக்கியல் என்ற கணிதத்திலும் உமர் கய்யாம் பெரும் வல்லுநராவார்.

சுல்தான் மாலிக் ஷாவின் பிரதமரான நிஜாமுல் முல்க்கும் கூடத் தலைசிறந்த வித்வானுக மட்டுமின்றி, வித்வான்களின் பெரும் புரவலராகவுங்கூட விளங்கினர். 'கற்றுரைக் கற்ருரே காமுறுவர்' என்றபடி, சியாசத் நாமா (Siyasat Nama) என்ற அவரால் எழுதப்பட்ட அரசியல்பற்றிய நூல், ஆட்சித் துறையிலும் அரசியல் துறையிலும் அவருக்கிருந்த பெரும் அறிவையும் ஆற்றலையும் வெளிப்படுத்தும். மதவாதிகள், அறிஞர்கள் ஆகியோருக்காகப் பேரரசெங்குமுள்ள பிரதான நகரங்களில் அவர் நிறுவிய அறிவாலயங்களிலிருந்து, அறிவாளிகள்பால் அவருக்கிருந்த பற்றும் பாசமும் எத்தன்மையன என்பது வெளிப்படும். நிஷாப்பூர் (Nishapur), பாக்தாத் போன்ற நகரங்களில் தமது பெயரால் நிறுவப்பட்ட 'நிஜாமியா' (Nizamia) என்ற பல்கலைக் கழகங்களில் கீழ் நாடுகளின் வேதாந்தம், இஸ்லாமிய மதோபதேசம், கலை, கலை அறிவு மற்றும் பல்வேறு அறிவியல் துறைகள் ஆகியவற்றில் கரைகடந்த பலப்பல வித்வான்களும் புலவர்களும் சேர்ந்து படித்து மேலும் மேதைகளாயினர். அல்-கஜ்ஜாலி (Al-Ghazzali) என்ற இஸ்லாமிய மத சிந்தனை சிற்பி இந்த வஜீரின் (நிஜாமுல் முல்க்) ஆதரவிலும் இரட்சிப்பிலும் பல உயர்ந்த வேதாந்த நூல்களையும் பல ஆராய்ச்சி நூல்களையுமியற்றினர். 'மதம் பற்றிய விஞ்ஞானங்களுக்குப் புத்துயிர் அளிப்பு' (Reunification of the Sciences of Religion) என்ற தலைப்பில் அவரால் எழுதப்பட்ட மாமலை போன்ற நூல், சுல்தான் மாலிக் ஷா இறந்த பதினைன்கு ஆண்டுகட்குப் பின் வெளியிடப்பட்டது. இவ்விதமாக, சல்ஜூக் சுல்தான்கள் கலாசார சேவைகள் பல ஆற்றினர்.[2]

[1] அல்-ஜபர் என்னும் அரப் சொல்லே ஆங்கிலத்தில் Algebra என்று மருவிற்று. குறிக் கணக்கியல் முறையைத் தோற்றுவித்தவர்களே அராபியர்களாவர்.

[2] இன்னும் அதிக விவரங்களுக்கும் தகவல்களுக்கும் பேராசிரியர் ஹிட்டி அவர்களின் நூலையும், டாக்டர் அமீர் அலீ அவர்களின் நூலையும், பேராசிரியர் புகாரீ அவர்களின் நூலையும் காண்க.

## III. பாக்தாதின் உயிலுடைமை
## (Legacy of Baghdad)

கி.பி. 750-லிருந்து 1258 வரையிலான 500 ஆண்டுகட்கு மேலாக நீடித்த அப்பாஸிய கலீஃபாக்களின் ஆட்சி சிறு பேரரசேயாயினும், இஸ்லாமிய வரலாற்றுக்குப் பிரகாசமளிக்கும் கால கட்டமாக அது அமைந்துள்ளதென்பது மறுக்க முடியாத உண்மையாகும்.

கலாசாரம், நாகரிகம் ஆகிய பண்பாடுகள் உலகம் முழுவதுமே பரவுவதற்கு உற்சாகமும் பிரகாசமும் ஊட்டியதில் பெரும் பங்கும், முக்கிய பங்கும் ஏற்றவர்கள் முஸ்லிம்களே ஆவர் என்பதை இக்கால கட்ட வரலாறு விளக்குகிற தென்பது மிகையாகாது.

அம்மட்டோ! உலகத்தின் பல பாகங்களுக்கு வர்த்தகம் வணிகம் காரணமாகப் பிரயாணம் செய்ய வேண்டியிருந்ததே இந்த முஸ்லிம்களால்தான். பண்டைக் காலத்து விஞ்ஞானமும் தத்துவமும் புத்துயிர் பெற்று விளக்கப்பட்டு, விரிவாக்கப் பட்டு, ஆராய்ச்சியும் செய்யப்பட்டு ஐரோப்பாவுக்குள் ஊடுருவிப் பரவியதால்தான், பிற்காலப் பற்பல மறு மலர்ச்சிகள் மக்களிடையே தோன்றுவதற்கு வழியுண்டு பண்ணிவிடப்பட்டு விட்டதெனலாம். சுருங்கச் சொல்ல வேண்டுமானால், கீழை நாடு-மேலை நாடுகளின் நாகரிகப் பரிவர்த்தனைகளுக்கு முஸ்லிம் வியாபாரிகளே இன்றியமையாத பாலமாக நின்றிலங்கிச் சேவை செய்துள்ளார்களென்பதும் மிகையாகாது. ஆதலால், இவ்வளவுக்கும் ஆதிகாரணபூதமாக விளங்காநிற்கும் இந்த 500 ஆண்டுகால அப்பாஸீ ஆட்சிக் காலகட்ட அரங்கின் அஸ்திவாரத்தைச் சற்றே தெரிந்து கொள்வது அத்தியாவசியமாகிறது.

### கிலா:.பத் (Caliphate)

இக் காலகட்ட ஆட்சியின் மகுடமாக விளங்கியவர், கலீஃபாவே ஆவார். அவரே சர்வ அரசியல் ஆட்சி அதிகாரங்களுக்கும் அடிப்படையும் உறைவிடமுமாவார். 'மன்னரும் அவரே, மந்திரியும் அவரே' என்ற பழமொழி போல, இகலோக பரலோக இஸ்லாமிய மத விவகாரங்களின் பிரதம மத குருவாகவும், இஸ்லாமியப் பேரரசின் சர்வ சக்திவாய்ந்த பேரதிபராகவும் விளங்கா நின்றார், கலீஃபா. 'ஏன்?' 'எப்படி?' என்று வேறு எவரும் தட்டிக் கேட்க முடியாத அந்தஸ்து அது!

அவரின்கீழ் வஜீர் (Vazir) என்னும் அமைச்சர்கள் உண்டு. கலீஃபாவா யிருப்பவர் பலாட்டியராய் விளங்கினுல், வஜீர் என்பவர் வாலே மடக்கிக் கொண்டு, இருக்குமிடம் தெரியாமல் ஆடம்பரமேதும் அகம்பாவமேது மில்லாமல் ஒடுங்கி விடுவார். ஆனுல், கலீஃபாவாக இருப்பவர் சற்றே பலவீனமானவ ரென்று வெளிப்பட்டுவிட்டால், வஜீரெனும் அவ் வமைச்சரே வச்சிர தேகம் உடையவராகவும், அதிகார மோகம் ஏறியவராக வும் மாறிவிடுவார். அப்பாஸிய கலீஃபாவான வாதீக் (Wathiq)குக்குப் பின்னர் அரியணேயேறிய மற்ற எல்லாரும் பெயரளவில் மட்டுமே கலீஃபாக்களாக இருந்தனர். உண்மை யான அரசியல் ஆட்சியையும் அதிகாரத்தையும் அமைச்சரே ஏற்று நடத்தினுர்.

வஜீருக்கு (அமைச்சருக்கு) அடுத்தபடி, முக்கிய பதவி வகித்தவர் நீதிபதி (Kazi) ஆவார். நியாயம், நீதி, மற்றும் சட்ட சம்பந்தமான எல்லா விஷயங்களேயும் கவனித்துப் பரி பாலிப்பவர் காஜீ. எல்லா நீதிபதிகளுக்கும் மேலாக ஷேகுல் இஸ்லாம் (Shaikh-ul-Islam) என்ற ஒரு நீதிபதி, முக்கியமான முடிவுகளேத் தீர்மானிப்பார்.

இப் பெரும் பதவிப் பீடங்களின் அதிகாரிகளுக்கு அடுத்தவர் நிதித் துறைத் தலேவராவார். பேரரசு முழுதிலுமிருந்து வசூ லாகும் வரிகளேக் கண்காணிப்பது இத்துறையின் முக்கிய வேலே யாகும். மேலும், கணக்காய்வு, கணக்குத் துறை (Audit and Accounts Dept), காவல் துறை (Police Dept), நகராட்சி (Municipality) ஆகிய பிற துறைகளுமிருந்தன. அங்காடிகளில் (Markets) நிலவும் அன்றாட விலேவாசிகளே மேற்பார்வையிடு வதும், மக்கள் ஒழுங்கீனமாக நடவாதபடி மேற்பார்வையிடு வதும் நகராட்சிக் காவல் துறையின் முக்கிய அலுவல்களாகும்.

அப்பாஸீ ஆட்சியின் மிக முக்கியமானதும், மிகத் திறம்பட நடந்ததுமான துறை தபால் இலாகாவாகும். இதன் தலேவர் அஞ்சல் துறைத் தலேமை ஆணேயர் (Postmaster General) ஆவார். இரகசிய விவகாரங்களேக் கவனிக்கும் துறைக்கும் இவரே தலேவர். பேரரசெங்கும் வாழ்கின்ற குடிமக்களிடையே நடக்கும் நல்லன கெட்டனவாகிய விஷயங்களே யெல்லாம் கண்காணித்து, கலீஃபாவுக்கு அவ்வப்போது தெரிவிப்பதும் இத் துறையினரின் கடமையாகும்.

இராணுவத் துறை வலுப்பமான கண்டிப்பு நிறைந்ததாக வும், கடமை கட்டுப்பாடு தவருததாகவும் காட்சியளித்தது.

சிற்சில குறைபாடுக ளிருந்தாலும், பெரும்பாலும் இராணுவத் துறை சீராகவும் சிறப்பாகவும் பரிபாலனம் செலுத்திவந்த தென்று அக்காலத்திலிருந்த பிறநாட்டு அரசர்களும் போற்றிப் புகழ்ந்துள்ளார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

**பாக்தாதின் கலாசார உன்னதச் சீரும், சிறப்பும், புகழும்**

'நீதியின் பூங்கா' (Garden of Justice) என்ற பொருளுள்ள பாக்தாத் நகரின் ஆரம்ப அஸ்திவாரம், அப்பாஸீ வம்சத்தின் இரண்டாவது கலீஃபாவான அல் மன்சூர் (கி.பி. 754—775) காலத்தில்தான் நாட்டப்பட்டது.

பாரசீக நாட்டு ஸாஸானிய (Sassanid) சுல்தான்களின் கோடைக்கால வாசஸ்தலமாக விருந்த பெருமையும் பாக்தாத் நகருக்குண்டு. நீதி நியாயம் வழங்குவதில் புகழ் பெற்ற நவ்ஷேர்வான் (Nawshirwan, கி.பி. 531—71) என்கிற ஸாஸானிய சுல்தான் பாக்தாதில்தான் பண்டைக் காலத்தில் தமது அவையை நடத்துவாராம். 'ஆயிரத்தோர் இரவுகள்' (Thousand and one Nights) என்ற அற்புதக் காவிய நூலில் வரும் அத்தனை வருணனைகளும் ஒருங்கே பொருந்திய ஒரு மாயாஜால உலகமாகவும் பாக்தாத் காட்சியளித்தது. எங்குப் பார்த்தாலும் கண் கவரும், உள்ளத்தைப் பறிக்கும் பற்பல வண்ணப் பூங்காக் கள் நிறைந்ததும், உலக நகரங்களுக்கெல்லாமே ஒரு நிகரிலாக் கனவுலகமாகத் திகழ்ந்ததுமான பாக்தாத், கி.பி. 772-ல் கணக் கிட்டுச் சொல்ல முடியாத தங்க நாணய, நவரத்தினச் செல வில் கட்டி முடிக்கப்பட்டது. இரு பெரும் சுற்றுச் சுவர்களால் சூழப்பெற்ற, பெரும் வட்ட வடிவத்துடன் தோற்றமளிப்பதா யிருந்தது பாக்தாத் நகரம்.

கலீஃபாவினுடைய பூலோக சுவர்க்கமான அரண்மனை நக ரின் நடுநாயகமா யிலங்கிற்று. அதன் பக்கத்திலோர் ஆகாய மளாவிய மசூதியும் நிமிர்ந்து நின்று கண்ணைக் கவர்ந்தது. பேரரசின் முக்கிய அதிகாரிகளின் மாட மாளிகைகளும், வனப்பு மிகு அரண்மனைகளும், ஆங்காங்கே பல அங்காடிகளும், அகன்ற மாட வீதிகளும், பூங்காக்கள், தோட்டங்கள், குளிக் கும் அறைகள், குளம் குட்டைகள், மசூதிகள் ஆகியன நிறைந்த சுற்றுப்புறப் பேட்டைகளும் கிராமங்களும் சேர்ந்து, பாக்தாத் நகரின் அழகுக்கு மேலும் அழகூட்டுவனவாயிருந்தன வென்பதோடு உலகத்திலேயே இத்தகைய மற்றொரு சிங்கார புரி வேறெங்கும் தோன்றியதில்லை என்று போற்றத்தக்க பொலி வுடன் சுடரொளி வீசின.

**அரண்மனைகள், கல்லூரிகள், மருத்துவமனைகள்**

பளிங்குக் கற்களால் கட்டப்பட்ட அரண்மனைகள் நிறைந்தது பாக்தாத் நகரமாகும். கட்டடங்க ளெல்லாம் பலப்பல அடுக்கு மெத்தை மாடிகளாய் அமைந்திருக்கும். பாரசீக நாகரிகத்தி லான அலங்கரிப்புகள், செல்வங் கொழிக்கும் அரண்மனைகள், அழகு மாளிகைகள், குறுக்கும் நெடுக்குமான வானளாவி நிற்கும் மசூதிகள் ஆகிய யாவும் அயல் நாட்டு மக்களின் மனத்தை முற்றும் கவரும்.

தலைநகரான பாக்தாதிலும், மற்றும் பல பட்டணங்களிலும் கல்லூரிகள், மருத்துவமனைகள், அனாதை விடுதிகள் எல்லாம் மிக ஏராளமாக நிருமிக்கப்பட்டிருந்தன. மன நோயினால் பீடிக்கப்பட்டவர்களுக்கான தனி விடுதிகளுங் கூட இருந்தன. நிஜாமியா (Nizamiya) கல்லூரி (கி.பி. 1067), முஸ்தன் ஸிரியா (Mustansirieh) கல்லூரி ஆகியன இஸ்லாமிய வரலாற் றுச் சின்னங்களாயிலங்கின. இவற்றிலும், இவற்றுக்கு முன் பிருந்தே இருந்துவந்த பழைய கல்லூரிகளிலும் உலக நாடுகளி லிருந்து நூற்றுக்கணக்கான மாணவர்கள் வந்து கல்வி பயின்ற னர். கல்வியின் உறைவிடமாகப் பாக்தாத் திகழ்ந்தது. கல்வி எல்லா மக்களுக்கும் பொதுச் சொத்தாக ஆக்கப்பட்டது அப்பாஸீகளின் ஆட்சிக் காலத்தில்தான்! இன்ன கல்வியை இன்னார் மட்டுமே கற்கலாம், இன்னார் கற்கக் கூடாது என்னும் வேற்றுமை இஸ்லாத்தில் கிடையாதல்லவா?

**மகளிர் அந்தஸ்து**

அப்பாஸியரின் சகாப்தத்தில் பெண்கள் மிகவும் மரியாதை யுடனும் மதிப்புடனும் நடத்தப்பட்டார்கள். பத்தாம் நூற்றாண் டின் கடைசிக் கட்டத்திலிருந்துதான் முகத்தை மூடும் பர்தா முறை (Veil System) அமலுக்கு வந்தது. கலீஃபா மஹ்தியின் (Caliph Mahdi) அழகு சிலையோ வென்னும் அரசியான அல் கைஜுரான் (Al Khayzuran), இளவரசியான உல்லய்யா (Ullayah), மருமகளான ஜுபைதா (Zubavda) ஆகிய நாரியர் திலகங்களெல்லாம் ஆட்சியிலும் அரசியலிலும் தாராளமாகப் பங்கெடுத்துச் சேவை செய்துள்ளதையும், எத்தனையோ அராபியப் பெண்கள் போர்க்களம் புகுந்து படைகளுக்குத் தலைமை தாங்கிப் போர் புரிந்துள்ளதையும், ஆண் கவிஞர்களுட னும் மேதைகளுடனும் அறிஞர்களுடனும் போட்டியிட்டு எத்தனையோ பெண் கவிதா மணிகளும் பெண் மாமேதைகளும் பிரகாசமான எழுத்தாளர்களாக இலங்கினார்க ளென்பதையும்

படிக்கிறோம். அரசியற் புயற் புரட்சிகளிடையிலும்கூடப் பெண்களுக்குள்ள பெருமைக்கும் அந்தஸ்துக்கும் ஏதும் பங்கம் விளையவில்லை. அப்பாஸீ சகாப்தம் வீழ்ச்சியடையத் தொடங்கியதிலிருந்துதான் பெண்களின் கௌரவத்துக்குப் பங்கம் விளைய ஆரம்பித்தது என்னலாம்.

### இசைக் கலையும் விளையாட்டுக் கலையும்

இன்னிசைக் கலையையும், சங்கீத வித்வான்களையும் கலீஃபாக்களும் மற்றும் உயர்குடிச் சீமான்களும் ஆதரித்து மகிமைப்படுத்தி வந்தார்கள். 'குளிரால் நடு நடுங்கிக் கொண்டிருக்கும் ஒருவனை வெந்நீர்க் குளியல் உற்சாகப்படுத்தி உயிர்ப்பிப்பதினும் மிக உன்னதமான முறையில் மக்காவின் இன்னிசை விற்பன்னராகிய சியாத் (Siyat) என்பவரின் நல்லிசைக் குரலும் பாட்டும் உளக்களிப்பை உண்டுபண்ணி உயிர்ப்பித்து விடுகின்றன' என்று புகழ்ந்துள்ளார் கலீஃபா மஹ்தி.

இன்னிசைப் புலவர் சியாத்தின் கீர்த்திமிக்க சீடராகிய இப்ராஹீம் என்பவர் பண்டைக் கால இசைக் குழுவின் சிறப்புமிக்க தலைவராக ஏற்றுக் கொள்ளப்பட்டார். இப்னு ஜாமி (Ibn Jami) என்பவர் மற்றொரு பெருமை மிக்க இசை மேதையாவார். இஸ்ஹாக் இப்னு இப்ராஹீம் (Ishaq ibn Ibrahim) என்பவர் அவர் காலத்து இசை உலகுக்கே ஒரு வழிகாட்டியென ஏற்றுக் கொள்ளப்பட்டவர். இளவரசி உல்லய்யா (Ullayah)வின் இன்னிசைக் கீதத்துக்கு இணை அவரே என்னுமளவுக்கு ஒப்பாரும் மிக்காருமின்றி இசைவானில் ஒளிச்சுடர் வீசினார் அவர். கலீஃபா ஹாரூன் ரஷீதின் சகோதரரான இப்ராஹீம் தலைசிறந்த 'சங்கீத சக்ரவர்த்தி' எனப் பெயரெடுத்தார். வாதீக் (Wathiq) என்ற கலீஃபா நிகரிலா இசை மேதையெனப் புகழ் பெற்றார். அபுல்ஃபரஜ் இஸ்ஃபானீ (Abul Faraj Isphani) என்பவர் சிறந்த இசைக்கலை வரலாற்றாசிரியர் ஆவார்.

### அறிவு வளர்ச்சி (Intellectual Development)

பேராசிரியர் புகாரீ கூறுகிறார்: 'அறிவு வளர்ச்சி, ஆராய்ச்சி வளர்ச்சித் துறையில் தன்னலமில்லாமல் உழைத்த பண்டைய முஸ்லிம் மூதறிஞர்களான மாமேதைகள் ஆற்றிய சேவை அபாரமானது. கிரேக்க, பாரசீக, இந்திய கலை, கலாசார இலக்கியங்களைத் துருவித் துருவிப் படித்து, அவற்றைத் தங்கள் மொழிகளிலும் மொழி பெயர்த்து, அக் கலாசார பொக்கிஷங்களைத் தங்கள் தங்கள் கலாசார பொக்கிஷங்களுடன் இணைத்து,

கலப்பட கலாசார நூலாக்கி, பின்னேவரும் தலைமுறையினர் படிக்கும்படி அவர்கள் விட்டுச்சென்றது பெரிதும் புகழத்தக்க சேவையாகுமல்லவா? சொந்தச் சிந்தனைத் துறையிலும், வான சாஸ்திரம், கணிதம், மருத்துவம், இரசவாதம், தத்துவம், மற்றும் இவை போன்ற அறிவு ஆராய்ச்சி விளக்கங்களிலும் அம் மாமேதைகள் தங்கள் கருத்தோவியங்களை வெளியிட்டுச் சென்றுள்ளனர்.'[1]

## ஒளிவீசும் மொழி பெயர்ப்புப் பெருமைமிக்க சகாப்தம்

## (The period of brilliant translations)

கி.பி. 685-ல் உமையா வமிச கலீஃபாவாக விளங்கிய அப்துல் மாலிக் என்பவர்தாம் வேற்று மொழியிலிருந்த பல சிறந்த நூல்களை அரபியில் மொழி பெயர்க்கும் சகாப்தத்தை ஆரம்பித்தவ ரென்னலாம். சாஸானிய ஆட்சி முறைகளை (Sassanian Method of Administration) அராபிய மொழியில் மொழி பெயர்க்கும்படி அவர் ஆணையிட்டார். ஆனால், அப்பாஸீ கலீஃபாக்களான ஹாரூன் ரஷீத், மாமூன் என்பவர்களுடைய காலத்தில்தான் மிகப் பெரும்பாலான மொழிபெயர்ப்பு நூல்கள் வெளியாயின.

ஆரம்பகால அப்பாஸீ கலீஃபாக்கள் மொழி பெயர்ப்பு வல்லுநர்களான நுண்ணறிவாளர்களை ஆதரித்து நன்கொடைகளும் சன்மானங்களும் வழங்கிக் கௌரவித்தார்கள். கிரேக்க மொழி, பஹ்லவீ (பாரசீக) மொழி, சிரியா நாட்டு மொழி (Syriac), சமஸ்கிருதம் (Sanskrit) போன்ற பல மொழிகளிலிருந்து பல நூல்களை அராபிய மொழியில் மொழி பெயர்த்துள்ளனர், பல வித்வான்கள். இப்னு முக்கஃபா (Ibn Muqaffa—D. 757), ஹுனைன் இப்னு இஸ்ஹாக் (Hunayn ibn Ishaq), தாபீத் இப்னு குர்ரா (Thabit ibn Qurra) ஆகியோர் மற்றும் சில முக்கியமான மொழிபெயர்ப்பாளர்கள் ஆவார்கள்.

குதாயீ நாமா (Khoday Namah) என்ற பாரசீகமொழி நூலை அராபிய மொழியில் மொழிபெயர்த்தார், முக்கஃபா (Muqaffa). மேலும், சமஸ்கிருத மொழி நூலான பஞ்ச தந்திரம் என்ற நூலை, பஹ்லவீ என்ற மொழியிலிருந்து 'கலீல்-வ-திம்னு' (Khalil-Wa-Dimna) என்ற அராபிய நூலாக மொழி பெயர்த்தார்

[1] பேராசிரியர் புகாரீ, 'பொது இஸ்லாமிய வரலாறு', ப. 148, 149.

அவர். மொழிபெயர்ப்பில் இரண்டாவது இடம் வகிப்பவர் ஹுனைன்-இப்னு-இஸ்ஹாக் (கி.பி. 873-ல் மரணம்). அவர் அராபியில் மொழி பெயர்த்த நூல் ஒவ்வொன்றுக்கும் அதன் எடைக்கு எடை தங்கத்தை நிறுத்துக் கொடுப்பாராம் கலீஃபா மாமூன். அவருக்கிருந்த கல்வி ஆர்வம் போற்றத்தக்கது!

ஹிப்போகிராட்டீஸ் (Hippocrates) (கிரேக்க மருத்துவ தந்தை), பிளேட்டோ (Plato) (கிரேக்க தத்துவ மேதையான சாக்ரட்டீசின் புகழ் பெற்ற மாணவர்), அறிஞர் அரிஸ்டாட்டில் (Aristotle) ஆகிய இம் மாமேதைகள் வரைந்த பலப்பல நூல்கள், கேலன் (Galen) வரைந்த நூல்கள் முதலியவற்றை எல்லாம் அராபியில் மொழி பெயர்த்த சிறந்த பேரறிஞர் இஸ்ஹாக் ஆவார்.

மூன்றாவது மொழி பெயர்ப்பாளராகத் திகழ்ந்தவர் தாபித் இப்னு குர்ரா (ம. 901). 'யூனானி' என்னும் கிரேக்க மொழியில் அக்காலத்திலிருந்த கணித வானசாஸ்திர நூல்களில் பெரும் பாலானவற்றை அராபிய மொழியிலாக்கினார் இவர். அவற்றில் முக்கியமானவை, ஆர்ச்சிமெடீஸ் (Archimedes), அப்பொல் லோனியஸ் (Apollonius), யூக்லிட் (Euclid) போன்ற வர்களின் சிருஷ்டிகளாகும்.

**தத்துவம், விஞ்ஞானம், சமுதாயம்பற்றிய நூல்கள்**
(Philosophy, Science and Humanities)

உலகம் புகழும் அறிஞர்களான பிளேட்டோவின் 'குடியரசு', அரிஸ்டாட்டிலின் 'அரசியல்' போன்ற மேதாவிலாசக் களஞ்சி யங்கள் இஸ்லாமிய தத்துவார்த்த மேதைகளைப் பெரிதும் ஈர்த்தன. அல்-கிந்தி (Al-Kindi) என்ற அராபியர்தாம் அராபிய சமுதாயத்தில் தோன்றிய முதல் தத்துவஞானி யாவார். பிளேட்டோ, அரிஸ்டாட்டில் ஆகிய இரு பேரறிஞர்களின் கருத்துகளையும் இவர் தமதாக்கிக் கொண்டார். கிரேக்க தத்துவத்தையும் இஸ்லாமிய தத்துவத்தையும் ஒன்றாக இணைக் கும் கைங்கரியம் அவரால்தான் ஆரம்பிக்கப்பட்டதென்னலாம். இதனால் அல்-கிந்திக்கு 'அராபியர்களின் தத்துவமேதை' என்ற பெயராயிற்று.

மற்றோர் இஸ்லாமிய தத்துவஞானி துருக்கியரான அல்-ஃபராபி (Al-Farabi) என்பவராவார். கிரேக்க கருத்துகளுடன் இஸ்லாமிய கருத்துகளை இணைத்த பெருமை இவரைச் சாரும்.

இதற்காக இவருக்குக் கிடைத்த பெரும் விருது 'இரண்டாவது ஆசிரியர்'! (முதல் ஆசிரியர் அரிஸ்டாட்டில் ஆவார்).

அல்-ஃபராபியை அடுத்து இப்னு சினு (Ibn Sina, or Avicenna D. 1037) என்பவர் தத்துவ ஆசிரியராக விளங்கினுர். அவர் வாழ்ந்த சகாப்தத்தின் கடந்த காலம், நிகழ் காலத்தில் மிளிர்ந்த மாபெரும் மேதைகளுள் அவரும் ஒருவராயிலங்கினுரென்ருல் அது மிகையாகாது. புகழ்பெற்ற மருத்துவராகவும், தத்துவஞானியாகவும், மொழிநூல் வல்லுநராகவும், கவிதாமணியாகவும், இக் கலைகளெல்லாம் ஒன்ருய்த் திரண்ட ஒரு கதம்பா பிம்பமாகவும் அவர் பிரகாசித்தார்.

'ஷிஃபா' (Shifa) என்னும் அவருடைய பேரறிவுப் பெட்டகத்தில், அக் காலத்து வரையிலான எல்லாக் கிரேக்க தத்துவக் கருத்துகளும் விளக்கங்களும் இரண்டறக் கலந்து முழுமையாக்கப்பட்டன. அல்-கிந்தி, அல்-பராஃபி, இப்னு சினு என்ற மூவரும் முக்காலமும் போற்றத்தக்க மூதறிஞர்கள் ஆவர்.

அக் காலத்திலிருந்து இக் காலம் வரையிலான ஏறத்தாழப்பத்துப் பதினெரு நூற்ருண்டு காலச் சக்கர ஓட்டத்திற்குப் பிறகும், அவர்களுடைய பெயரும் புகழும் சிறப்பும் சிறிதளவும் மங்கவே இல்லை.

## அறிவியலும் சமுதாயமும்
## (Science and Humanities)

மருத்துவக் கலைகளிலும் முஸ்லிம்கள் முன் மாதிரியாகவே விளங்கியுள்ளார்கள். கண் மருத்துவம்[1] பற்றி நூலெழுதிய முதல்வர்களே அராபியர்களெனத் தெரிகிறது.

இப்னு மசாவே (Ibn Masaway), ஹுனைன் இப்னு இஸ்ஹாக் (Hunayn ibn Ishaq) எழுதிய பெரும் வைத்திய நூல்களே அக் கால மருத்துவப்பள்ளிகளில் பாடப் புத்தகங்களாகக் காட்சியளித்துள்ளன. முதன் முதலாக வெளிவந்த மருந்துப் பொருளியல்[2] நூல்களுங்கூட அராபியர்களால் தாம் எழுதப்பட்டுள்ளனவென்றும் வரலாறு கூறும்.

[1] Ophthalmology.

[2] Pharmacopea,

மட்டரக உலோகங்களைத் தங்கமாக்கும் இரசவாதம்[1] என்ற உலோக விஞ்ஞான வித்தையின் தந்தையான ஜாபிர் இப்னு ஹய்யான் (Jabir-ibn-Hayyan) என்பவர்கூட ஓர் அராபியப் பேரறிஞர் அன்றோ!

- கலீஃபா மாமூன் (813-833) காலத்திலேயே மருந்து விற்பவர்களும், மருத்துவர்களும் அதற்கான பரீட்சையில் தேறினால் மட்டுமே அவ் வேலைகளில் ஈடுபட அனுமதி உண்டு என்ற சட்டமும் வழக்கமும் நடைமுறையில் இருந்தன.

பாக்தாத் மருத்துவ மனையின் பிரதம அதிகாரியான சினான் இப்னு தாபித் (Sinan-ibn-Thabit) என்பவர் தமது கட்டுப்பாட்டிலிருந்த மருத்துவமனை மருத்துவர்களுள் ஒரு குழுவை நடமாடும் குழுவாக ஆக்கி, அக்கம் பக்கத்திலுள்ள கிராமங்களுக்கும் வீதிகளுக்கும் வீடுகளுக்கும் நேரிற் சென்று நோயாளிகளுக்கு மருத்துவ உதவி வழங்க ஏற்பாடு செய்வாராம். அன்றியும், அந்தக் குழு சிறைச்சாலைகளுக்கும் சென்று நோய்வாய்ப்பட்ட கைதிகளுக்கும் சிகிச்சை புரியுமாம். இவையெல்லாம் அக்கால உலகத்துக்குப் புரியாத புதிராகும். வேறெந்த உலக நாட்டிலும் கூட இப்படிப்பட்ட வசதி இருந்ததில்லை. அலீ-அல்-தபரீ (Ali-al-Thabari), அல்-ராஜி (Al-Razi), அல் மஜூசி (Al-Majusi), இப்னு சினா (Ibn-Sina) ஆகியவர்கள் மருத்துவ மேதைகளாகவும் மருத்துவ நூலாசிரியர்களாகவும் ஒளி வீசினார்கள். மருத்துவ உலகத்தில் புரட்சியோ வென்னும்படி புதுப் புது மருந்து வகைகளும் நவீன மருத்துவ முறைகளும் பெரிதும் முன்னேற்றம் பெற்றுக் காட்சியளித்தன. அம் மருத்துவ நிபுணர்கள் எழுதிய நூல்கள் பள்ளிகளில் பாடப் புத்தகங்களாயின.

### கணிதமும் வானிலை ஆராய்ச்சியும்

அல்-குவாரிஜ்மி (Al-Khwarizmi) என்னும் கணித மேதை உலக வழி காட்டியாகத் திகழ்ந்தார். ஆராய்ந்து மதிப்பிடும் கணித நூல் (Calculus), குறிக்கணக்கியல் நூல் (Algebra) என்ற பழமை வாய்ந்த நூல்களுக்கும் அவரே ஆசான். இந் நூல்கள் லத்தீன் (Latin) மொழியில் மொழி பெயர்க்கப்பட்டு, 16-ம் நூற்றுண்டு வரையில் ஐரோப்பிய நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பாட நூல்களாக ஏற்றுக் கொள்ளப்பட்டன.

[1] Alchemy. இந்த இரசவாத வித்தை அராபிய மொழியில் 'அல் கீமியா' என்று அழைக்கப்படும். இச் சொல் ஆங்கிலத்தில் ஆல்கெமி (Alchemy) என்று மருவிற்று. (ஆங்கில அகராதி காண்க.)

அல்-குவாரிஜ்மி என்ற அவருடைய பெயரிலிருந்து பிறந்ததே 'அல்கோரிசம்' (Algorism) என்பது. அல்ஜீப்ரா (Algebra) என்ற குறிக் கணக்கியலும், அராபிய எண் வரிசை (Arabic Numeral) என்ற அராபிய எண்களும் தாம் முதன் முதலில் ஐரோப்பியர்களுக்கு இவற்றைப்பற்றி யெல்லாம் விளக்கம் தருவனவா யிருந்தன.[1]

அல்-பைரூனி (Al - Biruni) என்னும் மற்ருேர் ஆராய்ச்சி மேதையும் சிந்தனைச் சிற்பியாக ஒளிச்சுடர் பரப்பியவராவார். பௌதிகம், கணிதம் ஆகிய துறைகளில் அவர் விஞ்ஞான வித்தகராகவும் காட்சியளித்தார்.

வான சாஸ்திர வல்லுநரான இப்ராஹீம்-அல்-ஃபஜாரி (Ibrahim-al-Fazari) என்பவர் முற்கால உயர்வுமானி (Astrolabe) ஒன்றை அமைத்து, இப் பூமியின் பருமன், சுற்றளவு முதலியன எந்த அளவினவாயிருக்கலாமென ஆராய்ந்து சில தோராயமான முடிவுகளுக்கு வந்தாரென்று தெரிகிறது. அபூ மஅஷர் (Abu Maashar) என்னும் மற்ெருரு வான சாஸ்திரி இன்னம் பலப்பல விண்ணுராய்ச்சி உண்மைகளைக் கண்டறிந்தார். அல்-பத்தானி (Al Battani) என்ற மற்ருேர் ஆராய்ச்சியாளர் வகுத்த வானிலை அட்டவணை ஐரோப்பிய விஞ்ஞானிகளின் ஆராய்ச்சிகளுக்கு அடிப்படை மூலமாக அமைந்தது.

## நிலவியலும் வரலாறும்

முஸ்லிம்கள் வென்ற பேரரசுகளும், நடத்திய அயல்நாட்டு வாணிப வர்த்தகங்களும் உலகப் பரப்பையும் அதில் வாழும் மக்களின் பலதிறப்பட்ட வாழ்க்கை முறைகளையும் கலாசாரங்களையும்பற்றிச் சிந்திக்க வைத்தன.

அப்பாஸியர் சகாப்தத்தில் எத்தனையோ பெரும் புலமை பெற்ற நிலவியல் நிபுணர்கள் தாங்கள் கண்ணுல் கண்ட,

[1] இப்பொழுது நம்மிடையே புழக்கத்திலுள்ள அராபிய எண் வரிசை களை அக்கால ஐரோப்பியர்கள் அறிய மாட்டார்கள். ரோமானிய எண் களே அவர்கள் கண்ட எண்ணிலக்கணம். 1888 என்னும் அராபிய எண்ணை லத்தீனில் (ரோமானிய எண்ணில்) MDCCCLXXXVIII என்று எழுதுவார்கள். அதனுடன் 12 கூட்டிஞல் வரும் 1900 என்னும் தொகை லத்தீன் எண்ணில் MCM என்று வரையப்படும்! 2000 என்பது MM ஆகும்! அறிஞர் ஜார்ஜ் பெர்னுட்ஷா, அராபியர்களின் எண்ணும் கணக்கு முறையும் மட்டும் சிலுவைப் போர்களுக்குப்பின் ஐரோப்பாவில் நுழையாமற் போயிருப்பின், ஐரோப்பியர்கள் கடைசி வரை கணக்குத் துறையில் வெறும் பூஜ்யமாக ஆகி விட்டிருப்பார்கள் என்று நையாண்டி செய்திருக்கிருர். ஏனென்ருல், ரோமன் (லத்தீன்) எண்களைக் கூட்டவோ, கழிக்கவோ, பெருக்கவோ, வகுக்கவோ எவராலும் முடியா.

காதால் கேட்டவற்றை நூல் வடிவமாக்கினார்கள்; இலங்கை (Ceylon), இந்தியா, சீனு, ருசியாபற்றி யெல்லாம் வருணித்து எழுதலுற்றார்கள். அல்-குவாரிஜ்மி என்பவர் வரைந்த உலகப் படம் 14-ம் நூற்றாண்டு வரை பள்ளிகளிலும் பொதுமக்களிடை யிலும் காட்சியளித்து வந்தது. மாலுமிகளின் உபயோகத்துக் கான திசைகாட்டும் கருவி (Mariner's Compass) அராபியர்களா லேயே கண்டு பிடிக்கப்பட்டது. வர்த்தகம், வியாபாரங்களுக் கான புதுப்புது நிலவெளிகளும், ஏன், புதுப்புது உலகங்களே கூடத் தென்பட்டன.

இப்னு குர்தாத்பீ (Ibn Khurdadbih), அல்-யாகூபி (Al-Yaqubi) அல்-ஹம்தானி (Al-Hamdani), அல்-இஸ்தக்ரீ (Al-Istakhri), அல்-மஸ்ஊதி (Al-Masudi) போன்றவர்களெல்லாரும் அப்பாஸீ சகாப்த நிலவியல் வல்லுநர்களாவார்கள். இவர்க ளெல்லாரையும் மிஞ்சியவராகத் திகழ்ந்தவர் யாகூத் (Yaqoot) ஆவார். அக்காலம் வரையில் கண்டுபிடிக்கப்பட்ட உலகு, அதன் பல்வேறு பிரதேச வரலாறுகள், மக்களினப் பாகுபாடுகள், ஆங்காங்கே காணப்பட்ட விலங்கினங்கள், செடி கொடி மர வகைகள்பற்றி யெல்லாம் அபாரமானதொரு நிலவியல் நூலை உருவாக்கித் தந்தார் யாகூத்.

### வரலாற்று விஞ்ஞானம்

அப்பாஸீ வமிச ஆட்சிக் காலத்தில் வரலாற்று விஞ்ஞானத் துக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. எகிப்திய வரலாற் றாசிரியரான அல்-ஹக்கம் (Al Hakam) என்பவர், எகிப்து நாட்டை வென்ற கதையை வரைந்துள்ளார்.

பாரசீக வரலாற்றாசிரியரான அல்-பலதூரி (Al Baladuri) எகிப்தியர்கள் பிற நாடுகளுக்குள் குடியேறியதை வரைந் துள்ளார்.

'அறிவுக் களஞ்சியம்' (Book of Knowledge) என்ற இப்னு குதய்பா (Ibn Qutayba) எழுதிய நூல் ஒரு வரலாற்றுக் களஞ்சிய நூலாகும். மற்றொரு சிறப்புமிக்க வரலாற்றாசிரியர் மிஸ்காவே (Miskawayh). 'அகில உலக வரலாறு' (Universal History) என்ற பொருளுள்ள அவர் எழுதிய நூல் போற்றற்குரியதாகும்.

எல்லாரையும் மிஞ்சும் இரு பெரும் வரலாற்று மேதைகள் அல் தப்ரீயும் அல்-மஸ்ஊதியும் ஆவர். இவ்விருவரும் எழுதிய வரலாற்று நூல்கள் பிற்காலத்தவர்க்கு முன் மாதிரியாகவும்,

வரலாறும்கூட ஒரு விஞ்ஞானமே என்று நிரூபிப்பனவாகவும் இருந்தன.

பாரம்பரிய பழக்க வழக்கங்கள் (Traditions), சட்ட திட்டங்கள் (Jurisprudence), மொழி நூல் (Philology), கலை (Art), கட்டடக்கலை (Architecture), மொழி நூலாராய்ச்சி (Linguistics) ஆகியவெல்லாம் அப்பாஸீ சகாப்தத்தில் முன்னேற்ற மடைந்திருந்தமையால், அராபியர்களை அவை மிகவும் கவர்ந்தன.

கி.பி. 8-வது நூற்றுண்டிலிருந்து 13-வது நூற்றுண்டு வரையிலான அராபியர்களின் அறிவியக்க முன்னேற்றமானது, அவர்களுடைய வரலாற்றிலேயே மிகவும் பிரகாசம் வாய்ந்ததாயிருந்ததைக் கண்ட சார்ட்டன்[1] (Sarton) என்ற பாரபட்சமற்ற கிறித்தவ மேதை யொருவர் சூட்டும் புகழாரம் இதோ:

'மக்கள் சமுதாயத்தின் மிக முக்கியமான லட்சிய சாதனையை யெல்லாம் முஸ்லிம்கள் புரிந்துள்ளார்களே! தத்துவ மேதைகளிலெல்லாம் தலைசிறந்த அல் ஃபராபி (Al Farabi) என்பவர் ஒரு முஸ்லிம். எல்லாரிலும் தலைசிறந்த நிலவியல் மேதையும் கலைக் களஞ்சிய உருவமுமான அல்-மஸ்ஊதி (Al-Masudi) ஒரு முஸ்லிம். கணித மேதைகளில் எல்லாம் தலைசிறந்த அபூ காமில் (Abu-Kamil) ஒரு முஸ்லிம். தலைசிறந்த வரலாற்றாசிரியரான அல்-தப்ரீ (Al-Tabari) கூட ஒரு முஸ்லிம் தாமே!'

**அராபியர்களின் சாதனை**

'இப் பூவுலக நாகரிக முன்னேற்றத்திற்கும் அராபியர்கள் தங்கள் பங்கையும் கடமையையும் வழங்கியுள்ளார்கள். இலக்கியச் செல்வங்கள், மாமேதா விலாசங்களின் சாதனைகள், புதுப் புது கற்பனைக் கண்டுபிடிப்புகள், மத்திய கால அபார வரலாற்றுச் சாதனைகள், மயிர்க்கூச்செறியும் அஞ்சாநெஞ்சப் புத்தம் புதிய பிரயாணங்கள், மாமேதைகளின் வாழ்க்கை வரலாறுகள், கலைகள், சிற்பங்கள் ஆகிய அராபிய அசுரத்தனச் சாதனைகளை யெல்லாம்பற்றிச் சிந்தித்துப் பார்த்தால், பிற்காலத் தலைமுறைகளுக்கு அராபியர்கள்தாம் ஆசிரியர்கள் என்றுதான் சொல்லத் தோன்றுகிறது' என்று மகா சிந்தனையாளரான செடில்லாட் (Sedillot) என்பவர் மெய்ம்மறந்தவராய் அராபியர்களின் மேதா விலாசங்களுக்குப் புகழ் மாலை சூட்டுகிறுர்.

[1] Sarton, 'Introduction to the History of Science,' Vol. I, p. 624.

# 4. பாரசீகரின் தேசிய இயக்கமும் பாரசீக தேசிய அரசும்

## (Rise of Persian Nationalism and Persian National State)

### 1. அப்பாஸீ ஆட்சியில் அரேபிய-பாரசீகச் சச்சரவுகள்

### (Arab-Persian Conflicts under Abbasids)

கி.பி. 636-ல் நடந்த 'காதிஸிய்யா' (Qadisiya) என்னும் போரில் முஸ்லிம்களாகிய அராபியர்களும், முஸ்லிமல்லாத பாரசீகர்களும் நேருக்கு நேராக அரசியல் மோதலில் இறங்கலானார்கள். கி.பி. 642-ல் மறுபடியும் நடந்த 'நிஹாவந்த்' (Nihawand) போரிலும் பாரசீகர்கள் தோற்றும், அராபியர் வென்றும் வாகைமாலை சூடினார்கள். இவ்விரு பெரும் வெற்றிகளால், பாரசீகம் முஸ்லிம் ஆதிக்கத்துக்குள் வர வேண்டியதாயிற்று. போரில் தோற்றவர்களான பாரசீகர்கள், போரில் வென்றவர்களான அராபியர்களைவிடக் கலாசாரத் துறைகளில் முன்னேறியவர்கள் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

இதனால், அரசியலிலும் ஆட்சியிலும் ஆதிக்கம் பெற்றிருந்தவர்களான அராபியர்களுக்கும், கலாசார பெருமை வாய்க்கப் பெற்ற பாரசீகர்களுக்கும் இடையே நிரந்தர வேற்றுமை மனப்பான்மை கொழுந்து விட்டெரிந்தது. உமையா வமிச கலீஃபாக்கள் அராபியர்களாதலால், அராபியர்களுக்கும் பாரசீகர்களுக்கும் இடையே வெறுப்பும் மாறுபாடுகளும் மேலும் மேலும் வளர்ந்து வந்தன.

இதனால், குராசான் (Khorasan) பிரதேசத்திலிருந்து அப்பாஸியப் புரட்சி புகைய ஆரம்பித்து விரைவில் கோரத் தீயாக வியாபிக்கவே, பாரசீகர்களெல்லாம் உமையா கலீஃபாக் களை எதிர்க்கவும், அப்பாஸிய புரட்சியை (Abbasid Revolution) ஆதரிக்கவும் முற்பட்டார்கள். ஏற்கெனவே தனது அழிவுப் பாதையை நோக்கி விரைந்து கொண்டிருந்த உமையா கலீஃபாக்களின் வலுக்குன்றிய ஆட்சி, அப்பாஸியரின் புயல் வேக அரசியல் புரட்சியின் விளைவாகக் கி.பி. 750-ல் அதோ கதியை எட்டிவிட்டது. அப்பாஸியப் புரட்சிக்கு முதுகெலும் பெனத் திகழ்ந்தவர்கள் பராசீகர்கள் ஆவர். அப்பாஸியர்கள் அரியணை யேறியவுடன் பாரசீகர்களும், பர்மக்கீகள் (Barmakids) என்னும் பாரசீக மந்திரிகளின் சந்ததிகளெல்லாரும் அவர் களுக்குத் தங்கள் அமோக ஆதரவை நல்கலாயினர்கள்.

**கலீஃபா ஹாரூனின் பொறுமை**

பர்மக்கீகளின் அரசியல் செல்வாக்கும், அவர்களுக்கு மக்களிடையிருந்த பெரும் ஆதரவும் மதிப்பும் வளர்ந்தோங்கு வதைக் கண்ணுற்ற கலீஃபா ஹாரூன் ரஷீத் அரசியல் பீதியினால், பொறுமையால், ஒரு தீங்கும் செய்யாத அவர்களை வேரோடு களைந்தெறிந்து விட்டார். ஆயினும், ஹாரூனின் மகனை கலீஃபா மாமூனின் காலத்தில் அவருடைய ஆதரவால் மறுபடி யும் பாரசீகர்கள் பெரும் பதவிகளில் ஏறி அமர்ந்து செல்வாக்குப் பெற்றனர். மாமூனுக்குப் பின் அரியணையேறிய கலீஃபாக்கள் காலத்தில் மறுபடியும் பாரசீகர்கள் அரசியல் செல்வாக்கினை இழந்தாலும், கி.பி. 945 முதல் 1055 வரை ஆண்ட புவாஹித் சுல்தான்கள் காலத்தில் அவர்கள் முன்பு இழந்த செல்வாக்கை மீண்டும் பெற்றனர். இச் செல்வாக்கையும் பதவியையும் சின்னாட்களுக்குப் பின்னர் பிற்கால அப்பாஸியர்களின் காலத் தில் அவர்கள் துருக்கியர்களுக்கு விட்டுவிட வேண்டியதாயிற்று.

பாரசீகர்கள் பதவிகளையும் செல்வாக்குகளையும் இழந்து விட்ட போதினும், சற்றே நலிவுற்ற நிலையிலிருந்தாலும் தொடர்ந்து அராபியர்களை எதிர்த்தே வந்தனர். கொடிய மங்கோலியப் படையெடுப்பின் நாச வேலைகளால் பாரசீகர் களுக்கு இருந்துவந்த கொஞ்சநஞ்ச மதிப்பும் மரியாதையும் செல்வாக்கும் அழிந்துபட்டன வென்றுலும் பாரசீகத் தேசியக் கிளர்ச்சியொன்று தோன்றி, இறுதியில் அவர்கள் தங்களின் சஃபாவித் சுல்தான்களின் (Safavid Sultans) சுதந்தரமிக்க ஆட்சியை நிலைநாட்டிக் கொண்டார்கள்.

**அப்பாஸிய கலீஃபாக்களைப் பாரசீகர்கள் எதிர்த்ததேன் ?**

அராபியர்களின் ஆதிக்கத்தைப் பாரசீகர்கள் எதிர்த்ததற்கு மூன்று முக்கிய காரணங்களுண்டு. அவையாவன:—(1) இன வேறுபாடுகள்; (2) அரசியல் ஆதிக்க எதிர்ப்புணர்வு; (3) இலக்கிய வேறுபாடுகள், போட்டிகள்.

**(1) இன வேறுபாடுகள் (Racial difference)**

அராபியர்களின் ஆதிக்கத்தைப் பாரசீகர்கள் எதிர்த்ததற்கு முதற் காரணம், இருசாராரும் வெவ்வேறு இனத்தைச் (Races) சார்ந்தவர்கள். அராபியர்கள் சேம் என்ற இனப்பிரிவைச் சேர்ந்தவர்கள் (Semites); பாரசீகர்களோ இந்தோ-ஆரியரென்ற (Indo-Aryans) தனி இனப் பிரிவைச் சேர்ந்தவராவார்கள். மேலும், இஸ்லாம் மதத்தைத் தழுவிய அராபியர்கள் கி.பி. 642-ல் பாரசீகத்தை வென்று தங்கள் ஆட்சியின் கீழ்க் கொண்டு வரும் வரை, பாரசீகர்கள் ஜொராஷ்திரிய சமயத்தைப் (Zorastrian Religion) பின்பற்றி வந்தனர். கலீஃபா உமர் (கி.பி. 634—644) காலத்தில் பாரசீகம் முஸ்லிம் பேரரசின் ஒரு மாநிலமாகிவிட்ட பின்னர், பாரசீகர்கள் இஸ்லாமிய சமயத்தைத் தழுவினார்கள்.

சமுதாய மக்களிடையே காணப்பட்ட பல பிரிவுகளையும் வேறுபாடுகளையும் தங்கள் சுயநலத்துக்காகப் பயன்படுத்திக் கொண்டுதான் அப்பாஸியர்கள் என்னும் சந்தர்ப்பவாதிகள் அரசியல் ஆட்சியை உமையாக்களிடத்திருந்து கைப்பற்றினர்! அவர்கள் அரியாசன மீது அமர்ந்ததும், யார் யார் தங்களுக்கு உதவினார்களோ ஆதரித்தார்களோ, அவர்களையே முதன் முதலில் ஒழித்துக் கட்டினர், ஒருவருக்குப்பின் ஒருவராக! ஒருவருக்கெதிராக ஒருவரைத் தூண்டிவிட்டு, சண்டை மூட்டி, இறுதியில் அவர்கள் தொலையுமாறு செய்தனர், அப்பாஸிய கலீபாக்களான அஸ்-ஸஃப்ஃபாவும், அல் மன்சூரும்.

**இறுதி முள்**

எத்தனையோ முட்கள் காலில் தைத்தன! எல்லாவற்றையும் பிடுங்கி எறிந்தாயிற்று! ஒரே ஒருவர் மிச்சமிருந்தார். அவர்தாம் அபூ முஸ்லிம் குராசானி என்பவர். மக்களின் செல்வாக்குப் பெற்ற வீரரவர்; அப்பாஸிய புரட்சியின் சிறப்பு வாய்ந்த பிரசாரகர். தங்கள் கோரிக்கை முடிந்தவுடன் இம் முக்கியஸ்தரின் வாழ்நாளையும் முடித்து விட்டார், கலீஃபா அல் மன்சூர். அபூ முஸ்லிம் கொலை செய்யப்பட்டார். இந்தப் படுகொலை

எல்லாப் பொதுமக்களையுமே திகிலடையச் செய்தது. குறிப்பாகப் பாரசீக சமுதாயம் கொதிப்புற்று விட்டது.

அபூ முஸ்லிமுடைய ஆப்த நண்பர்களுள் ஒருவரான சிந்துபாத் (Sinbad) என்னும் மஜூஸி மதத்தினன் (Magian) ஆவேசத்துடன் பெரும்படை பின் தொடர, பழிக்குப்பழி வாங்கப் புண்ணிய பூமியான மக்காவின் புனித ஆலயமான கஅபா (Kabah) வையே இடித்துத் தள்ளிவிடும் குறிக்கோளுடன் புறப்பட்டான். ஆனால், அவனுடைய கனவு நனவாவதற்குள், கலீஃபாவின் படை அவனைத் தோற்கடித்துத் துரத்தி விட்டது (கி.பி. 775). இவ்வாறாக, அபூ முஸ்லிம் கொலைக்குப் பின்னர் மூண்ட இப் பயங்கரப் புரட்சி அடக்கப்பட்டது.

கலீஃபாவை எதிர்த்துப் புறப்பட்டு, மக்களைச் சூறையாடிய மற்றொரு கும்பலையும், அதன் தலைவனான துன்மார்க்க முகமூடி 'மொகன்னா' (Mokanna) என்பவனையும் கலீஃபா மஹதியின் உத்தரவுப்படி கொன்று தீர்த்து விட்டார்கள், கி.பி. 776-ல்.

**ஜிந்தீ (Zindiks) இயக்கம்**

கலீஃபா மஹதி காலத்தில் ஜிந்தீ என்றதோர் இயக்கம் தலையெடுத்தது. ஜிந்தீ இயக்கம் (Zindikism) என்ற இப் புதிய இயக்கத்தின் கொள்கைகளென்னவென்றால்: 'சமுதாயப் பழக்க வழக்கங்களையும் மதக் கோட்பாடுகளையும் நம்பாதே!' என்பதாகும். மஹதி இந் நாத்திக இயக்கத்தை எதிர்த்து அடக்கிவிட்டார்.

**பாபக் இயக்கம் (Babek)**

இவ் வியக்கம், மாமூன், முத்தசிம் கலீஃபாக்களுக்குப் பெருந் தொல்லைகளை விளைத்தது. இவ் வியக்கத்தின் தலைவனான பாபக் என்பவன் ஒரு கொள்ளைக்காரன்; குர்ராமிய (Kurramieh) இனத்தினனாவான். இஸ்லாமிய மதத்தை எதிர்ப்பதும், சமுதாயக் கட்டுப்பாடுகளைத் தகர்ப்பதுமே இவ் வியக்கத்தின் முக்கிய குறிக்கோள். இருபது ஆண்டுகள் வரை கிலாஃபத்தின் இராணுவங்களை எதிர்த்துப் போராடிய பாபக்கும் அவனுடைய கொள்ளைக் கூட்டமும் கடைசியில் தோற்கடிக்கப்பட்டு, பாபக்கும் தூக்கிலிடப்பட்டான்.

இவ்வாறாக, பாரசீக இனங்கள் அராபியர்களை வெறுத்து, புரட்சிகள் பல செய்து, அவர்களைப் பலஹீனமுறுமாறு செய்து

அழிக்க முயன்றன. எனினும், முதல் கட்டப் போராட்டம் அராபியர்களுக்குப் பூரண வெற்றியில் முடிந்தது.

**(2) பாரசீகரின் அரசியல் ஆதிக்க எதிர்ப்புணர்ச்சி**

பாரசீகர்களின் மற்ருேர் எதிர்ப்பு, அரசியலை அடிப்படையாகக் கொண்டது.

அஃப்ஷீன் (Afshin) என்ற துருக்கிய இராணுவத் தலைவனின் எதிர்ப்பும் இத்தகையது தான். அவன் கொண்டிருந்த முக்கிய கொள்கையும் அராபியர் ஆதிக்கத்தை எதிர்ப்பதுதான். அவன் ஒரு துருக்கியனுனுலும், பாரசீகக் கலாசார மேம்பாட்டைப் பாராட்டி, அராபிய கலாசாரத்தை அடியுடன் வெறுத்தான். ஆனுல், அதை அவன் வெளிப்படையாய்க் காட்டிக் கொள்ளவில்லை. முடிவில், அவனுடைய இரட்டை வேடம் கண்டுபிடிக்கப்பட்டு, அவன்மீது குற்றம் சாட்டப்பட்டு, அவன் பட்டினி போடப்பட்டுச் சாவடிக்கப்பட்டான்! அவனைப் போலவே பாரசீகப் பிரபுக்களும் தங்கள் வெறுப்பை வெளியில் காட்டிக் கொள்ளாமல், அரசியல் செல்வாக்கின்மூலம் அராபிய ஆதிக்கத்தை ஒடுக்க முயன்ருர்கள்; அதில் அவர்கள் வெற்றியும் அடைந்தார்கள்.

அஸ்-ஸஃப்ஃபா என்ற முதலாவது அப்பாஸீ கலீஃபா வஜீர் அல்லது பிரதம அமைச்சர் என்ற பதவியை உருவாக்கினுர். இப் பெரும் பதவியை முதலில் வகித்தவர் காலித்-பின்-பர்மக் (Khalid Bin Barmak) என்பவராவார். அரை நூற்ருண்டு காலம் வரை வஜீர்ப் பதவியைத் தொடர்ந்து வகித்த கீர்த்திமிக்க ஒரு பாரசீகக் குடும்பத்தைச் சேர்ந்தவர் அவர். அவருடைய தந்தை ஒரு பௌத்தர்; பின்னர் முஸ்லிமானவர்.

காலித் பின் பர்மக், பாரசீக ஷீஆவாக விருந்தாலும், அவரும் அவருடைய குமாரர் யஹ்யா (Yahya)வும், அவருடைய பிள்ளைகளான ஃபஜல் (Fazl), ஜஅஃபர் (Jafar) ஆகிய அனைவருமே ஒருவரைத் தொடர்ந்து ஒருவராக முறையே அஸ்-ஸஃப்ஃபா, மன்சூர், மஹதி, ஹாதி, ஹாரூன் ஆகிய ஐந்து கலீஃபாக்களின் பிரதம அமைச்சர்களாக அமர்ந்து பெருஞ்சேவை புரிந்தார்கள்.

அரசியல் ஆட்சியியலில் அருந்தொண்டு, சமுதாயத்தில் செல்வாக்கு, தாராள தான தருமங்கள்—இத்தகு பரந்த மனப் பான்மைகளின் ஒருருவாய்க் காட்சியளித்த இந்த பர்மக்கீ

களின் வம்சாவளியை ஏழையான பாமர மக்களுட் பெரும் பான்மையினர் பெரிதும் போற்றிப் புகழ்ந்ததில் ஆச்சரிய மொன்றும் இல்லையே! சுருங்கச் சொல்ல வேண்டுமானால், கலீஃபாக்களை விட, பர்மக்கீகளுக்குத்தாம் மக்களிடையே பெருஞ் செல்வாக்கிருந்த தென்னலாம்.

இச் செல்வாக்கைக் கூர்ந்து கவனித்த கலீஃபா ஹாரூன் ரஷீதுக்குப் பெரும் பொருமையும் அடக்க முடியாக் கோபாவேச மும் பொங்கி யெழுந்தன. எனவே, அவ் வுத்தம வஜீர்க் குடும் பத்தை முழுதுமே இருந்த இடம் தெரியாமல் அழித்தொழித்து விட்டார் அந்த கலீஃபா. இவ்வாருக, பாரசீகர்களின் அர சியல் எதிர்ப்பையும் அராபியர்கள் அடக்கி, நசுக்கி, வெற்றி பெற்ருர்கள்.

## (3) இலக்கிய மோதல்

இலக்கியத் துறையிலும் அப்பாஸீ ஆதிக்கத்தைப் பாரசீ கர்கள் எதிர்க்கலானுர்கள். இவ்வெதிர்ப்புக்கு 'ஷுஊபியா' (Shuubiyah) இயக்கம் எனப் பெயர். ஆயினும், பாரசீகர் களுடைய இன்றியமையாத திறமையை மெச்சினவர்களாய், அப்பாஸீ கலீஃபாக்கள் அவர்களுக்கு அரசுத் துறைகளில் பெரும் பதவிகளையும் செல்வாக்கு மிக்க அந்தஸ்துகளையும் அளித்தே வந்தனர். அதனுல் பண்டைய பாரசீகப் பண்பாடு களும் கலாசாரங்களும் மறுமலர்ச்சியுற ஆரம்பித்தன. இதன் விளைவாக, இஸ்லாமிய மதக் கொள்கைகளுடனும் சமுதாயக் கட்டு திட்டங்களுடனும் பாரசீகக் கலாசாரங்களின் மோதல் ஏற்பட்டது. அதாவது, பாரசீகர்களின் மறுமலர்ச்சி இயக்கமான ஷுஊபியா இயக்கம், அராபிய ஆட்சி ஆதிக்கத்தை எதிர்க்கும் கிளர்ச்சியாகவும் தீவிர உருவெடுத்தது.

இந்த ஷுஊபியா இயக்கம் அப்பாஸீ ஆட்சிக்கு முன் இருந்த உமையா வமிசத்தினரின் ஆட்சிக் காலத்திலேயே வித் திடப்பட்ட இயக்கமாகும். இது அராபிய அகங்காரத் தோரணை களை எதிர்த்து, இஸ்லாமிய பேரரசு முழுதையுமே அரசியல் துறை சமுதாய இயல் துறை முதலிய நிறுவனங்கள் உட்பட— பண்டைய பாரசீக ஸாசானிய (Sassanid) மயமாக மாற்றிவிட முயன்றது. எல்லாவற்றையும் பாரசீக மயமாக ஆக்கிவிடு வதைக் குறிக்கோளாகக் கொண்டதுதான் ஷுஊபியா இயக்கம் ஆகும்.

அரசியலிலும் ஆட்சித் துறையிலும் தங்களை வென்ற அராபியர்களைக் கலாசாரத் துறையில் வெல்ல முயன்றனர் பாரசீகர்கள். அராபியர்களுடைய பண்படாத கலாசாரங்களை விட, பன்னூற்றாண்டுகளாகப் பண்பட்ட பாரசீகக் கலாசாரங்கள் மிக மிக மேன்மையானவை என்று தர்க்க விவாதங்களுக்கு ஈர்த்த வண்ணமிருந்தனர் இஸ்லாம் மதத்தைத் தழுவிய பாரசீகர்கள். இதற்கென்று பாரசீக அறிஞர்கள் முயற்சியால் பலப்பல புதுப் புது நூல்களும், பண்டைப் பாரசீக நூல்களின் மொழிபெயர்ப்புகளும் வெளிவந்தன.

**அராபியரின் எதிர்ப்பிரசாரம்**

பாரசீகர்களின் ஊக்கமூட்டும் புயல் வேகப் பயங்கரமிக்க பிரசாரத்தை எதிர்த்து, அராபியர்களும் இஸ்லாத்துக்கு முன்னும் பின்னுமான அராபிய பாரம்பரிய மனிதாபிமான புத்திலக்கிய மொன்றை வெளியிட்டு, பாரசீகர்களின் எதிர்ப்புக்கு மாறாக எதிர்ப் பிரசாரம் புரிந்தனர். அல் ஜஹீஸ் (Al-Jahiz) என்ற பெரும் அராபிய வித்வானின் நூல்களால் அராபிய இலக்கியத்துக்கும் கலாசாரத்துக்கும் புது மெருகு பூசப்பட்டு, எதிர்ப் பிரசாரமும் புரியப்பட்டமையால், பொது மக்களும் கலீஃபாக்களும்கூட அராபிய கலாசாரங்களை ஆதரிக்கலானார்கள். எனவே, நாளாக ஆக, பாரசீகர்களும் அராபியரின் கலாசார இலக்கிய வெற்றியை ஏற்றுக்கொள்ள வேண்டிய கட்டாயத்துக்கு உள்ளாயினார்கள்.

அவ்வளவுடன் அப்பாஸிய சகாப்த அராபிய-பாரசீக மோதல்கள் சற்று ஓய்ந்துவிட்டன வென்றாலும், பிற்கால ஸஃபாவீ வமிச (Safavid) சுல்தான்களின் காலத்தில் இவ் வேற்றுமையுணர்ச்சி மேலும் தீவிரமாக மோதப்போவதைப் பொறுத்திருந்து காண்போம்.

## II. தைமூரின் பாரசீகப் படையெடுப்பு (Timur's Conquest of Persia)

கி.பி. 13-ம் நூற்றாண்டின் ஆரம்பக் கட்டத்தில் புத்த மதத்தைச் சார்ந்த செங்கீஸ்கான் என்ற மங்கோலிய இராணுவத் தலைவன், அக் கால ஆசியாவின் அரசியலமைப்புப் படத்தையே முழுமையாக மாற்றி யமைத்ததைக் கண்டோமல்லவா? அந்தச் செங்கீஸ்கான் மறைந்த பிறகு, அவனுடைய பரந்த பேரரசு மூன்று பகுதிகளாகப் பிளவுண்டது.

(1) பீக்கிங்கைத் (Peking) தலைநகராகக் கொண்ட மங்கோலியப் பிரதேசம்;

(2) ரஷ்யாவில் வோல்கா (Volga) என்ற நதிக்கரையிலுள்ள காஜான் (Kazan) என்பதைத் தலைநகராகக் கொண்ட பிரதேசம்;

(3) பாரசீகத்திலுள்ள ஆஸர்பைஜானில் (Azarbaijan) மாரகே(Marageh)என்பதைத் தலைநகராகக் கொண்டபிரதேசம்.

செங்கீஸ்கானின் பேரனாகிய ஹிலாகூகானைப் பலப்பல உருவ வழிபாடுகளைப் பின்பற்றும் மதத்தைச் சேர்ந்தவனென்றும், பௌத்தனென்றும், சமயமற்றவன் (Pagan) என்றும் பலப் பலர் பலப்பல விதமாகச் சொல்வார்கள். ஆசியா கண்டம் முழுவதையுமே ஒரு குடையின் கீழ் வைத்து ஆள ஆசைப்பட்டவன் அவன். ஆனால், அவனுடைய பேராசை நிறைவேற இரண்டு தடைகள் குறுக்கிட்டன.

(1) அஸ்ஸாசின் (Assassin) என்ற நாத்திக இயக்கம்;

(2) தென்மேற்கு ஆசியாவை ஆண்டு கொண்டிருந்த கலீஃபாக்கள்.

முதலாவது தடையான அஸ்ஸாசின் இயக்கத்தைச் சுலபமாக அடக்கி விட்டான், ஹிலாகூகான். மற்றும், கி.பி. 1258-ல் கிலாஃபத்தின் தலைநகரான பாக்தாதையும் இஸ்லாமிய உலகின் கலாசார சின்னங்களையும் அவன் அடியுடன் அழித்துக் குழி தோண்டிப் புதைத்தே விட்டான்!

**ஹிலாகூகான் பாரசீகம் திரும்புதல்**

இவ் விரு அக்கிரமச் செயல்களுக்குப் பிறகு, மம்லூக் சுல்தானை பேபர்ஸ் என்பவரிடம் பெருத் தோல்வியைச் சந்தித்த ஹிலாகூகான், பாரசீகத்துக்குத் திரும்பி, சீர்கெட்டுப் போன தன் வல்லமையையும் பெருமையையும் ஆதிக்கத்தையும் மறுபடியும் பலப்படுத்த ஆரம்பித்தான். தன் வமிசமான ‘இல் கான்’ (Il Khan) வமிசத்தைப் பாரசீகத்தில் அவன் நிலைநாட்டினான். அவ் வமிசம் பாரசீகத்தை முக்கால் நூற்றாண்டு காலம் வரை ஆண்டது.

**தைமூர்**

அந்த இல் கான் வமிசம் வீழ்ச்சியுற்ற பிறகு, அதன் பேரரசு ஐந்து சிறிய இராச்சியங்களாயின. மத்திய ஆசியாவிலிருந்து

படையெடுத்து வந்த தைமூர் (Timur) என்ற இராணுவத் தலைவனின் படைகளால் அச் சிறிய இராச்சியங்கள் அழிக்கப்பட்டு, பாரசீகத்தில் தைமூரின் ஆட்சி ஏற்பட்டது.

கி.பி. 1336-ல் ஆக்ஸியானு அக்கரைப் பிரதேசத்திலுள்ள கேஷ் (Kesh) என்னுமிடத்தில் தைமூர் பிறந்தான். பர்லாஸ் துருக்கியர் (Barlas Turks) களின் தலைவரான, அமீர் துராகே (Amir Turaghay) என்பவரே அவனுடைய தந்தை. செங்கீஸ் கானின் பரம்பரையில் வந்தவனென்றும் தைமூரைச் சொல்லுவார்கள். இளைஞனயிருந்த காலத்திலேயே கூரிய அறிவும், நரித் தந்திரமும், மிகுதியான தைரியமும், மிக்க ஆற்றலும் வீரமும் வாய்க்கப் பெற்றவனுயிருந்தான், தைமூர்.

அவன் எதற்கும் அஞ்சாதவன், துணிவே துணை என்று நம்புகிறவன். போர்க்களத்தில் அவனது ஒரு கால் முறிந்ததிலிருந்து, 'தைமூர் லேன்' (Timur Lane)[1] என்று அவனை யாவரும் அழைத்தனர். தன் தந்தையின் மரணத்திற்குப் பிறகு அவன் துருக்கியரின் தலைவனானன்.

ஆரம்பத்தில் அமீர் கஜ்கான் (Amir Kazgan) என்ற சிற்றரசனிடம் பணியாற்றி, பின்பு துக்ளக் தைமூர் கான் (Tughlak Timur Khan) என்பவரின் மந்திரியாகி, வெகு விரைவில் பல போர்க்களங்களில் வெற்றி வாகை சூடியவனுகி, தளகர்த்தனுமாகி, கையாலாகாத தன்னரசனையே நீக்கிவிட்டு, தானே அரியணை ஏறிக்கொண்ட அத்துணைச் சாமர்த்தியசாலி தைமூர்.

### தைமூரின் பாரசீகப் படையெடுப்பு

ஆக்ஸியானு அக்கரைப் பிரதேசத்துக்கு அரசனுன பின், பாரசீகத்தின்மீது திடீரென, மானின்மீது புலிபாய்வது போலப் பாய்ந்தான் தைமூர். அப்போது ஒற்றுமை குலைந்த குழப்ப நிலையிலிருந்தது பாரசீகம். ஆளும் வர்க்கத்தினரிடையே அன்ருடம் பிணக்குகள், பொருமைப் போர்கள், மோதல்கள் எல்லாம் நிலவின. இதனல் ஆட்சி ஆட்டம் கண்டது. பொது மக்கள் வரிப் பளுவாலும், ஆட்சி புரிவோரின் கொடுங்கோன்மையாலும் தத்தளித்தனர்.

இந்தச் சமயம் பார்த்துத் தான் பேரரசனுக வேண்டுமென்னும் பேராசையால் உந்தப்பட்ட தைமூர் பாரசீகத்தின் மீது கி.பி. 1380-ல் படையெடுத்தான். அதன் ஒரு முக்கிய நகரான

[1] 'தைமூர் லங்' என்று அரபியில் அழைப்பர்.

குராசானை (Khorasan) முதலில் அவன் தாக்கினன். ஒழிந்து போவதைவிட வளைந்து கொடுப்பதே விவேகம் என அறிந்து, எதிர்த்துப் பயனில்லையெனத் தெரிந்து, அந் நகரம் சரணுகதி யடைந்தது. இதன் பிறகு, குர்கான் (Gurgan), மசான்தரன் (Mazandaran), சிஸ்டான் (Sistan) போன்ற பாரசீக மாநிலங்கள் ஒன்றன்பின்னென்ருக வீழ்ந்தன. கண்டவிடமெலாம் கத்தியும் ஈட்டியும் நெருப்புமே தைமூரின் ஆயுதங்களாகக் காட்சியளித் தன. தைமூரின் போர் முறையும் பாணியும் செங்கீஸ்கானையே முன் மாதிரியாகக் கொண்டவையாக இலங்கின என்னலாம்.

கலாசார சின்னங்களும் கட்டடங்களும், கல்மேடுகளாக வும் மண் மேடுகளாகவும் காடு மேடாயின; பள்ளிகளும் கல்லூரி களும் பாழாயின; வியாபார நிறுவனங்களெல்லாம் தகர்ந்து போயின; நகரங்கள் நாசமாயின.

மக்கள் கூட்டம் வாளுக்கும் ஈட்டிக்கும் வான் முகட்டை எட் டும் தீக்கும் இரையாயிற்று. எங்கெங்கும் பயங்கரக் கொள்ளைகள்; மக்கள் தலைகள் குவிந்த பல குன்றுகள்; பல உதிர ஆறுகள்— இவையே பாரசீக வரலாறு காணுத பயங்கர அழிவு சூழ்ந்த தைமூரின் பாரசீகப் படையெடுப்பாகும். அம்மட்டோ! அழகு கட்டடங்கள் அடியோடு தரைமட்டமாயின; காட்டுமிராண்டித் தனம் பேயாட்டம் ஆடிற்று; கருணையிலாச் சித்திரவதையும் புத்திகெட்ட பேயாட்டங்களும் நிர்வாண நர்த்தனங்களும் செங்கீஸ்கானின் வளர்ப்புத் தம்பியோ தைமூர் எனப் பிரதி பலித்தன.

புரட்சிகள் அடக்கப்பட்டன, கலகங்கள் ஒடுக்கப்பட்டன, மக்கள் நசுக்கப்பட்டனர், சிறிய அரசுகள் ஒழிக்கப்பட்டன— பாரசீகமே மண்டியிட்டது தைமூரின் படையெதிரில்! சுருங்கச் சொன்னல், பாரசீகப் 'படைகளெல்லாமே அலைகடலிற் சிக்கிய துரும்பாயின. மங்கோலிய இராணுவ வெள்ளத்தை ஹீரட் (Herat) நகரக் குடிமக்கள் மட்டும் எதிர்த்து நின்றனர். அதன் விளைவு அவர்கள் அம்மிக்கல்லுக்கும், ஆட்டுகல்லுக்கும், எண் ணெய்ச் செக்குக்கும் இடையே சிக்கிய சரக்காயினர்!

அடுத்து, ஃபார்ஸ் (Fars), இராக் (Iraq), லூரிஸ்தான் (Luristan), ஆஸர்பைஜான் (Azarbaijan) என்ற பல பாரசீக மாநிலங்களைத் தைமூர் வென்ருன். எவ்விதம்? பழக்கமான பாழ் வேலை, கொலை, கொள்ளைகளின் மூலம்! ஹீரட்டைப் போல், இஸ்ஃபஹான் (Isfahan) எதிர்த்துக் கலகம் விளைவித்

தது. ஹீரட்டுக்கு நேர்ந்த கதியே அதற்கும் நேர்ந்ததோடு கூட, குடிமக்கள் மீது தண்டத் தீர்வையும் விதிக்கப்பட்டு, அது மிகக் கொடூரமாக வசூலிக்கவும் பட்டது. மற்றும் எத்தனையோ எதிர்ப்புகளையும் கலகங்களையும் அடக்கிய பிறகுதான் தைமூர் தன் தலைநகரான சமர்க்கந்துக்குத் திரும்பினான். கடைசியில், அவன் கி. பி. 1405-ல் மறைந்தான். தைமூர் தன் பெயரையும் புகழையும் நிலைநாட்டவே இவ்வளவு கொடிய திக் விஜயங்களை மேற்கொண்டான். அவன் வெல்லத் தெரிந்தவனே யல்லாமல், என்றும் வீழத் தெரிந்தவனல்லன்.

கொடூரமிக்க சண்டைகளைத் தொடர்ந்து நடத்துவதில் இன்பங் கண்டவனே யன்றி, நிரந்தரமான ஒரு வலிமைமிக்க பேரரசை நிலைநாட்ட் வேண்டுமென்ற விருப்பம் கொஞ்சமும் பெற்றிராதவன் அவன். பாரசீகத்தை அவன் வென்றானே யன்றி, அங்கு வசித்துப் பார்த்தவனல்லன். பாரசீகத்தை ஆளும் உரிமையைத் தன் மக்களிடமே, அதுவும் முக்கியமாக ஷாருக் (Shahrukh) என்ற மகனிடமே அவன் விட்டு விட்டான். அந்த ஷாருக் கி.பி. 1397-லேயே குராசானின் அரியணைமீது ஏறி விட்டான். மீரான் ஷா (Miran Shah) என்ற தைமூரின் மற்றொரு மகன் ஆஸர்பைஜான் பிரதேசத்துக்கு அரசன் ஆனான். தைமூரின் மறைவுக்குப் பின்னும் பேரரசு ஆட்சி ஒற்றுமையைக் காத்து வந்தான், ஷாருக்.

ஷாருக்கின் மறைவுக்குப் பின், தைமூரின் சந்ததியினரின் ஒற்றுமையும் வல்லமையும் செல்வாக்கும் குறையத் தலைப்பட்டு, 16-வது நூற்றாண்டின் ஆரம்பக் கட்டத்திலேயே பாரசீக மண்ணிலிருந்து அவ் வமிசம் பூண்டோடு மறைந்து விட்டது. இவ்வாறாக, தைமூரின் பாரசீக வெற்றி இராணுவ வெற்றி நாடகமாகவும், மக்கள் உதிரவெள்ளப் பெருக்காகவும், பாரசீக நாட்டுப் படுநாசவேலையாகவும், அரசியலில் மின்னி மறைந்த மின்னொளியாகவும் வருந்தத்தக்க காட்சியாக ஆயிற்று. தைமூரின் வெற்றி இராணுவ வெற்றிதான். ஆனால், பாரசீக கலாசாரம் அவன் மக்களையும் பேரர்களையும் வென்று விட்டது.

## III. பாரசீகத்தில் சஃபாவீ சுல்தான்களின் ஆட்சி (A Survey of the Safavid Sultans of Persia)

நாம் முன்னரே கூறியவாறு, கி.பி. 636-ல் நடந்த 'காதிஸிய்யா' என்னுமிடத்தில் நிகழ்ந்த போரிலே அராபியர்களும் பாரசீகர்களும் மோதிக் கொண்டதன் விளைவாக, அராபியர்கள்

வென்றும், பாரசீகர்கள் தோற்றும் போயினர். அராபியர்களின் பேரரசுச் சின்னமாக விளங்கியது உமையாக்களின் கிலாஃபத் பீடம். இதனால், பாரசீகர்கள் அராபியர்களை மேலும் வன்மையுடன் வெறுத்து எதிர்த்தார்கள். ஆகவே, அப்பாஸியப் புரட்சி (Abbasid Revolution) தோன்றிய போது, பாரசீகர்கள் அராபியரின் ஆதிக்கத்தை ஒழித்துக்கட்ட அப் புரட்சியைப் பெரிதும் ஆதரித்து நின்றனர். அப்படியிருந்தும், ஆட்சி நிறுவனங்களில் பாரசீகர்கள் அமோக செல்வாக்குப் பெற்றிருப்பதைக் கண்டு பெரிதும் பொறுமையுற்றுவிட்ட அப்பாஸீ கலீஃபாக்களே தங்களை ஆதரித்த பாரசீகரின் ஆதிக்கத்தை ஒழித்துக் கட்டி விட்டார்கள்.

அதனால், புவாஹித் (Buwayhid) சுல்தான்கள் காலத்தில் மீண்டும் பாரசீகர்கள் செல்வாக்குப் பெறுவதில் வெற்றி கண்டனர். இப் புதிய செல்வாக்குச் சிறிது காலமே நிலைத்திருந்தது. காரணம், பிற்கால அப்பாஸீகள் காலத்தில் பாரசீகர்களை ஒதுக்கித் தள்ளிவிட்டுத் துருக்கியர்கள் தங்கள் செல்வாக்கை நிலைநாட்ட முற்பட்டார்கள்.

மங்கோலியப் படையெடுப்பால் பலம் குன்றிப் போய்க் கிடந்த பாரசீகர்கள் தேசிய உணர்ச்சி வளர்ச்சிக்காகப் பிரசாரம் செய்யத் தொடங்கினார்கள். இதன் விளைவாக, அப் பாரசீகர்கள் தங்களுக்கென்று ஒரு சுதந்தர ஆட்சியை நிலைநாட்டிக் கொண்டார்கள். முடிவாக, சஃபாவீ சுல்தான்கள் (Safavid Sultans) என்ற ஒரு பரம்பரை பாரசீகத்தை ஆள ஆரம்பித்தது.

**ச∴பாவீ என்பவர்கள் யார்?**

இச் செய்திபற்றிய தெளிவான வரலாறு ஏதுமில்லை. அவர்களின் தந்தை வழி 'சையித்' (Sayyid) என்பது போலும், தாய் வழி 'பாரசீகர்' (Persian) என்பது போலும் தோன்றுகிறது; ஈரான் நாட்டு ஆஸர்பைஜான் பிரதேசத் துருக்கி இனவழி வந்தவர்களாயிருக்கலாமெனவும் புலனாகிறது. இவர்களின் வமிசத்தைத் தோற்றுவித்தவர் காஸ்பியன் கடலை அடுத்த 'ரஷ்த்' (Rasht) என்னுமிடத்தில் ஓர் இனப் பிரிவுச் சங்கத்தைத் தொடங்கி வைத்த ஷேக் ஸஃபீயுத்தீன் (Shaikh Safi-al-Din) ஆவார். இவர் 13-வது நூற்றாண்டின் பிற்பகுதியில் பிறந்தவர்,

சஃபாவிகள், ஷீஆ மதப் பிரிவினரெனத் தங்களை அழைத்துக் கொண்டதற்கு முக்கிய காரணம், தாங்கள் உதுமானிய (Ottaman) இனத்தினரல்லர் எனக் காட்டிக் கொள்வதற்கும், முஸ்லிம்களல்லாதவர்களின் ஆதரவைப் பெறுவதற்குமேயாகும். ஆரம்பத்தில் தங்களை மதப் பிரசாரகர்களென அறிமுகப்படுத்திக் கொண்டு, நாள் செல்லச்செல்லக் கடைசியில் இவர்களே பாரசீகத்து அரசியலின் ஆதிக்கத்தையும் பற்றிப் பிடித்து விட்டார்கள். 16-வது நூற்றாண்டின் தொடக்க காலத்தில் அரசியல் ஆட்சியைக் கைப்பற்றிப் பாரசீகத்தில் தங்கள் செல்வாக்கை நிலைநாட்டிக் கொண்டார்கள் சஃபாவீ சுல்தான்கள். இவ் வரிசத்து சுல்தான்கள் 11 பேரில், மூவரே முக்கியமானவர்கள்.

(1) முதலாம் இஸ்மாயீல்.

(2) முதலாம் தம்ஸ்ப்.

(3) முதலாம் அப்பாஸ்.

**முதலாம் இஸ்மாயீல்** (கி.பி. 1501—1524)

இவர் சஃபாவீ வம்ச நிறுவனரான ஷேக் ஸஃபீயுத்தீனின் நேரடி வாரிசு ஆவார். மங்கோலியப் படுநாசப் படையெடுப்புக்குப் பிறகு, பாரசீக நாட்டு அரசியல் சூறாவளியில் சிக்கிய இலவம் பஞ்சு போன்று நிலைகுலைந்து விட்டிருந்தது. அப் படையெடுப்பை யடுத்த மற்றொரு சதிகாரனான தைமூரின் படையெடுப்பு, வெந்த புண்ணில் வேல் பாய்ந்ததாயிற்று. இதனால் எங்கும் அராஜகம் தாண்டவமாடிற்று. துருக்கியனான கரா கோயினுலூ (Qara Qoynulu) என்ற இராணுவ வீரனொருவன் அரசியலாதிக்கத்தைக் கைப்பற்றிக்கொண்டான்.

இஸ்மாயீலின் தந்தை ஹைதரும் (Hyder), பாட்டனார் ஜுனைதும் (Junayd) அரசியலதிகாரத்தைக் கைப்பற்ற வேண்டுமென்னும் சந்தடியில் மரணமடைந்தனர். அப்போது ஈரானிலிருந்த சிறுவனான இஸ்மாயீல் தன் உத்தமமிக்க உதவியாளரோடு வந்து, தந்திரமான திட்டம் தீட்டி, 'தப்ரீஸ்' (Tabriz) என்னும் நகரினுள் பிரவேசித்து, அரசியலைக் கைப்பற்றி, 'முதலாம் இஸ்மாயீல்' என்ற பட்டத்துடன், சஃபாவீ வம்ச முதல் சுல்தானாக அரியணை ஏறினான். அதிகாரத்துக்கு வந்து பத்து ஆண்டு ஆவதற்குள், அவன் பாரசீகம் முழுதையும் வென்றதுடன், பொது மக்களையும் வன்முறைச் செயலால் ஷீஆக்களாக்கினான்,

அவன் இச் சாதனையின்மூலம், உதுமானியப் பேரரசுக்கும் பாரசீகத்துக்கும் யாதொரு சம்பந்தமுமில்லையென்று பிரகடனப் படுத்தி விட்டான். தன் குடிமக்களிடையே ஆழ்ந்த ஒற்று மையை அவன் உண்டுபண்ணியதுடன், பாரசீக ஆட்சியை ஒரு சர்வ சுதந்தரமிக்க ஆட்சியாக மாற்றியமைத்தான். ஸுன்னீ முஸ்லிம்களின் தீராப் பகைவனாகவும் அவன் தன்னை ஆக்கிக் கொண்டான்.

ஆசியா மைனரில் (Asia Minor) வாழ்ந்த ஷீஆக்களை உதுமானியப் பேரரசிலிருந்து பிரிந்து வந்து விடும்படியும், உதுமானியப் பேரரசரை எதிர்த்துப் புரட்சி செய்யும்படியும், அரசியலில் குழப்பம் விளைவிக்கும்படியும் அவன் தூண்டினான்.

இதனால் பெருஞ்சினங் கொண்ட உதுமானியப் பேரரசரான சுல்தான் சலீம் (Salim) பாரசீகத்தின்மீது படையெடுத்து, ஷீஆக்களை அழித்தார். கி.பி. 1514-ல், உதுமானியப் படை களுக்கும் சஃபாவீ படைகளுக்கும் சால்திரான் (Chaldiran) என்ற இடத்தில் நடந்த பயங்கரப் போரில் பாரசீகர் தோல்வி யுறவே, தப்ரீஸ் (Tabriz) நகர் உதுமானியர்கள் வசமாயிற்று. இப் பெருந் தோல்வியால் மனமுடைந்த இஸ்மாயீல் குடிப் பழக்கம் மிகுந்து, தன் 37-வது வயதிலேயே மாண்டு போனான்.

தோல்வியுற்ற போதினும், இள வயதிலேயே இறைவனடி சேர்ந்து விட்டாலும், அவன் இரு பெரும் சாதனைகளை இயற்றி முடித்தான்: (1) பாரசீகத்தை ஷீஆ மயமாக்கியது; (2) பார சீகம், பாரசீகரால் ஆளப்பட்டது.

### முதலாம் தம்ஸ்ப் (கி.பி. 1524—1576)

இஸ்மாயீலின் மரணத்தால், துர்க்கமானிய இனத் தலைவர் களுக்கும் (Turcoman Tribal Chiefs) பாரசீக நிலச்சுவான்தார் களுக்குமிடையே உள்நாட்டுப் போர் மூண்டது. பத்து வயதே ஆன முதலாம் தம்ஸ்ப் (Tahmasp I) 1524-ல் பாரசீக அரியணை ஏறினான். பாலகனான இவன் வலிமைமிக்க பாரசீக இராணுவத் தலைவர்களின் கைப் பாவையாகி விட்டான்; ஆனால், மற்று மொரு பத்து ஆண்டுகள் கடந்ததும் அந்த இராணுவத் தலைவர் களை எல்லாம் அடக்கி நசுக்கி, வலிமைமிக்க 'ஷா' (Shah) வாக ஆகி, அரை நூற்றாண்டுக்கு மேல் ஆட்சி செலுத்தினான். அவனுடைய குணநலன்களில் சிற்சில குறைபாடுகளிருப்பினும், உதுமானியப் பேரரசின் படையெடுப்புகளிலிருந்தும், உஜ்பெக்கு களின் (Uzbeks) தாக்குதல்களிலிருந்தும் தன் புது இராச்சியத்

தைக் காப்பாற்றிக் கொண்ட அவனது பெரும் சாதனையை எவரும் மறக்க முடியாது.

குராசானின் மீது ஐந்து முறை படையெடுத்தனர் உஜ்பெக்குகள். உதுமானியர்களோ ஆஸர்பைஜான்மீது நான்கு முறை போர் தொடுத்தனர். சில எல்லைப் பிரதேசங்களை இழக்குமாறு செய்தாலும், அவர்களால் சஃபாவீ இராச்சியத்தை அழிக்க முடியவில்லையல்லவா! போரில் நேரிடைக் கைகலப்புக்கு இடம் கொடுக்காமல், பதுங்கித் திரிந்து, காலத்தை நீடித்து, எதிரி தளர்ச்சியுற்றுத் தள்ளாடிப் போகுமாறு செய்து, கடைசியில் மூர்க்கமாகத் தாக்கும் முறையில்[1] வல்லவன், ஷா தம்ஸ்ப்! மற்றும், போரில் எதிரியின் கரத்தில் விழும் எப்பொருளும் ஒரு சிறிதும் பயன்படாது போகும் வண்ணம் தன் எல்லைப் பிரதேசத்தைச் சின்னுபின்னமாக அழித்தல் முறையில்கூட[2] வல்லவன், ஷா தம்ஸ்ப். எதிரியின் சேனை எவ்வளவுக்கெவ்வளவு முன்னேறுகிறதோ, அவ்வளவுக்கவ்வளவு அந்த எதிரிப் படைகளுக்கே கஷ்டமும் ஆபத்தும் விளையும் மிகத் தந்திரமான, சாமர்த்தியமான போர் முறை ஆகுமிது; எதிரியின் படை பின்னிடைந்து போனாலும், அப்பொழுதும் வழிநெடுகத் தொந்தரவு கொடுக்கத் தெரிந்த முறை இது. மற்றும், சிறுசிறு கும்பல்கள் பதுங்கியிருந்து தனித்தனியாகத் திடீர் திடீரென ஏமாந்த நேரம் கண்டு தாக்கும் (Guerilla Warfare) போர் முறையையும் அந்த ஷா மிகவும் மூர்க்கமாக ஊக்கி விட்டான். மேற்குறிப்பிட்ட இத் தந்திர முறைகளால், தன் வலிமையற்ற சிறு படையைக் கொண்டே பெரும் படைகளான உதுமானிய, உஜ்பெக் சேனைகளை எதிர்த்துப் போராடினான், தம்ஸ்ப் ஷா.

இதனுடன் கூட, 1555-ல், முப்பது ஆண்டு சமாதானமொன்றை உதுமானியர்களுடன் ஒப்பந்தம் செய்து கொண்டதன் மூலம், தன் சிறு இராச்சியத்தின் நன்மையையும் சுதந்தரத்தையும் சாமர்த்தியமான முறையில் காப்பாற்றிக் கொண்ட அந்தப் பாரசீக மன்னர் ஷா தம்ஸ்ப் கி.பி. 1576-ல் மறைந்தார். அவருக்குப் பின் வந்த இரண்டாம் இஸ்மாயீல், முகம்மது ஷா ஆகியோரின் ஆட்சிகளில் பாரசீகத்தில் குழப்ப நிலைகளும் சச்சரவுகளும், சண்டைகளும் சதிகளும், சூழ்ச்சிகளும் போட்டி

[1] இவ்வாறு போர் நிகழ்த்தும் தந்திர உத்தி 'Fabian Tactics' என்று அழைக்கப்படும்.

[2] இத்தகு தந்திர உத்தி ஆங்கிலத்தில் 'Scorched Earth Policy' என்று அழைக்கப்படுகிறது. அதாவது, எதிரியின் கரத்தில் சுடுகாட்டுச் சாம்பல் மட்டுமே அகப்பட வேண்டும் என்னும் கோட்பாடு இது.

களும் மூண்டன. இறுதியில், 1587-ல் பட்டத்துக்கு வந்த ஷா அப்பாஸ் (Shah Abbas—Abbas I) காலத்தில்தான் சஃபாவீ அரசு உயர்நிலையை எட்டிற்று.

**முதலாம் அப்பாஸ் (கி.பி. 1587—1629)**

சஃபாவீ அரசு உச்ச கட்டத்தையும் உயர்நிலையையும் அடைந்தது முதலாவது ஷா அப்பாஸ் காலத்தே தான். அரசியல் துறையிலும் கலாசாரத் துறையிலும் ஈரான் நாடு மிகவும் முன்னேற்றங் கண்டது. அவருக்குப் பின் அப் பேரரசு வீழ்ச்சியடைய ஆரம்பித்தது.

**அப்பாஸின் சாதனைகள்**

அடிமைகள் மட்டுமே அடங்கிய ஒரு பெரிய 'குலாம்' படையை (Corps of Ghulams) இவர் ஆரம்பித்தார். நிலச் சுவான்தார்களின் கொட்டத்தை அடக்குவதற்காகவே இப்புதிய படையை இவர் நிறுவினுர். இந்த குலாம்களுள் சில திறமைசாலிகளை மாநில ஆளுநர்களாகவும், மற்றும் பொறுப்பு மிக்க பெரும் அதிகாரிகளாகவும் இவர் நியமித்தார். இவருக்கு முன் ஆண்டவர்கள் காலத்தில், உதுமானியர்கள் தப்ரீஸ் (Tabriz) நகரை மட்டுமே ஆக்கிரமித்தார்கள். உஜ்பெக்குகள் (Uzbeks) ஹீரட்டைக் (Herat) கொள்ளையடித்துப் பிடித்துக் கொண்டார்கள்.

இத் தோல்விகளிலிருந்து கற்றுக் கொண்ட பாடத்தின் மூலம், ஒரே சமயத்தில் இரண்டு வல்லமை மிக்க பகைவர்களை எதிர்த்துப் போராடுவதில் இலாபமில்லையென்று அறிந்து, 1589-ல் தமது பிரதேசத்தின் சில பகுதிகளை இனமாகக் கொடுத்துத் தந்திரமான முறையில் உதுமானியர்களுடன் சமாதான ஒப்பந்தம் செய்து கொண்டார், மாமன்னர் அப்பாஸ். வாளெடுக்காமல், உதிரம் சிந்தாமல், வறுமை உண்டுபண்ணுமல், நாட்டின் பொருளாதார நிலையைக் கெடுக்காமல், இராணுவத்தின் பலத்தைக் குறைக்காமல், கலகமும் கொள்ளையும் மூளாவண்ணம் உதுமானியர்களின் வாள் பலத்தைப் பாரசீக அரசியல் தந்திரம் அடக்கி விட்டது. அடுத்து, தம்முடைய மற்ருெர் எதிரியான உஜ்பெக்குகளின்மீது படையெடுத்து இவர் ஹீரட்டை (Herat) 1589-ல் மீட்டுக் கொண்டார்.

இவ் வெற்றியை அடுத்து, உதுமானியர்கள் மீதும் படையெடுத்து, தப்ரீஜ் அருகே இவர் அவர்களைத் தோற்கடித்தார் (கி.பி. 1605-06). பிறகு 1607-க்குள் இவர் பாரசீக மண்ணி

லிருந்து உதுமானிய துருக்கியர்களை முழுக்க முழுக்க விரட்டி யடித்தே விட்டார். இவர் 1622-ல் முகலாயப் பேரரசரான[1] ஜஹாங்கீரிடத்திருந்து காண்டஹாரை (Kandahar) மீட்டார். 1629-ல் ஷா அப்பாஸ் காலமானார். அதோடு, சஃபாவீ பேரரசு வலிமை குன்ற ஆரம்பித்தது. 1736-ல் அந்த வம்சமே முற்றுப் பெற்றது.

**சஃபாவீ காலத்தின் கலாசாரம்**

நாற்பத்திரண்டு ஆண்டுகள் வரை ஆட்சி புரிந்த ஷா அப்பாஸ் பல முக்கிய சாதனைகளைப் புரிந்தார்; ஆட்சி முறையில் பல முக்கிய சீர்திருத்தங்களைச் செய்தார்; போரில் வென்ற பிரதேசங்களை உடனே பலப்படுத்தினார். அரசியல், பொருளாதாரம், கலாசாரம் முதலிய துறைகள் முன்னேற்றம் பெற்றன. குடிமக்களின் நன்மையில் ஷா கண்ணுங் கருத்துமா யிருந்தார். இலஞ்ச ஊழல்கள் போன்ற கொடுமைகளை இவர் அகற்றினார். வர்த்தகத்தையும் தொழில்களையும் இவர் முன் னேறச் செய்தார். தூரதேச வர்த்தகர் வணிகர்களின் பிரயாண நலன்களைக் கருதி, வழி நெடுக ஆங்காங்கே இவர் சத்திரம் சாவடிகளை நிருமாணித்தார். அப்பாஸின் நீதிமிக்க நேர்மை யான போக்கைக் கண்ட பாமர மக்கள் இவரை மனமார, வாயாரப் புகழ்ந்தார்கள். இவருக்கு முன்னிருந்த ஆட்சியாளர் களைப் போன்ற மதவெறி பிடித்த ஷீஆ அல்லர் ஷா அப்பாஸ். இவர் மதச் சகிப்புத் தன்மை வாய்ந்தவர். இவர் குடிமக்களைத் துன்புறுத்தவில்லை; கொடுமைக்கு உள்ளாக்க வில்லை; அயலா ரைக் கொள்ளையடிக்கவில்லை; எவரையும் வெறுக்கவுமில்லை. எவரொருவரிடமும் கிஞ்சித்தும் பாரபட்சம் பாராட்டாத, பக்குவ மடைந்த சிறப்புமிக்க அரசியல்வாதியே அப்பாஸ் ஆவார்.

தம்முடைய புதிய தலைநகரான இஸ்ஃபஹானுக்கு (Isfahan) அனேக கிறித்தவர்களை வரத் தூண்டி, அங்ஙனமே நல்வர வேற்று, அவர்களுடைய தொழிலுக்கும் வர்த்தகத்துக்கும் கைத்தொழில்களுக்கும் அவர் பலப்பல சலுகைகள் வழங்கினார். மஸ்ஹத் (Mashhed) என்னுமிடத்தில் அடங்கியிருக்கும் உத்தம மத குருவான (Imam) அலீ-அல்-ரிதாவின் (Ali-al-Rida) கல்லறைமீது மற்றொரு வனப்பு மிக்க கல்லறைக் கட்டடத்தை எழுப்பினார் ஷா அப்பாஸ்.

ஷீஆக்களுடைய மத குருமார்களுக்கு இவர் வேண்டிய வசதிகளைச் செய்து கொடுத்தாரெனினும், அரசியலிலும் ஆட்சி

[1] Emperor Jahangir (1605 - 27)

இயலிலும் அவர்கள் தலையிடுவதை முற்றும் எதிர்த்தார், தடுத்தார், வெறுத்தார், அப்பாஸ்.[1] மன்னரின் அரசவையிலேயே வரலாறெழுதும் வரலாற்றுசிரியர்கள் நல்லாதரவையும் வெகுமதிகளையும் பெற்று மகிழும் பாக்கியமடைந்தனர். 'அப்பாஸ் பற்றிய வரலாறு' என்ற வரலாற்று நூலிலிருந்துதான் ஷா அப்பாஸ்பற்றி நாம் பெரும்பாலான செய்திகளைத் தெரிந்து கொள்கிறோம். அரசின் சம்பளமும் சன்மானமும் பெறும் வரலாற்றுசிரியர்கள் ஷாக்களைப் (Shahs)பற்றி அளவுக்கு மீறிப் புகழ்வார்கள் தாமே!

அரசியல் தகவல்களும் பொது விஷயங்களும் தேநீர் விடுதிகளில் (Coffee Houses) ஓய்வு நேரப் பொழுது போக்காகத் தாராளமாகப் பேசப்பட்டன. ஷா அப்பாஸ் அச்செயலை மிகவும் ஆதரித்தார்; தூண்டினார்; அதற்குத் தூபம் போடவும் செய்தார். வழிப்போக்கர்களும் துறவிகளும்கூடத் தங்கள் அனுபவங்களையும், மத விமரிசனங்களையும் தடையின்றிக் கூறுவர்; 'ஷா நாமா'விலிருந்து கூட (Shah Namah) வரலாற்று நிகழ்ச்சிகள் தர்க்கம் புரியப்படும். இஸ்லாத்துக்கு முந்திய பண்டைய பாரசீக விழாக்களையும் பண்டிகைகளையும் கொண்டாடவும் பின்பற்றவும் ஆட்சி அனுமதித்தது. அலீ (Ali),[2] ஹசன் (Hasan),[3] ஹுசைன் (Husain)[4] ஆகிய இம் மூவரும் தாக்கப்பட்டு, கொடுமை செய்யப்பட்டு, பயங்கர முறையில் உயிர் நீத்த பெரும் தியாகிகளாவர். இவர்களின் நினைவாக மாரடித்து உதிரம் சிந்தும், அழுது புலம்பி ஒப்பாரியிடும் பண்டிகைகளும் அனுமதிக்கப்பட்டன. 16-வது நூற்றாண்டிலிருந்து அப்பாஸ் காலம்வரை இரண்டே இரண்டு தத்துவ ஞானிகளே தோன்றியிருந்தார்களென்பதிலிருந்து, ஈரானிய நாட்டில் சஃபாவீ சகாப்தத்தில் இலக்கியப் பஞ்சம் தாண்டவமாடிற்று என்பது நன்கு விளங்கும்.

[1] ஷீஆ என்றால் 'கட்சி' என்பது பொருள். கலீஃபா அலீ அவர்களுடைய கட்சியைச் சேர்ந்தவர்கள் தாங்கள் என்று அக்கட்சியினர் தம்மை அழைத்துக் கொள்வர். மதத் துறையில் இவர்கள் தங்கள் கவனத்தைச் செலுத்த வேண்டுமன்றி, அரசியலில் தலையிடக் கூடாது என்பது ஷா அப்பாஸின் கொள்கையாகும்.

[2] இஸ்லாமிய குடியாட்சியின் கடைசிக் கலீஃபா அலீ, கி.பி. 656-661. (பக். 11 பார்க்க).

[3] கலீஃபா அலீயின் மூத்த குமாரர்; நபிநாயகத்தின் முதல் பேரர். இவர் கொலை செய்யப்பட்டார்.

[4] கலீஃபா அலீயின் இளைய குமாரர்; நபி நாயகத்தின் இரண்டாவது பேரர். கர்பலா (Karbela) என்னுமிடத்தில் (கி.பி. 680-ல்) அவரும், அவருடைய குடும்பத்திலிருந்த அனேகரும் பயங்கர முறையில் அம்புக்கும் கத்திக்கும் இரையாயினர். (பக். 19 பார்க்க.)

## IV. பாரசீக உயிலுடைமை
## (Legacy of Persia)

இன்று ஈரான் நாடாகக் காட்சி யளிக்கும் நிலப்பரப்பின் தென் மேற்குப் பிரதேசத்தைத்தான் பண்டைக் காலத்தில் ஈரான் என்றும் பாரசீகம் என்றும் அழைத்து வந்தார்கள் என்று வரலாறு நமக்கு அறிவிக்கிறது. இதற்குப் 'பார்சா' (Parsa) என்று மற்ருெரு பெயரும் உண்டு. பண்டைய கிரேக்கர்களும் ரோமானியர்களும் இதைப் 'பெர்ஸே' (Persae) என்றும், அராபியர் ஃபார்ஸ் (Fars) என்றும் அழைத்து வந்தனர். வடக்கே காஸ்பியன் கடல், தெற்கே பாரசீக வளைகுடா, கிழக்கே சிந்துநதி, மேற்கே தஜ்லா (டைகிரீஸ்) நதி—இவையே பண்டைய பாரசீகத்தின் எல்லைகளாயிருந்தன. கி.மு ஆரும் நூற்ருண்டின் பிற்பாதி காலத்திலிருந்துதான் பாரசீகத்தின் வரலாறு தெளிவாகத் தெரியவாரம்பிக்கிறது. கி.மு. 550-ல், அதன் அரசனுன மகா சைரஸ் (Cyrus the Great) என்பவன், அக்காமனீ[1] வம்சத்துக்கு வித்திட்டான். அவனும் அவன் சந்ததியார்களும் அன்று வரை தெரிந்திருந்த உலகத்தின் பெரும் பாகத்தில் தங்கள் பேரரசை நிலைநாட்டி ஆட்சி செலுத்தி வந்திருக்கிருர்கள். அது மிக அகன்ற பேரரசாக விளங்கியதுடன், மட்டுமின்றி, அவர்களுடைய அரசியலமைப்புக்கு நிகராய் ஈடிணை கற்பிக்கத் தக்க வகையில் வேருெரு பேரரசு எங்கும் இருந்ததாகவும் தெரியவில்லை அன்றைய உலகில்!

### மகா அலெக்சாந்தரின் படையெடுப்பும் அக்காமனீ வம்ச ஆட்சி அழிவும்

மகா அலெக்சாந்தரின் எழுச்சியால்தான் அக்காமனீ வம்ச ஆட்சி முற்றுப்பெற்றதென்னலாம். பின்னர், அலெக்சாந்தரின் சந்ததியார்களின் ஆட்சியைப் பார்த்தியர்கள் (Parthians) அழித்தனர். பார்த்தியராட்சியை ஸாசானியர் (Sassanids) அழித்தனர். ஸாசானியர்கள் நான்கு நூற்ருண்டுக்கு மேல் பாரசீகத்தை ஆண்டார்கள். கி.பி. ஏழாம் நூற்ருண்டில் ஸாசானியர்களை ஒழித்துக் கட்டிய அராபியர்கள், ஃபார்ஸ் (Fars) என்றழைக்கப்பட்ட பாரசீகத்தைக் கொடி கட்டியாண்டனர்.

[1] மகா சைரஸின் முன்னேனின் பெயர் அக்காமனீஸ் (Achamenes). பாரசீகத்தின் ஒரு பாகமான 'பசார்கடே' (Pasargadae) என்னுமிடத்தில் அவன் வசித்து வந்தான். அவனுடைய பெயரிலிருந்துதான் அக்காமனீ என்னும் வம்சம் தோன்றிற்று.

**பாரசீகக் கலாசாரம்**

பாரசீகக் கலாசார வளர்ச்சியை இரு பிரிவு காலகட்டங்களாகப் பிரிக்கலாம்:

முதலாவது, பஹ்லவீ (Pahlavi) காலகட்ட கலாசாரம். இரண்டாவது, பாரசீகக் காலகட்ட கலாசாரம்.

மகா சைரஸ் எழுச்சியிலிருந்து அராபியர்கள் பாரசீகத்தை வென்றவரை, முதலாவது காலகட்டம்.

பாரசீகர்கள் இஸ்லாம் மதத்தைத் தழுவிய காலத்திலிருந்து இரண்டாவது காலகட்டம்.

மேலும் தெளிவாகப் புரிந்து கொள்வதற்காகக் கீழ்க்காணும் தலைப்புகளாகப் பிரித்து ஆராய்வோமாக:

1. பஹ்லவீ கலாசாரம் [கி.பி.ஏழாம் நூற்றுண்டில் அராபியர்கள் (Arabs) பாரசீகத்தை வென்ற (கி.பி. 642) வரை.]

2. உமையாக்களும் பாரசீகக் கலாசாரமும்.

3. அப்பாஸீகள் கால பாரசீகக் கலாசாரம்.

4. அராபியரல்லாதாரின் கலாசாரங்கள்மீது பாரசீகக் கலாசாரம் உண்டுபண்ணிய செல்வாக்கு. (Influence of Persian Culture on non-Arab Cultures.)

**1. பஹ்லவீ கலாசாரம்**

மகா சைரஸின் ஆட்சியிலும் அவருடைய சந்ததியாரின் ஆட்சியிலும் ஃபார்ஸ் (பாரசீகம்) வல்லமை பெற்ற நாடாக வளர்ச்சி யடைந்த தென்பதை ஏற்கெனவே நாம் கண்டோம். இந்த அக்காமனீத் வமிசத்தின் ஆட்சி பெரும் புகழ் பெற்றுப் பாரசீகப் பேரரசைப் பரிபாலித்தது. வெற்றிகள் மட்டுமல்ல, வர்த்தகமும், கலாசாரங்களும் முன்னேறின என்பதை அந்த ஆதிப் பண்டைக் காலமான, கி.மு. 550—331 கால கட்ட வரலாறு உணர்த்திற்று. கிரேக்க நாட்டைக் கொடுமைப் படுத்தியதற்குப் பழிக்குப் பழியாக, மாசிடோனியாவின் திக்விஜய வீரனுன தீரன் மகா அலெக்சாந்தர், பண்டைய பாரசீகப் பெருமையும் புகழும் வாய்ந்த சிறப்புமிக்க கலாசாரங்களையும் பேரரசையும் ஒழித்துக் கட்டினுன்.

அலெக்சாந்தரின் வாரிசும், தளகர்த்தனுமான செல்யூகஸ் நிறுவிய 'செல்யூசிட் பேரரசு' என்னும் பாபிலோனியப் பேரரசின் மீது பிறகு ஆட்சி செலுத்திய பார்த்தியர்களின்

(Parthians) ஆதிக்கத்தை ஸாசானியர்கள் (Sassanids) கி.பி. நான்காம் நூற்றுண்டின் முதற் கால் நூற்றுண்டு காலகட்டத்தில் ஒழித்து விட்டு ஆட்சிக்கு வந்ததிலிருந்து, பண்டைய பாரசீகக் கலாசாரங்கள் மீண்டும் புத்துயிர்பெற ஆரம்பித்தன. கல்விக்கும் நாகரிகத்துக்கும் கலாசார முன்னேற்றத்துக்கும் உறைவிடமெனத் திகழ்க்க முனைந்தது பாரசீகம். அப்படி இருந்தும், பைஜான்ஷியப் பேரரசுக்கு (Byzantine Empire) எதிராக நிகழ்ந்த கடும் போர்களால் ஸாசானியப் பேரரசு வலிமை குன்றிப் போயிற்று; அதனுடைய அரசியல், இராணுவச் செல்வாக்கு எல்லாம் மழுங்கி விட்டன.

### ஹீரா என்ற அராபிய பிரதேசத்தின்மீது பாரசீக ஆதிக்கம்

பாரசீகம் இத்தகைய வலுவிழந்த நிலையிலும், ஹீரா[1] (Hira) என்ற ஒரு சிறு அராபிய பிரதேசத்தின்மீது ஆதிக்கமும் ஆட்சியும் செலுத்தி வந்தது; இது இஸ்லாம் மத எழுச்சிக்குச் சில நூற்றுண்டுகளுக்கு முந்திய நிலை. ஹீராவின் இராணுவ முக்கியத்துவ நிலை காரணமாக, அராபியர்கள் அப் பிரதேசத்தைத் தாக்கினுர்கள். மற்றும், முஸ்லிம்களுக்கு விரோதமாக ஹீராவின் ஆட்சியாளர்கள் அவ்வப்போது தாக்கும் படைகளை அனுப்பித் தொல்லை விளைவித்தனர். இக் காரணங்களால், 'முதன்ன' (Muthanna) என்ற ஒரு மாபெரும் இராணுவத் தலைவரைக் கலீஃபா அபூபக்கர் ஹீராவின் மீது ஏவினுர். கி.பி. 632-ல் அது கைப்பற்றப்பட்டது.

இதனுல் பாரசீகத்தின் பெருமை குலைந்து, அது ஆட்டமும் கண்டு விட்டது. இந்தத் திடீர் அராபிய வெற்றியால், அராபியர்களுக்கும் பாரசீகர்களுக்கும் இடையே தீராப் பகையும் அடிக்கடி மோதல்களும் தொடர்ந்து நிகழ்ந்துகொண்டேயிருந்தன. முடிவில், கலீஃபா உமரின் காலத்தில் இஸ்லாமிய குடியரசாகி விட்ட பாரசீகம், அராபிய முஸ்லிம் பேரரசினுள் அடக்கமாயிற்று (கி.பி. 642-ல்).

### 2. உமையாக்களின் கால பாரசீகக் கலாசாரம்

இஸ்லாமிய குடியாட்சியின் நான்காம் கலீஃபாவான அலீ கி.பி. 661-ல் பயங்கரமாகப் படுகொலை செய்யப்பட்ட பின்,

[1] ஹீரா என்னும் கலப்பட அராபியக் குட்டி நாடு அரேபியாவின் வடகிழக்குப் பிரதேசத்தில் உள்ளது. சிறிது காலம் அது பாரசீகத்து ஆதிக்கத்தின் கீழ் இருந்தது. சால்தியா (Chaldea) என்னும் மற்ருெரு முக்கிய குட்டிப் பிரதேசமும் பாரசீக ஆட்சியிலிருந்தது.

உமையாவின் சந்ததியில் தோன்றிய முஆவியா ஆட்சியைக் கைப்பற்றி உமையா வமிச ஆட்சியை நிறுவினர்.[1]

இஸ்லாமிய வரலாற்றிலேயே மிகவும் புகழ் வாய்க்கப் பெற்ற பிரதேசங்களை வென்ற சாதனை இவ் வமிசத்துக்குண்டு. இவ் வெற்றிகளால் ரோமானியர்களின் பைஜான்ஷியப் பேரரசுக்கும் உமையாக்களுக்கும் இடையே மும்முறை போர்கள் நிகழ்ந்தன. ஆனுல், குறிப்பிடத்தக்க இலாபமில்லாத, பயனற்ற வெறும் போர்கள் அவை. உமையாக்கள் பாரசீகர்களைக் கேவலமாகத்தான் எடை போட்டனர்.

பாரசீகர்களும் உமையாக்களை அராபியப் பேரரசின் ஆக்கிரமிப்புச் சின்னமாகத்தான் வெறுப்புடன் நோக்கினுர்கள்; பாரசீகர்களின் உயர் மட்ட அந்தஸ்துகளெல்லாம் தீர்த்துக் கட்டப்பட்டு, அவற்றை யெல்லாம் அராபிய பிரபுக்கள் ஆக்கிரமித்துக் கொண்டனர். மற்றும், பாரசீக இனத்தை விட அராபியரின் இனமே மேலானதென்று உமையாக்கள் நம்பினுர் களாகையால், எரிகிற நெருப்பில் எண்ணெய் வார்த்தது போன்று, பாரசீகர்களின் நிலை மேலும் மோசமாயிற்று. அன்றே அழிவும் தொடங்கியது.

அன்றியும், ரோமானிய நாகரிகங்களையும் கலாசாரங்களையும் கலைச் சிற்பங்களையுமேனும் உமையாக்கள் ஆதரித்தார்களே யொழிய, பாரசீகக் கலாசாரங்களை அவர்களால் சகித்துக் கொள்ள முடியவில்லை. இவ்வளவு வேற்றுமையுணர்ச்சி வெறுப்பு களுக்கிடையிலும், பண்டைய பாரசீகக் கலாசாரங்கள் திமஷ்க் (Damascus) தலைநகருக்குள்ளே நுழைந்து விட்டன!

### 3. அப்பாஸிகளின் ஆட்சிக் காலத்தில் பாரசீகக் கலாசார முன்னேற்றம்

அரசியலிலும் ஆட்சியிலும்தாம் அராபியர்கள் ஆதிக்கம் செலுத்தினுர்களே யொழிய, கலாசாரத் துறைகளில் பாரசீகம் அராபிய கலாசாரங்களை வென்று விட்டது. உமையாக்கள் பாரசீகர்களைக் கொடுமைப்படுத்திய காரணத்தால், பாரசீகர் களும் அவர்களை வெறுத்தார்கள். அராபியர்-பாரசீகரிடையே இனப் பூசல்களும் மாறுபாடுகளும் வளர்ந்தன. இந்த இனப் பூசல்களுக்கு உமையாக்களும் காரணமாவர். இதனுல், பொது வாக எல்லாக் குடிமக்களும், குறிப்பாகப் பாரசீகக் குடிமக்கள் உமையாக்களின் ஆட்சியைப் பெரிதும் வெறுத்தார்கள்.

[1] முன்பக்கம் 13, 56 முதலியன பார்க்க.

உமையாக்களின் ஆட்சிக்கால முடிவுக் கட்டத்தில் பகைவர் கூட்டம் அவர்களைச் சூழ்ந்து வளர்ந்து விட்டது; எங்கும் கலகங்களும் குழப்பங்களும் மூண்டன. உமையா கலீஃபாவான இரண்டாம் மர்வானை (Marwan II) வெறுத்தவர்கள் பாரசீகத்துக்கு விரைந்தேகி அப்பாஸீகளின் புரட்சிக்குத் தூபமிட ஆரம்பித்தார்கள்; இதைத் தக்க வாய்ப்பாகப் பயன்படுத்தி, அப்பாஸீகள் அரசியல் செல்வாக்குப் பெற்று, உமையாக்களை வீழ்த்தி, கி.பி. 750-ல் ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டார்கள்.

**தலைநகர் பாக்தாதுக்கு மாற்றம்**

இஸ்லாமிய வரலாற்றிலேயே மிகப் பிரக்கியாதி பெற்ற கால கட்டத்தில் அப்பாஸீ கலீஃபாக்கள் பாக்தாதைத்[1] தலைநகராகக் கொண்டு ஆட்சியை ஆரம்பித்தார்கள். பழைய தலைநகரான திமஷ்கை (Damascus) விட்டு விட்டு, அப்பாஸீ ஆட்சி பாக்தாதில் ஆரம்பமாயிற்று. புது நூதனமான பாரசீகக் கலாசாரமும் அரப் நாகரிகமும் ஒன்றுடனொன்று பிணைந்திருந்தன என்று சொல்லலாம் போல் அந் நிலைமை உருவாயிற்று. அக் கால கட்ட ஆரம்பத்திலிருந்து, பண்டைக் கால நாகரிகமான பாரசீகக் கலாசாரத்துக்கு அப்பாஸீகள் புத்துயிரளித்து அதை முன்னேறச் செய்து, இஸ்லாமிய உலகு முழுதுமே பேரொளிச் சுடர் வீசிப் பிரகாசிக்குமாறு ஆக்கி விட்டார்கள். அரப் நாகரிகமும் பாரசீகக் கலாசாரப் பண்பாடும் ஒருங்கிணைந்து பெருஞ் சுடர் வீசின, அப்பாஸியரின் ஆட்சிக் காலத்தில்.

அரசியல் ஆட்சி இயல் வன்மையுறவும், தாங்கள் அரியணை மீது ஏறுதற்குப் பாரசீகர்கள் அளித்துதவிய ஆதரவுக்கு நன்றி தெரிவிக்கவும் பாரசீக அறிஞர்களுக்கும் வித்துவான்களுக்கும் ஆட்சியில் பலப்பல உயர் பதவிகளையும் சலுகைகளையும் நல்கினர்கள், அப்பாஸீ கலீஃபாக்கள். மேலும், பாரசீகர்களைக் குதூகலப்படுத்த, தங்களாட்சி பண்டைய ஜொராஷ்டிரிய மதத்தைச் (Zorastrian Religion) சேர்ந்த ஸாசானியர் ஆட்சியின் தொடர்ச்சியே என்று அவர்கள் பிரகடனப்படுத்தவும் முற்பட்டார்கள்.

அறிவியல் வளர்ச்சி, அறிவு வளர்ச்சி, கலாசார வளர்ச்சிக்குப் பாரசீக அறிஞர்கள் பெரிதும் காரணமாயிலங்கினர்க

[1] இஸ்லாமிய குடியாட்சியின் முதல் தலைநகராக மதீனாவும், பின்னர் கூஃபாவும் விளங்கின. உமையாக்களின் தலைநகர் டமாஸ்கஸ் என்னும் திமஷ்க் ஆகும்; அப்பாஸீ வமிச கலீஃபாக்களோ பாக்தாதைத் தலைநகராக ஆக்கிக் கொண்டார்கள்.

ளாகையால், அவைபற்றிச் சற்றுத் தெரிந்து கொள்வது நலம் தானே!

(1) ஆட்சி நடத்தும்முறைக் கலைக்குப் பாரசீகர்களான பர்மக்கீகள் (Barmakids) ஆற்றிய சேவை.

(2) மருத்துவம், விண்வெளிக் கலை, தத்துவ ஞானக் கலை, கணக்கியற் கலை, வரலாறு, இலக்கியம், கலை நுட்பம், கைத் தொழில் நுணுக்கம் ஆகிய இன்னோரன்ன அறிவு வளர்ச்சித் துறைகளில் பாரசீகர் நல்கிய சேவை ஏராளம், ஏராளம்!

## ஆட்சி நடத்தும்முறைக் கலைக்கு பர்மக்கீகள் ஆற்றிய சேவை
## (Contribution of the Barmakids in the Art of Government)

கலீஃபா அல்-மன்சூர் (கி.பி. 754-775) காலத்தில் வஜீர் (Vazir) என்ற புதுப் பாரசீகப் பதவி உண்டுபண்ணப்பட்ட தென்று முன்பே கூறியுள்ளோம். தம் பேரரசின் எல்லைப்புறங் களில் தொல்லை கொடுத்த காஜர்கள் (Kazars), குர்துகள் (Kurds) போன்றவர்களையும், ஜார்ஜியாவின் (Georgia) நாடோடிகள் (Nomads) போன்றவர்களையும் கண்காணித்து அமைதி காப்பதற்காக, பர்மக்கீ வமிச நிறுவனரும், தமது நம்பிக்கைக்குப் பாத்திரமானவரும், தமது நிதியமைச்சரும், பாக்தாதின் வஜீருமாகிய காலித்-பின்-பர்மக் (Khalid-bin-Barmak) என்னும் பெரும் மேதையை இராக் (Iraq) பிரதேசத் துக்கு ஆளுநராக நியமித்தார் அல்-மன்சூர்.

வஜீர் காலிதினுடைய தந்தை, பால்க் (Balkh) என்னு மிடத்தில் வசித்த ஒரு புத்தமதப் பிரதமகுரு ஆவார். காலித்-பின்-பர்மக் மின்னல் வேகத்தில் அதி விரைவாக அப்பாஸியர் ஆட்சியில், வரி-கருவூல அமைச்சராகவும், பிரதம ஆலோசக ராகவும், வஜீராகவும் முன்னேறினார். கடமையின் பேருருவ மாகவும், நேர்மையும் கட்டுப்பாடும் மிக்க நம்பிக்கைகளுக்கு வழி காட்டியாகவும் முன் மாதிரியாகவும் திகழ்ந்தார் இவர். கலீஃபாவுக்கு அடுத்தபடி, அரசியல், ஆட்சியியல், சமுதாயம் ஆகிய துறைகளில் இன்றியமையாத பெரும் புள்ளியாகவும் அரசியல் மின்னொளியாகவும் இவர் ஒளிச்சுடர் வீசினார். பெருங் கீர்த்தி வாய்ந்த வஜீர் குடும்ப நிறுவனரென்றே அவருக்குப் பெயரும் ஆயிற்று!

காலிதினுடைய குமாரராகிய யஹ்யா (Yahya) எதிர்காலத்தில் கலீஃபாவாக ஆக இருந்த ஹாரூனின் ஆசிரியர். ஹாரூன் கலீஃபாவான பின்னர், பழைய சிறப்பும், அறிவும், ஆற்றலுமிக்க தம் ஆசிரியரான யஹ்யாவையே கிலாஃபத்தின் வஜீராக நியமித்துக்கொண்டார்.[1] யஹ்யாவின் மக்களும், தங்கள் தங்கள் காலத்தில் உயர்பதவி வகித்தார்கள்; சமுதாயத்திலும் செல்வாக்குப் பெற்றார்கள். இந்தப் புகழ்பெற்ற பாரசீகக் குடும்பத்தினர் யாவருமே தயாளகுணமும் தர்மசிந்தனையும் வாய்க்கப் பெற்றவர்கள்; பலப்பல நீர்ப்பாசனக் கால்வாய்கள், பள்ளிவாசல்கள், மற்றும் பொதுநலப் பணித்துறைகள் எல்லாம் உருவாக்கியவர்கள்.

**பள்ளிவாசல்களில் ரம்ஜான் மாதத்தில் விளக்கேற்றிய குடும்பம்**

ரம்ஜான் மாதத்திலும் இருள் சூழ்ந்திருந்த பள்ளிவாசல்களில் விளக்கேற்றி ஒளி வீசிட ஏற்பாடு செய்தவர் யஹ்யாவின் குமாரர் எனத் தெரிகிறது. யஹ்யாவின் மற்றொரு மகன் பெரும் பேச்சாளராகவும், இலக்கியப் பெரும் கடலாகவும், பேரெழுத்தாளராகவும் பிரகாசித்தார். இக் காரணத்தால், அராபிய வரலாற்றாசிரியர்கள் இப் புகழேணிமீது ஏறிய பர்மக்கீ வம்சத்தை 'எழுத்தாளர்களின் ஏந்தல்கள்' (People of the Pen) எனப் போற்றியிருப்பதில் வியப்பொன்றுமில்லை. மற்றும், அப்பாஸீ ஆட்சி நிலைத்து நின்றதற்கும், கலாசார முன்னேற்றத்துக்கும் பர்மக்கீகளின் பெரும்பணியே காரணமென்பதை மறக்கலாகாது.

அரசு நன்கு நடைபெற, பர்மக்கீகள் பாக்தாதின் மத்திய அரசின் காரியாலயங்களில் ஏற்படுத்திய பல்வேறு நிருவாகத் துறைகள் அப்பாஸீ ஆட்சி முடிவடைந்து போய்விட்ட பிறகும் தொடர்ந்து நிலைத்து வெகு காலம் பொதுநலச் சேவை நல்கி நின்றன வென்பதிலிருந்து, அவர்களின் சேவையை ஒருவாறு அளவிட்டறியலாம். அப்பாஸீகள் காலாவதியானார்களே யொழிய, பர்மக்கீகளின் கீர்த்தியும் புகழும் மறையவில்லை! இத்தனை நூற்றாண்டுகளுக்குப் பின்பும் (சுமார் 1200 ஆண்டுகள்) அவர்களுடைய பெயரும் புகழும், சேவையும் தொண்டும் அன்று போல் இன்றும் மங்கவுமில்லை; மழுங்கவுமில்லை.

[1] யஹ்யா காலஞ்சென்ற பின்னர் அவர் மகன் ஜஅஃபர் என்பவர் ஹாரூனின் வஜீராக நியமனம் பெற்றார்.

**பாரசீகர்களின் மருத்துவ விஞ்ஞானப் பணி**

இஸ்லாம் தோன்றுதற்கு முந்திய பாரசீகத்தில் மருத்துவர்கள் சமுதாயத்தில் மிக உயர்ந்த கண்ணியமான அந்தஸ்தை வகித்து வந்தார்கள். அராபியர்கள் பாரசீகத்தின்மீது படையெடுத்த கால கட்டத்தின் பிறகும் கூட அப் பழைய மருத்துவ அந்தஸ்துக்குப் பங்கமேதும் ஏற்படாதிருந்தது. அப்பாஸீ கலீஃபாக்கள்கூட, மத வேற்றுமையோ இன வேற்றுமையோ பாராட்டாமல், எல்லா அறிஞர்களையும் வித்துவான்களையும் சமமாய் நடத்தி ஆதரித்து வந்தார்களென்பதைப் புகழத்தான் வேண்டும். கிறித்தவர்கள், ஜொராஸ்டிரியர்கள், சேபியர்கள் (Sabeans) ஆகிய அறிஞர்கள் எவருமே சிறிதும் வேற்றுமையின்றிப் போஷிக்கப்பட்டு ஆதரிக்கப்பட்டார்கள். இத்தகு பரந்த மனப்பான்மையால் கலாசார வளர்ச்சி நறுமணம் பெற்றுப் புகழோங்கிற்று.

'ஆஸ்பத்திரிகளைப் பாரசீகர்கள் நிர்மாணித்து நிர்வகித்த ஒப்பற்ற உயர்ந்த முறைதான், பிற்கால ஐரோப்பாவுக்கு விட்டுச் செல்லப்பட்ட விலையற்ற செல்வம் எனலாம். அப் பாரசீகரின் பலமான அஸ்திவாரத்தின்மீதுதான் இன்றைய நவீன கால ஆஸ்பத்திரி கட்டப்பட்டதென்று கூடச் சொல்லி விடலாம்' என வரலாற்று மேதையொருவர் புகழ்ந்துள்ளார்.[1]

இஸ்லாமிய ஆரம்பகால வரலாற்றின்படியும் கூட, பாரசீகக் கிறித்தவர்கள்தாம் மருத்துவமனைகளைப் பெரிதும் நிர்மாணித்து நிர்வகித்திருக்கிறார்கள். ஜிப்ரீல்-பின்-பக்திஷு (Jibril-bin-Bakhtishu) தாம் (கி.பி. 830), அக் கால புகழ்பெற்ற பாரசீகக் கிறித்தவ மருத்துவராவார். கலீஃபாக்களாகிய ஹாரூன், மாமூன் தர்பார்களையும், பர்மக்கீகளின் தர்பார்களையும் அலங்கரித்த மருத்துவரும் அவரேயாவார். அராபியர்கள் பாரசீகத்தின்மீது படையெடுத்த போதுகூட, ஸாசானியர்களின் புகழ் மிக்க மருத்துவமனையான 'குந்திஷாப்பூர்' (Gundishapur) மருத்துவமனை நோயாளிகளுக்குச் சிகிச்சையளித்துக் கொண்டிருந்ததாம்!

பாக்தாதில் கலீஃபா ஹாரூன் ரஷீத் நிறுவிய மருத்துவமனையுங் கூடப் பாரசீகப் பாணியை அடிப்படையாகக் கொண்டிருந்தது. அலீ-அல்-தபரீ (Ali-al-Tabari), அல்-ராஜி (Al-Razi), இப்னு சினா (Ibn Sina), அல்-ஜுர்ஜானி (Al-Jurjani) முதலிய

[1] A. J. Arberry, Legacy of Persia, p. 310.

வர்கள் மருத்துவ ஆராய்ச்சியிலீடுபட்டிருந்த பாரசீக மருத்துவ முக்கிய முன்னோடிகளாவர். இவர்கள் எழுதி வெளியிட்ட நூல்கள் ஏறத்தாழ எல்லா ஐரோப்பிய மொழிகளிலும் மொழி பெயர்க்கப்பட்டு, ஐரோப்பியப் பள்ளிகளில் பல நூற்றாண்டுகள் பாடப் புத்தகங்களாகக் காட்சியளித்தன என்பதை முன்பே விவரித்துள்ளோம்.

### வானசாஸ்திர விஞ்ஞானமும் பாரசீக மேதைகள் பணியும்

பாரசீகர்கள் விண்ணாராய்ச்சிக் கலைஞர்களாகவும் பெருஞ் சேவை புரிந்துள்ளனர். கி.பி. எட்டாம் நூற்றாண்டிலிருந்த அல் ஃபஜாரி (Al-Fazari) என்பவரே முதல் வானசாஸ்திரி யாவார். விண்ணாராய்ச்சிக் கலைகள்பற்றிய சமஸ்கிருத நூல்களை அரேபிய மொழியிலாக்க இவருக்கு அல் மன்சூர் கலீஃபா ஆணையிட்டாராம். 'முற்கால உயர்வுமானி' (Astrolabe) என்னும் உயர்ந்த கோபுரம் கட்டி ஆராய்ச்சி செய்தவரும் அவரேயாவர். இன்றைய 'கோணளவு கருவி' (Sextant) கூட, அதிலிருந்துதான் வளர்ந்திருக்க வேண்டுமாம்.

மற்றொரு விண்ணாராய்ச்சிக் கலைஞர் (10வது நூற்றாண்டவர்), ரே (Ray) என்ற இடத்து அல்-சூஃபி (Al Sufi) ஆவார். 'அசையாத நட்சத்திரங்கள்பற்றிய நூல்' (Book of the Fixed Stars) என்ற பலப்பல வானப் படங்கள் நிறைந்த நூலொன்றை இவர் வெளியிட்டார். மற்றும், அல்-ஹாசிப் (Al-Hasib), அல்-நரீசி (Al-Narizi), அல்-ஹைதம் (Al-Haitham), நசீருத்தீன் தூசி (Nazir-al-Din Tusi) என்போரும் போற்றத்தக்க பெரும் விண்ணாராய்ச்சி விற்பன்னர்களே. இவர்களுடைய நூல்களெல்லாமே பிற்காலத்து ஐரோப்பிய வான மண்டலக் கலை எழுத்தாளர்களைக் கவர்ந்திருக்க வேண்டுமென்னலாம்!

### தத்துவ ஞானத்துக்குப் பாரசீகர்களுடைய பங்களிப்பு

இப்னு சினாவின் (Ibn Sina) தத்துவ ஞான நூல்கள் தத்துவ ஞானத்தின் எல்லைகளையே எட்டிப் பிடித்துவிட்டன வென்னலாம். இவரொரு பல்கலைத்துறை அறிஞராவார். சிறந்த தத்துவஞானி, மருத்துவ மாமேதை, புகழ்பெற்ற மொழி நூல் வல்லார், மாபெருங் கவி—இவ்வளவும் கலந்த ஒன்று திரண்ட கதம்ப மேதை இவர்.

பண்டைக்கால கிரேக்கத் தத்துவஞானிகளின் நூல்கள் முஸ்லிம் அறிஞர்களைப் பெரிதும் கவர்ந்தன. கிரேக்கத் தத்துவங்களையும் இஸ்லாமியத் தத்துவங்களையும் கலந்து ஒரு

புதிய தத்துவத்தை உருவாக்கலாமென்ற அல்-கிந்தியின் (Al-Kindi) யோசனைகளை இப்னு சினு ஏற்று ஆதரித்து உலக முஸ்லிம்களிடையே பிரசாரமும் செய்தார்.

'களங்கமற்ற தத்துவ மேதைகள் சங்கம்' (Brethren of Purity) என்னும் உத்தம பாரபட்சமற்ற தத்துவஞானிகளின் நூல்கள் அல்-கஸ்ஸாலி (Al-Ghazzali), அல்-மஆரி(Al-Maari), அல்-தவ்ஹீதி (Al-Tawhidi) போன்ற பல புகழ்வாய்ந்த தத்துவ ஞானப் பெரியார்களைப் பெரிதும் கவர்ந்து ஈர்த்தன.

**பாரசீக மேதைகளின் கணித சாஸ்திர சேவை**

பாரசீகத் தாய்க்குப் பிறந்து, பாரசீகப் பாவையை மணந்த கலீஃபா மாமூனின் ஆட்சிக் காலத்தில்தான் பாரசீகக் கணித சாஸ்திர வரலாறு ஆரம்பமாகிறது. இத்தகைய பாரபட்சமில்லா கலீஃபாவின் ஆதரவினுலும் அரவணைப்பாலுமே, முன்னெப்பொழுதும் வளராத அளவுக்குப் பாரசீகக் கணித சாஸ்திரம் வளர்ச்சி பெற்ற தென்னலாம். கிரேக்க, சமஸ்கிருத நூல்களை அராபிய மொழியில் மொழி பெயர்க்கும்படி ஆணையிட்டார், அந்தக் கலீஃபா. யாகூப்-பின்-தாரிக் (Yaqub-bin-Tariq), அல்-பத்ரீக் (Al-Batriq), அல்-ஃபஜாரி (Al-Fazari) என்பவர்கள் முக்கிய மொழி பெயர்ப்பாளர்கள் ஆவர். யாகூப் என்பவர் இந்திய நூல்களை மொழி பெயர்த்ததுடன் நில்லாமல், கால அட்டவணைகள் (Calendar) பற்றியும், மற்றும் கணித சம்பந்தமான விஷயங்கள்பற்றியும்கூட எழுதினுர். அல்-பத்ரீக் என்பவர், டாலமி (Ptolemy) என்னும் கிரேக்க நிலவியல் சாஸ்திரியின் நூல்களை மொழிபெயர்த்தார். அல்-ஃபஜாரி என்பவர் பல இந்திய கணித மேதைகளின் நூல்களையும் வான சாஸ்திர நூல்களையும் அராபியில் மொழிபெயர்த்த தன்மூலம், வான சாஸ்திரத்தையும் கணித சாஸ்திரத்தையும் மேலும் வளர்ச்சியடையச் செய்தார்.

அல்-குவாரிஜ்மி (Al-Khwarizmi) என்பவர் கணித சாஸ்திரத்தைச் சீராக, முறையாகத் தொகுத்தபடியால், கணித சாஸ்திரிகள் அனைவருள்ளும் தலைமையானவரெனப் புகழப்பட்டார். கிரேக்கர்களின் அறிவையும் இந்துக்களின் அறிவையும் ஒருமைப்படுத்தவும் முயன்றுர் இவர். மற்றுமுள்ள கணித மேதைகள்: அல்-மஹானி (Al-Mahani), அபுல் வஃபா (Abul Wafa), அல்-பைரூனி (Al-Biruni), உமர் கய்யாம் (Omar Khayyam). இவர்களுடைய சிந்தனு சக்தியும் ஆராய்ச்சி

களும் பிற்கால ஐரோப்பிய வல்லுநர்களை மிகவும் கவர்ந்தன.

**வரலாற்று விஞ்ஞான வளர்ச்சியில் பாரசீகர்களின் பங்கு**

வரலாறும் விஞ்ஞானம் என்றழைக்கப்பட்டால், பாரசீகர் களே அதற்குக் காரணமாவர். அராபியர்கள் பாரசீகத்தின் மீது படையெடுப்பதற்கு முன்பே தங்களுடைய பண்டைக்கால மாமன்னர்களின் வரலாற்றின் புள்ளிவிவரங்களை யெல்லாம் பாட்டாகப் பாடி வைத்தவர்கள் பாரசீகர்கள். இப்னு-அல்-முகஃப்ஃபா (Ibn-al-Muqaffa) என்பவர் 'குதாயீ நாமா' (Khoday Nama) என்னும் பாரசீக வரலாற்று நூலைப் பாரசீக மொழியிலிருந்து அராபிய மொழியில் மொழிபெயர்த்தார். பிற்கால வரலாற்று ஆசிரியர்களுக்கு இந் நூல் ஒரு முன்மாதிரியாக அமைந்தது. மற்றும், அல்-பலாதூரி (Al-Baladhuri) என்ற பாரசீக வரலாற்று ஆசிரியர், 'அராபியர்களின் வியாபகம்' (Narrative of Arab Expansion) என்னும் ஒரு குறிப்பேட்டை எழுதியுள்ளார்.

இப்னு குதய்பா (Ibn-Qutayba) என்பவர், 'வரலாற்றுப் பெட்டகம்' (Book of Knowledge) என்ற நூலை வரைந்துள்ளார். உலக வரலாறு (Long Narrative) என்ற நூலைப் பாரசீகக் கண் கொண்டு அல்-தினவாரி (Al-Dinawari) என்பவர் எழுதி யுள்ளார். அல்-தபரீ (Al-Tabari), அல்-மஸ்ஊதி (Al-Masudi) என்ற வரலாற்றாசிரியர்கள் காலத்தில் அராபியர்களின் வரலாற்று நூல் நடை உச்சகட்டத்தை எட்டிவிட்டதென்னலாம். அல்-தபரீயின் புகழுக்குக் காரணம், குற்றங்குறை யில்லாத புள்ளி விவரங்களும், விளக்கமான வரலாற்று நடையுமாகும். இவரை முன்மாதிரியாகக் கொண்டு, பல பிற்கால அறிவாளிகள் எழுதுவராம். நவீன 'கால ஆராய்ச்சியாளர் போன்ற சிந்தனை சக்தியுடன் கூடிய சிறந்த தற்சிந்தனை வாய்ந்த (Original) ஆராய்ச்சியாளர் அல்-தபரீ.

இலக்கியம், வரலாறு ஆகிய நூல்களின் ஆராய்ச்சிக்குப் பிறகும் பல பிரதேசங்களில் பிரயாணம் செய்து சேகரித்த வரலாற்றுச் சின்னங்களையும் செய்திகளையும் கொண்டு, தமது பிரக்கியாதி வாய்ந்ததும் பெரிய வரலாற்று நூலாக விளங்கியது மாகிய 'தெய்விகத் தொண்டர்களும் அரசர்களும்' (Annals of Apostles and Kings) என்பதை எழுதி முடித்தார் அல்-தபரீ என்ற ஆராய்ச்சி அறிஞர். பின்னால் வந்த மிஸ்காவே (Miskawayh), அதீர் (Athir), அபுல் ஃபிதா (Abul Fida),

அல்-தஹாபீ (Al-Dhahabi) போன்ற வரலாற்று மாமேதைகள் கூட, அல்-தபரீயின் அந்த ஆராய்ச்சி முறையைக் கடைப் பிடித்தே தங்கள் வரலாற்று நூல்களை எழுதினர்.

'அராபியர்களிடையே ஒரு ஹெரொடாட்டஸ்' (Herodotus of the Arabs) என்று புகழப்பட்ட அல்-மஸ்ஊதி என்பவர் அனுசரித்த முறையான பல தலைப்புகளிட்ட வரலாற்று நூல்களை (Topical Method) அவருக்குப்பின் வந்த மேதைகளும் எழுதலானார்கள். அவர் எழுதிய உயர்தர வரலாற்று நூலான 'தங்கம் விளை பசும்புல் நிலமும் மாணிக்கம் விளை சுரங்கமும்' (Meadows of Gold and Mines of Gems) என்ற நூல், வரலாறும் நிலவியலும் கலந்த சுரங்கம் எனில் மிகையாகாது. நிறை அறிவு, உண்மைப் புள்ளிவிவரங்கள், அறிவியல் முறை, ஆராய்ச்சித் திறன், வரலாற்றுக் கோவை (Historical analysis) ஆகிய குண சித்திரங்களெல்லாம் ஒருங்கே பொங்கி வழியும் வரலாற்று நூல்களைத்தாம் அந்த மேதைகள் எழுதிவிட்டுச் சென்றனர். இத்தகு வரலாற்று நூல்களின் பெரும்பகுதியை அனேக ஐரோப்பிய மொழிகளிலும் இன்றும் மொழிபெயர்த்து வருகின்றனரெனில், அவற்றின் பெருமை உள்ளங்கை நெல்லிக் கனிதானே!

**இலக்கியத்துக்குப் பாரசீகர்களின் சேவை**

பாரசீக இலக்கியம் உலகப் பிரசித்தி பெற்றது. கி.பி. 10-வது நூற்றாண்டிலிருந்து, 16-வது நூற்றாண்டு வரையிலான பண்டைய இலக்கிய நூல்களை இலக்கியப் பொக்கிஷங்களெனலாம். கி.பி. 809-ல் கலீஃபா மாமூனைப் புகழ்ந்து, அப்பாஸ் மர்வாஜீ (Abbas Marwazi) என்பவர் வருணித்த கவிதான் பாரசீக மொழியின் முதற் கவி நூல் என்பார்கள். பாரசீகம் சிறு சிறு சுதந்தர நாடுகளாகவிருந்த போதுதான் பாரசீக இலக்கியமும் மொழியும் புத்துயிர் பெற்று, மறுமலர்ச்சி யடைந்து தென்றல் வீசின.

ஸஃபரீகள் (Saffarids) மற்றும் சாமானீயர்கள் (Samanids) ஆட்சிக் காலத்தில் பாரசீக மொழிதான் ஆட்சி மொழியாகவும் இலக்கிய மொழியாகவும் திகழ்ந்தது. பாரசீகத்தில் துருக்கி சுல்தான்கள் ஆட்சி செலுத்திய பிரதேசங்களிலும் கஜனவீகள் (Ghaznavids) ஆண்ட பிரதேசங்களிலும் பாரசீக மொழியே கோலோச்சிற்று. கஜனி மகமூத்கூடப் பாரசீக மொழியைப் போற்றிப் புகழ்ந்தார்.

ருதாகி (Rudaki), ஃபிர்தௌசி (Firdawsi), பாலாமி (Balami), பாரூக்கி (Farrukhi), நிஜாமுல் முல்க் (Nizamul Mulk), உமர் கய்யாம் (Omar Khayyam), சஅதி (Sadi), ஹஃபீஸ் (Hafiz) ஆகிய பாரசீக இலக்கிய மேதைகளெல்லாரும் உலகப் பிரசித்தி பெற்றவர்கள். அவர்கள் உற்பத்தி செய்து விட்டுச் சென்ற இலக்கிய பொக்கிஷங்கள் உலகின் மற்ற மொழி இலக்கியங்களுக்கு எவ்வகையிலும் இளைத்தன அல்ல.

பாரசீகத்தைச் சீரழியச் செய்த செங்கீஸ்கானின் வாரிசுகளும், அக்காட்டுமிராண்டி மங்கோலியப் படையெடுப்பை அடுத்து அக்கிரமம் விளைத்த தைமூரின் வாரிசுகளும்கூடப் பாரசீக அறிஞர்களையும் கலைஞர்களையும், அவர்கள் எழுதிக் குவித்த பாரசீக இலக்கியச் செல்வங்களையும் போற்றிப் புகழ்ந்து போஷித்திருக்கிறார்கள் என்றால், அந்த இலக்கியத்தின் பெருமைபற்றி, சிறப்புப்பற்றி, உயர்தன்மைபற்றி நீங்களே யூகித்தறியலாம். படையெடுப்புகளுக்கும், பாழாய்ப்போன நாசவேலைகளுக்கும், இரத்த ஆறுகளுக்கும், மிருகத்தனத்துக்கும் பலப்பல முறை பாரசீகம் இரையானாலும், பாரசீக இலக்கியமும் கலாசார வளர்ச்சியும் மேலும் மேலும் முன்னேறிக் கொண்டேதாம் வந்துள்ளன! பாரசீகத்தை வென்று வெற்றி மாலை சூடிய காட்டுமிராண்டிகளின் உள்ளங்களையெல்லாம்கூடத் தேன் போலும் சுவையான பாரசீக மொழியும் அழகு இலக்கிய வருணனைகளும் சுண்டி ஈர்த்து விட்டன. கண்டோர் கண் கவரும், உள்ளங் கவரும் பாரசீகக் கலாசாரங்களும்கூடக் கொள்ளையர்களின், கொலைஞர்களின் உள்ளங்களையே கொள்ளை கொண்டு, பதிலுக்குப் பதில் வெற்றி வாகை மாலை சூடியுள்ளன.

காற்றடித்த காற்பந்தை உதைக்க உதைக்க அது மேலே மேலே எழும்பிப் போவதே போலும், காய்ச்சக் காய்ச்சப் பால் சுவைப்பதே போலும், பாரசீகத்தை அடிமையாக்கிய அயல் நாட்டார்கள் பாரசீகக் கலை கலாசாரங்களுக்கே அடிமையானார்கள்!

கவிக் காவியங்களின் கனகச் சிறப்புப் போன்றே, வசன காவியங்களும் மேம்பாட்டுடன் மின்னின. இதற்கு உதாரண ரூபலாவண்யங்களாக நான்கு நூல்களைச் சொல்லலாம்:

(1) உலக மகா சரிதம் (Universal History).

(2) காபூஸ் நாமா (Qabus Nama).

(3) கஜ்னவீகளின் சரிதம் (History of the Ghaznavids).

(4) குலிஸ்தான் (Gulistan).

உயர்நடை, வண்ணவண்ணமான வருணனை, சொல்லழகு பொருளழகு, உள்ளம் கொள்ளை கொள்ளும் விளக்கப் பிரவாகம் ஆகிய இவையனைத்தும் மற்றும் பல இலட்சணங்களும் ஒருங்கே திரண்டு உருண்டு உருவான இலக்கிய பிம்பமென்னலாம், மேலே கண்டுள்ள நான்கு நன்னூல் நவரத்தின மாலை போன்ற பாரசீக வசன நூல்களையும்!

**ஸஃபாவீ காலத்தில் இலக்கியப் பஞ்சம்** (கி.பி. 1501—1736)

இத்தகைய சளைக்காத் தொடர் சிறப்புக் கிடையிலும், ஸஃபாவீ (Safavid) சுல்தான்களின் காலத்தில் பாரசீகக் கலை வளர்ச்சிக்குச் சற்றுப்பஞ்சம் ஏற்பட்டது. ஆனாலும், முஹ்தாஷிம் (Muhtasham), கஷானி (Kashani), ஹதிஃபி (Hatifi), ஷீராஜி (Shirazi), ஹிலாலீ (Hilali), முல்லா சதரா (Molla Sadra), முல்லா ஹாதீ (Mulla Hadi) போன்ற கவிகளும் தத்துவ ஞானிகளும் இருக்கத்தாம் செய்தார்கள், அவ் விலக்கியப் பஞ்சத்துக் கிடையிலும்!

## 4. அராபியரல்லாத கலாசாரங்கள்மீது பாரசீகக் கலாசாரத்தின் செயல் விளைவு

## (Impact of Persian Culture on non-Arab Cultures)

**எகிப்து**

அப்பாஸீ பேரரசின் ஓர் அங்கம் எகிப்து நாடு. கி.பி. 9-ம் நூற்றாண்டின் ஆரம்பக் கட்டத்தில், அக்லபீகள் வமிச (Aghlabids) ஆட்சியின் போது, எகிப்து சுதந்தர நாடாகியது. கி.பி. 10-ம் நூற்றாண்டில் அந்த அக்லபீகளை ஃபாத்திமாக்கள் (Fatimids) வீழ்த்தி விட்டார்கள். எகிப்தையும் ஆப்ரிக்காவையும் ஆண்ட ஃபாத்திமாக்கள் (கி.பி. 909-1160) பாரசீகக் கலாசாரத்தைப் பாராட்டுபவர்கள். எந்த ஒரு கலாசாரமுமே இல்லாத வட ஆப்ரிக்கவாசிகளான பெர்பர்கள் (Berbers), பாரசீக கலாசாரத்தை உடனே ஏற்றுக் கொண்டார்கள்.

ஐயூபி வமிசம் (Ayyubid Dynasty) வீழ்ச்சி யடைந்த பிறகு எகிப்தை ஆண்ட மம்லூக் (Mamluk) சுல்தான்களும் பாரசீகக் கலாசாரத்தை ஏற்றுக் கொண்டனர். ஆட்சித் துறையிலும்,

குடும்பம் நடத்தும் சம்பிரதாயங்களிலும், உல்லாச வாழ்க்கையிலும், பழக்க வழக்கங்களிலும் மம்லூக் சுல்தான்கள் பாரசீகக் கலைக்கு ஆளாயினார்கள். பாரசீகக் கலாசாரத்தின் தென்றல் எகிப்து முழுதும் வீசியது.

### இந்தியாவில் பாரசீகக் கலாசாரம்

பாரசீகக் கலாசாரம் இந்தியா வரையிலும் எட்டியதால், டில்லியை ஆண்ட சுல்தான்களும், பஹ்மனி சுல்தான்களும் (Bahmani Sultans) அதை ஏற்றுக் கொண்டனர். முகலாயப் படையெழுச்சிக்குப் (Mughal Invasion) பிறகு, மறுபடியும் பாரசீகக் கலாசார அலைகள் இந்தியா நோக்கிப் பாய்ந்தன. இந்துக்களும் பாரசீகக் கலாசாரத்தை ஏற்றுக் கொண்டு, பாரசீக மொழியைப் படித்து வித்வான்களுமாயினர். முகலாயப் பேரரசர்கள் கட்டிய அழகிய கட்டடங்களும் நினைவுச் சின்னங்களும் பாரசீக அழகுகளையும் இலட்சணங்களையும் அள்ளி யள்ளி வழங்கின. முகலாயர்கள் பாரசீக நடையுடை பாவனைகளை மேற்கொண்டதுடன், பாரசீகக் கலாசாரங்களையும் பின்பற்றினார்கள், போற்றினார்கள், ஆதரித்தார்கள். சுருங்கச் சொன்னால், டில்லி தர்பாரில் பாரசீகக் கலாசாரமே நடனம் ஆடியதென்னலாம். மேலும், பஹ்மனி சுல்தான்கள் காலத்தில் கூடப் (கி.பி. 1347—1518) பாரசீகக் கலாசாரமே அமலில் இருந்தது என்பது குறிப்பிடத்தக்கது.

### துருக்கியில் பாரசீகக் கலாசாரம்

சல்ஜூக் துருக்கர்களுக்குச் சொந்தக் கலாசார மேதுமில்லை. அதனால் அவர்களும் பாரசீகக் கலாசாரத்தை ஏற்றுக் கொண்டனர். ரூம் தேசத்து சல்ஜூக் சுல்தான்களும் (Saljuk Sultans of Rum) பாரசீகக் கலையைப் பின்பற்றுவோராயினர். கி.பி. 14ஆவது நூற்றாண்டின் தொடக்கத்தில் ரூம் தேசத்து சல்ஜூக்குகளை வீழ்த்திவிட்டுப் பட்டத்துக்கு வந்த உதுமானிய துருக்கர்களும் (Ottoman Turks) பாரசீகக் கலாசாரத்தையும் இலக்கியத்தையும் ஏற்றுக் கொண்டனர்.

### ஷீராஜின் முக்கியத்துவம்

பாரசீகக் கலாசாரத்தின் அரியணையென விளங்கிய ஷீராஜை (Shiraz) நோக்கி உதுமானிய அறிஞர்களும் வித்வான்களும் விரையலானார்கள். வெகு காலம் வரையில்—19ஆம் நூற்றாண்டில் பாரிஸ் (Paris) நகரம் உலக கலாசார அரியணை மீது ஏறும் வரையில்—துருக்கிய இலக்கிய காலகட்டத்தின்

கி.பி.1300-1500) ஆரம்ப காலத்தில், பாரசீகக் கலாசாரம் தன் செல்வாக்கு அலைகளை வீசிய வண்ணமிருந்தது. அயல் நாட்டாட்சிகளுடன் செய்து கொள்ளும் சகல விதமான இராஜதந்திர ஒப்பந்தங்களையும் தங்கள் தாய்மொழியான துருக்கி மொழியில் வரையாமல், உதுமானியப் பேரரசர்கள் பாரசீக மொழியிலேயே வரைந்து கொள்வார்கள்.

துருக்கிய அறிஞர்களும், நாவலாசிரியர்களும், கவிராயர்களுங்கூடத் தங்கள் பெரும் நூல்களை — அனுபவப் பெட்டகங்களை, அறிவு பொக்கிஷங்களை யெல்லாம்—பாரசீக அறிவாளிகளின் முன்மாதிரியைப் பின்பற்றிப் பாரசீக மொழியிலேயே எழுதுவராம். 'நவாய்' (Navai), ஃபுதூலி (Fuduli) போன்ற துருக்கிக் கவிகளும் அறிஞர்களும் தங்கள் மேதா விலாசங்களைத் தங்கள் தாய் மொழியான துருக்கியிலும் (Turkish) பாரசீக மொழியிலும்கூட வரைவார்களாம்.

எவ்வளவோ தாறுமாறான சண்டை சச்சரவுகளுக்கும் போர்களுக்கும் பிளவுகளுக்கும் பாரசீகம் ஆளானலும்கூடப் பாரசீக இலக்கியம், விஞ்ஞானம், கலாசார முன்னேற்றம் ஆகியவற்றின் சிறப்பு மட்டும் குறையவே இல்லை. நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக ஆசிய-ஐரோப்பிய கலாசாரங்கள்மீது பாரசீகக் கலாசார முத்தான, சத்தான முத்திரைகள் விழுந்தவண்ணமே இருந்தனவென்னலாம்.

பாரசீகம் தன் கலாசார அறிவுச் சுடரை ஏற்றி உயரத் தூக்கிப் பிடித்து உலகுக்கு வெளிச்சம் காட்டியதோடின்றி, அச் சுடரை ஐரோப்பிய அறிஞர்களின் அறிவு வளர்ச்சிக்கும் ஆராய்ச்சி வளர்ச்சிக்கும் ஒரு தூண்டு கோலாக விட்டும் சென்றுள்ளதென்று சொல்வது சற்றும் மிகையாகாது.

# 5. உதுமானியர்களின் எழுச்சியும் விரிவும்
(The Rise and Expansion of the Ottomans)

## (1) உதுமானிய அரசின் தோற்றமும் வளர்ச்சியும்
(Origin and Growth of OttomanKingdom)

கி.பி. பத்தாம் நூற்றுண்டில், மத்திய ஆசிய வாசிகளான துருக்கியர்கள் தெற்கு நோக்கியும் மேற்கு நோக்கியும் சென்று சில நிலவெளிகளில் குடியேறினர்கள். அவர்கள் பல இனங்களாகப் பிரிந்து, ஒவ்வோர் இனத்துக்கும் ஒவ்வொரு தலைவனைப் பெற்றவர்களாய் வாழ்ந்து வந்தனர். சல்ஜூக் (Saljuk) என்ற தலைவனுடைய பெயரையே சூட்டிக் கொண்ட சல்ஜூக்குகள் (Saljukites) என்போர் ஓரினத்தினர் ஆவர். டோக்கில் (Toghril), அல்ப் அர்ஸலான் (Alp Arslan), மாலிக் ஷா (Malik Shah) என்ற மூன்று மன்னர்களின் காலத்தில் சல்ஜூக் வமிசம் இஸ்லாமிய பேரரசின் பெரும் பகுதியைத் தன் ஆட்சிக்கு உட்படுத்திக் கொண்டது.

கி.பி. 1071-ல் பைஜான்ஷியப் பேரரசரைத் தோற்கடித்து, ஆசியா மைனரைத் (Asia Minor) தங்கள் ஆட்சியின்கீழ்க் கொணர்ந்தனர் சல்ஜூக்குகள். அல்ப் அர்ஸலான் என்ற சல்ஜூக் சுல்தானின் உறவு முறையினரான சுலைமான் (Sulayman) என்பவர் காலத்திலும், அவரைத் தொடர்ந்து ஆட்சி செலுத்தியவர்களின் காலத்திலும் ஆசியா மைனர் தன்னிகரில்லாத வண்ணம் பரிபாலனம் புரியப்பட்டு வந்தது. சுலைமானும் அவருடைய சந்ததியார்களும் 230 ஆண்டுகள் வரை ஆட்சி செலுத்தினர். அவர்களுக்கு ரூம் சுல்தான்கள் (Sultans of Rum) என்று பெயர். ஆரம்ப காலத்தில் இவர்கள் அப்பாஸீ கலீஃபாக்களுக்கு அடங்கியபடி ஆட்சி செலுத்தி வந்தனரெனினும், பின்னர் அவர்களை அலட்சியம் செய்தவர்களாய்ச் சுதந்தரமாகவே ஆளத் தொடங்கி விட்டனர்.

சிலுவைப் போர்கள் மூண்டதன் காரணத்தாலும், மங்கோலியப் படையெடுப்பாலும் ரூம் சுல்தான்களின் ஆட்சி ஆசியா மைனரில் நிலைகுலையலாயிற்று; ஆயினும், அது முற்றும் அழிந்து விடவில்லை. உஸ்மான்லி (Osmanli) அல்லது உதுமானிய துருக்கியர்கள் என்போர் உஸ்மான் அல்லது உதுமான் (Othman) என்பவரின் தலைமையிலும், அவருடைய குமாரரான ஓர்கான் (Orkhan) என்பவரின் தலைமையிலும் ஆசியாவிலும் ஐரோப்பாவிலும் சக்தி வாய்ந்த, கீர்த்தி மிக்க ஓர் ஆட்சியை நிறுவிக்கொண்டார்கள். உஸ்மான் அல்லது உதுமான் என்பவருடைய பெயரிலிருந்துதான் 'ஆத்தோமன்' (Ottoman) என்ற ஐரோப்பிய சொல் பிறந்தது; இஸ்லாமிய வரலாற்றிலும் ஐரோப்பிய வரலாற்றிலும் அவர்கள் 'உஸ்மான்லிகள்' (Osmanli) என்றும், 'ஆத்தோமன்கள்' (Ottomans) என்றும் முறையே அழைக்கப்படலாயினர்.[1]

## உதுமானியர் ஆட்சியின் தோற்றமும் வளர்ச்சியும்

**உதுமான்** (Othman, கி.பி. *1300—1326*)

எர்த்தோக்ரல் (Ertoghrul)என்னும் துருக்கியர் ஒருவருடைய மகனை 'உதுமான்' அல்லது உத்மான் என்பவர்தாம் உதுமானிய துருக்கியர்களுடைய (Ottoman Turks) வமிசத்தின் ஆதி முதல் தந்தையாவார். கி.பி. 1258-ல் துருக்கியர் குடும்பமொன்

[1] 'உத்மான்' என்னும் அராபிய மொழிப் பெயரைப் பாரசீகர்களும் உர்தூ மொழி பேசும் இந்திய முஸ்லிம்களும் 'உஸ்மான்' என்று உச்சரிப்பார்கள்; ஆனால், இப் பெயர்ச் சொல்லை எழுதும்போது அராபிய எழுத்திலுள்ளவாறுதான் வரைவார்கள். இந்தப் பெயரைத் துருக்கியர்கள் ஆரம்ப காலத்தில் சரியான அரப் உச்சரிப்பின்படியேதான் விளித்து வந்தார்கள். எனினும், அப்போது கிழக்கு ஐரோப்பாவில் ஆதிக்கம் பெற்றிருந்த பைஜான்ஷியப் பேரரசு கிரேக்க மொழியையே தனது ஆட்சி மொழியாகக் கொண்டிருந்த காரணத்தால், அந்த பைஜான்ஷியர்கள் கிரேக்க மொழியில் உத்மான் என்னும் பெயரை 'ஒத்தமான்' என்று திரித்துவிட்டதாகத் தெரிகிறது. எனவே, எல்லா ஐரோப்பிய நாடுகளுமே அதைப் பின்பற்றி, உத்மான் என்பதை 'Ottoman' என்று எழுத்துக்கூட்டி, உருமாற்றி விட்டன. இவ் விவரம் புரியாத காரணத்தால், தமிழகத்திலுள்ள அனேக கற்றறிந்த ஆசிரியர்களுங்கூட ஆங்கிலத்திலுள்ள 'Ottoman' என்பதை அப்படியே தமிழில் உச்சரித்து நகைப்புக்கு இடமாக்கிவிட்டனர். Uthman, Usman, Ottoman என்னும் அத்தனை ஆங்கில உருவமைந்த சொற்களும், ஒரே அராபிய சொல்லான 'உத்மான்' என்பதையே குறிப்பிட்டுக்காட்டும். எனவே, ஆங்கிலத்தில் 'Ottoman Empire' என்ருல், 'உதுமானியப் பேரரசு' என்றுதான் அதைத் தமிழில் எழுதவும் உச்சரிக்கவும் வேண்டும்; வேறு எப்படி உச்சரிப்பதும் சரியன்று; பெருந் தவறே யாகும். இப் பேரரசு தோன்றுதற்கு முதற் காரணமா யிருந்தவரின் பெயர் உத்மான் (உதுமான்) ஆகும். இந்த உதுமான் வேறு; இஸ்லாத்தின் ஆரம்பகால மூன்ருவது கலீஃபாவாகிய உதுமான் வேறு என்பதை மாணவர்கள் நினைவில் இருத்துதல் வேண்டும்.

றில் தோன்றியவரே இந்த உதுமான். அவருடைய தந்தையான எர்த்தோக்ரல், ஒரு சிறிய துருக்கிய இனத்துக்குத் தலைவரா யிருந்தார். சல்ஜூக்குப் பேரரசுக்கு நேரிட்ட ஒரு பேராபத்தி லிருந்து அதை மீட்பித்த அரிய சேவைக்காக, சுல்தான் அலா வுத்தீன் (Sultan Alauddin) அவரைப் பெரிதும் பாராட்டி, அதற்கு அறிகுறியாக அவருக்கு அங்கோரா (Angora) என்ற பிரதேசத் துக்கு அண்மையிலிருந்த சில நிலப் பாகங்களை இனமாக வழங் கினார். கி.பி. 1288-ல் தமது பழுத்த வயதில் எர்த்தோக்ரல் காலமானபோது, அவருடைய மகனான உதுமான் அவ் வெட் பிரிவுத் துருக்கிய இனத்தின் தலைவரானார்.

அக் காலகட்டத்தின்போது, சல்ஜூக்கியப் பேரரசு அழி வுப் பாதையை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. ரோமானி யர்களை (Romans) எதிர்த்து மோதி, மங்கோலியப் படையெடுப் பால் நலிவுற்று, பல போராட்டக் குழப்பங்களால் மேலும் சல்ஜூக்குகள் பெரிதும் பலஹீனமுற்றிருந்தனர். தம் தந்தை எர்த்தோக்ரலைப் போலவே உதுமானும் பலவீனமடைந்த சல்ஜூக்குகளுக்குப் பக்கபலமாக, மலையென நின்று உதவினார். தங்களின் பரோபகாரியான சுல்தான் அலாவுத்தீன் கால மடைந்த பிறகுதான் தம்மை ஒரு சுதந்தர சுல்தானாகப் பிரகட னப்படுத்திக்கொண்டார் உதுமான். பின்னர் அவரே சல்ஜூக்கு களின் அரசியல் வாரிசுமானார்.

பைஜான்ஷியப் பேரரசின்மீது சல்ஜூக்குகள் கொண் டிருந்த பண்டைய பகைமைக்கும் துருக்கியரான உதுமான் வாரிசானதுடன், 'நிகேயியா' (Nicaea), 'நிகோமீடியா' (Nico-media) என்னும் பைஜான்ஷியப் பேரரசின் இரு பிரதேசங்களை யும் அவர் கைப்பற்றிக் கொண்டார். அம்மட்டோ! தமது மறை வுக்கு முன்னர், 'புருசா' (Brusa) என்ற பைஜான்ஷிய நகரத்தையும் பிடித்து, உதுமானியப் பேரரசு உருவாவதற்கும் ஆழமான அடிக்கல்லை நட்டுவிட்டே அவர் சென்றாரென்றும் சொல்லலாம். அந்த அஸ்திவாரத்தின்மீதுதான் பிற்காலத்திய வல்லமை மிக்க உதுமானியப் பெரும் பேரரசு ஆலமரம்போல் தழைத்தோங்கிற்று.

ஆசியா மைனரில் ஒரு சிறு பிரதேசத்தை வென்று, அவ் விடத்தில் உதுமானிய வீரக்கொடியைப் பறக்கவிட்ட முதல் வீரரும், நல்ல தீரரும் அவரே (உதுமான்) ஆவார். அந்த ஆரம்பத்திலிருந்துதான் உதுமானுக்குப் பின்வந்த உதுமானியப் பேரரசர்கள், அப் பிரதேசங்களுடன் மற்றும் பல நிலப்பரப்பு

களையும் இணைத்து, உதுமானியப் பேரரசைப் பெரிதாக்கி, பெருமை வாய்ந்ததாக ஆக்கி, விரிவடையச் செய்துவிட்டார்கள்.

**உதுமானின் திறன்**

தமது திறமை, தகுதி, அரசியல் ஆருடம், இராஜதந்திரம் ஆகிய இன்னோரன்ன கூர்மதி சூழ்ந்த சாமர்த்தியங்களால் கிரேக்கர்களையும் வென்றதுடன், பழைய எதிரிகளையும் புது நண்பர்களாக்கிக் கொண்டார் உதுமான். அவர் வீரத்தில் சிங்கமாக, குணத்தில் தங்கமாக நின்றிலங்கினார். துருக்கியருக்கும் கிரேக்கர்களுக்கும் அவரே ஒப்பற்ற தலைவராக, முத்தான முதல்வராக ஒளி வீசினார். அறிவாலும் ஆற்றலாலும், அன்பாலும் பண்பாலும் தம்மைச் சூழ்ந்திருந்தோரை வீரத்தால் வென்றார் அவர். மதச் சகிப்புத் தன்மையுடன் எதிர்ப்பை அடக்கி, அன்பால் ஆண்ட பெருமையும் சிறப்பும் உதுமானைச் சாரும். இத்தகு மேதை தமது 68ஆம் வயதில் (கி.பி. 1326-ல்) காலமானார்.

**தந்தை உதுமானும் தனயன் ஓர்கானும்**

ஒரு புது மாதிரியான நெஞ்சுரம் வாய்ந்துள்ள மனிதாபிமானமுள்ள மக்கள் சமுதாயத்தின் தந்தை என்று உதுமானை வருணிக்கலாமென்றால், அவருடைய மகனான ஓர்கானை மக்கள்மீது திறமையான ஆட்சி செலுத்தி அவர்களை மாண்புற உருவாக்கிய பெருஞ் சிற்பி எனச் சித்திரிக்கலாம். உதுமான் தம்மினத்தைப் புகழேணிமீது ஏற்றிக் காண்பித்தார்; ஓர்கானோ தம்மினத்துக்குச் சிங்காசனம் அமைத்துக் காண்பித்தார்.

**ஓர்கான்** (Orkhan, கி.பி. 1326—1360)

புலிக்குப் பிறந்தது பூனை ஆகுமா? அக் காலத்தில் சுல்தான் ஓர்கான் தம் தந்தைக்கிணையான ஒரு சிறந்த போர்வீரர்; அஞ்சா நெஞ்சமுடைய தளபதி; தகுதிசால் மக்கள் தலைவர்; சுறுசுறுப்புமிக்க பெருந் தலைவர்; திறமையான ஆட்சியாளர்; தன்னிகரில்லா இராஜ தந்திரி. ஆழ்ந்த அரசியல் ஞானியாகிய அவர் தம் குடிமக்களின் சுக துக்கங்களையும் பிரச்சினைகளையும் அறிந்து, தக்கனவற்றை ஏற்பாடு செய்யும் சாமர்த்தியசாலியுமாவார். எவரும் பிறக்கும்போதே பெரியவனாவதில்லை; எவரும் எவனையும் பெரியவனாக்கிவிட முடியாது. பெருமையும் சிறுமையும் தான் தர வருமே!

புருசா (Brusa) நகரம் வீழ்ச்சியடைந்த போதுதான் உதுமான் காலமானூர். அவர் நிகேயியாவையும் நிகோமீடியாவையும் சுலபமாகக் கைப்பற்றியதோடு, அவற்றைப் பலப்படுத்தாமலும், சட்டச் சீர்திருத்தங்களேதும் அவற்றினுக்குச் செய்யாமலும், வர்த்தகச் செலாவணிகளுக்கு வாய்ப்பான நாணயங்களேதும் அச்சடித்து வெளியிடாமலும், தமது இராச்சியத்தின் எல்லைகளை வரையறுக்காமலும், தம் குடிமக்களின் ஒற்றுமைக்கான தேசிய உணர்ச்சி எதையும் போதிக்காமலும், தமது இராச்சியத்தினும் பன்மடங்குப் பலம் வாய்ந்த சுற்றுப்புற எல்லைநாடுகளுக்கிடையில் தம் மகனுன ஓர்கானை விட்டுவிட்டுக் கண் மூடினூர்.

துறைமுகங்களில்லாத, மாலுமிகள் எவரும் மருந்துக்குமில்லாத கப்பல் போன்று, ஓர் அரசென்று சொல்ல முடியாத ஒரு நில அமைப்புத்தான் சுல்தான் ஓர்கானுக்குக் கிடைத்த பரிசு. எனவே, தமது இராச்சியத்தையும் ஆட்சியையும் பலப்படுத்த ஓர்கான் தமக்குண்டான திறமைகளையெல்லாம், ஆற்றல்களையெல்லாம் ஒருங்கே கூட்டிப் பிரயோகித்துக் கடினமாக உழைக்க வேண்டியவரானூர். ஒவ்வொரு பிரச்சினையையும் தமது திறமைசால் அறிவைக் கொண்டு அவர் தீர்வு கண்டார். தமது ஆட்சிக் காலமான 35 ஆண்டுக்குள் அவர் பல இனங்களைச் சேர்ந்த மக்களையெல்லாம் கலப்புத் திருமணத்தின் மூலம் ஓரினமாக்கி, ஒரு பெரும் நாட்டையே உருவாக்கிவிட்டார்!

அறிவாலும் ஆற்றலாலும், அன்பாலும் போற்றத்தக்க மதச் சகிப்புத்தன்மையாலும் அவர் தம் விரோதிகளையும் நண்பர்களாக்கிக் கொண்டார். வாளெடுத்து வெல்வதைக் காட்டிலும், விவேகத்தால் கத்தியின்றி ரத்தமின்றி வெல்வதே சாலவும் சிறந்தது என அறிந்து, அக் கொள்கைப்படி நடந்தார் சுல்தான் ஓர்கான். கிரேக்கர்களும் கிரேக்கர்களல்லாதவர்களும், ஓர்கானின் பெருமையும் சிறப்பும் வாய்ந்த குணவிசேஷங்களுக்கிரையாகி, தங்கள் பண்டைய மதங்களையும் கலாசாரங்களையும் கைவிட்டு, உதுமானியப் பாரம்பரியக் கொடியின்கீழ் மலைபோல் குவியலானூர்கள்.

ஆசியா மைனரைச் சேர்ந்த அரைகுறை வெற்றியில் தம் தந்தை விட்டுச் சென்ற நிகேயியா, நிகோமீடியா போன்ற நகரங்களில் முழுமையான வெற்றிக் கொடியை நாட்டி அவற்றைத் தமது இராச்சியத்துடன் சேர்த்துக் கொண்டு பலப்படுத்தினூர் ஓர்கான். அதன்பின், அவர் ஆசியா மைனரிலுள்ள

சிறு இராச்சியங்களான ஐடீன் (Aidin), சாருகான் (Saru-khan), மைசியா (Mysia) போன்றவற்றைத் தமது வீரத்தாலும் இராஜதந்திரத்தாலும் வென்று, அவற்றையும் தமது அரசுடன் ஒருங்கிணைத்துக் கொண்டார். மற்றும், மதத் துறையில் சகிப்புத் தன்மையாலும், தாராள மனப்பான்மையாலும், தம் பகைவர்களையும் நண்பர்களாக்கிக் கொள்ளும் சுமுகமான போக்காலும் தமது நாட்டின் பரப்பளவைச் சிறுகச் சிறுக விரிவாக்கிக் கொண்டதுடன், அதை உறுதிமிக்க ஊன்றுகோலாகவும் ஆக்கிக் கொண்டார் ஓர்கான்.

ஓர்கானின் பரந்த மனப்பான்மையோடு கூடிய அதிகாரம், ஆட்சித்திறமை, கௌரவ குணங்கள் முதலியவற்றின் காரணமாக, தேனை நாடிவரும் ஈக்கள் போல், அவரை நண்பர்களும் இதற்குமுன் நட்புப்பூண்டிராதவர்களும் ஏற்றுக்கொள்வாராயினர். அதுமட்டுமின்றி, பைஜான்ஷியப் பேரரசின் எதிர்காலத்தை நிருணயிக்கும் சிற்பியுமானுர் ஓர்கான். தமது இராச்சிய எல்லையை ஐரோப்பாவுக்குள்ளும் நீட்டிவிட வேண்டுமென்பது அவரது பேரவா. அதற்கான தருணத்தையும் சூழ்நிலைகளையும் அவர் கவனித்துக்கொண்டேயிருந்து, இறுதியில் 1345-ல் தாம் கண்டுவந்த கனவை நனவாக்கிக் கொண்டார். அடுத்த அத்தியாயத்தில் நாம் அதைப்பற்றிப் படிப்போம். தந்தையானவர் உதுமானிய இனத்தை உண்டு பண்ணிவிட்டார்; மகனுன ஓர்கானே உதுமானிய அரசையே நிறுவி விட்டார்!

## முராத் (Murad, கி.பி. 1360—1389)

அரசியலாட்சி இயல் அறிவு, இராஜதந்திரம், குடிமக்களின் நல்வாழ்வுக்கான தேவைகளை யூகித்துணருகிற சக்தி, மனித உள இயல்புகளையும் விளைவுகளையும் ஆராயும் அறிவுத் திறமை ஆகிய குணங்களைப் படைத்த ஓர் அரசன் தேவையாயிருந்த அக் காலகட்டத்தில், அத்தனை குண நலப் பண்புகளும் ஒருங்கே அமைந்த குணக்குன்றுபோல் காட்சியளித்தார் சுல்தான் முராத். இவரே உதுமானியப் பரம்பரை எதிர்காலத்தில் பலப்பல வெற்றி மாலைகளைச் சூட மூலகாரணமாக விளங்கினுர்.

ஓர்கானின் தலைமகனுன சுலைமான் பாஷா (Sulayman Pasha) என்பவர் விபத்தொன்றில் சிக்கி மரணமடைந்ததால், ஓர்கானுக்குப் பின் அவருடைய இரண்டாவது மகனுன முராத் அரியணை ஏறினுர். இவரும் புலிக்குப் பிறந்த மற்ருெரு புலியாயிலங்கினுர். மூர்க்கத்துடன் பாய்ந்து போராடும் பயங்கரப்

போர் வீரன்; ஆற்றல்மிக்க சிறந்த தளபதி; நியாயம் வழங்கும் நீதிபதி; மக்கள் குலத் தலைவன்; உதுமான் இனத்துத் தங்கம்; எல்லோரும் போற்றும் வீரசிங்கம்; ஆற்றலின் உருவம்; அறிவின் பிம்பம்; அரசியல் திறத்தின் திருவுருவம். சுருங்கச் சொன்னால் அக் காலகட்டத்தில் தோன்றிய அபார இராஜதந்திரி அவர். சிற்றின்பத்துக்கு எதிரியாயும், அரசியல் ஆர்வமிக்கவராகவும், பட்டுமெத்தைப் படுக்கையைக் காட்டிலும் குதிரையேறிப் போர்க் களம் புகும் தீரத்தையே விரும்புபவராகவும், இன்னிசைக் கச்சேரியைக் காட்டினும் சண்டைக் கச்சேரியை விரும்பும் வீரராகவும் விளங்கினார் முராத். 'அழகு நல்லாளொருத்தியின் சரச சல்லாப ஆபரண ஒலி வீச்சுகளைக் காட்டினும், போர்க்கள வாள் வீச்சு வெட்டு கோஷங்களைக் காதாரக் கேட்பதில் பேரின்பங் காண்பவன் அவன்' என்று முராதை ஒருவர் வருணித்துள்ளார்.

இத்தகு காரியக்கண் போர்வீர சுல்தானுன முராதின் வீர தீரச் சாதனைகளால்தாம், உதுமானியப் பேரரசு ஆசியாவிலும் ஐரோப்பாவிலும் ஆலமரம் பரவுவதுபோல் நாலுத் திக்குகளிலும் பரவலாயிற்று. ஆசியாவிலிருந்து ஐரோப்பா கண்டத்துக்குள் ஊடுருவிப் பலப்பல வெற்றிக் கொடிகளையும் விருதுகளையும் நிறுவிய பின்னர், ஆசியா மைனரில் இருந்த அரசுகளின்மீது சுல்தான் முராத் பாய்ந்தார். கெர்மான் (Kerman), டெக்கே (Tekke), ஹாமித் (Hamid) போன்ற சிறு சிறு அரசுகள் முராதை எதிர்ப்பதென்பது மரணத்தை எதிர்ப்பதற்கு நிகராகுமென நினைத்துப் பீதியுற்று விட்டன. மேலும், பெருவீரனுன முராதின் இடைவிடாப் போர்களின் மூலம் உதுமானியப் பேரரசு ஐரோப்பாவினுள்ளேயும் வெகுதூரம் பரவ ஆரம்பித்தது. அவரது போராற்றலைக் கண்ட ஆசியா மைனரிலுள்ள குறுநில மன்னர்கள் பலர் அவரை வணங்கி நின்றனர்.

கெர்மான் பிரதேச சுல்தான் தம் செல்வியை முராதின் தலைமகனை பாயஜீத் என்பவருக்கு மணம் செய்து கொடுத்ததுடன், தம் அரசின் வடமேற்கு எல்லைப் பிரதேசங்களை உதுமானியப் பேரரசுடன் இணைத்துச் சரணுகதியுமடைந்தார். ஹாமித் தேச சுல்தானும் அவ்வாறே தமது அரசின் சில முக்கிய பிரதேசங்களை முராதுக்கு விற்றதுடன், சமாதான உடன்படிக்கையும் செய்து கொண்டார். இவ்வாறு, கத்தியின்றி ரத்தமின்றி ஆசியா மைனரின் பெரும் பாகத்தைத் தமது பேரரசுடன் இணைத்துக் கொண்டு மாபெரும் வெற்றி மாலை சூடினார் சுல்தான் முராத். அவர் கண்ட கனவு நனவாயிற்று. இவ் வீரத் திலகம்

ஐரோப்பிய மண்ணில் புரிந்த சாதனைகள்பற்றி அடுத்த அத்தியாயத்தில் ஆராய்வோம்.

இவ்விதமாக, (தந்தை) உதுமான், உதுமானிய இன நிறுவனர்; (மகன்) ஓர்கான் உதுமானிய அரசு நிறுவனர்; (பேரர்) முராத் உதுமானியப் பேரரசின் நிறுவனர்! என்னே, உதுமான் குடும்ப வழிவழிப் புகழ்!

**பாயஜீத் (Bayazid, கி.பி. 1389—1402)**

பெரு வீரர் சுல்தான் முராத் கோசாவா (Kossova) போரில் கி.பி. 1389-ல் படுகொலை செய்யப்பட்டார். பிறகு அவருடைய மகன் பாயஜீத் பட்டத்துக்கு வந்தார். இவரும் தந்தை போலத் திறமைசாலிதாம். ஆனால், அவரைப் போன்ற அவ்வளவு சிறந்த அரசியல்வாதியும் அல்லர்; பெரும் இராஜ தந்திரியு மல்லர். அவர் வீரமுள்ளவரேயானாலும்,தேவையான அளவுக்கு இராணுவ விவேகமற்றவர். இக் குறை காரணமாக, இனிமேல் நிகழவிருந்த தைமூரின் படையெடுப்பின்போது உதுமானியப் பேரரசு தோல்வியும் இழப்பும் அடைய நேர்ந்தது.

ஆனாலும், பாயஜீத் ஐரோப்பாவிலும் ஆசியா மைனரிலும் தமது வெற்றி விஜயங்களைத் தொடர்ந்து நடத்திக் கொண்டிருந்தார். கிரீஸைக் காட்டிலும் ஆசியா மைனர்மீதுதான் அவருக்கு நாட்டம். ஆசியா மைனரின் முஸ்லிம் அரசுகளான எஃபீசஸ் (Ephesus), ஐடீன் (Aidin), கரமானியா (Karamania) போன்றவற்றினை ஒன்றன்பின் ஒன்றாக அவர் வென்றார். இவ்வாறு முஸ்லிம் அரசுகள்மீதே படையெடுத்த பாயஜீதின் தவறான போக்குக்கு அவருடைய படையே எதிர்ப்பாக இருந்தது.

கி.பி. 1402-ல் மத்திய ஆசியாவிலிருந்து படையெடுத்து வந்த மங்கோலிய-துருக்கிய தளபதி தைமூரிடம் பாயஜீத் தோல்வியடைந்தார். இதனால் உதுமானியப் பேரரசின் கௌரவத்துக்கும் அந்தஸ்துக்கும் ஒரு தாற்காலிகக் கலக்கமும் திகிலும் குழப்பமும் நேர்ந்துவிட்டன வென்னலாம். இந்தத் தோல்வியால் அவமானமுற்று, மனம் உடைந்து, பெரும் அதிர்ச்சிக்கு ஆளாகிவிட்ட சுல்தான் பாயஜீத் கி.பி. 1403-ல் மரணமடைந்தார்.

**முதலாம் முகமத்; இரண்டாம் முராத்; இரண்டாம் முகம்மத் (கி.பி. 1403—1451)**

கி.பி. 1402-ல் அங்கோரா (Angora) என்ற இடத்தில் தைமூரால் உதுமானியர்களுக்குத் தோல்வி நேரிட்டது. இத்

தோல்விக்கு வரலாற்று முக்கியத்துவம் ஏதுமில்லை. அது ஒரு தாற்காலிக அதிர்ச்சியே தவிர வேறொன்றுமில்லை. பாயஜீதுக்குப் பின் உதுமானிய இராச்சியத்தில் உள்நாட்டுப்போர் மூண்டு, முடிவில் முதலாம் முகம்மத் (Mohammad I) பட்டமேறினர் (1403-ல்). இந்த சுல்தான் தமது திறமையாலும், பொறுமையான நடக்கையாலும் தம் தந்தையிழந்த பிரதேசங்களை மெல்ல மெல்ல மீட்டுக் கொண்டார்.

இவரும், இவருடைய புகழ்மிக்க மகனுன இரண்டாம் முராதும் (Murad II) ஆசியா மைனரின் விஷமிகளான, போட்டியாளர்களான குறுநில மன்னர்களை மறுபடியும் தோற்கடித்து, ஆசியா மைனர் முழுதையுமே உதுமானியப் பேரரசுடன் இணைத்துக் கொண்டனர். முராதின் மகனுன இரண்டாம் முகம்மத் தமது வீரத்தால் கான்ஸ்டான்ட்டிநோப்பிளைக் (Constantinople) கி.பி. 1453-ல் பிடித்து அழியாப் புகழ்மாலை சூட்டிக்கொண்டார்.

## (2) உதுமானிய சுல்தான்களின் அரபு வெற்றிகள் (Ottoman Conquests of Arab Kingdoms)

இதுவரை உதுமானிய துருக்கியர்களின் எழுச்சிபற்றியும், அவர்கள் அடைந்த வெற்றிகள்பற்றியும் படித்தோம். 14ஆவது நூற்றுண்டு தொடக்கத்தில் தங்கள் சொந்த நிலமாகிய அனட்டோலியாவில் (Anatolia) வரலாற்றுத் துறையில் வளர்ச்சி மிக்கவர்களாய்க் காட்சியளித்த அத் துருக்கியர்கள் விரைவாகவே ஐரோப்பாவிலும் ஆசியாவிலும் அரசியல் முக்கியத்துவம் பெற்றவர்களாகக் காட்சியளிக்கலானுர்கள். பல இராச்சியங்களும் பல நகரங்களும் ஒன்றன்பின் ஒன்ருக அவர்களுடைய வெற்றிப் பாதையில் நிமிர்ந்து நிற்க முடியாமல் சரணுகதியடைந்தன. மதவெறியில்லாமலும், மதி நுட்பத்துடனும், மனிதாபிமான தாராளப் போக்குடனும், பகைவர்களையும் நண்பர்களாக்கும் நற்குண நற்செயல்களைக் கொண்டும் பலப்பல அன்னிய மாநிலங்களைத் தங்கள் செல்வாக்கின்கீழ்க் கொணர்ந்தனர் உதுமானிய துருக்கியர்கள்.

கி.பி. 1453-ல் கான்ஸ்டான்ட்டிநோப்பிளும் உதுமானியர்கள் வசமாகிவிட்ட பின்னர், முன்பு கி.பி. 1258-ல் ஹீலாகூகானின் மங்கோலியப் படையெடுப்பால் சீர்குலைந்து, நிலை தடுமாறிய அரசியலுடன் காட்சியளித்து வந்த அரேபியாவையும் தங்கள் பேரரசுடன் இணைக்க உதுமானியப் படை கிழக்குப் பிரதேசம் நோக்கிப் படையெடுத்தது.

**உதுமானிய பேரரசர்கள் அரபு அரசுகளை வென்ற சுருக்க வரலாறு**

கி.பி. 1481-ல் இரண்டாம் பாயஜீத் (Bayazid II) என்னும் சுல்தான் பட்டமேறியபோது, உதுமானியர்களுக்கும் எகிப்தை ஆண்டு கொண்டிருந்த மம்லூக் சுல்தான்களுக்கு மிடையே போர் மூண்டது. ஆரம்பக் கட்டத்தில் எல்லைச் சச்சரவுகளாகக் காட்சியளித்த நிகழ்ச்சிகள் பின்னர்ப் பெரும் போர்களாக உருவெடுத்தன. உதுமானியர்களுக்கு ஏற்பட்டுவிட்ட மற்ருேர் ஆபத்து, 16ஆவது நூற்ருண்டின் தொடக்கத்தில் பாரசீகத்தை ஆண்ட ஷீஆப் பிரிவினராகிய ஸஃபாவீகளின் (Safavid) வல்லமையாகும். இவ்விரு எதிர்ப்புகளையும் சமாளித்து, மத்திய கிழக்குப் பிரதேசத்திலுள்ள பல சிற்றரசுகளையும் வென்ற பெரும் சாதனை இரண்டாம் பாயஜீதின் சிறப்புமிக்க மைந்தரான சுல்தான் சலீமைச் சார்ந்ததாகும்.

சுல்தான் பாயஜீதுக்குப் பின், அவருடைய மகன் சலீம் (Salim) கி.பி. 1512-ல் அரியணைமீது அமர்ந்தார். இப் புதிய சுல்தானும் சுறுசுறுப்பு, ஆவேச ஆட்சிப்பற்று, தன்னிகரற்ற அஞ்சாநெஞ்சம் எல்லாம் படைக்கப் பெற்ற போர் வீரனுவார். இவர் ஆட்சி செலுத்திய ஒன்பது ஆண்டுக்குள், வேறெந்த உதுமானிய சுல்தானையும்விட மிக அதிகமான நிலப்பரப்புகளை வென்று, உதுமானியப் பேரரசைப் பரவச் செய்தார். பாக்தாதின் கி.பி. 1258 பெரும் வீழ்ச்சிக்குப் பின், எகிப்து, சிரியா, இராக், பாரசீகம், அரேபியா (Arabia) போன்ற அப்பாஸீ கிலாஃபத்தின் பெரும் மாநிலங்கள் அந்த அந்த ஆளுநர்களின்கீழ்ச் சுதந்தர நாடுகளாயின. ஆளுநர்கள் சுல்தான்களாயினர்; மாநிலங்கள் அரசுகளாயின. பாரசீகத்தில் 16ஆம் நூற்ருண்டில், ஷா இஸ்மாயீல் (Shah Ismail) என்பவரின் தலைமையில் புதிய ஷீஆப் பிரிவினரான ஸஃபாவீ பரம்பரையின் ஆட்சிக்கு வித்தூன்றப்பட்டது.

**சுல்தான் சலீம் - ஷா இஸ்மாயீல் மோதல்**

தமக்கெதிராக ஐரோப்பியர்களைத் தூண்டி விடுவதாக, சுல்தான் சலீமுக்கு ஷா இஸ்மாயீல்மீது பெரும் சந்தேகம் தோன்றிற்று. மற்றும், பாரசீகம் ஷீஆக்களின் வலிமைமிக்க ஒரு கோட்டையாகக் காட்சியளித்தது. அல்லாமலும், ஆசியா மைனரின் ஷீஆ சிற்றரசர்களையும் தமக்கெதிராகத் தூண்டிவிட்டுக் கொண்டிருந்தார் ஷா இஸ்மாயீல் என்றும் சலீம் ஐயம் கொண்டார். இக் காரணங்களால், கி.பி. 1514-ல், சால்திரான் (Chaldiran)என்னுமிடத்தில் ஷா இஸ்மாயீலைத் தோற்கடித்

தார், உதுமானியப் பேரரசரான சுல்தான் சலீம். தப்ரீஸ் (Tabriz), இராக் (Iraq), ஆர்மீனியாவின் (Armenia) ஒரு பகுதி ஆகியவற்றை உதுமானியர்கள் வென்றனர்.

அடுத்து, எகிப்துக்குப் பிடித்தது கேடுகாலம். காரணம், உதுமானியர்களின் கொடிய எதிரியான பாரசீக ஷா இஸ்மாயீலுடன் எகிப்திய மம்லூக் சுல்தானுன கோரி என்பவர் அந்தரங்கமாக நட்புறவு பூண்டிருந்தார்.[1] கி.பி. 1516-ல் நடைபெற்ற மர்ஜ்-தாபீக் (Marj-Dabig) போரில் எகிப்திய படை உதுமானியர்களால் தோற்கடிக்கப்பட்டதுடன், அதன் கிழச் சிங்க சுல்தானும் (கோரியும்) மாண்டார். இதற்குப் பின், சுல்தான் சலீம் அலெப்போ (Aleppo) நகருக்குள் பிரவேசித்தபோது, 'பாதுகாவலரே!' (Liberator) என்று பெருங் கோஷமிட்டுக் குடிபடைகள் அவருக்கு மகத்தான பெரும் வரவேற்பளித்தனர். அதே ஆண்டில், சிரியாவின் தலைநகராகிய டமாஸ்கஸ் (Damascus) என்ற நகருக்குள் சலீம் நுழைந்தபோது, 'மக்கள் தலைவர்கள்' என்று தங்களைத் தாங்களே அழைத்துக்கொண்டிருந்த பலர் எகிப்தை நோக்கி ஓடித் தப்பினர்; மற்றையோர் சலீமுடன் சேர்ந்து கொண்டனர். அதிலிருந்து சிரியாவும் உதுமானியப் பேரரசுடன் இணைக்கப்பட்டுவிட்டது.

**மீண்டும் எகிப்தின்மீது சலீமின் படையெடுப்பு**

சிரியாவில் கிடைத்த வெற்றிப் பூரிப்பினுல் மறுபடியும் எகிப்தின்மீது சலீம் புலிபோல் பாய்ந்தார்; காலஞ் சென்றுவிட்ட அல் கோரியின் அடிமையான துமான் பே (Tuman Bey) என்ற சுல்தானையும் அவர் தோற்கடித்தார். அவ்வளவுடன் எகிப்தும் உதுமானியப் பேரரசின் ஒரு மாநிலமாயிற்று. அரேபியாவிலுள்ள புனித ஸ்தலங்களான மக்காவும் மதீனுவும் உதுமானியப் பேரரசின் அங்கங்களாயின. இதற்குப் பின்னர் அல்ஜீரியாவையும் (Algeria) உதுமானியர் கைப்பற்றினுர்கள். மாபெரும் வீரராகிய சுல்தான் சுலைமான் (Sulaiman the Magnificent) காலத்தில் தூனீஸியா உதுமானியர்களால் கைப்பற்றப்பட்டு (1534-ல்) அதன்பின் நாற்பது ஆண்டுகள் கடந்து, துருக்கிய மாநிலமாயிற்று. ஏடென் (Aden), மஸ்கட் (Muscat) போன்ற முக்கிய துறைமுகங்களைப் புகழ்வாய்ந்த துருக்கிய கப்பற்படைத் தலைவரான பீரி ரெய்ஸ் (Piri Reis) கைப்பற்றி உதுமானியப் பேரரசுடன் இணைத்தார்.

[1] முன் பக்கம் 49, 50 காண்க.

மற்றுமொரு புகழ்மிக்க தளபதியான சினன் பாஷா (Sinan Pasha) என்பவர் தென் அரேபியாவைச் சேர்ந்த ஏமனைக் (Yemen) கைப்பற்றினார். அவரே மறுபடியும் திரிப்போலி நகரையும் கைப்பற்றினார். இவ்வாறாகத் திரிப்போலி, தூனிஸ், அல்ஜீரியா போன்ற அரபு அரசுகளை (Arab States) எல்லாம் உதுமானியர்கள் கைப்பற்றித் தங்கள் பேரரசுடன் இணைத்துக் கொண்டு விட்டனர்.

இப் பிற்கால வட ஆப்ரிக்க வெற்றிகள், சிரியாவையும் எகிப்தையும் ஏற்கெனவே வென்ற சுல்தான் சலீமின் மகனான சுலைமானின் சாதனைகளாகும். இவ்வாறாக, ஒன்றன்பின் ஒன்றாக, ஆசியா, ஆப்ரிக்கா, ஐரோப்பா ஆகிய மூன்று கண்டங்களிலும் உதுமானியர்களின் பேரரசு விரிவடைந்தது. இதனால் இரண்டு பெரும் பெருமை வாய்ந்த பைஜான்ஷியப் பேரரசுக்குரிய கலாசாரத்துக்கும், அராபிய கலாசாரத்துக்கும் உதுமானியப் பேரரசு வாரிசு பாத்தியம் பெற்றுவிட்டது.

வரலாற்றாசிரியர் ஹிட்டி இவ் வுண்மையை இவ்வாறு வருணிக்கிறார்:

'கிழக்குப் பூபாகங்களையும் (Eastern Lands) மேற்குப் பூபாகங்களையும் (Western Lands) வென்று, பூபாக வாரிசு பெற்ற பெருமை உதுமானியர்களுக்குண்டு. அதாவது, மேலை நாடுகளிலும் கீழை நாடுகளிலும் பல பகுதிகளைக் கைப்பற்றி, அங்கெல்லாம் தங்கள் ஆதிக்கத்தை நிலைநிறுத்தியதுடன், ஆங்காங்குள்ள பண்பாடுகளையும் ஏற்றுக்கொண்டு, அவற்றின் தத்துப் புத்திரர்களாக மாறிய பெருமை உதுமானிய துருக்கர்களைச் சாரும்.'[1]

## (3) கான்ஸ்டான்ட்டிநோப்பிளின் வீழ்ச்சி (Fall of Constantinople, 1453 A.D.)

கான்ஸ்டான்ட்டிநோப்பிள் என்ற முக்கிய நகரம் அமைந்து விட்டிருந்த அதிமுக்கியமான கேந்திர நிலைபற்றியும், ஐரோப்பாவுக்கும் இந்தியாவுக்குமிடையே நடைபெற்ற அகில உலக வாணிபங்கள்பற்றியும், வர்த்தகச் செல்வழிகள்பற்றியும், அச் செல்வழிகள்மீது சொந்தம் பாராட்டி யார் அதிகாரம் செலுத்துவது என்பதில் முளைத்த தொல்லைகள்பற்றியும், இவற்றின் பொருட்டாக ரோமானியர்களுக்கும் அராபியர்களுக்குமிடையே எழுந்த

[1] பேராசிரியர் ஹிட்டி, 'அராபிய வரலாறு,' பக்கம், 710.

சச்சரவுகள் சண்டைகள் போட்டிகள்பற்றியும் ஏற்கெனவே நாம் இரண்டாவது அத்தியாயத்தில் படித்திருக்கிறோம்.

இஸ்லாம் மதம் தோன்றுவதற்கு முன்னரே, இப் போட்டி மாற்சரியம் அராபியர்களுக்கும் ரோமானியர்களுக்குமிடையே தலைமுறை தலைமுறையாக இருந்துதான் வந்தது. இஸ்லாமிய எழுச்சிக்குப் பிறகும், இச் சண்டை கிறித்தவர்களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையே மூர்க்கமாக முற்றிப் பலமுறை பல யுத்தங்களுக்கும் வித்திட்டுள்ளன.

உமையா வமிசக் கலீஃபாக்களின் காலகட்டங்களிலும், அப்பாஸிய வமிசக் கலீஃபாக்களின் காலகட்டங்களிலும் கான்ஸ்டான்ட்டிநோப்பிள்மீது பன்முறை முஸ்லிம்கள் படையெடுத்துச் சென்று அப் புகழ் வாய்ந்த கிறித்தவத் தலைநகரத்தைக் கைப்பற்ற முயன்றும், அதைப் பிடிக்க முடியாமற் போயிற்றென்பது வரலாறறிந்த செய்தியாகும்.

11ஆவது நூற்றுண்டில் அப்பாஸீகளின் பேரரசை ஆட்டி வைத்துக் கொண்டிருந்த சல்ஜூக் துருக்கியர்கள் ரோமானியப் பேரரசரையேகூடத் தோற்கடித்து, ஆசியா மைனரையே ஆக்கிரமித்து, அதன்மீது ஏறத்தாழ 230 ஆண்டுக்கும் மேலாகக் கோலோச்சி வந்த காலத்திலும் இந்த ரோமானிய-இஸ்லாமிய போட்டி மாற்சரியமும், வேண்டா வெறுப்பும் தொடர்ந்து நீடித்துக் கொண்டுதாம் இருந்தன. 13ஆவது நூற்றுண்டின் இறுதிக் கட்டத்தில் ரூம் சல்ஜூக் சுல்தான்கள் வீழ்ச்சியடைந்து, உதுமானியப் பேரரசு பிறந்தது.

**உதுமானியர்களும் கான்ஸ்டான்ட்டிநோப்பிளும்**

நாம் முன்பு விவரித்தவாறு, உதுமானிய வமிச நிறுவனரின் தந்தை எர்த்தோக்ரல் என்பவர் அனட்டோலியாவிலிருந்த ஒரு சிறு துருக்கிய இனப் பிரிவுக்குத் தலைவராயிருந்தார். ரோமானியர்களுக்கும் துருக்கியர்களுக்குமிடையே பரம்பரையாக நீடித்து வந்த பகைமைக்கு உதுமானும் வாரிசானுர்! பண்டைக்காலம் முதல் நீடித்துவந்த அப் பகைமையை இவர் மேலும் தொடர்ந்தார். உதுமான் பைஜான்ஷியப் பேரரசின் (Byzantine Empire) மூன்று முக்கிய நகரங்களைக் கைப்பற்றினுர். மேலும், அந்தப் பெரும் பேரரசை அடியுடன் வீழ்த்தவும் அவர் வித்திட்டுக் கொண்டிருந்தார். ஆனுல், அவரது கனவு நனவாகு முன்னரே இவ்வுலக வாழ்வை நீத்துவிட்டார்.

அவருடைய மகனுன ஓர்கான் (Orkhan) கூடத் தம் தந்தை கண்ட கனவை நனவாக்கவே முயன்ருர். ஐரோப்பாவில் அவருக்கு வலிமைமிக்க பலமான செல்வாக் கிருந்துவந்தும், கான்ஸ்டான்ட்டிநோப்பிளை அவராலும் அசைக்க முடியாமற் போயிற்று.

ஓர்கானின் சிறப்புமிகு செல்வன் முராத் (Murad) காலத்தில் ஆசியாவிலும் ஐரோப்பாவிலும் உதுமானியர்களின் அந்தஸ்தும் அதிகாரமும் அதிகரித்தன. கி.பி. 1360-ல் ரோமானியருக்குச் சொந்தமான எதிர்னே என்னும் அட்ரியாநோப்பிளை (Adrianople)[1] முராத் ஆக்கிரமித்தார். கான்ஸ்டான்ட்டிநோப்பிளுக்கு அடுத்தபடியாக முக்கியத்துவம் வாய்ந்தது அந்த எதிர்னேயாகும். ஆதலால், இந்த வெற்றி கான்ஸ்டான்ட்டிநோப்பிளையும் பிடிக்க வழிகோலிற்று என்னலாம்.

முராதின் குமாரனுன பாயஜீத் (Bayazid) கான்ஸ்டான்ட்டிநோப்பிளைப் பெரும் படையுடன் சென்று தாக்கினுர். நீர்சூழ்ந்த பகுதி நீக்கி, நில எல்லை வட்டாரங்கள் முழுதையுமே அவர் முற்றுகை யிட்டார். போதிய கப்பற்படை அப்போது உதுமானியர்களிடம் இல்லை; அதனுல் அவர்களது இன்பக் கனவு நனவாக வில்லை. மற்றும், அசந்தர்ப்ப வசமான துருக்கிய பெரு வீரனுன தைமூரின் திடீர்ப் படையெடுப்பால் அந்தப் பலமான முற்றுகை கைவிடப்பட்டது. தைமூரிடம் தோற்றுப் பெரு அதிர்ச்சியடைந்து மரணமடைந்தார், சுல்தான் பாயஜீத். சில ஆண்டுகளுக்குப் பின்னர், மீண்டும் இரண்டாம் பாயஜீதின் காலத்தில் கான்ஸ்டான்ட்டிநோப்பிள் மிக மூர்க்கத்துடன் தாக்கப்பட்டது. அப்பொழுதும் ஆசியா மைனரில் நிகழ்ந்த ஓர் அரசியல் கலகத்தையடக்கவும் நசுக்கவும் வேண்டியிருந்ததால், கான்ஸ்டான்ட்டிநோப்பிள் முற்றுகை கைவிடப்பட்டது.

### இரண்டாம் முகம்மது—கான்ஸ்டான்ட்டிநோப்பிள் வீழ்ச்சி ! (Mohammed II—Fall of Constantinople)

உமையாக்களின் காலத்திலும் அப்பாஸியர்களின் காலத்திலும் கான்ஸ்டான்ட்டிநோப்பிள் பலமுறை தாக்கப்பட்டும், பிடிபடவில்லை. இறுதியில், கி.பி. 1453-ல், இரண்டாம் முராதின் கீர்த்திமிக்க மகனுன இரண்டாம் முகம்மது என்பவரின் காலத்தில், நெடு நாளைய ஆசை, வெகு நாளைய கனவு நிறைவேறி,

[1] பைஜான்ஷியர்கள் 'எதிர்னே' என்னும் நகரை இவ்வாறு திரித்து அழைத்து வந்தார்கள்.

கான்ஸ்டான்ட்டிநோப்பிள் பிடிபட்டது. அதனால், அவருக்கு 'வெற்றி வீரன்' (Conqueror) என்ற பட்டமும் கிடைத்தது.

இரண்டாம் முகம்மது போரில் வல்லவர்; சிறந்த அரசியல் ஆர்வமிக்கவர்; வீரத்தின் திருவுருவம்; பகுத்தறிவின் பண்புருவம்; தகுதி நிறைந்த மக்கள் தலைவர்; மக்கள் போற்றும் சிறந்த ஆட்சியாளர்; தந்தையை நிகர்த்த தனயர். அவரோர் அரசியல் நிபுணருங்கூட. அவர் ஆட்சிபுரிந்த முப்பது ஆண்டுகளும் ஒரே போர்க் கோலந்தான்! போர் என்பது அவருக்கு ஒரு களிப்பு விளையாட்டு. போராட்டங்களிலேயே, போர்க்களங்களிலேயே அவர் நரைத்துப் போனவர்; போர்க்கலை நூல்களில் பெருஞ் சிறப்புடையவர்; போர் விஞ்ஞானியுங்கூட!

**கான்ஸ்டான்ட்டிநோப்பிள் வீழ்ச்சியுற்றதற்கான காரணங்கள்**

1451-ல் இரண்டாம் முகம்மது அரியணை ஏறிய போது, உதுமானியர்களின் ஆட்சியானது தென்கிழக்கு ஐரோப்பாவிலும் ஆசிய பிரதேசங்களிலும் வன்மையாக வேரூன்றிக் கிடந்தது. கான்ஸ்டான்ட்டிநோப்பிளைச் சுற்றிக் கிழக்கிலும் மேற்கிலும் துருக்கிய ஆட்சிப் பிரதேசங்கள் சூழ்ந்திருந்தன. ஆதலால், கான்ஸ்டான்ட்டிநோப்பிளைப் பிடிக்க வேண்டியது இராணுவ முக்கியத்துவம் பெற்று விட்டது. மற்றும், கிரேக்க இலக்கிய, கலை கலாசாரங்களின், பொருளாதாரச் செல்வங்களின் அக் காலகட்ட உலக மேடையாக ஒளிவீசி வந்த கான்ஸ்டான்ட்டிநோப்பிளைப் பிடித்தாள வேண்டுமென்ற அவாவும் ஆசையும் தன்னை ஓர் அரசனென்று அழைத்துக்கொள்ளும் ஒவ்வொருவனுடைய முகக் கண்களையும் அகக் கண்ணையும் உறுத்திய வண்ணமிருந்தன என்பதில் வியப்பேதும் இருக்க முடியாது.

இவையெல்லாமன்றி, இரண்டாம் முகம்மதுவின் காலத்தில், அப் பண்டைய பேரரசில் துருக்கியர்கள் செல்வாக்குடையவர்களாகவும், கப்பப் பணம் வசூலிப்பவர்களாகவும் இருந்தமை, அந்த உதுமானிய மாமன்னரின் பேராசையை மேலும் தூண்டின. இக் கிறித்தவ உலகத்தின் பெருஞ் சோதிச்சுடரான, பொன்மலையான கான்ஸ்டான்ட்டிநோப்பிளைத் தமது பொன்முடிக் கிரீடமாக அணியவேண்டுமெனவும், அதை இஸ்லாமிய இலக்கிய கலாசாரத் திலக நகராக மாற்றியமைக்கவேண்டுமெனவும், தம் முன்னோர்கள் கண்ட கனவை நனவாக்க வேண்டுமெனவும் இரண்டாம் முகம்மது அல்லும் பகலும் அனவரதமும் விழைந்தார்.

**மக்தான கான்ஸ்டான்ட்டிநோப்பிள் முற்றுகை**

இறுதி வெற்றி அல்லது இறுதித் தோல்வி இரண்டி லொன்றை அடைந்தே தீர்வது என்னும் தீவிர முயற்சியுடன், பைஜான்ஷியப் பேரரசின் ஆவியும் ஆத்மாவுமாக விளங்கிவந்த தலைநகர் கான்ஸ்டான்ட்டிநோப்பிளின் முற்றுகை தொடங்கப் பட்டது. எவனொருவனும் தப்பி வெளியேற வழியில்லாமல் நாலா பக்கமும் அந் நகர் அடைக்கப்பட்டது. அந் நகரின் 11 நூற்றாண்டைய வரலாற்றில் முன்னெப்போதும் நிகழ்ந்திரா வண்ணம் மக்கள் திணறிப் போயினர். பயங்கரமிக்க குரூர மான இத்தகைய வேறொரு முற்றுகைத் தாக்குதலை யாரும் எங்கும் கண்டதில்லையென்று உலகினர் வியப்புறும் வண்ணம் உதுமானியர்கள் முற்றுகையிட்டார்கள்.

பலப்பல பெருங் கற்குண்டுகளை இடைவிடாது அந் நகர்க் கோட்டைச் சுவர்கள்மீதும் மதிற் சுவர்கள்மீதும் மாரியெனச் சொரிந்த வண்ணம் இருந்தனர், உதுமானியர்களின் பெயர் போன 'ஜெனிஸ்ஸரீ'ப் படை வீரர்கள். ஆனால், இவை யாவும் பயனற்றுப் போயின. கான்ஸ்டான்ட்டிநோப்பிள் ஒருவிதத் தில் இளைத்துவிட்டாற்போல் தோற்றமளித்ததென்றாலும், அதற் குரிய பண்டைப் பலத்தைக் கைந் நழுவ விடாமல் இருந்ததாகத் தான் தோன்றுநின்றது, அப் பயங்கரமான முற்றுகையை அது எதிர்த்து நின்றதை நோக்குங்கால்!

'கோல்டன் ஹார்ன்' (Golden Horn) என்ற பெரும் துறை முக நுழைவுத் தலைவாசல் பெரும் இருப்புச் சங்கிலிகளால் இறுகக் கட்டிப் பிணைக்கப்பட்டிருந்தது. ஆதலால், பைஜான்ஷி யர்கள் தோல்வியின் விளிம்பில் இருந்தது உண்மைதான். கோட்டை வீரர்களும் முற்றுகை வீரர்களும் மிக மூர்க்கமாக ஒரு வரை எதிர்த்தொருவர் மோதிக் கொண்டனர். ஆனால், பன்னாட்களாகியும் உறுதியான வெற்றி கிட்டாத நிலை நீடித்தது.

சினமும் ஆவேசமும் பொங்கிப் பெரும் அருவருப்புற்றுவிட்ட உதுமானிய சுல்தான் இரண்டாம் முகம்மது கடைசியில், கி.பி. பத்தாம் நூற்றாண்டில் பின்பற்றப்பட்ட ஒரு போர் முறையைக் கடைப்பிடித்தார். அம் முறை என்னவென்றால், மலைச் சரிவு களில் மேலிருந்து கீழாக எண்ணெய் பொழியும் சாய்தளத்தி னூடே[1] ஒன்றன்பின் ஒன்றாகப் பிணைக்கப்பட்ட பல கப்பல் களைத் திடுமென மலையிலிருந்து உருட்டித்தள்ளுவதுபோல் ஓட்டி

[1] Runway—சாய்தளம் அல்லது ஓடுபாதை.

யுருட்டி, கோல்டன் ஹார்ன் துறைமுகச் சங்கிலிகளை முரித்து உடைத்து அறுத்து, நகர் வாசலுக்குள் அசுர வேகத்தில் நுழைந்தன உதுமானிய ஜெனிஸ்ஸரீப் படைகள்! உலக வரலாற்றில் மகத்தான ஒரு திருப்பத்தை உண்டுபண்ணிவிட்ட இப் பேரதிசயப் பெருநிகழ்ச்சி கி.பி. 1453, மே மாதம் 29ஆம் நாளன்று நிகழ்ந்தது. அதுவரை எவரும் கற்பனை செய்திராத, கனவிலும் கருதியிராத பெருவீழ்ச்சி அது! ஒப்பாரும் மிக்காருமின்றித் தருக்குடனே தலைநிமிர்ந்து நின்ற பைஜான்ஷியப் பேரரசர்களின் பேராடம்பரச் சின்னமாகிய உலகப் பெருந்தலைநகர் இங்ஙனமாக உதுமானிய துருக்கியர்களின் கைக்குள் நிரந்தரமாய் வீழ்ந்தே விட்டது! கான்ஸ்டான்ட்டிநோப்பிளின் வீழ்ச்சியுடன் பைஜான்ஷியப் பேரரசரும் வீழ்ந்தார், ஒரு கல்லில் இருமாங்காய்கள் வீழ்ந்தாற்போல்!

வீர வெற்றி பெற்ற உன்னதப் பேரரசராய்க் காட்சியளித்த இரண்டாம் முகம்மது, வெற்றி முழக்கத்துடன் கான்ஸ்டான்ட்டிநோப்பிளுக்குள் நுழைந்து, நேராகக் கிறித்தவக் கோவிலுக்குள் (Cathedral) சென்றார். அங்கிருந்த கிறித்தவச் சின்னங்களை மாற்றி, அதை இஸ்லாமியப் பள்ளிவாசலாக்கினார். கான்ஸ்டான்ட்டிநோப்பிளைக் கைப்பற்றிய துருக்கியர்களுக்குக் கப்பற்படையோடு கூடிய கடலாதிக்கமும் கிட்டியதில் வியப்பு ஏதுமில்லை. மத்தியதரைக் கடலையடுத்த கிழக்குப் பிரதேசங்களின் ஆதிக்கமும் துருக்கியின் கைக்கு அன்றே மாறிவிட்டது.

### வெற்றி வீரனின் பரந்த மனப்பான்மை

வெற்றி வாகை சூடிய மகா அலெக்சாந்தர் (Alexander the Great) சுதந்தரமிழந்த புருஷோத்தமனைக் கௌரவமாகவே நடத்தியதை நாம் படித்திருக்கிறோம் அல்லவா? அதே போல், கான்ஸ்டான்ட்டிநோப்பிளைக் கைப்பற்றிய இரண்டாம் முகம்மதும்கூடச் சிறிதும் தருக்கின்றி நடந்து கொண்டுள்ளார். செங்கீஸ்கான், ஹிலாகூகான், தைமூர் போன்ற பயங்கர மனித உருவுள்ள மாமிசப் பிண்டங்களைப் போல் இவர் நடவாமல், நகரை இடுகாடாக ஆக்கி விடாமல், மனிதத் தன்மையுடன், கௌரவத்துடன், மரியாதையுடன், பெருமையுடன் பண்பாளராக நடந்து கொண்டார். இவருடைய அறிவும் ஆற்றலும், ஆதரவும் அன்பும் செறிந்த கொள்கையால் எதிரிகளும் நண்பர்களாயினர். கொடி மட்டும் மாறியதேயன்றி, சுதந்திரங்களில் கிஞ்சித்தும் மாற்றம் உண்டுபண்ணப் படவில்லை என்று கிரேக்க குடிமக்களைத் திட்டவட்டமாக நம்பச்

செய்தார் இரண்டாம் முகம்மது; அதுவும், வார்த்தைகளால் அன்று; ஆனால், செயல்களால். இவ்வாறாக, கிரேக்க குடிமக்களின் நட்புக்கும், நம்பிக்கைக்கும் பாத்திரமானவரானார், இந்தப் பெரும் சுல்தான்.

ஆதியில் பைஜான்ஷியமென்றும், பின்னர்க் கான்ஸ்டான்ட்டிநோப்பிள் என்றும் வழங்கிய அப் புராதனத் தலைநகர் அன்றே 'இஸ்தம்பூல்' என்னும் பெயரைப் பெற்று விட்டது.

## (4) உதுமானியர்களின் ஆட்சி முறை (Ottoman Administration)

உதுமானிய வமிசப் பாரம்பரியம் நிலைநாட்டிய பேறு, பாரசீக கலாசாரமும், அராபிய ஆட்சிமுறையும், பைஜான்ஷிய நிறுவன முறைகளும் இணைந்த ஒரு கலவையே ஆகும். அவர்களுடைய மூதாதைகளான துருக்கியர்கள் இராணுவப் பரம்பரையைச் சேர்ந்தவர்களாகையால், ஆட்சி முறையிலும் எதற்கும் மீசை துடிக்கும் சிப்பாய்கள் போலவே நடந்து கொண்டனர். இஸ்லாமிய சமயத்தைத் தழுவுவதற்கு முன்பு அவர்கள் திட்டங்களேதுமற்ற அநாகரிகக் காட்டுமிராண்டிகள்போல், கண்டதே காட்சி கொண்டதே கோலமெனும் கதியில் நீதியில்லா வழி வகைகளை அனுசரித்து வந்தார்கள்.

ஆனால், அவர்கள் இஸ்லாமிய மதத்தைத் தழுவிய பின்னர் இஸ்லாமிய கலாசாரங்களைப் பாரசீக மயமாக்கியதுடன், பாரசீக ஆட்சி முறைகளையே தழுவிக் கொண்டும் விட்டார்கள். ஆசியா மைனர்மீது ஆட்சிசெலுத்திவந்த ரூம் சுல்தான்கள் (Sultans of Rum) பைஜான்ஷியப் பேரரசின் ஆட்சி முறைகளைக் கடைப் பிடித்து ஆள்வோராயினர். இராக்கிலிருந்து வட ஆப்ரிக்கா வரையிலும், சிரியா, பாலஸ்தீன நாடுகளிலிருந்து அரேபியா வரையிலும் விரிவடைந்திருந்த உதுமானியப் பேரரசில், அவ்வந் நாட்டு ஆட்சி முறைகளையே பின்பற்றி அப் பேரரசர்கள் எளிதாக ஆட்சி நடத்தினர். காலப்போக்கிலும் அனுபவத்தின் பேரிலும் உதுமானியர்கள் தங்களுக்கே சொந்தமான சில ஆட்சி முறைகளையும், நிருவாகத் துறைகளையும் வகுத்துக் கொள்வாராயினர். அவையாவன:

(1) கிராம, நகர, மாவட்ட ஆட்சி முறைகள் (Civil and-Political Administration).

(2) நீதித்துறை—மதத்துறை ஆட்சி முறைகள் (Judicial and Religious Administration).

(3) இராணுவத்துறை ஆட்சி முறை (Military Administration).

**(1) கிராம, நகர, மாவட்ட ஆட்சிமுறைகள்**

உதுமானியப் பேரரசின் அமைப்பு இராணுவ முறையிலானது. பேரரசின் குடிமக்கள் பலவித இனத்தினர்களாக, பலவித மொழிகளைப் பேசுபவர்களாக, பலவித மதக்கோட்பாடுகளைப் பின்பற்றுகிறவர்களாக, பலவித வாழ்க்கை முறைகளை மேற்கொண்டவர்களாக விளங்கி வந்தார்கள். இவர்கள் அத்தனை பேரையும் ஒன்று திரட்டி, இவர்களுக்கிடையே கொஞ்சமும் வேற்றுமை பாராட்டாமல் ஒருங்கிணைத்து வைக்கும் கருவியாக விளங்கிற்று இராணுவம். 'உலகில் முதன் முதலாகச் சகவாழ்வு (Secularism) வாழும் முறையைக் கற்பித்துக் கொடுத்தவர்கள் உதுமானியர்களே ஆவர்' என்று பல மேனாட்டு ஆராய்ச்சியாளர்கள்[1] உறுதிப்படுத்துகின்றனர்.

பேரரசின் ஆட்சித் தலைவர் சுல்தான்-கலீஃபா (Sultan-Caliph). பேரரசு முழுதுக்குமே அவரே மதத் தலைவருமாவார். அவரின் கீழுள்ள பிரதமருக்கு (Grand Vazir) சுல்தானின் உத்தரவுகளை, விதிகளை நிறைவேற்றும் பொறுப்புகள் உண்டு. அவ்வவற்றுக்குமுரிய பணித்துறையாளர்களால் பேரரசு முழுதுமே பரிபாலிக்கப்பட்டு, சட்டங்கள் நிறைவேற்றப்படும். வஜீருக்கு (Vazir) உதவி செய்யப் பல்வேறு அங்கத்தினர்களைக் கொண்ட அமைச்சரவையும் உண்டு.

சுல்தான் வலிமைமிக்கவரா யிருப்பாராஞல், வஜீரின் அதிகாரங்கள் குறையும். மாருக, சுல்தான் திறமையற்றவராக இருப்பாராயின், வஜீரின் அதிகாரமும் அந்தஸ்தும் செல்வாக்கும் அதிகரிக்கும். மாவீரன் சுலைமானுக்குப் (கி.பி.1520–66) பிறகுதான் வஜீரின் அந்தஸ்தும் அதிகாரமும் கீர்த்தியும் அதிகரிக்க ஆரம்பித்தன.

முதலமைச்சரின் கீழ் இரு நிதியமைச்சர்கள் இருப்பர்—ஒருவர் ஐரோப்பாவுக்கும், மற்ரெருவர் ஆசியாவுக்குமாக. மற்றும், ஒரு செயலாளரும், ஐரோப்பாவுக்கு ஒருவரும் ஆசியாவுக்கு மற்ரெருவருமாக இரு நீதிபதிகளும் இருப்பர். இரண்டு

[1] பேராசிரியர் டாயின்பீ (Toynbee) போன்றவர்கள்,

அரசப் பிரதிநிதிகளும் உண்டு. சுல்தானின் மெய்க்காவல் படையின் தலைவர், கப்பற்படைத் தலைவர் ஆகியோர் அரசாங்கத்தின் மற்ற முக்கிய அதிகாரிகளாவர். இப் பெரும் அதிகாரம் வாய்க்கப்பெற்ற அமைச்சர் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் இலாக்காக்களின் தலைவர்களாவார்கள். இவர்கள் தங்கள் தங்கள் இரகசிய மந்திராலோசனை சபைகளில் தலைமை வகித்துப் பேச்சு நடத்தி முடிவெடுப்பார்கள். இத்தகைய கூட்டங்களில் சுல்தானும் வந்து கலந்திருந்து மேற்பார்வையிடுவார். பிற்காலத்திய சுல்தான்கள் பல துறைகளைத் தங்கள் பிரதம அமைச்சருக்கு (Grand Vazir) மாற்றி விட்டதால், இவர் தம் அமைச்சரவைக் கூட்டத்தைத் (Cabinet Meeting) தமது சொந்த அரண்மனையிலேயே நடத்த ஆரம்பித்து விட்டார். உள்நாட்டு அமைதி, வரி வசூல், பேரரசின் வளர்ச்சி, பேரரசு எல்லைகளின் பாதுகாப்புப் போன்ற விஷயங்களை யெல்லாம் சுல்தானின் பிரதிநிதிகளான அதிகாரிகள் பரிபாலித்து வந்தனர்.

### உதுமானியப் பேரரசின் உட்பிரிவுகள்

பரந்த இப் பேரரசு பல மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொன்றுக்கும் ஒவ்வோர் ஆளுநருண்டு. ஆளுநரின்கீழ்ப் பலப்பல அதிகாரிகள் ஊழியம் புரிவர். ஆளுநர் உள்ளிட்ட பெரும் அதிகாரிகளெல்லோருக்குமே •இராணுவப் பயிற்சி கட்டாயமாம்; இராணுவப் பயிற்சியில்லா எவருமே ஆளத் தகுதி பெற்றவரல்லர் என்பதே அடிப்படைக் கொள்கையாம்.

### நீதி மற்றும் மதத் துறைப் பரிபாலனம்
(Judicial and Religious Administration)

**நீதி ஆட்சித்துறை :** இலௌகிக விஷயங்களைப் பரிபாலிப்பது போலவே, மதத்துறை ஆட்சியும் மத விஷயங்களைக் கவனித்துப் பரிபாலித்து வந்தது. நீதித் துறையின் தலைவர் ஷேகுல்-இஸ்லாம்(Shaikh-ul-Islam) என்னும் பிரதம மத நீதிபதியாவார். மதச்சட்ட விதிகளுக்கு ஏற்ப இப் பிரதம நீதிபதியின் அதிகாரம் சுல்தானின் அதிகாரத்தையும் விஞ்சியது. இஸ்லாமிய சட்டத்திற்கு விரோதமாக சுல்தான் எடுக்கும் முடிவைக்கூட ரத்து செய்துவிடக்கூடிய அதிகாரம் பிரதம நீதிபதிக்கு உண்டு. அந்தப் பிரதம நீதிபதியை நியமிப்பவர் சுல்தான்தாம்; அவரை நீக்கவும் சுல்தானுக்கு அதிகாரமுண்டு. ஆனாலும், பிரதம நீதிபதியின் சட்டக் கருத்தை, அபிப்பிராயத்தை சுல்தான் மதித்துத்தான் ஆக வேண்டும். மத விஷயங்

களில் பிரதம நீதிபதியின் சம்மதமில்லாமல், சுல்தான் யாதொரு முடிவையும் தம்மிஷ்டப்படி செயல்படுத்த முடியாது.

உதுமானியப் பேரரசின் அதிகாரிகளனைவரையும் முஸ்லிம் குடிமக்களையும் இஸ்லாமிய சட்டங்கள் கட்டுப்படுத்தும். எல்லா முக்கிய நீதிபதிகளையும் பிரதம நீதிபதியே நியமிப்பார். சமுதாய-அரசியல் (Civil and Political) துறைகளில் சேவை செய்யும் ஊழியர்களின் குற்றங் குறைகளை விசாரிக்கப் பிரத்தியேகமான இரு நீதிபதிகளுண்டு. இந்த நீதிபதிகளின் சம்பளத்தை அரசாங்கமே வழங்கும். சுல்தானின் நீதிமன்றமே இறுதி மேல் முறையீடு (Appeal) வழக்கு மன்றமாகும்.

**உதுமானிய ஆட்சியில் தேசிய இனமுறை மத அடிப்படையில் பிரிவு (The Millet System)**

உதுமானிய ஆட்சி, மதத்தை அடிப்படையாகக் கொண்டு மக்களைத் தேசிய இன முறைகளாகப் பிரித்து வைத்தது. அவ்வாருகப் பிரிக்கப்பட்ட மத, தேசிய இனங்கள் பின்வருமாறு:

(1) முஸ்லிம்கள்; (2) தீவிர வைதிக கிரேக்கர்கள்; (3) ஆர்மீனிய-ஜார்ஜியன்கள்; (4) யூதர்கள்; (5) கத்தோலிக்கர்கள்.

முஸ்லிம் சமுதாயத்துக்கு ஷேகுல்-இஸ்லாம் (Shaikh-ul Islam) என்னும் பிரதம மத நீதிபதியே தலைவராவார். தீவிர வைதிகக் கிரேக்கர்களுக்கும் (Greek Orthodox) ஆர்மீனியர்களுக்கும் (Armenian-Georgian) அவரவர்களுடைய மாதாக் கோவில்களின் (Patriarch என்னும்) பிரதம மதகுருவே தேசிய இனத்தலைவராவார். யூதர்களுக்கு 'ரப்பி' (Rabbi) என்னும் குருநாதரே தேசிய இனத்தலைவர். மதம், கல்வி, கலாசாரத் துறைகளில் அவ்வம் மதத் தேசிய இனமும் அனுவசியமான அரசாங்கத் தலையீடில்லாமல் சர்வ சுதந்தரத்துடன் பரிபாலித்துக் கொள்ளும். இவ்வாறு அந்த அந்த மதத்தினரும் தத்தம் பண்பாடுகளுக்கு ஏற்றவாறு ஒழுகிக் கொள்வதற்கு உலக வரலாற்றில் முதன் முதலாக வழிவகுத்துத் தந்த அரசு உதுமானியப் பேரரசேயாகும். இது பாராட்டுதற்குரியதே! மேலும், தங்கள் தங்கள் மொழிகளிலேயே தங்கள் தங்கள் மதச் சட்ட விதிகளின்படி ஒழுகிப் பரிபாலனம் செய்து கொள்ளும் உரிமை யாவர்க்கும் உண்டு. இது புகழ்தற்குரியதே! தங்கள் தங்கள் தேசிய இன மக்களிடம் வருடாந்தர வரிகளை வசூலிக்கும் அதிகாரமும், அப் பணத்தை சுல்தானுக்குச் செலுத்துவதும்

அந்த அந்த மத இனப் பிரதம குருமாரின் பொறுப்பில் விடப் பட்டன.

முஸ்லிம்களல்லாத மத இனப் பிரிவு மக்களை அந்த அந்த மதத்தின் பிரதம குரு மூலமாகத்தான் உதுமானிய அரசாங்க மும் அணுகுமே தவிர, நேரடியாக அணுகாது. இத்தகைய மத முக்கியத்துவ சுதந்தரங்களால் முஸ்லிமல்லாத மதங்களின் பிரதம குருக்களுக்கு அரசர்களுக்குண்டான அதிகாரங்களெல் லாமிருந்தன. இக் காரணங்களால், 19ஆம் நூற்றுண்டில் பால்கன் (Balkan) நாடுகளின் மக்களிடையே தேசியத் தீ கொழுந்துவிட் டெரிந்தபோது மத குருமார்களே அந்த அந்தத் தேசிய மத இனப் பூரண விடுதலை இயக்கங்களை முன்னின்று நடத்தியிருந்தால், அது மிகவும் இயற்கையான தலைமை யாகவே தோன்றியிருக்கும். ஆனால், அது அவ்வாறு நடைபெற வில்லை. காரணம், ‘எப் புற்றில் எப் பாம்பிருக்குமோ!’ என்ற மூதுரைப்படி, அவ் விடுதலை இயக்கங்களின் எதிர்காலம் என்ன வாகுமோ, மதச் சுதந்தரம் இப்போது போல் இனியும் நீடிக் குமோ, இல்லை, கவிழ்ந்து விடுமோ என்பன போன்ற அச்ச மிக்க ஐயப்பாடுகளால் முஸ்லிமல்லாத மத குருமார்கள் அவ் விடுதலை இயக்கங்களில் கலந்து கொள்ளவில்லை! ‘நாளை வரும் பலாப்பழத்தினும், இன்றுள்ள களாக் காயே மேல்!’ என்னும் பழமொழிப்படி, உள்ளதே போதுமென்று அக் குருமார்கள் ஒதுங்கி நின்று விட்டார்கள்.

**கத்தோலிக்கர்கள்**

முதலாம் சுலைமான் (கி.பி. 1520-66) காலத்தில் கத்தோ லிக்கர்களுக்கென்று (Catholics) தனித் தேசிய இனம் ஒன்று ஏற்பட்டது இவர்களுக்கு உஸ்மான்லி அல்லாத இனம் (Non-Osmanli) என்று பெயர். இவ் வினத்துக்கு ஃபிரான்ஸ் நாட்டுத் தூதர் (French Ambassador) தலைவராவார்.

**இராணுவ நிருவாகம் (Military Administration)**

இராணுவ நிருவாகத்தைச் சீர்திருத்திப் புனருத்தாரணம் செய்த பெருமை ஓர்கானையே சேரும். அவரும், அவருடைய வீரமிக்க, புகழ்மிக்க, கீர்த்தி பெற்ற மகனை மூராதும் பலப் படுத்திச் சென்ற இராணுவ நிருவாகம் இரு நூற்றுண்டு வரை யிலும் தன்னிகரில்லா முறையில் திகழ்ந்தது. ஒற்றுமை (Unity) என்ற அடிப்படையில் கட்டப்பட்டதாகும் உதுமானிய இராணு வம். தயார் (Readiness) என்பது இரண்டாவது பலம். ‘புறப்படு!’

என்று உத்தரவிடப்பட்டு வாய்மூடும் முன்னரே புறப்பட்டு விட்டதென்னும் துரிதம் (Mobility)!

**உதுமானிய இராணுவ அமைப்பு**

(1) காலாட் படை (Infantry), (2) குதிரைப் படை (Cavalry), (3) பீரங்கிப் படை (Artillery), (4) கப்பற்படை (Navy), (5) புதுப் படை (Jannissaries). இப் புதுப்படையின் முக்கியக் கூறுகள் என்னவென்றால்: கட்டுப்பாடு (discipline), கடமை (duty), சுல்தானிடம் அரச பக்தி (devotion) என்பன வாம். இத்தகு உயர்ந்த கொள்கைகளுடன், இப் புதுப் படை இரண்டு நூற்றாண்டு காலம்வரை தலைமுறை தலைமுறையாக மிக்க வீரத்துடன், சிறப்புடன், பொலிவுடன் காட்சியளித்தது. நல்ல எழுத்து நடுவில் உதிர்ந்தும், கோணலெழுத்துக் குறுக்கே விழுந்தும் காரியம் கெடுவதுபோல், நல்லதிலும் கெடுதல் வந்து புகுவது போல், இக் கொள்கைகள் அளவுக்கு மீறி அனுசரிக்கப் படவே, உதுமானிய சேனையின் சத்து வாய்ந்த, சக்தி வாய்ந்த சின்னமா யிலங்கிய அப் புதுப் படையின் அழிவுக்கு இவையே காரணமாய் அமைந்து விட்டன. அளவுக்கு மீறினால் அமுதமும் நஞ்சாகி விடுமன்றோ!

**இரண்டாம் முகம்மதின் முக்கிய இராணுவச் சீர்திருத்தங்கள்**

கான்ஸ்டான்ட்டிநோப்பிள் பிடிபட்ட பிறகு, வீரன் முகம்மது (Mohammad the Conqueror) 8 வயதிலிருந்து 18 வயதுக்குட் பட்ட இளைஞர்களுக்குத் தம்முடைய அரண்மனைகளுக்குள் ளேயே நிர்மாணிக்கப்பட்ட இராணுவப் பள்ளிக்கூடங்களில் தீவிர இராணுவப் பயிற்சியளிக்க மும்முரமான ஏற்பாடுகளைச் செய்தார். இப்படிப் பயிற்சி பெற்றவர்களைக் கொண்டு பேரர சின் பாதுகாப்புக்கான ஒரு நிரந்தரச் சேனையை(Standing army) அமர்த்தினதுடன், அவர் தமக்கு வேண்டிய மெய்க்காப்பாளர் களையும் (Bodyguard) அவர்களுள் ளிருந்தே நியமித்துக் கொண்டார்.




இதுவே உதுமானிய இராணுவ அமைப்பாகும்.

மேற்கண்ட தளபதிகளின்கீழ்ப் பல துறைகள், அவர்களின் கீழுள்ள உப தளபதிகளிடம் சிற்சில துறைகள் என்று உண்டு; அத் துறைகளை மேற்பார்வை யிடுவது அவர்களின் வேலை.

சுல்தான் சாமர்த்தியசாலியாக விளங்குவாரானால், எல்லாம் ஒழுங்குற நடந்தேறும்; ஆனால், அவர் சற்றே திறமையற்றவ ராய்க் காட்சி யளிப்பாராயின், எல்லாக் குழப்பங்களுக்கும் அவரே காரணமாகி விடுவார். ஒரு காலத்தில் சுறுசுறுப்பு, வீரம், திறமை ஆகியவற்றுக்கு எடுத்துக்காட்டாக இலங்கிய அந்த இராணுவத்தில் குழப்பமிக்க முணுமுணுப்புகளும், இன வேற்றுமைப் பூசல்களும் புகுந்தமையால் பழைய வேகம், வீரம், விவேகம் ஆகியன மருந்துக்குமில்லாது ஓடி மறைந்தன. இராணுவத்துக்கே மணிமுடியாக இருந்த புதுப் படையானது (Jannissary Corps) காலப்போக்கில் கலகமிக்க, குழப்பமிக்க சண்டைக் கூட்டமாக, சந்தைக் கூட்டமாக ஆகிவிட்டது. இவ் வாறாக, உதுமானிய ஆட்சியின் தரமும் திறமையும் நாள் செல் லச் செல்லக் குறைந்து, காலப்போக்கில் அடியோடு அழி வுற்றது.[1]

## (5) துருக்கி இலக்கிய வளர்ச்சி
## (Growth of Turkish Literature)

இஸ்லாமிய மதத்தைத் தழுவிய சல்ஜூக் துருக்கியர்களின் இலக்கியம் கலாநயமற்ற ஒன்றாகும். கொஞ்சம் கொஞ்சமாக அவர்கள் இஸ்லாமிய உலகின் பெரும் பாகத்தைக் கைப்பற்றி முடித்ததும், பாரசீகக் கலாசாரங்களை விரும்பி ஏற்று அவற்றை எங்கும் பரப்ப முயன்றார்கள். ஆசியா மைனரின் ரூம் சுல்தான் களும் (Sultans of Rum) பாரசீகக் கலாசார நேசர்களானார்கள். 14ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் சல்ஜூக்குகளின் அழிவுக்குப் பின், உதுமானிய துருக்கியர்கள் சல்ஜூக்கியரின் கலாசாரங் களைப் பின்பற்றினார்கள். தங்களுக்கென்று உரிய இலக்கியம் எதனையும் பெற்றிராத உதுமானியர்கள், பாரசீக இலக்கியங் களைத் தமதாக்கிக் கொள்ள முயன்றார்கள். துருக்கிய இலக்கிய வளர்ச்சியை நான்கு தலைப்பாகப் பிரிக்கலாம். அவையாவன:

(1) பண்டைக் காலத்து இலக்கியத்துக்கும் முற்பட்ட இலக்கிய காலம் (Pre-classical Period).

[1] ஜெனிஸ்ஸரீப் படைகளின் தோற்றம், வளர்ச்சி, ஆற்றல், சீர்கேடு, அழிவு முதலிய விவரங்களை 'உதுமானிய துருக்கியர் வரலாறு' என்னும் நூலில் பரக்கக் காணலாம்.

(2) பண்டைய இலக்கிய காலம் (The Classical Period).

(3) பண்டைக் காலத்து இலக்கியத்திற்கும் பிற்பட்ட இலக்கியம் (The Post-classical Period).

(4) கி.பி. 1908-ன் புரட்சி இயக்கம்.

**(1) பண்டைக் காலத்து இலக்கியத்துக்கும் முற்பட்ட இலக்கிய காலம்—(கி.பி. 1300—1520)**

அக் காலகட்ட இலக்கியம் முழுதும், முழுக்க முழுக்கப் பாரசீகக் கலாமண முடையதாயிருந்தது. சல்ஜூக் துருக்கியர்கள் பாரசீக இலக்கியங்களையே தமதாக்கிக் கொண்டனர். மேலும், பாரசீக மொழியையே தமதாட்சி மொழியாகவும் ஆக்கிக்கொண்டனர். சல்ஜூக்குகளுக்குப் பின்னர் ஆட்சிப்பீடமேறிய உதுமானியர்கள் சல்ஜூக்குகளின் கலாசாரங்களையும் இலக்கியங்களையும் பின்பற்றினர். ஷீராஜ் (Shiraz) நகரைத் தங்கள் கலாசாரப் பீடமாக சல்ஜூக்குகள் ஏற்றுக்கொண்டது போலவே, உதுமானிய அறிஞர்களும் அதையே (ஷீராஜை) நெடுங்காலத்துக்கு ஏற்றுக் கொண்டனர்.

மங்கோலியப் படையெடுப்பால் 13ஆவது நூற்றுண்டைய அனட்டோலியாவின் (Anatolia) அரசியல், பொருளாதாரம், ஆத்மிக வளர்ச்சிகளெல்லாம் நிலைகுலைந்து குழப்பமுற்றுப் போய் விட்டன. இதனால், பொருள் வாழ்வு பற்றற்ற இறைநெறி பற்றிய வேதாந்தங்களும், தத்துவங்களும், கவித்துவங்களும் கிழக்குப் பிரதேசங்களிலிருந்து எழுச்சி பெற்று அனட்டோலியாவில் தலைதூக்கின. இவற்றை மக்கள் மொழியான துருக்கி (Turkish) மொழியிலும் உதுமானியர் பெயர்த்தனர்.

ஜலாலுத்தீன் ரூமியும் (Jalaluddin Rumi) அவர் குமாரர் வலீதும் (Walid) கூடச் சில துருக்கிய காவியங்களைப் படைக்கலாயினர். யூனுஸ் எம்ரி (Yunus Emre) என்னும் மகாகவி துருக்கிய மொழியிலேயே சொந்தமாகக் காவியமியற்றினுர். மற்றோர் ஆன்மிகச் சார்புள்ள கவியான ஆஷிக் பாஷா (Aashik Pasha) என்பவர் சுவை சொட்டும் சங்கீத ஞானமுள்ள பாடல் திரட்டுகளை இயற்றினுர்.

காஜி ஃபாஸில்(Ghazi Fazil) என்பவர், சுல்தான் ஓர்கானின் மகனுன சுலைமானின் கல்லிப்போலி (Gallipoli) வெற்றியைப்

பற்றிப் பரணி பாடினூர். மக்களுக்கு எடுத்துச் சொல்லும் போதனைகளெல்லாம் வசன நடையிலேயே இயற்றப்பட்டன. பண்டைப் பாரசீக வரலாற்றுப் புகழ்க் காதலர்களான 'குஸ்ரோ-ஷீரீன்' (Khusro-Shirin)பற்றி நீண்டதோர் காதல் கதையைப் பாடலாகப் பாடிய பெரும் மேதை 'ஷேக்கி' (Sheikhi) என்பவராவார். 'முஹம்மதியா' (Mohammadiya) என்ற நபிகள் நாயகத்தின் வரலாற்றுக் கதையை வெகு சுவையான, சுத்தமான முறையில் எழுதி உலகுக்களித்தவர், யாசிஜி ஒக்லு (Yaziji Oghlu) என்னும் சிறந்த அறிஞராவார்.

இந்தக் கவிஞர்களெல்லாரும் கான்ஸ்டான்ட்டிநோப்பிள் பிடிபடுவதற்கு முன் பிரகாசித்த துருக்கிய வித்துவான்கள் ஆவர்.

இக் காலத்துக்குரிய மற்றெரு முக்கிய நூல், 'நாற்பது மந்திரிகள் கதை' என்ற பண்டைக்காலத்துப் பழங்கதைகளின் தொகுப்பு ஆகும். நயஞ் சொட்டும் நகைச் சுவையுடன் எழுதப்பட்ட அறிவுக்களஞ்சிய நூல் இது. இதை இயற்றியவர் ஷேக்ஜாதா (Shaikhzada) என்பவராவார். இவர் இரண்டாம் முராத் என்ற சுல்தானிடம் அந் நூலைச் சமர்ப்பித்தார். கி.பி. 1453-க்குப் பிறகு சில ஆண்டுகள் கடந்து, மீர் அலீ ஷேர் (Mir Ali Sher) என்பவர் 'அறிவுக் களஞ்சிய'மென்று கூறத்தக்க கவிகளை, மனம் கவரும் கவர்ச்சிமிக்க நாட்டுப் பாடல்களாகப் பாடி வைத்தார்.

இரண்டாம் முகம்மதின் வஜீரான அஹமத் பாஷா என்பவர் புகழ்வாய்ந்த துருக்கிய கவிகளில் தலைசிறந்தவராவார். இந்த அரசியல்வாதியான கவிஞர் உயர்தரமான நாட்டுப்பாடல் வரைவதற்கு நல்வழி காட்டிப் பெரும் புகழை நிலைநாட்டினூர். மற்றும், இரண்டாம் முகம்மது, இரண்டாம் பாயஜீத் போன்ற கவிஞர்களான சுல்தான்கள் உள்ளிட்ட உதுமானியப் பேரரசர்களின் அவைகளைப் பலப்பல அறிவாளிகளும், கவிஞர்களும், கலைஞர்களும் அலங்கரித்த வண்ணமிருந்தனர். அவர்களுக்கு ஒய்வூதியங்களும் ஆதரவுகளும் அளிக்கப்பட்டன.

15ஆம் நூற்ருண்டைய அஹ்மத் பாஷாவுக்கு அடுத்தபடி, 'நெஜாதி' (Nedjati) என்பவரை 'ரூம் நாட்டின் குஸ்ரோ' என்றும், கவிகளுக்கெல்லாமோர் ஆபரணம் போன்றவரென்றும் புகழ்வர்.

அழகு நடையிலமைந்த வசன நூல்களும் இக் காலகட்டத்தில் வளர்ச்சியடைந்தன. சினன் பாஷா (Sinan Pasha) என்பவர் தலைசிறந்த வசனநடை வல்லுநராவார். இவர் 'தசர்ருஆத்' (Tazarruat) என்ற பணிவு மனு நிகர்த்த நூல் ஒன்றினைப் படைத்தார். மற்றிரு பெரும் எழுத்தாளர்கள், சாரி கமால் (Sari Kemal), ஜஅஃபர் செலிபி (Jafer Celebi) என்போராவர். உதுமானுக்குப் பின் வந்த 21 சுல்தான்களும் கவிஞர்களே! முதலாம் சலீம் (Salim I) அவர்களனைவரிலும் தலையாயவர், சிந்தனை சிற்பியுங்கூட. 'யூசுஃப்-ஜுலைகா' (Yusuf and Zulaikha) என்பது ஒரு காதற் கதைக் கவிதையாகும். அதை இயற்றியவர் சட்ட வல்லுநரான கவிக்களஞ்சியம் கமால் பாஷா ஜாதா (Kemal Pasha Zada) என்பவராவார். இவர் முதலாம் சலீம் காலத்தில் வாழ்ந்த கவிஞர். மற்றொரு கவியரசர் மேசிஹி (Mesihi) என்பவர். வேறு எந்தத் துருக்கிக் கவியைக் காட்டினும் இவரையே ஐரோப்பியர் நன்கறிவர்! அத்தகைய மாமேதை இவர்! கவிகளுள் முத்து, துருக்கியர்களின் மாபெரும் சொத்து இவர்.

## (2) பண்டை இலக்கிய காலம்

16ஆவது நூற்றாண்டில்தான் உதுமானியப் பேரரசு தனது உச்சகட்ட வலிமையையும் செல்வாக்கையும் எட்டிற்று—அதுவும், சலீம், சுலைமான் போன்ற சுல்தான்களின் காலத்தில். இவ் வுண்மை, அக் காலத்திய மொழி கலாசார வளர்ச்சி நூல்களிலிருந்தும் வரலாற்றிலிருந்தும் விளங்குகிறது. மாபெரும் மாண்புமிக்க சுலைமான் (Sulayman the Magnificent) அரியணை மீது ஏறியதிலிருந்து, பண்டைக் கிரேக்க-ரோமானிய மொழி நடைகள் மறுமலர்ச்சியடைந்தன. இவர் காலத்திய கவிமாமணிகள் காயாலி (Khayali), லாமி (Lami), பாக்கி (Baki), ஃபுஜூலி (Fuzuli) முதலியோராவர்.

பாக்கி என்ற கவியின் திறமையை நுகர்ந்த 19ஆம் நூற்றாண்டைய கவிராயர்களும் அவரே தங்களுடைய ஆசிரியரெனப் போற்றிப் புகழ்வார்கள். அன்னாரின் புகழ் இந்தியா வரையும் எட்டியிருந்தது. ஃபுஜூலி என்பவர் சிறந்த சிந்தனைச் சிற்பியாவார்; இவரைத் துருக்கிய இலக்கியத்தின் தலைவரென்றுங் கூடச் சொல்லி விடலாம். சுல்தான் சுலைமானே பெருங் கவிச் சக்கரவர்த்தியாவார். சில அமைச்சர்களும் கவி பாடுவதில் வல்லுநரா யிலங்கினார்கள். சுல்தான்களைப் போலவே அமைச்சர்களும் கவியரசர்களைப் புரப்பவர்கள். ரூஹி (Ruhi), நெவி (Nevi),

யஹ்யா பேக் (Yahya Beg) ஆகியோர் அவ்வாறு கௌரவிக்கப் பட்டுப் போற்றப்பட்டவர்களுள் சிலர். இத்தகைய போஷிப்பு இரண்டாம் சலீம், மூன்றும் முராத், மூன்றும் முகம்மது ஆகி யோரின் காலத்தும் நீடித்தது. இதனுல், துருக்கி மொழியும் கல்வியும் மிகவும் செல்வாக்குப் பெற்றுச் சிறப்புடன் வளர்ச்சி யடைந்தன. முதலாம் அஹ்மத் காலத்தில் புகழ்பெற்ற கவிகள் நெஃபி (Nefi), நபி (Nabi), நதீம் (Nedim) ஆகியோர் ஆவர். வசன நடை நூல்களும் விருத்தியடைந்தன. முக்கிய எழுத் தாளர்கள்: அலீ செலிபி (Ali Chelebi), சஅதுத்தீன் (Saduddin), நயீமா (Naima), அத்தாவுல்லா (Ataullah), ஹாஜி கலீஃபி (Haji Khalifi), நர்கீஸி(Nergisi) ஆகியோர் ஆவர்.

முந்திய நூற்றுண்டுகளைப் போலவே பிந்திய நூற்றுண்டு களிலும் இலக்கியமும் கலாசாரமும் வளர்ந்தே வந்தன. இவ் விஷயங்களில் பாரசீகத்துக்கும் ஆக்ஸியாறு அக்கரைப் பிரதேசத்துக்கும் ஒட்டிய தொடர்பு இருந்தே வந்தது. பார சீகப் புகழ்மிக்க புலவரின் மூலம் துருக்கியர் கவிதைகளும் விருத்தியடைந்தே வந்தன. இதனிடையில், துருக்கியர் கவி யின் தனித்துவமும் வளர்ந்தே வந்தது. பிலி (Beligh), நவ்ரஸ் (Nevres), ஹிஷ்மத் (Hishmet) ஆகியோர் இத்தகைய துருக்கியத் தனித்துவக் கவிகளாவர்.

மூன்றும் சலீம் காலத்தில் பெர்த்தேவ் (Pertev), நிஸ்ஹத் (Neshet), ஷேக் காலிப் (Shaikh Ghalib) என்ற சிறப்பு மிக்க கவிகளும் காட்சியளித்ததுடன், இரண்டாம் மகமூத் (Mahmud II) காலத்தில் மேற்கத்திய நாகரிகமும், கிழக்கத்திய நாகரிகமும் கலாசாரமும் ஒன்றுய்க் கலந்தன. இதன் பயனுக, ஒருவகைப்பட்ட மூன்றுவது தரமான இலக்கியம் தோன்றிற்று. ஃபஜல் பே (Fazil Bey), வாசிஃப் (Wasif), இஜ்ஜத் முல்லா (Izzet Mulla), பெர்த்தேவ் பாஷா (Pertev Pasha), ஆக்கிஃப் பாஷா (Akif Pasha) என்ற ஆண் கவிகளும், ஃபித்னத் (Fitnet), லைலா (Laila) என்ற பெண்ணினக் கவிகளும் இம் மூன்றுவது வகையைச் சேர்ந்த புதுக் கவிஞர்களாவர். இவ் வாறுன மேற்கத்திய நாகரிகப் பழக்க வழக்கங்களாலும், ஃபிரெஞ்சு மொழி இலக்கியப் படிப்பாலும், துருக்கிய மொழியின் தனித்துவத்தாலும் 'சத்தியம்', 'எளிமை வாழ்க்கை' (Truth and Simplicity) என்ற கொள்கைகளின் அடிப்படையில் புதுப் புதுக் கவிமுறைகள் தோன்றலாயின.

துருக்கிய இலக்கியத்தில் ஏற்பட்ட இப் புது மலர்ச்சிகளுக்கும் இளந்துருக்கிக் கட்சி (Young Turks Party) வளர்ச்சிகளுக்கும், ஷினசி (Shinasi), கமால் (Kemal), சியா (Ziya) என்ற மூன்று அறிஞர்களின் நூல்களும் பிரசாரங்களும்தாம் முக்கிய காரணங்களாகும். பல ஃபிரெஞ்சுக் கவிஞர்களின் கவிதைகளைத் துருக்கி மொழியில் 1859-ல் மொழி பெயர்த்து வெளியிட்டார், ஷினசி என்ற துருக்கிக் கவிராயர். அடுத்த ஆண்டில் அவர் துருக்கி மொழியில் ஒரு செய்திப் பத்திரிகையை வெளியிட்டு, எல்லாரும் புரிந்து கொள்ளும் விதமாக விஞ்ஞான, சமுதாய, நவீன ஐரோப்பிய கண்ணோட்டத்துடனும் கருத்துடனும் அமைந்த விஷயங்களைக் கட்டுரைகளாக எளிய இனிய நடையில் எழுதி வரலானர்.

இதோடு கூட, பலப்பல ஃபிரெஞ்சு நூல்களை அவ்வப்போது அவர் துருக்கி மொழியில் மொழிபெயர்த்துத் தம் துருக்கிச் செய்தித்தாளில் வெளியிட்டார். கி.பி. 1871-ல் அப்துல் ஹக் ஹமீத் (Abdul Huq Hamid) என்றதோர் அறிஞர் துருக்கி மொழியிலேயே, கவி நடையிலேயே இணையற்ற அழகிய நாடகமொன்றை இயற்றினர்.

19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்தே துருக்கியை ஐரோப்பிய மயமாக்கும் முயற்சி தொடங்கப்பட்டு விட்டது. ஐரோப்பிய மாதிரியி லமைந்த பள்ளிக்கூடங்களும் கல்லூரிகளும் துருக்கி நாடெங்கும் ஆரம்பிக்கப்பட்டன. துருக்கி மாணவர்கள் ஐரோப்பிய நாடுகளில் படித்துப் பட்டம் பெற்று வர அவ்வப்போது அங்கு அனுப்பி வைக்கப்பட்டனர்.

துருக்கி நாட்டு உளுத்துப்போன, ஊசிப்போன பழைய இலக்கியப் படிப்பு முறைகளையும் கலாசார ஒழுங்கீனங்களையும் தூக்கி யெறிந்துவிட்டு, அறிவு வளர்ச்சியைத் தூண்டும் விஞ்ஞான சமுதாயப் புது ஐரோப்பிய இலக்கியமுறைப் படிப்புகளைப் போதிக்கவும், 'தாய் நாடு', 'சுதந்தரம்', 'ஜனநாயகம்' என்னும் உணர்ச்சிகளை எழுப்பி விடவும், தங்கள் நாட்டுக்கேற்ற அரசியலமைப்புக்கும் கோட்பாடுகளுக்கும் ஏற்ற நாட்டுப்பற்று, மனிதப்பற்று உணர்ச்சிகளைத் தூண்டிவிடவும் நோக்கங்கொண்டுதான் இந்த ஐரோப்பியமய இயக்கம் எழும்பிற்று. கி.பி. 1908-ல் தோன்றிய துருக்கி நாட்டுப் புரட்சிக்கு முற்கூறிய ஐரோப்பிய மயமாக்கும் திட்டங்களும் பிரசாரங்களும் தாம் முக்கிய கிளர்ச்சியாக அமைந்தன.

### கி.பி. 1908-ல் துருக்கிய புரட்சி

துருக்கி நாட்டுப் பழைய மனச்சாட்சி என்பது இரக்கமற்ற முறையில் தூக்கி எறியப்பட்டு, மாயமாக மாறி, ஐரோப்பிய மயப் புது மனச்சாட்சியுடன், புத்தம் புதிய புது மனப்பான்மை புகுத்தப்பட்டது. 1908ஆம் ஆண்டைய புரட்சியின் விளைவினால் ஒரு புதுச் சகாப்தமே ஆரம்பமாகி விட்டது. எழுத்துச் சுதந்தரத்துக்குக் குறுக்கிடும் 'சட்டம்' கிழித்தெறியப்பட்டு, தீ மூட்டப்பட்டது. படிக்காத மக்களும் படித்தவர்களும் கருத்துப் பறிமாறிக் கொண்டனர், உயர்வு தாழ்வேதுமின்றி!

'பாமர மக்களை அணுகிப் பேசு! அவர்களுடன் விவாதி! அவர்களுக்கு விளக்கம் கூறு! யாரையும் விலக்காதே!' என்னும் குரலொலிகள் எழுந்தன. ஆமைகளாக இருந்தவர்களை அடலேறுகளாக மாற்றி, பாட்டாளிகளைப் பட்டதாரிகளாக்கி, 'எல்லோரும் வாழ்வோம், ஒன்றுக வாழ்வோம், நன்றுக வாழ்வோம்!' என்பன போன்ற கருத்துகளைத் தோற்றுவித்தது நவீனத் துருக்கியின் வீரக்குரல், விவேகக்குரல், போர்க்குரல். தங்களுக்குள்ளேயே யாதொரு தடையுமில்லாமல் உரையாடிக் கருத்துப் பரிமாறி உலக விஷயங்களைப் புரிந்து கொள்ள வேண்டும் என்பதே மக்களின் குறிக்கோளாயிற்று. இம் மனப்பான்மையைப் பரப்பப் பல தலைவர்கள் தோன்றினார்கள். அவர்களுள் முக்கியத்துவம் பெற்றவர்கள் இருவராவர்:

(1) ஜியா கோல்க் ஆல்ப் (Ziya Golk Alp).

(2) உமர் சைஃபுத்தீன் (Omar Saifuddin).

முகம்மது அமீன் (Mohammad Emin) என்பவர் பாமர மக்களிடையே செல்வாக்குப் பெற்ற ஒருமதக் கவி யாவார்; மக்கள் கவியும் ஆவார்.

இப் புது இயக்கம்பற்றித் துருக்கிப் பத்திரிகைகளெல்லாம் எழுதிப் பிரசாரம் செய்தன. பெரும் எழுத்தாளர்கள் யாவரும், பெரும் பத்திரிகை நிருபர்களும்கூட இப் புதுக் கருத்துகளை எழுதிப் பரப்பினர். சமுதாயம், தத்துவம், வரலாறு என்ற தலைப்புகள் கொடுத்தெல்லாம் மொழிபெயர்ப்புகள் மூலமும் மக்களின் கண்களையும் கருத்துகளையும் அவர்கள் தூண்டிவிட்டார்கள். இவ் விலக்கியப் பரப்புதலியக்கத்தால் கல்வி என்னும் நீரோடை எல்லாப் பிரதேசங்களுக்கும், எல்லா மக்களிடையேயும் பாய்ந்து அறிவையும் படிப்பையும் விரிவுபடுத்திய

துடன், ஐரோப்பாவுக்கும் துருக்கிக்கும் இடையே நட்பையும், அண்டை அயல் நாட்டுக்கு அவசியமான நல்லுணர்ச்சிகளையும் நிலைநாட்டிற்று.

தௌஃபீக் ஃபிக்ரத் (Tewfiq Fikrat), ஷிகாபுத்தீன் (Shehabuddin), நிகார் கானம் (Nigar Khanum), முகம்மது ஆக்கிஃப் (Mohammad Akif), காலித் ஜியா (Khalid Ziya), அகமத் ஹிக்மத் (Ahmad Hikmet), முகம்மது ஃபுவாத் பே (Md. Fuad Bey)[1] ஆகிய பேரறிஞர்களும், எழுத்தாளர்களும், கவிராயர்களும் இப் புத்துலகப் புயலுக்கு ஊக்கமூட்டிய முக்கிய மானவர்கள் ஆவர்.

இதுதான் துருக்கி நாட்டு இலக்கிய வரலாற்று வளர்ச்சி யாகும்.

[1] இஸ்தம்பூல் பல்கலைக்கழகப் பேராசிரியர் இவர்.

# 6 ஐரோப்பாவில் உதுமானியர்கள்

## (1) கிழக்கு ஐரோப்பாவில் உதுமானிய ஆட்சியின் வெற்றியும் வளர்ச்சியும்

## (Ottoman Conquest and Expansion in Eastern Europe)

ஏற்கெனவே நாம் உதுமானிய துருக்கியர்களின் ஆரம்பக் கதையைப் படித்திருக்கிறோம். 13ஆம் நூற்றாண்டில் திடீரென்று நிகழ்ந்த மங்கோலியப் படையெடுப்பால், இஸ்லாமிய உலகப் படமே முழுக்க முழுக்க மாற்றியமைக்கப்பட்டு விட்டது. அனேக முஸ்லிம் இராச்சியங்கள் சுக்கு நூறாகப் பிய்த்தெறியப்பட்டு விட்டன. ஆசியா மைனரை 200 ஆண்டுகள்வரை தொடர்ந்து ஆண்ட ரூம் சுல்தான்கள், 14ஆம் நூற்றாண்டின் துவக்க காலத்தில் உதுமானியர் ஆட்சிக்கு விட்டுக்கொடுக்கும் அளவுக்கு வலிமைகுன்றிய நிலையை அடைந்தனர்.

தங்கள் வமிசப் பேரரசு நிறுவனரான சுல்தான் உதுமான் தலைமையில் ஆசியாவிலும் ஐரோப்பாவிலும் உதுமானிய அரசு வியாபிக்கத் தொடங்கிற்று. இம் முக்கியமான இஸ்லாமியப் பேரரசு வரலாற்றைச் சில தலைப்புகளின்கீழ்ப் பிரிக்கலாம்:

(1) சுல்தான் உதுமானும் பைஜான்ஷியப் பேரரசும்.

(2) சுல்தான் ஓர்கான் காலத்தில் ஐரோப்பாவுக்குள் உதுமானிய ஆதிக்கம் பரவுதல்.

(3) முதலாம் முராத் காலத்தில் தென்கிழக்கு ஐரோப்பாவுக்குள் உதுமானிய ஆதிக்கம் பரவுதல்.

(4) ஐரோப்பாவில் சுலைமானின் வெற்றிகள்.

**(1) உதுமானும் பைஜான்ஷியப் பேரரசும்**

14ஆம் நூற்றுண்டின் ஆரம்பக் கட்டத்தில்தான் உதுமான் தமது பெயராலான ஓர் அரசை நிறுவினுர். ஒரு சிறு துருக்கிய இனப் பிரிவின் தலைவராக இருந்து தமது வாழ்க்கையை எளிய முறையில் ஆரம்பித்த அவர், மெல்ல மெல்லக் கிரேக்கப் பிரதேசங்களை வென்று சுல்தானுகவே ஆகி விட்டார். புருசா (Brusa) என்ற நகருக்கும், நிசியா (Nicea) என்ற நகருக்கும் நடுவே இருந்த எனி ஷெஹர் (Yeni Shehir) என்ற நகரை அவர் தம் தலைநகராக்கிக் கொண்டு, கிரேக்க நகரங்களான புருசா, நிசியா, நிகோமீடியா (Nicomedia) என்னும் நகரங்களை வென்ருர். இவ்வாறு வென்ற அவருடைய சிறு நிலப் பரப்புத்தான், அவருடைய சந்ததியாரின் காலத்தில் மிகப் பரந்த உதுமானியப் பேரரசாகப் படர்ந்து விரிந்து காட்சி யளித்தது.

**(2) சுல்தான் ஓர்கான்: ஐரோப்பாவினுள் ஆதிக்கம் ஊடுருவுதல்**

சுல்தான் ஓர்கான் கி.பி. 1326-ல் பட்டத்துக்கு வந்தார். அவர் வாரிசாக அடைந்த அரசு பூரண வலிமையுற்றதாக இல்லை யாதலால், அவரே தமது சுயமுயற்சி கொண்டு அதைப் பூரண மாக்கவேண்டிய மிகப் பெரிய பொறுப்பையும் சிரமத்தையும் மேற்கொள்ள வேண்டியவராயினுர்; நிசியா, நிகோமீடியா என்னும் அவ்விரு நகரங்களையும் வலிமைமிக்கனவாக ஆக்க முற்பட்டார். மாமதியும் பெரும் ஆற்றலும் பெற்றவரான ஓர்கான், அவற்றைப் பலப்படுத்திக் கொண்டதுடன், எதிரிகளையும் நண்பர்களாக்கிக்கொள்ளும் மதி நுட்பத்தையும் பெற்றிருந்தார். இத்தகைய சிறப்பு வாய்ந்த பண்புகளினுல், உதுமானியப் பேரரசை அவர் ஆசியா கண்டத்திலும் ஐரோப்பா கண்டத்திலும் தன்னிகரற்ற ஒரு சக்தியாகப் பெருக்கி விட்டார். ஓர்கானின் நீண்டகால ஆட்சியை இரு பருவங்களாகப் பிரித்துப் படிக்கலாம். (1) கி.பி. 1326 முதல் 1344 வரை, (2) கி.பி. 1344 முதல் 1360 வரை.

**முதற் பருவம்**

இந்தக் கால கட்டத்தில் நிசியாவையும் நிகோமீடியாவையும் மறுபடியும் அவர் பூரணமாக வென்று பலப்படுத்தியதோடல்லாமல், ஆசியா மைனரிலுள்ள வேறு சிறு சிறு அரசுகளையும் ஒருங்கிணைத்து, உதுமானிய அரசின் எல்லைகளையும் அகலப்படுத்திக் கொண்டே சென்ருர். இவ்வாருக, அவர் உள்நாட்டுப் பிரச்சினையைத் தீர்த்துப் பேரரசு உருவாகத் தக்க முறையில் அனைத்தையும் பலப்படுத்திக் கொண்டார்.

**இரண்டாம் பருவம்**

இவ் விரண்டாவது கால கட்டத்தில் ஐரோப்பிய கண்ட கிரீஸிலுள்ள மாசிடோனியாவிலும் திரேசிலும் வெற்றி காண அவர் அஸ்திவாரமிட்டார். அதற்கான எல்லா முயற்சிகளையும் செய்து அவர் பொன்னான வாய்ப்பளிக்கும் தக்க நேரத்துக்காகக் காத்துக் கொண்டிருந்தார்.

**ஐரோப்பாவுக்குள் ஓர்கான் திடும் பிரவேசம்**

பெரும் திறமைசாலியான ஓர்கான் ஐரோப்பாவுக்குள் படையெடுக்க, தக்க சந்தர்ப்பத்தை எதிர்நோக்கிய வண்ணம் காத்திருக்கையில், அவரது சொந்த முயற்சியில்லாமலேயே ஒரு சம்பவம் நிகழ்ந்தது.

செர்பியா (Serbia) என்னும் நாட்டின் அரசனான ஸ்டீஃபன் துஷான் (Stephen Dushan) என்பவனும், பைஜான்ஷிய மன்னனான கண்ட்டேகியூஜீனஸ் (Cantacuzenos) என்பவனும், ஒருவனை எதிர்த்தொருவன் வாளுருவிச் சண்டைக்கு முனைந்தனர்! பைஜான்ஷியப் பேரரசின் அரியணை தனதே என்று உரிமை பாராட்டினான் ஸ்டீஃபன். இதனால் பீதியடைந்த கண்ட்டேகியூஜீனஸ், தனக்கு இராணுவ ஒத்தாசை நல்கியருளுமாறு ஓர்கானை வேண்டினான். 6000 படை வீரர்களை அவர் தனக்கு உதவியாக அனுப்பி வைத்தால், தன்னரும் மகளான இளவரசி தியோடராவையே (Princess Theodara) அந்த சுல்தானுக்குத் திருமணம் செய்து கொடுக்கத் தயாராயிருப்பதாக அவன் 1345-ல் வாக்குறுதி யளித்தான். ஓர்கானும் இதை உடனடியாக ஏற்றுக் கொண்டார். உதுமானியப் படை ஐரோப்பாவுக்குள் நுழைந்தது.

கண்ட்டேகியூஜீனஸ் போரில் வென்றார்; எதிர்னே (Adrianople) என்ற பிரதேசமும் கிடைத்தது. இவ் வெற்றிக்குப் பின் இளவரசி தியோடரா ஓர்கானை மணந்தாள். இவ்வாறாக, ஓர்கான் பைஜான்ஷிய கிறித்தவர்களின் 'மாப்பிள்ளை'யாக ஆகிவிட்டார்.

பைஜான்ஷிய ஆட்சியாளர்களிடையே ஒற்றுமை இல்லாமையாலும், அந் நாட்டுக் குடிபடைகளிடையே யாதொரு சமய சமுதாய ஒற்றுமை இல்லாமையாலும், வெனிஸ் (Venice) நகருக்கும் ஜினோவா (Genoa) நகருக்குமிடையே மூர்க்கத்தனமான வர்த்தக வாணிபப் போட்டிகளும் வேறுபாடுகளும் மனக்

கசப்புகளும் வேரோடிக் கிடந்தமையாலும் உதுமானியப் படைப் பலம் ஆங்கே நிரந்தரமாக இருக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுவிட்டது. கண்ட்டேகியூஜீனஸும் இதற்குப் பெரும் ஆதரவு தந்து, உதுமானியர்களை ஐரோப்பாவுக்குள் திறந்த மனத்துடன் தாராளமாக நல் வரவேற்றார். ஜான் பலேலோகோஸ் (John Palaeologos) என்பவரும், உதுமானியப் படையும் அதன் செல்வாக்கும் தம் நாடான திரேசுக்குள் (Thrace) நுழையுமாறு யாதொரு எதிர்ப்பும் தெரிவிக்காமல் முற்றும் அனுமதித்தார்.

இவ்விதமாக, ஆசியாவிலிருந்த உதுமானியர்களின் அதிகாரமும் ஆதிக்கமும் செல்வாக்கும் ஆட்சியும் மெல்ல மெல்ல ஐரோப்பாவுக்குள் நுழையவும் பரவவும் ஓர்கான் இட்ட ஆரம்பத்திட்டம் அவருடைய சந்ததியினர்களால் எந்த அளவுக்குப் பூர்த்தி செய்து முடிக்கப்பட்டதென்றால், மிகச் சடுதியில் மாபெரும் உதுமானியப் பேரரசு உலக வரலாற்றில் வேரூன்றி முழுமை பெற்று விட்டது! ஓர்கானின் வாரிசுகள் ஐரோப்பாவில் மேலும் தங்கள் வீரக்கொடியை நாட்டித் தங்கள் ஆதிக்கத்தையும் செல்வாக்கையும் வளர்த்து அதிகரித்துக் கொண்டனர்.

### (3) முதலாம் முராத், முதலாம் பாயஜீத் ஆட்சியில் தென் கிழக்கு ஐரோப்பாவுக்குள் உதுமானிய ஆதிக்கம் பரவுதல்

ஓர்கான் மரண மடைந்த பின்னர், அவர் இளைய மகன் முராத் அரியணைமீது ஏறினார். இவர் அரசியல் அறிவு, அரச தந்திரசாகசம், மக்கள் பிரச்சினைகளை எடைபோடும் தீர்க்கதரிசனம், வீரதீரப் பண்புகள் ஆகிய இவையெல்லாம் ஒருங்கே அமையப் பெற்றவராகையால், மிகச் சீக்கிரமாகவே ஐரோப்பாவின் தென் கிழக்குப் பிரதேசமான பால்கனில் (Balkan) உதுமானிய செல்வாக்கையும் ஆதிக்கத்தையும் நிலைநாட்டி விட்டார்.

சுல்தான் முராதின் தந்தை காலத்திலேயே, நாம் முற்கூறியவாறு, திரேசில் ஏற்கெனவே உதுமானிய வீரக்கொடி பறக்கத் தொடங்கிவிட்டிருந்தது. ஓர்கானால் கல்லிபோலியும் (Gallipoli) பிடிபட்டு விட்டது. இதனாலெல்லாம் ஐரோப்பா கதி கலங்கி விட்டிருந்தது. பால்கன் வட்டார நாட்டு மக்களான கிரேக்கர்கள், செர்பியர்கள், பல்கேரியர்கள் ஆகியோர் உதுமானியர்களை வெறுத்ததற்கும் மேலாகத் தங்களுக்கிடையே ஒருவரையொருவர் அதிகமாக, மூர்க்கமாக, ஆவேசமாக அடித்துக் குதறிக் கொண்டிருப்பவர்களாகத் தோன்றியதால், பால்கன் அரசுகளின் போலித்தனமான வெளி வேஷ ஒற்றுமையைக்

கண்டு முராத் ஏதொன்றுக்கும் கவலைப்பட வேண்டிய அல்லது அஞ்ச வேண்டிய அவசியமில்லாமற் போய்விட்டது.

கி.பி. 1360-61-ல் உதுமானியப் படை முராதின் தலைமையில் சோர்லு (Tchorlu) நகரை வென்று பிடித்துக் கொண்டது. இதைத் தொடர்ந்து எதிர்னே (Adrianople) போரில் பைஜான்ஷிய–பல்கேரியக் கூட்டுப் படையையும் தோற்கடித்தார் முராத். எதிர்னே நகரிலிருந்த குடிமக்களே நகர வாசல்களையும் கோட்டை வாசல்களையெல்லாமும் அகலத் திறந்து, வீரர் முராத் சுல்தானுக்கும் அவருடைய சேனைக்கும் ஆரவாரத்துடன் கூடிய மகத்தான வரவேற்பளித்தனர்!

இப்படியாக, 15 மாதங்களுக்குள்ளாகவே திரேசின் (Thrace) முக்கிய பகுதிகளான ஃபிலிப்போபோலிஸ் (Philipopolis) முதலிய வட்டாரங்கள் பிடிபட்டு விட்டமையால், அதிவிரைவில் பால்கன் பிரதேசம் முழுவதுமே எங்கெங்கும் உதுமானியப் பிறைக் கொடிகள் பறக்க ஆரம்பித்தன.

**சாமக்கோவ் போர் (கி.பி. 1371)**

சுல்தான் முராதின் மின்னல் வேக வெற்றிகளைக் கண்ட ஏனை ஐரோப்பிய நாடுகள் தங்களுக்குள் கூட்டுச் சேர்ந்து, முராதை எதிர்த்து நிற்க ஆரம்பித்தன (1363). செர்பியா மன்னன், வலேச்சியா, போஸ்னியா, ஹங்கேரி அரசன் ஆகியோர் ஒன்றாக இணைந்து, பறிகொடுக்கப்பட்டுவிட்ட எதிர்னேயை மீட்கத் தீர்மானித்தனர். ஆனால், இந்தக் கூட்டு இணைப்புப் படைகளோ 1371-ல் சாமக்கோவ் (Samakhov) என்னும் போர்க்களத்தில் உதுமானியர்களால் தோற்கடிக்கப் பட்டன. சோஃபியாவும் (Sofia) பல்கேரியாவும் சுல்தான் முராதின் காலடியில் சுருண்டு கிடந்தன. அன்பையும் ஆதரவையும் சொரிந்து, தோற்கடிக்கப்பட்ட மக்களின் உள்ளங்களையெல்லாம் கொள்ளை கொண்டார் முராத்.

**மாசிடோனியாவும் வெல்லப்படல்**

அதே ஆண்டில் (1371-ல்) மாசிடோனியா (Macedonia) மீது படையெடுத்துச் சென்று, அங்கேயும் வெற்றி வாகை சூடினார் முராத். அதையடுத்து, பண்டை செர்பியா, அல்பேனியா, போஸ்னியா ஆகிய நாடுகளை 1372-லும், அதைத் தொடர்ந்து அட்ரியாட்டிக் (Adriatic) கடற் கரையிலமைந்துள்ள டால்மேஷியா (Dalmatia) வையும் அவர் கைப்

பற்றினர். வர்தாரின் (Vardar) கிழக்குப் பக்கத்தை அடுத்துள்ள மாசிடோனியாவையும், தென் பல்கேரியாவையும், திரேஸ் முதலிய நாடுகள் அனைத்தையும் வென்று அவற்றின்மீது வெற்றிக் கொடி நாட்டி விட்டதால், முராதின் வலிமை எவராலும் அசைக்க முடியாத திண்மையைப் பால்கன் தீபகற்பத்தில் பெற்றுக் கொண்டு விட்டது.

### முராதை எதிர்க்க மற்றொரு கூட்டணி

இத்தனை வெற்றிகளுக்குப் பிறகும் எதிர்ப்பு நின்றதா என்றால், அதுதானில்லை! பல்கேரியா, செர்பியா, அல்பேனியா, போஸ்னியா, வலேச்சியா (Wallachia) ஆகிய நாடுகள் முராதை எதிர்க்க மறுபடியும் வரிந்துகட்டிக் கூட்டுச் சேர்ந்தன.

### கொஸ்ஸோவா வெற்றி

கி.பி. 1389-ல் கொஸ்ஸோவா (Kossova) என்னும் இடத்தில் நடைபெற்ற பெரும் போரில், கூட்டுச்சேர்ந்து எதிர்த்த பால்கன் மன்னர்களின் படைகளெல்லாம் முராதின் இணையிலாப் படையால் சீரழிக்கப்பட்டன. பலப்பல வெற்றிகளால் கிழக்கு ஐரோப்பாவில் உதுமானிய வெற்றிக் கொடியைப் பறக்க விட்ட வீர சுல்தான் முராத் போர்க்களத்திலேயே படுகொலை செய்யப்பட்டார்.

### நிகோபோலிசில் மைந்தர் கொட்டிய வெற்றி முரசு (1396)

முராதின் எதிர்பாராத மரணத்தையடுத்துப் பட்டத்துக்கு வந்த அவருடைய மைந்தரான பாயஜீத் (Bayazid) 1396-ல் ஐரோப்பிய படையை நிகோபோலிசில் நடந்த, நினைவை விட்டகலாப் பெரும் போரில் தோற்கடித்து, பல்கேரியா (Bulgaria) முழுவதையுமே உதுமானியப் பேரரசுடன் இணைத்துக் கொண்டார். இவ்வாறாக, உதுமானியர்கள் இதுவரை கிழக்கு ஐரோப்பாவில் தங்கள் வீரக் கொடியை நாட்டித் தங்கள் ஆதிக்கத்தைப் பரப்பலாயினர். ஆனால், சுல்தான் இரண்டாம் முராத் காலத்தில் (1422) வெற்றிக் கொடி நாட்டிய உதுமானியப் படை, ஜான் ஹுன்யாடி (John Hunyadi) என்னும் மாபெரும் மூர்க்க ஹங்கேரிய வீரனால்[1] பன்முறை தோற்கடிக்கப்பட்டது.

[1] John Hunyadi (c. 1387—1456) a Hungarian statesman and warrior, was the son of Vojk, a Magyarized Vlach who married Elizabeth Morzsinay. He derived his family name from the small family estate of Hunyad, in Transylvania. For more datails, see J Teleki, 'The Age of the Hunyadis in Hungary'; R. N. Bain, 'The siege of Belgrade, 1456.'

கிழக்கு ஐரோப்பிய மக்கள் அத்துணை எளிதில் உதுமானியர்களின் கரத்திடைத் தோல்வியைப் பெற்றுக் கொள்ளக் கூடியவர்களல்லர் என்பதையே இரண்டாம் முராதின் தோல்வி காட்டுகிறது. இதுபோல் பன்முறை செர்பியர்களும், பல்கேரியர்களும், போஸ்னியர்களும், ஹங்கேரியர்களும் அடுத்தடுத்து எதிர்த்துக் கலகம் செய்தனரெனினும், அவர்கள் இறுதியில் நசுக்கப்பட்டனர். ஆனால், முடிவில், கி.பி. 1444-லும், 1448-லும் ஜான் ஹுன்யாடியும் அவனுடைய ஐரோப்பிய நேசப் படைகளும் இரண்டாம் முராதின் படையினரால் நசுக்கப்பட்டுத் தோல்வியடைந்ததுடன், இனி உதுமானியரின் ஆட்சியைத் தொடர்ந்து எதிர்த்து நிற்கும் திராணியும் வல்லமையும் அற்றுப் போயினர்.

**கான்ஸ்டான்ட்டிநோப்பிள் வீழ்ச்சிக்குப் பின்**

இரண்டாம் முராதின் மைந்தரான வெற்றி வீரர் (Mohamed II) 1453-ல் கீர்த்தி வாய்ந்த கிறித்தவ பைஜான்ஷியப் பேரரசின் தலைநகரான கான்ஸ்டான்ட்டிநோப்பிளைப் பிடித்தவுடன், அதே மூச்சில் மேலும் ஐரோப்பாவுக்குள் நுழைந்து படையெடுத்துச் சென்று, போஸ்னியா, ஹெர்ஜிகொவினா (Hergigovina), வலேச்சியா ஆகிய நாடுகளையும் பிடித்து, கிரீமியா (Crimea) அரசனையும் தமக்குக் கப்பம் கட்டுமாறு செய்தார். உதுமானின் வழித்தோன்றல்களின் சிறப்பையும் வீரத்தையும் எவ்வாறு போற்றுவது!

**(4) மாவீரன் சுலைமானின் ஐரோப்பிய வெற்றிகள்**

அடுத்து வந்த மற்ற உதுமானியப் பேரரசு சுல்தான்களில் பெருமை வாய்ந்தவராயிலங்கிய சுல்தான் சுலைமான் காலத்தில் 1521-ல் பெல்கிரேட் (Belgrade) நகரம் தாக்கப்பட்டுப் பிடிபட்டது; பெல்கிரேட்மீது உதுமானிய வெற்றிக் கொடியைப் பறக்க விட்டார், மாவீரன் சுலைமான். சில ஆண்டுகள் கழித்து மொஹாக் (Mohac) என்ற இடத்தில் நடந்த போரில் ஹங்கேரிய சேனையையும் அவர் தோற்கடித்தார். இதன் பயனாக, மேற்குப் பால்கனிலும், டான்யூப் (Danube) நதிபாயும் கிழக்குப் பிரதேசத்திலும் சுலைமானின் வெற்றிக்கொடி பட்டொளி வீசிப் பறக்கலாயிற்று.

சுல்தான் சுலைமான் அவ்வளவுடன் நின்றுவிடவில்லை; ஆஸ்திரியா - ஹங்கேரியப் பேரரசின் தலைநகரான வியன்னா நோக்கிப் பாய்ந்தார், தம் மாபெரும் எதிரியான கிறித்தவப்

பேரரசர் ஐந்தாம் சார்லஸைச் (Charles V) சந்திக்க! ஆனால், சுலைமானைப் போரில் எதிர்க்கும் தோள்வலியோ மனோதிடமோ சார்லஸுக்கு இல்லையாதலால், 1529-ல் அவர் தமது தலைநகர் நோக்கி ஓட்டம் பிடித்து விட்டார். மறுபடியும் 1532-ல் வியன்னவைப் பிடிக்க சுலைமான் முனைந்தாரெனினும், அவரது திட்டம் நிறைவேறிற்றில்லை.

மத்திய ஐரோப்பாவுக்குள் மிக அதிகமாக ஊடுருவிப் புகுந்து படையைச் செலுத்திச் சென்றால், புதுப் புதுப் பிரதேசங்களைக் கட்டியாளும் தளவாடப்பலம், படைப்பலம், ஆள்பலம், பணம் முதலியவெல்லாம் போதாமல் காரியம் தட்டுப்படலாம் என்ற முன் யோசனை மிகுதியால் சுலைமான் சற்றுத் தளர்ந்து போய் அவ்வெண்ணத்தைக் கைவிடலானார். சுலைமானின் மரணத்துக்குப் பிறகு உதுமானியப் பேரரசு மேலும் விரிவுபடுத்தப்பட முடியவில்லையானாலும், கிழக்கு ஐரோப்பாவில் அது விரிந்து படர்ந்து, 1878 வருட பெர்லின் சமாதான உடன்படிக்கை வரையில் நிலைத்து நின்றது என்னவோ உண்மை தான்!

## (2) மாவீரன் மாண்புமிகு சுலைமான்
### (கி.பி. 1520—1566)
### (Sulayman the Magnificent)

14ஆம் நூற்றாண்டின் ஆரம்பகாலக் கட்டத்தில் தோன்றிய உதுமானிய அரசியலாட்சியின் வரலாறு, அது பிறந்த ஒரு நூற்றாண்டு காலத்துக்குள், ஆசியாவிலும் ஐரோப்பாவிலும் அரசாட்சி நடத்தி வந்த மற்றெல்லா ஆட்சிகளைக் காட்டிலும் அதிக பிரசித்தியடைந்து விட்டது. 16ஆவது நூற்றாண்டின் ஆரம்ப கட்டத்தில் சுல்தான் சலீம் (1508—20) அரேபியாவின் பெரும் பாகத்தை உதுமானியப் பேரரசின் ஆட்சியின் கீழ்க் கொணர்ந்தார்.

சுல்தான் சலீமின் மகனான மாவீரன் மாண்புமிகு சுலைமான் காலத்தில் உதுமானியப் பேரரசு முக்கியத்துவம் பெற்று, மிகவும் விரிவடைந்து, புகழேணியின் உச்ச கட்டத்தை எட்டிற்று. அவர் காலத்திய துருக்கிதான் ஐரோப்பாவிலும் மத்திய கிழக்குப் பிரதேசத்திலும் தன்னிகரில்லாப் பெரும் சக்தியாகவும் உன்னதமான பேரரசாகவும் திகழா நின்றது.


துருக்கி சாம்ராஜ்யம்
1566-1683
புடாபெஸ்ட
1520-1566
1566-1683
1450-1481
பெல்கிரேட
1450-1481
1389-1402
புச்சாரெஸ்ட
1450-1481
கருங்கடல்
சோபியா
1360-1389
கான்ஸ்டான்டிநோபில்
1236
1426-1450
1228
1221
அன்காரா
1326-1360
1360
ஏதென்ஸ்
1450-1481
1421-1450
கிரீட்
1566-1583
சைப்ரஸ்
1566-1683
1512-1520
பைரூத்
ஜெருசலம்
மத்தியதரைக் கடல்
1520-1566
1566-1683
1520-1566
பாக்தாத்
காஸ்பியன் கடல்

படம் 7.

**மாவீரன் சுலைமானின் வாழ்க்கையும் அவரது வெற்றிச் சாதனைகளும்**

(1) கி.பி. 1520 வரை சுலைமானின் ஆரம்ப வாழ்க்கை.

(2) சுலைமான் அரியணை ஏறியபோதிருந்த ஐரோப்பாவின் அரசியல் நிலை.

(3) சுலைமான் தொடுத்த போர்களும் அவர் புரிந்த சாதனைகளும்.

(4) பாரசீகத்தின்மீது போர்.

(5) சுலைமானின் மாண்புகள்.

இவ்வாறு ஐந்து பிரிவுகளாக அவரது வாழ்க்கையைப் பிரிக்கலாம்.

**(1) கி.பி. 1520 வரை சுலைமானின் ஆரம்ப வாழ்க்கை**

உதுமானிய சுல்தான்களின் வரிசையில் பத்தாவது இலக்கமுடையவரும், தன்னிகரில்லாப் பெரும் புகழும் கீர்த்தியும் படைத்தவருமாக விளங்குபவர் மாண்புமிகு சுலைமான் ஆவார். கி.பி. 1494—95 ஆண்டிடையே இவர் பிறந்தார். இவருடைய தந்தை சுல்தான் சலீம்; தாய் ஆயிஷா சுல்தான் என்னும் புகழ் பெற்ற பேரழகியான கிரீமியா நாட்டரசனின் மகள் ஆவாள். சுலைமானின் பாட்டனாரின் ஆட்சிக் காலத்தில் கஃப்ஃபா (Kaffa) நாட்டின் ஆளுநராகவும், தந்தை சுல்தான் சலீமின் காலத்தில் மாக்னிசா (Maghnisa) நாட்டின் ஆளுநராகவும் பதவி வகித்த சுலைமான் அடக்கமாகப் பரிபாலனம் செய்து வந்தாரே தவிர, அக் கால கட்டத்தில் வேறெந்த விதமான அரசு விவகார சம்பந்தப்பட்ட அரிய சாதனை எதையும் இவர் இயற்றிவிட வில்லை. இள வயதில் சுலைமான் நற்கல்வியும் பல்வேறு இராணுவப் பயிற்சிகளும் பெற்று விளங்கினார்; இவர் கற்றறிந்தவர் மட்டுமன்றி, வாள் வீச்சில் மாபெரும் வீரனாகவும் திகழ்ந்தார்.

தமது எதிர்கால அபிலாசை நோட்டம், திட்டம்பற்றித் தம் தந்தை சலீமின் ஐயப்பாட்டுக்கும் அச்சத்துக்கும் தாம் எப்படியோ ஆளாகிவிட்டதாக இளவரசர் சுலைமான் கலவரமுற்று, கவலைப்பட்டு, அச்சமுற்று வீண் விளம்பரங்களிலிருந்து தப்பித்துக்கொள்வதிலேயே தீர்க்கமாகக் கவனம் செலுத்தி, தமது ஆளுநர் உத்தியோக அலுவல்களை மட்டும் கவனித்துக் கொண்டார். கலை, கலை யறிவு, இலக்கியம், இலக்கிய வளர்ச்சி போன்றவற்றில்மட்டுமே இவர் தமது ஈடுபாட்டைக் காண்பித்து வருவாரேயொழிய, அரசியல் ஆட்சி இயலில் காண்பிக்கவில்லை.

தம் தந்தைக்குப் பின் (1520-ல்) சுல்தான் பட்டம் ஏற்கும்வரையில் கூட, அமைதியான வாழ்க்கையே வாழ்ந்து காண்பிப்பதில் இன்பம் கண்ட இளைஞர் சுலைமான் ஆவார்.

## (2) சுலைமான் அரியணை ஏறியபோதிருந்த ஐரோப்பிய அரசியல் நிலை

சுல்தான் சுலைமான் பட்டம் ஏற்கையிலிருந்த மத்திய, கிழக்கு ஐரோப்பிய நிலைமை உதுமானியத் துருக்கியர்களுக்கு அனுகூலமாகவே அமைந்து கிடந்தது. மத்திய ஐரோப்பாவிலும் கிழக்கு ஐரோப்பாவிலும் உள்ள பிரதேசங்களெல்லாம் பணக்கார நிலச்சுவான்தார்களுக்குச் சொந்தமான சிறுசிறு பகுதிகளாகவும், தங்களுக்குள் சண்டை சச்சரவு விளைத்துக் கொள்வனவாகவும், ஒற்றுமை குலைந்த குழப்பக் குழுவாகவும் காட்சியளித்தன. ஹங்கேரி போன்ற சில பெரிய அரசுகளுமேயுங்கூட அவ்வாறேதாம் காட்சியளித்தன. இத்தகைய பணக்காரப் பிரபுக்கள் தங்கள் தங்கள் சுயநலத்தைப் பேணிய வண்ணம் நடந்துகொண்டார்களே யல்லாது, பாமர மக்களின் நலன் பற்றியோ, நாட்டின் நலன்பற்றியோ கொஞ்சமும் அக்கறை பாராட்டாமலே வாழ்ந்தார்கள். பணக்கார நிலச்சுவான்தார்களுக்கிடையே உள்நாட்டுக் கலகங்கள் மூண்டவண்ண மிருந்தன. பாமர ஏழை மக்கள் நிலைமையோ மிகப் பரிதாபகரமாய்க் காட்சியளித்தது.

அரசியல் ஒற்றுமையில்லாததால் எங்குமே சச்சரவுகள்; ஒருவர்மீது மற்றவர்க்குப் பொறாமை-வெறுப்பு; ஒருவர்மீது மற்றவர்க்குச் சந்தேகங்கள்; உள்நாட்டுக் கலவரங்கள்; போராட்டம்—இத்தகைய காட்சிகள்தாம் ஐரோப்பாவில் எங்கும் தோற்றமளித்தன.

இப்படிப்பட்ட நிலையில் சுல்தான் சுலைமானின் பெரும் படை ஐரோப்பாவுக்குள் (1526-ல்) நுழைந்தபோது, உள்நாட்டு விவசாயிகள் யாதொரு திகிலோ, அதிர்ச்சியோ அடையவில்லை; மாறாக, அயல்நாட்டுப் படைகளை அவர்கள் வரவேற்கவும் முற்பட்டார்கள்; உதுமானிய வீரர்கள் தங்களுடைய துன்பங்களைத் துடைக்க வந்தவர்களென்று அவர்களை வரவேற்றனர். ஏனெனில், கிழக்கு ஐரோப்பாவிலிருந்த மத வெறி பிடித்த கிறித்தவர்களைக் காட்டிலும், துருக்கி முஸ்லிம்கள் மதச் சகிப்புத் தன்மை மிக்கவர்களாயிலங்கினர்; மேலும், முஸ்லிமல்லாத பாமர மக்களைச் சகோதரர்களாகவும் பாவித்து நடந்து

கொண்டார்கள். அவர்களுடைய இப் பரந்த மனப்பான்மை பாராட்டத்தக்கது.

**(3) சுலைமான் தொடுத்த போர்களும் அவர் புரிந்த சாதனைகளும்**

உதுமானிய சுல்தானுக்குச் சேர வேண்டிய கப்பப் பணத்தை வசூலிக்கச் சென்ற துருக்கித் தூதுவர்களை ஹங்கேரி அரசர் கொடுமைப்படுத்தியதற்குப் பழிக்குப் பழியாக, ஹங்கேரியின் தலைநகரான பெல்கிரேடின் (Belgrade) மீது சுலைமான் படையெடுத்தது முதற் போராட்டமாகும். ஹங்கேரியப் படையைத் தோற்கடித்து, பெல்கிரேட் நகரை அவர் 1521-ல் பிடித்தார். அந் நகரைத் துருக்கியர்களின் கோட்டையாக மாற்றியமைத்தார் சுலைமான்.

1522-ல் அவர் செயின்ட் ஜான் பெருவீரர்களுடைய (Knights of St. John) ரோட்ஸ் தீவைக் (Island of Rhodes) கைப்பற்றினார். அவர் 1526-ல் மறுபடியும் ஹங்கேரிக்குள் படையெடுத்துச் சென்று, ஹங்கேரி அரசரான இரண்டாம் லூயீ (Louis II) என்பவரை மொஹாக்ஸ் (Mohacs) என்ற இடத்தில் தோற்கடித்தார். ஹங்கேரி மன்னர் போர்க்களத்தில் மாய்ந்தார். புடாபெஸ்ட் (Budapest) என்ற நகரம் பிடிபட்டது. சீன நாட்டு நெடுஞ்சுவர் சீனாவைக் காப்பது போல, ஐரோப்பாவின் அரணாக, தடைச் சுவராக, தற்காப்புச் சுவராக இருந்து வந்த ஹங்கேரி நாடு உதுமானியப் பேரரசின் ஒரு மாநிலமாக, அங்கமாக மாறியது.

ஹங்கேரியில் கிட்டிய இம் மாபெரும் வெற்றியின் விளைவாக, மேற்கு பால்கனையும் டான்யூப் நதிப் பிரதேசங்களையும் உதுமானியப் பேரரசோடு இணைக்க முடிந்தது. இதன் பின், வியன்னாவுக்குள்ளும் (Vienna) தமது படையைச் செலுத்தி, தம் பேரெதிரியான ஐந்தாம் சார்லஸ் (Charles V) என்ற கிறித்தவப் பேரரசரைச் சந்திக்க முயன்றார், சுல்தான் சுலைமான்.

ஆனால், அந்தப் பேரரசர் சார்லஸுக்கோ தொடை நடுக்கம்! எனவே, அவர் போரிட விரும்பவில்லை. ஆதலால், சுலைமானும் சற்று ஓய்வெடுத்துக் கொள்ளும் நோக்கத்தோடு 1529-ல் பின்வாங்கினார்.

சுல்தான் ஓய்வெடுத்தாராலும், அவருடைய ஜெனிஸ்ஸரீகள் (Jannissaries) அதாவது, 'புதுப்படை' ஓய்வை விரும்ப

வில்லை. போராடிக் கொண்டே இருக்க வேண்டும், தினவெடுக்கும் தோள்களுக்குத் தீனி வேண்டும், போர்க்களக் கொள்ளைப் பொருள்கள் கிட்ட வேண்டும் என்னும் இக் காரணங்களால், ஓய்விலிருந்த சுல்தானை முடுக்கி விட்டுக் கட்டாயப்படுத்தி, மூன்று ஆண்டுகட்குப் பிறகு, 1532-ல், வியன்னாமீது பாய்ந்து செல்லுமாறு செய்தது அப் புதுப்படை. ஒரு மாபெரும் சேனையுடன் சுலைமான் ஹங்கேரியின்மீது புலி போல் பாய்ந்தார். வியன்னாவை எவ்விதத்தாலேனும் தாக்கிக் கைப்பற்ற வேண்டும், சார்லஸை எப்படியும் முறியடிக்க வேண்டும் என்பனவே சுல்தான் சுலைமானின் குறிக்கோளாகும். பேரரசர் சார்லஸே தம் படைக்குத் தலைமை தாங்கினார். பயங்கரப் பெரும் போர் நிகழ்வுறும் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், அதுதான் நடைபெறவில்லை. ஏனெனில், குன்ஸ் (Guns) என்ற அரண் 21 நாள்கள்வரை சுலைமானை எதிர்த்து நின்றதனால், உதுமானியப் படை வியன்னா நோக்கி முன்னேறுவது தாமதமாயிற்று. வல்லமைமிக்க குன்ஸ் கோட்டை கைப்பற்றப்பட்டதற்குப் பிறகுங்கூட சுல்தான் சுலைமான் வியன்னா நோக்கி முன்னேறவில்லை. அங்ஙனம் முன்னேறுவதற்கு இடையூறாகப் பல காரணங்கள் இருந்தன. முடிவில் சார்லஸ், அடுத்துவரும் ஐந்து ஆண்டுக்குச் சண்டை சச்சரவு வேண்டாமென்று ஒரு சமாதான உடன்படிக்கை செய்து கொண்டதுடன், ஆண்டுதோறும் 30,000 துக்காத்துகள் (Ducats) தங்க நாணயங்களை உதுமானிய சுல்தானுக்குக் கப்பமாகக் கட்ட ஒப்புக்கொண்டும் விட்டார்.

அம்மட்டோ! சுலைமான் பெற்ற வெற்றியால் மத்தியதரைக் கடல் முழுதும் உள்ளடங்கிய ஐரோப்பாவிலேயே தன்னிகரில்லாப் பெருங் கப்பற்படைக்கும் தலைமை வகித்தது உதுமானியப் பேரரசு. 1538-ல் நடந்த பிரெவிசா (Prevesa) என்னும் கடற்போரில், துருக்கிக் கப்பற்படை கைருத்தீன் (Khayruddin) என்னும் புகழ்மிக்க கடல் தளபதியின் தலைமையில் வெற்றிக் கொடியை நிலைநாட்டிற்று. ஈதன்றி, மேனாட்டுக் கிறித்தவர்களேகூட மெச்சிப் புகழ்ந்து பாராட்டுகின்ற துருக்கி மாவீரக் கடல் தளபதி 'பார்பரோஸா' (Barbarossa) என்பவர், அக்காலத்தில் வல்லமை பெற்று விளங்கிய ஸ்பானியர்களின் கப்பற்படைகளை வென்று, அவர்களுடைய ஆதிக்கத்தில் இருந்துவந்த வட ஆப்பிரிக்கக் கடலோர முக்கிய நகரங்களாகிய அல்ஜியேர் (Algiers), தூனிஸ் (Tunis) என்னும் பிரசித்தி பெற்ற துறைமுகப் பட்டினங்களை வசப்படுத்திக் கொண்டார். எனவே,

இவை உதுமானியப் பேரரசின் கப்பற்படைத் தளங்களாக ஆகி விட்டன.

கி.பி. 1551-ல் திரிப்போலி (Tripoli) என்ற நகரையும் துருக்கியர் கைப்பற்றினர். இதற்குப் பின்னர், ஸ்பெயின் (Spain), இத்தாலி (Italy), ஏடன் (Aden), பஸரா வரைகுடா ஆகிய பரந்த விரிந்த கடற்கரைகளெல்லாம் துருக்கியர் வசம் வந்து அடங்கிவிட்டன. இவ்வாருக, ஐரோப்பாவெங்கும் வெற்றிக்கொடி நாட்டிய பிறகு, சுல்தான் சுலைமான் கீழைப் பிரதேசங்களின் பக்கல் தமது கவனத்தைத் திருப்பினுர்.

(4) பாரசீகப் போர்கள்

பாரசீகத்தின்மீது ஆட்சி செலுத்தி வந்த ஷீஆ (Shia) இன சஃபாவீ (Safavid) வமிச சுல்தான்கள்பற்றி ஏற்கெனவே படித் திருக்கிருேம். 16ஆவது நூற்ருண்டு முழுவதும் அந்த சுல்தான் கள் இரு முனைகளில், அதாவது, (1) கீழைப்பிரதேச உஜ்பெக்குகளை (Uzbegs) எதிர்த்தும், (2) மேலைப் பிரதேச உதுமானியர்களை எதிர்த்தும் போர் நிகழ்த்தியாக வேண்டிய நிர்ப்பந்தமான சூழ்நிலைக்கு இரையாகி விட்டார்கள்.

உதுமானியப் பேரரசோடு அவர்கள் தொடுத்த போர் கி.பி. 1514-ல் ஆரம்பமாகியது. உதுமானிய சுல்தானுன முதலாம் சலீம், பாரசீக அரசனுன ஷா இஸ்மாயீல் (Shah-Ismail) என்பவரை 'சால்திரான்' (Chaldiran) என்னுமிடத்தில் நடந்த கடும்போரில் தோற்கடித்தார். எனினும், பாரசீகர் களுக்கும் உதுமானியர்களுக்கும் இடையே பல போராட்டங்கள் சுல்தான் சுலைமானின் காலத்திலும் அவருடைய சந்ததியாரின் காலத்திலும் தொடர்ந்து நடந்தன.

பாரசீகத்திலுள்ள ஆஸர்பைஜான் (Azarbaijan) என்ற பிர தேசத்தின்மீது நான்கு முறை, அதாவது, (1) கி.பி. 1533-4; (2) 1534-5; (3) 1548; (4) 1553-ல் படையெடுத்தார் சுல்தான் சுலைமான். கி.பி. 1553-ல் பாக்தாதுக்குள் உது மானியப் படை பிரவேசித்தது. தப்ரீஸ் (Tabriz) என்ற நகரம் பன்முறை அப் படையினரால் ஆக்கிரமிக்கப்பட்டது. எத் தனையோ முறை சஃபாவீ பிரதேசங்களுள் சிலவற்றை உதுமா னியர்கள் பிடித்தனரெனினும், பாரசீகர்கள் பன்முறை தோற் கடிக்கப்பட்டன ரெனினும், சஃபாவீ இராச்சியத்தை அவர் களால் அழிக்க முடிய வில்லை. எத்தனையோ சீரழிவுகள்; எத்தனையோ தோல்விகள்; எவ்வளவோ துன்பங்கள், தொல்லை

கள்; எவ்வளவோ சுக துக்கங்கள்—அவ்வளவுக்கும் அப் பாரசீகர்கள் தலைகொடுத்து நிமிர்ந்து நின்றார்கள். அடுத்தடுத்து நிகழ்வுற்ற இத்தனை சோதனைகளுக்கிடையேயும் பாரசீகக் கலை, கலாசாரங்கள் சீரழிய வில்லையே! கடைசியாக, அத்தனை கஷ்ட நஷ்டங்களுக்குப் பிறகும் கூட, பாரசீக மன்னர் ஷா தஹமாஸ்ப் (Shah Tahmasp), ஸஃபாவீ இராச்சியத்துக்கு ஒருபெரும் சேவை செய்தார். அதுதான் 'அமாஸ்யா சமாதான ஒப்பந்தம்' (Peace of Amasya—1555 A.D.). முப்பது ஆண்டுகளுக்கு உதுமானியர்களுக்கும் ஸஃபாவீகளுக்குமிடையே போரின்றிச் சமாதானம் நீடிக்க வேண்டுமென்று செய்து கொண்ட ஒப்பந்தம் இது. ஆயினுமென்! இந்த ஒப்பந்தம் செய்து கொண்ட பிறகும்கூடச் சண்டைகள் முழுவதும் நிற்கவில்லை. பதினெட்டாம் நூற்றாண்டின் முதல் கால் நூற்றாண்டு கால கட்டம் முடிய, சமாதானமும் போரும் மாறி மாறித் தொடர்ந்து நீடித்த வண்ணமே இருந்தன.

**(5) மாவீரன் சுலைமானின் மாண்புகள்**

மாண்புமிகு சுலைமானின் எண்ணற்ற சாதனைகளை எடைபோட்டுரைப்பது சாலாது. இம் மாவீரப் பெருந் தீரரின் முற்கூறப்பட்ட பல்வேறு ஆசிய-ஐரோப்பிய இராணுவ வெற்றிச் சாதனைகளிலிருந்து, அவருக்குரிய அளப்பரும் சாமர்த்தியங்கள், அறிவுப் பிரதாபங்கள், ஆர்வங்கள், ஆற்றல்களெல்லாம் தெற்றென விளங்காநிற்கின்றன அல்லவா! உதுமான் வமிசப் பரம்பரை சுல்தான்களிலெல்லாம் இவரே ஈடு இணையற்றவரென்பதில் ஐயம் சிறிதுமில்லை. மற்றும், அவர் கடைப்பிடித்த பொறுமை, அவருக்கிருந்த இறைப் பக்தி, பரந்த நோக்கம், சௌஜன்ய சுபாவம் ஆகியனவும் அனைவராலும் பாராட்டப்படுகின்றன.

அவரே ஒரு பெருங் கவியரசருங்கூட! கற்றறிந்த நிபுணர்களையும், அறிஞர்களையும், சிற்பிகளையும், கலைஞர்களையும் ஆதரிப்பதில் அவர் பேரார்வம் காண்பித்தார். பாகி (Baki), காயாலி (Khayali), லாமி (Lami), ஃபுஜூலி (Fuzuli) போன்ற மேதைகளெல்லாரும் சுல்தான் சுலைமானின் அவையை அலங்கரித்து, அவரிடம் ஆதரவு பெற்று இன்புற வாழ்ந்தனர். மதங்களுக்கிடையே விகற்பங்களும், வெறுப்புகளும், வெறித்தனங்களும் மலிந்திருந்த அக்காலச் சூழ்நிலையில் அவர் எல்லா மதங்களையும் சகோதர நல்லுணர்வுடன் நடத்திய நேர்த்தியைக் கண்டு கிறித்தவ குடிமக்களெல்லாரும் கூடத் தங்களின் சில மத

விதிகளையும் பொருட்படுத்தாது அவருடைய ஆட்சிக்குப் பேராதரவு தரலாயினராம்.[1]

சுல்தான் சுலைமான் உடல்நலம் மிக்கவராகையினால், எப்பொழுதும் சுறுசுறுப்பாக ஆட்சிக் காரியங்களை நேரில் கவனித்து முடிப்பவராயிருந்ததுடன், பலவித உடற்பயிற்சிகளையும் மேற்கொள்வாராம். காட்டு விலங்குகளை வேட்டையாடுவதில் அவருக்கு மிகவும் விருப்பமுண்டு. நல்ல உடற்கட்டும், அறிவாற்றலும், ஆணழகும் பொருந்திய சீர்மிகு சுல்தானாக மாத்திரமன்றி, மக்களால் நேசிக்கப்படும், போற்றப்படும் மக்கள் தலைவராகவும்கூட அவர் திகழ்ந்தார். அவர் காலத்தில் வாழ்ந்த கிறித்தவ மன்னர்கள், முஸ்லிம் மன்னர்களெல்லோரிலும் அவரே தலைசிறந்தவராக விளங்கினாரென்றால் அது மிகையாகாது. அவருடைய அறிவுத் திறன் முத்திரைகள் பதியாத கலாசார வளர்ச்சியே கிடையாதென்றும் சொல்லலாம். அவரடைந்த இராணுவ வெற்றிகள், வென்ற பிரதேசங்களை வலிமை பொருந்தியனவாக ஆக்கி விடுதல், கலை, கலையறிவு, இலக்கிய வளர்ச்சிகளிலெல்லாம் அவருடைய திறம்படைத்த அடையாளங்கள் இல்லாமலிரா.

'உலகத்தோ(டு) ஒட்ட ஒழுகல் பலகற்றும் கல்லார் அறிவிலா தார்' என்றபடி, தாம் பிறந்து வாழ்ந்த கால கட்டமாகிய 16ஆம் நூற்றாண்டின் நிலைமைகளையெல்லாம் அறிந்து அளந்து அவற்றிற்கு ஏற்றபடி இணைந்து பிணைந்து வளர்ந்து வாழ்ந்து தன்னிகரற்றுத் திகழ்ந்தவர் நம் மாவீரர், தீரர், நற்சீலர் சுலைமான் சுல்தான். அவர் நீதிமான்; நியாயவான்; பொறுமையாளர்; ஆறறிவு படைத்த மூதறிஞர். ஏறத்தாழ அரை நூற்றாண்டு காலம் அரசோச்சிய பேரரசப் பேரேறு அவர். துருக்கிப் பேரரசை மேலும் மேலும் திக்கெட்டும் பரப்பியவர். அவர் புகழேணியின் உச்சியை எட்டிப் பிடித்தார். ஆசிய-ஐரோப்பிய கண்டங்களிலுள்ள நாடுகளில் பன்முறை திக் விஜயம் செய்த தீரன், வீரன், சூரன் அவர் எனில் அது மிகையன்று. இன்னோரன்ன பெரும் பேரரசர் கி.பி. 1566-ல் இவ்வுலகை நீத்தார். இத்தகு சுயம் பிரகாச சூரியனான சுல்தான் சுலைமான் மறைந்ததோடு, உதுமானியப் பேரரசின் புகழும் பெருமையும் மங்கத் தொடங்கின வெனலாம்.

[1] முஸ்லிம்களின் திருமறையாகிய குர்ஆன் வேதம் எம் மதத்தினரையும் சமமாகப் பாவித்து நடத்தவேண்டும் என்றே கட்டளையிடுகின்றது. இயேசு என்னும் ஈஸாவும் இப் பரந்த கோட்பாட்டையே வலியுறுத்தினாரெனத் தெரியவருகிறது. எனினும், கிறித்தவர்களுக்குச் சட்டம் வகுத்துத் தந்த தேவாலயக் குருபீடம் (The Churcn), கிறித்தவரல்லாத வேறு மதத்

## (3) பத்தொன்பதாம் நூற்ருண்டில் ஐரோப்பாவில் தேசிய உணர்வின் வளர்ச்சியும் உதுமானியர்களின் வீழ்ச்சியும்

பெரும் படாடோப ஆடம்பரம் ஏதுமின்றிச் சாதாரணமான தோற்றத்துடன் ஆரம்பித்த இந்தத் துருக்கிய ஆட்சியினர் வெகு விரைவில் ஆசியாவிலும் ஐரோப்பாவிலும் தங்கள் ஆட்சியையும், பேரரசுக்குரிய ஆதிக்கத்தையும் நிறுவிக் கொண்டனர். ஒரே ஒரு நூற்ருண்டு காலத்துக்குள், அக் காலத்தில் நிலைத்துநின்ற ஏனை எல்லாப் பேரரசுகளையும் மங்கச்செய்து விட்டனர் உதுமானியர்கள்.

கான்ஸ்டான்ட்டிநோப்பிளைத் தலைமையாகக் கொண்ட பழம்பெரும் பைஜான்ஷிய கிரேக்கப் பேரரசுக்குச் சொந்தமாயிருந்த அனேக பிரதேசங்களைத் தமதாக்கிக் கொண்டனர், இத் துருக்கியர். கி.பி. 1360—89-ல் உதுமானியப் பேரரசராயிருந்த சுல்தான் முராத் காலத்தில், காட்டாற்றுப் பெரு வெள்ளம் போன்ற துருக்கியரின் இவ் வெற்றி வேகத்தைத் தடுத்து நிறுத்த, ஐரோப்பிய நாடுகள் பல ஒன்று திரண்டு எதிர்க்க முயற்சித்தன. போஸ்னியா, செர்பியா, வலேஷியா ஆகிய நாடுகளின் ஒன்றிணைந்த படைகள் துருக்கியரின் சேனையை எதிர்த்துத் தோற்றுப்போயின! அடுதத போரில் செர்பியா தோற்கடிக்கப்பட்டு, ஆக்கிரமிக்கப்பட்டது. இதைக் கண்டு அதிர்ச்சியுற்றுவிட்ட பல்கேரியா (Bulgaria) நாட்டின் அரசர், தம் சகோதரியை சுல்தான் முராதுக்குத் திருமணம் செய்து கொடுத்து, தமக்கு நேரிட இருந்த தோல்வியைத் தடுத்துக்கொண்டார். அதன்பின் (1389-ல்) பட்டத்துக்கு வந்த சுல்தான் பாயஜீத் (Bayazid) சிகிஸ்மண்ட் (Sigismund) மன்னரைத் தோற்கடித்து, பல்கேரியாவைத் தமது பேரரசுடன் இணைத்துக் கொண்டு விட்டார். மாபெரும் வெற்றியாளராகிய இரண்டாம் முகம்மது (1451—81) செர்பியா, போஸ்னியா ஆகிய இரண்டையுமே வென்று தமதாக்கிக் கொண்டார். மாவீரன் மாண்புமிகு சுலைமான் (1520—66), பெல்கிரேட் ஹங்கேரி ஆகியவற்றைத் துருக்கிப் பேரரசின் மாநிலங்களாக்கிக் கொண்டார். இவ்வாருக, ஐரோப்பிய நிலப்பரப்புகள் பல உதுமானியர்களின் ஆட்சிக்கு அடக்கமாயின.

---

தினர்பால் சற்று விகற்பத்துடன் நடந்துகொள்ள வேண்டும் என்று ஏனே வழி வகுத்துவிட்டது! எனினும், சுல்தான் சுலைமானின் ஆட்சியின் கீழிருந்த கிறித்தவர்கள் அன்னாரின் நேர்மை காரணமாக, தேவாலயக் குரு பீடத்தின் ஒருதலைப்பட்சமான தடைவிதிகளைச் சட்டை செய்யவில்லை.

**ஐரோப்பாவில் தேசிய உணர்ச்சி பரவக் காரணங்கள்**

ஐரோப்பாவின் பெரும்பாலான நாடுகளைத் தலைமுறை தலைமுறையாக மன்னர்களே முடியாட்சி முறையில் ஆண்டு வந்தனர். இம் மன்னர்களுக்கிடையே எக்காலமும் பொறாமை நிலவும்; ஒருவரை மற்றவர் சந்தேகக் கண்கொண்டு பார்ப்பர். அவ் வந்நாட்டுக்குள்ளேயே சண்டைகள், மோதல்கள், சச்சரவுகள் தோன்றிய வண்ணம் இருக்கும். அன்றியும், பல நாடுகளுக்கிடையில் வரலாற்றுக் கால நெடுகவும் தொடர்ந்தாற்போல் பகைமையும் மாற்சரியங்களும் விடாமல் நீடித்துக் கொண்டே இருக்கும். கீழை நாட்டுக் கிறித்தவ சம்பிரதாய தேவாலயங்கள் (The Eastern Church), மேற்கு நாட்டுக் கிறித்தவ சம்பிரதாய தேவாலயங்கள் (The Western Church) என்னும் இவ்விரண்டுக்கிடையே பெரும் பூசல்கள், சச்சரவுகள் எல்லாம் கொழுந்துவிட்டெரிந்து கொண்டிருக்கும். இத்தகைய பூசல்கள்தாம் உதுமானியப் பேரரசு வெகு சீக்கிரம் பரந்து விரிவடைந்ததற்கும், எளிதில் வெற்றிக்குமேல் வெற்றிகளைப் பெற்றதற்கும் முக்கிய காரணங்களாகும்.

தேசிய உணர்ச்சி என்பதே இல்லாத நாடுகள்தாம் ஐரோப்பாவின் பெரும்பான்மையான நாடுகள். தாங்கள் வெற்றிக்கொடி நாட்டிய நாடுகளில் வாழ்ந்த கிறித்தவ குடிமக்களை உதுமானிய சுல்தான்கள் பாரபட்சமேதுமில்லாமல் திருப்திகரமாகவே நடத்துவார்கள். மத வேறுபாடுகளை அவர்கள் அடியுடன் தவிர்த்துக் கொண்டார்கள் என்பது மட்டுமின்றி, பன்னூற்றுண்டு காலம்வரையில் உதுமானியப் பேரரசர்கள் கிறித்தவர்களுக்கிடையேயும் முஸ்லிம்களிடையேயும் கிஞ்சித்தும் பாரபட்சம் காண்பிக்காமல், சமுதாயத் துறையிலும் பொருளாதாரத் துறையிலும் அவர்களைச் சரிநிகர் சமானர்களாக நடத்தி, எல்லார்க்கும் ஒத்த நீதியை ஒழுங்குற வழங்கினுர்கள். மத வேற்றுமையும், இன—ஜாதி உயர்வு தாழ்வும், ஆளுக்கொரு நீதியும், வர்ணுசிரம தர்மமென்னும் வேறுபாடும் உலகின் எல்லா நாடுகளிலும் நிலவிவந்த அக் காலத்தில், இப்படிப்பட்ட சர்வ சமத்துவ நீதி யமைந்த சமுதாய நல்வாழ்வை உதுமானியர்கள் நிறுவிச் சென்ற பெரும் பாக்கியத்தை எவரும் பாராட்டாதிருக்க முடியாது. இந்த ஓர் எடுத்துக்காட்டைப் பாருங்கள்:

கி.பி. 1402-ல் அங்கோரா(Angora)என்னுமிடத்தில் நடந்த போரில் சுல்தான் பாயஜீத் தோல்வி யடைந்த போதும்கூட, கிரேக்கக் கிறித்தவ குடிமக்களும், சிலாவ் (Slav) கிறித்தவர்

களும், சுல்தானின் படையில் சேவை செய்து கொண்டிருந்த கிறித்தவப் போர் வீரர்களும் அமைதியாகவே இருந்தனரன்றி, கலகமோ புரட்சியோ ஏதும் விளைவிக்கவே இல்லை. உதுமானியப் பேரரசின் அடித்தளத்தின் வலிமை எப்படிப்பட்டதா யிருந் திருக்க வேண்டுமென்று இதிலிருந்து நன்கு விளங்குகிறதல்லவா? மத்திய அரசின் பரிபாலனத் திறமை, சுல்தான்களின் மனோதிடம், அறிவு நுட்பம், ஆற்றல், சாமர்த்தியம் ஆகிய வல்லமைகள் யாவும் நன்ருக அமைந்திருக்கும்வரையில் உதுமானியப் பேரரசு ஆட்சிக்குக் கேடென்ன நேரிடலாகும்?

16ஆம் நூற்ருண்டின் ஆரம்ப கால கட்டத்தில் ஐரோப்பாவில் நூதனமான கருத்துகளும், உணர்ச்சிகளும், புதுப் புது முறைகளும், கிளர்ச்சிகளும், அதுவரை கண்டிராத பல்வேறு கண்டுபிடிப்புகளும், காட்சிகளும் தலைகாட்ட வாரம்பித்தன! அதாவது, நவீன காலம் மலரத் தொடங்கியது. ஆனால், துருக்கி மட்டும் அன்று கண்ட கண்ணுக்கு அழிவில்லாமல், அப்படியே பழைய கந்தனே கந்தனுகக் காட்சியளித்தது, பெரிதும் வலிமை குன்றிய நோயாளி போல்!

ஐரோப்பிய நாடெல்லாம் முன்னேக்கிச் செல்ல, துருக்கி மட்டும் பின்னேக்கியே மந்தமான நிலையில் மங்கிக்கொண்டிருந்தது. ஒரு நூற்ருண்டல்ல, பலப் பல நூற்ருண்டளவுக்குத் துருக்கி மிகவும் பின்னிடைந்து போய்விட்டது. இவ்வாறு பின்னிடைந்து போன துருக்கி நாட்டில் தங்கள் இன மக்களான கிறித்தவர்கள் அல்லற்படுவதைத் தவிர்க்கவும், அவர்களை முன்னேற்றவும் கிறித்தவ ஐரோப்பிய நாடுகளின் கிறித்தவக் குடிமக்கள் இராஜதந்திர முறைகளைக் கையாளத் தொடங்கினர்.

### ஃபிரெஞ்சுப் புரட்சியின் தீவிரம்

கி.பி. 1789ஆம் ஆண்டில் தோன்றிய ஃபிரெஞ்சுப் புரட்சி (French Revolution) என்ற காலாக்கினியும் உதுமானியப் பேரரசிலிருந்த கிறித்தவ குடிமக்களின் தேசிய இன உணர்ச்சியை, வேட்கையை மேலும் தூண்டிவிட்டு விட்டது; தொடர்ந்து தூண்டிவிட்டுக் கொண்டேயும் இருந்தது. ஜனநாயகம், மக்களின் ஜீவாதார உண்மைகளைப் பாதுகாக்கும் சட்டம், ஐக்கியத் துருக்கி வேட்கை ஆகிய இலட்சியங்களின் மீதிலான சட்டதிட்ட அவசியங்களின் அடிப்படையில் கிறித்தவர்களும் முஸ்லிம்களும் சரிசமமான உரிமைகளையும் பாரபட்சமில்லாத உரிமைகளையும் பெறவேண்டுமென்று ஒருபுறம் துருக்கியர்

கள் கிளர்ச்சி செய்து கொண்டிருந்தபோது, அந் நாட்டுக் கிறித்தவக் குடிமக்கள் தங்கள் தேசிய சுதந்தரத்துக்காக மற்ருெரு புறத்தில் கிளர்ச்சி செய்தனர்.

இவையன்றி, வெந்த புண்ணில் வேல் பாய்ந்ததுபோன்று, சுல்தானை எதிர்த்துக் கலகம் புரியுமாறும் புரட்சி செய்யுமாறும் கிறித்தவக் குடிமக்களுக்கு அந்தரங்கத்தில் தூபமிட்டு, சதியாலோசனைகள் புரியுமாறும் தூண்டிவிட்டுக் கொண்டிருந்தது, ருஷியா. கிறித்தவர்களான செர்பியர்களையும், பல்கேரியர்களையும், ஆர்மீனியர்களையும் தூண்டிவிடுவது கிறித்தவ ருஷியர்களுக்கு மிகவும் எளிதாயிருந்தது. அதன்மூலம் ஏனை ஐரோப்பிய கிறித்தவ நாடுகளும் நிழலில் குளிர்காய ஆரம்பித்தன.

## 19ஆம் நூற்றுண்டைய தென்கிழக்கு ஐரோப்பாவில் தேசியத் தீ மூண்டு பரவியமை

இச் சூழ்நிலையில், உதுமானியப் பேரரசிலிருந்த பால்கன் பிரதேசமென்னும் ஐரோப்பாவின் தென்கிழக்கு நிலப்பரப்பிலிருந்த பல கிறித்தவ நாடுகளில் தேசியத் தீ என்னும் கொந்தளிப்பு, மெல்ல மெல்ல 19ஆம் நூற்றுண்டில் சூடுபிடிக்க ஆரம்பித்தது. பால்கன் கிறித்தவ நாடுகளை நோக்கி ஏனை ஐரோப்பிய கிறித்தவ நாடுகளின் அரசியற் புயல் ஏககாலத்தில் வீச ஆரம்பித்தது, வெகு தீவிரமாக.

பால்கன் தீபகற்பத்திலுள்ள எந்த ஒரு நாட்டிலேனும் ஆட்சியாளரின் அலட்சியப் போக்கால், சிறு குறைபெருங்குறை ஏதும் நிகழ்வுற்றுவிட்டதென்று சற்றே ஜாடையாகத் தெரிந்தாலும், உடனே அகில ஐரோப்பாவிலும் வதிகின்ற அத்தனை கிறித்தவ ஆண், பெண், சிசுக்கள் அனைவருக்கும் தன்னையே ரக்ஷகன் என்று கருதிக்கொண்டிருந்த அக்கால ருஷியா, ‘இதோ பாருங்கள் அக்கிரமத்தை, பேரநியாயத்தை! இந்த விபரீதத்தைத் தட்டிக் கேட்க எவருமில்லையா?’ என்றெல்லாம் பேராரவாரப் பெருங் கூச்சலைக் கிளப்பிவிட்டது. மூச்சு விடாமல், பால்கன் கிறித்தவக் குடிமக்களைத் தானே கட்டிக்காக்கப் போவதாகப் பறையறைந்து கொண்டிருந்தது அந்த ருஷிய அரசு. இதைக் கண்டு இங்கிலாந்தும் ஃபிரான்சும் ருஷியாவின்மீது சொல்லொணுப் பொருமை கொண்டுவிட்டன. ஏன்? பால்கன் தீபகற்பத்தில் ருஷியா செல்வாக்கைப் பெற்றுவிடுமானுல், எங்கே தங்கள் தங்கள் செல்வாக்குக்கு ஆபத்து நேரிட்டு விடுமோ என்று அவை கவலைப்படத் தொடங்கிவிட்டன. இந்த அச்சத்

தின் காரணமாக, ருஷியா அளவுக்கு மிஞ்சிய அதிக பலம் பெற்று விடக் கூடாதென்று, குறிப்பாக இங்கிலாந்து எச்சரிக்கையா யிருந்தது. இத்தகைய பால்கன் நாடுகளின் பிரச்சினைக்குக் 'கிழக்குப் பிரச்சினை' அல்லது 'கீழை நாடுகள் பிரச்சினை' (Eastern Question) எனப் பெயர். அதாவது, உதுமானியப் பேரரசு குலைந்துவிடுமானால், பல்வேறு நாடுகளை எல்லை அடிப்படை யிலும், தேசிய அடிப்படையிலும், மொழி அடிப்படையிலும், இன வாரி அடிப்படையிலும் எவ்வாறு உருவாக்குவது என்னும் கவலையை அஸ்திவாரமாகக் கொண்டதே இந்த விசித்திரமான பிரச்சினையாகும். இப் பெரும் சிக்கலான பிரச்சினைக்குத் தீர்வு காணக் கடைப்பிடிக்கப்பட்ட வழிகளைச் சில தலைப்புகளின்கீழ்ப் பரிசீலிப்போம்:

(1) செர்பியாவின் விடுதலைப் போர்.

(2) கிரீஸ் நாட்டுச் சுதந்தரப் போர்.

(3) கிரீமியாப் போர்.

(4) ருஷிய-துருக்கிப் போர்.

(5) பெர்லின் சமாதான மாநாடு.

## 1. செர்பியாவின் விடுதலைப் போர்

துருக்கி நாட்டுக் குடிமக்கள் பல இனங்களைச் சேர்ந்தவர் கள். அதாவது, இன ஒற்றுமையில்லாத ஒரு சந்தைக் கும்பல் அவர்கள். மேலும், துருக்கி நாட்டு ஆளும் வர்க்கத்தினரோ ஒரு சின்னஞ்சிறு சிறுபான்மையினர்; ஆளப்பட்டவர்களோ பெரும்பான்மையான கிறித்தவர்கள். சுல்தான் முதலாம் முரா தின் காலத்தில் வெல்லப்பட்ட செர்பியா நாட்டுக் கிறித்தவக் குடிமக்கள் அனேக நூற்றாண்டு காலம்வரை இராஜ விசுவாச மிக்க குடிமக்களாகவும் இராணுவச் சிப்பாய்களாகவும் சேவை செய்து வந்தார்கள்.

கி.பி. 18ஆம் நூற்றாண்டில் ருஷியா நாடு பெரும் வல்லமை யைப் பெற்றுக் கொண்டதிலிருந்து இக் கிறித்தவக் குடிமக் களின் இராஜ விசுவாசம் சிறிது சிறிதாக, மெல்ல மெல்லத் தளர்ச்சியுற ஆரம்பித்தது. ஏனென்றால், துருக்கி நாட்டுப் பெரும்பான்மையான கிறித்தவக் குடிமக்களின் சுக துக்கங்களைக் காப்பாற்றும் அக்கறைமிக்க பொறுப்பைக் கிறித்தவ வல்லாட்சி நாடான ருஷியா ஏற்றுக்கொண்டிருக்கிறது என்று, கி.பி.

1774ஆம் ஆண்டின் அமைதி உடன்படிக்கையை மேற்கோள் காட்டி, ருஷியா வாதம் புரிய முற்பட்டது.

ருஷியாவின் இப்படிப்பட்ட புதுத் தர்க்கவாதத்தால் செர்பியா நாட்டுக் கிறித்தவக் குடிமக்களின் இராஜ விசுவாசம் ஆட்டங் கண்டுவிட்டதுடன், அவர்கள் துருக்கியர்களையும் துருக்கியர் ஆட்சியையும் எதிர்த்துக் கலகம் விளைக்கவும் ஆரம்பித்து விட்டார்கள். இது, 19 ஆம் நூற்றாண்டு ஆரம்ப கால கட்டத்தின் துருக்கி நாட்டு இலட்சணமோ அவலட்சணமோ வெனலாம்.

காரா ஜார்ஜ் (Kara George) என்னும் செர்பியக் கிறித்தவத் தலைவர், தமது நாட்டு விடுதலைப் போருக்குத் தலைமை தாங்கிப் பெருங் கிளர்ச்சியைத் தோற்றுவித்தார் (1804). இக் கிளர்ச்சிக்கு ருஷியா ஆதரவளித்தது. கி.பி. 1812 வரையில் நீடித்த ருஷிய-துருக்கிப் போர் முடியும் வரை இச் செர்பிய கிறித்தவக் கிளர்ச்சியும் சேர்ந்து தொடர்ந்து நீடித்தது.

செர்பியாவைத் துருக்கிப் படை மீண்டும் மீட்டுக்கொண்டதெனினும், மிலோஷ் அப்ரினோவிச் (Milosh Obrenovitch) என்ற மற்றொரு கிறித்தவத் தலைவரின்கீழ் 1820 வரை நீடித்த அக் கிளர்ச்சியின் விளைவாக, அச் செர்பியத் தலைவருக்குச் 'செர்பிய இளவரசர்' என்ற பட்டத்தைத் துருக்கிப் பேரரசரே அளித்து, அங்கீகாரமும் வழங்க வேண்டியதாயிற்று!

இதுவுமன்றி, ருஷியாவின் ஆதரவைப் பெற்ற அத் தலைவர், செர்பியா நாட்டு விடுதலைக் கிளர்ச்சியையும் தொடர்ந்து நடத்திக் கொண்டே இருந்தார். இதன் பயனாக, கி.பி. 1829-ல் செர்பியாவுக்கு மாநிலச் சுயாட்சி வழங்கப்பட்டது. கி.பி. 1830-லிருந்து அச் செர்பிய இளவரசரின் பரம்பரையே தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து செர்பியாவை ஆள வேண்டும் என்றும் அங்கீகரிக்கப்பட்டது. இவ்வாறாக, செர்பியா கிறித்தவர்களின் உதவிகொண்டு துருக்கியர்களின் பிடியிலிருந்து விடுதலை பெறலாயிற்று.

### 2. கிரீஸ் நாட்டுச் சுதந்தரப் போர்

வரலாற்றுப்படி, கிரீஸ் (Greece) தான் உதுமானிய சுல்தான்களால் முதன் முதலாக வெல்லப்பட்ட பால்கன் நாடாகும். உதுமானியர் ஆட்சி திறம்பட நடந்த வரையில் அந் நாடு அமைதியாகவே இருந்தது. ஆனால், சில நூற்றாண்டுகள் கடந்த பின்னர், சுல்தான்களின் ஆட்சியின் சக்தியும்

ஒழுங்கும் மங்கவாரம்பித்தன. ஆகவே, உதுமானியப் பேரரசு ஆதிக்கத்தின் அடிமைத்தனத்திலிருந்து தன்னை அறுத்துக் கொண்டுவிட கிரீஸ் முனைந்தது.

**கிரீஸ் விடுதலைப் போருக்குக் காரணங்கள்**

(1) துருக்கி ஆட்சியின் கொடுங்கோன்மை.

(2) பொது வாழ்க்கையில் கொடுங்கோல் நிலைமை.

(3) ஆட்சியின் பாரபட்சமுள்ள போக்குகள்.

(4) மேல்நாடுகளின் சுதந்தரத் தாகம்.

(5) ஃபிரெஞ்சுப் புரட்சியின் தேசிய சுதந்தர வேகம்.

(6) கி.பி. 1821-ல் கிரேக்கர்கள் நிகழ்த்திய முஸ்லிம் படுகொலைகள்.

(7) 1822-ல் பழிக்குப்பழியாக முஸ்லிம்கள் புரிந்த படுகொலைகள்.

இத்தகைய மனக்கசப்பு மிக்க காரணங்களால், கிரேக்கர்கள் மூட்டிவிட்ட கலகங்களை அடக்க எகிப்தின் அரசப் பிரதிநிதியாயிருந்த (Viceroy) முகம்மது அலீயைக் கிரீசின்மீது ஏவிவிட்டார், உதுமானிய சுல்தான். உடனே முகம்மது அலீ பெரும்படையுடன் எகிப்தைவிட்டுக் காற்றினுங் கடிதாய்ப் பறந்தார். அவர் கிரீசுக்குள் நுழைந்து, கிரேக்கப் படையைத் தோற்கடித்து, ஏதென்ஸ் (Athens) நகரைக் கைப்பற்றினார்.

ஆனால், மேலும் கிரீசுக்கு நேரவிருந்த பேராபத்தைத் தவிர்ப்பதற்காக, கி.பி. 1827-ல் நிகழ்ந்த நவாரினோ (Navarino) கடற்போரில் ருஷியாவும், இங்கிலாந்தும், ஃபிரான்சும் ஒன்றுசேர்ந்து, துருக்கியின் கடற்படையைத் தோற்கடித்து விட்டன. பற்றுக்குறைக்கு, துருக்கியின் தரைப் படையையும் ருஷிய சேனை தோற்கடித்து அழித்து விட்டது. முடிவாக, 1829-ல் கையொப்பமான உடன்படிக்கையின்படி, இங்கிலாந்து, ஃபிரான்ஸ், ருஷியா ஆகிய கிறித்தவப் பேரரசுகளின் பாதுகாவலின்கீழ், கிரீசுக்குப் பூரண சுதந்தரம் வழங்கப்பட்டது.

**3. கிரீமியாப் போர் (1854—56)**

ஒரு காலத்தில் கண்டோர் வியப்புறும் வண்ணம் காட்சியளித்த உதுமானிய அரசு, பிற்கால கட்டங்களில் சீரழிந்து

மரணப் படுக்கையில் கிடக்கும் அவல கதியை எட்டி விட்டது. ஒரு கிறித்தவ நாட்டை மற்றொரு கிறித்தவ நாடு காட்டிக் கொடுக்காத நிலை மட்டும் இருந்திருக்குமேயானால், ஏதாவதொரு பெரும் கிறித்தவ நாடு தன்னந்தனியாகவே உதுமானியப் பேரரசை அழித்திருக்க முடியும் — அதிலும் வெகுசுலபமாக, வெகு சீக்கிரமாக! ஆனால், ஐரோப்பிய பெரும் நாடுகளுக்கிடையில் எவ்வித ஒற்றுமையுமில்லை; இராஜதந்திரமு மில்லை. ஆதலால், வெகுவாகப் பலம் குன்றிப்போன உதுமானியப் பேரரசால் இன்னம் சிறிது காலம் உயிர்வாழ முடிந்தது.

**மூன்றும் நெப்போலியன் (Napoleon III)**

இங்கிலாந்துக்கும் ருஷியாவுக்கும் ஒன்றன்மீது மற்றொன்றுக்குப் பொறாமை, அவநம்பிக்கை, பூசல்! இச் சூழ்நிலையை நல்வாய்ப்பாகக் கொண்டு, இங்கிலாந்துடன் நேசம் பூண்டு, வளர்ந்து வரும் ருஷியாவை ஒடுக்கி, ஃபிரான்சைத் தன்னிகரில்லாச் சர்வாதிகார நாடாக்கியிருக்கலாம், ஃபிரெஞ்சு நாட்டுப் பேரரசர் மூன்றும் நெப்போலியன். அதுவும் நிகழவில்லை. இதற்கிடையில், இரண்டு எதிர்பாராத நிகழ்ச்சிகள் ஐரோப்பிய கவனத்தைக் கிரீமியப் போருக்கு ஈர்த்தன. அவை யென்னவென்றால்:

(1) கிறித்தவப் புண்ணியத் தலங்களின் நிருவாகம்பற்றிய தகராறு.

(2) கிரேக்க கிறித்தவ ஆலயப் பீடப் பாதுகாப்பு.

ஃபிரெஞ்சுக்காரர்களின் ஆதரவு பெற்ற லத்தீன் கிறித்தவ மடத்துத் துறவிகள் பெத்லஹேமின் (Bethlehem) கிறித்தவக் கோயில் நிருவாகம் தங்களுக்கே உரித்தென்று வாதாடினர். ஆனால், ருஷியாவின் ஆதரவு பெற்ற கிரேக்க கிறித்தவ மடத்துத் துறவிகளோ தாங்களே இதுவரை அதை நிருவகித்து வருவதால், அவ் வுரிமை தங்களுக்கே சொந்தம் என்று எதிர்த்து வாதாடினர்.

லத்தீன் கிறித்தவத் துறவிகளுக்கும் கிரேக்க கிறித்தவத் துறவிகளுக்குமிடையே மூண்ட பெத்லஹேம் ஆலய நிர்வாகச் சம்பந்தமான தகராறு உதுமானிய சுல்தானின் தீர்ப்புக்கு விடப்பட்டது. ஏனெனில், இப் புனித விடங்கள் சுல்தானின் பேரரசுக்குள் அடங்கி இருந்தன. ஃபிரெஞ்சு ஆதரவு பெற்ற லத்தீன் சாமியார்களுக்குச் சாதகமாக

சுல்தான் தீர்ப்பளித்தார். இதனால் பெருஞ் சினமடைந்த ருஷிய பேரரசர், சுல்தானின் கிரேக்கக் குடிமக்களின் பாதுகாவலனாகத் தம்மையே ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று சுல்தானை வற்புறுத்தினார். அப் பேரரசரின் இந்தக் கோரிக்கை சர்வாதிகாரமானதாகுமென்று சுல்தான் நிராகரித்து விட்டார். இதனால் கோபம் கொண்ட ருஷிய பேரரசர், துருக்கிக்குச் சொந்தமான வலேஷியா (Wallachia), மோல்டேவியா (Moldavia) என்னும் நாடுகளை ஆக்கிரமித்துக் கொண்டார். இதனால் மூண்டுவிட்ட மாபெரும் போருக்குத்தான் கிரீமியப் போர்[1] என்று பெயர்.

இப் போரில் துருக்கியர், ஆங்கிலேயர், ஃபிரெஞ்சுக்காரர் ஆகிய மூவரும் ஒன்றுசேர்ந்து ருஷியாவைத் தோற்கடித்து விட்டனர். கி.பி. 1856-ல் கையொப்பமான சமாதான உடன்படிக்கைப்படி, கிரீமியப் போர் முடிவடைந்தது. பாரிஸ் சமாதான உடன்படிக்கைப்படி துருக்கியின் சுதந்தரத்துக்கு உத்தரவாதம் அளிக்கப்பட்டது. வலேஷியாவும் மோல்டேவியாவும் சுதந்தரமடைந்தன. இவை இரண்டும் இணைந்து பிறகு 'ருமேனியா' என்ற பெயரால் ஒரு நாடாயின. 'கிரேக்கக் கிறிஸ்தவ தேவாலயப் பாதுகாப்பாளர்'[2] என்ற ருஷிய மன்னரின் கோரிக்கை வாபஸ் பெறப்பட்டது. உதுமானியப் பேரரசின் நலனுக்கென்று சில சீர்திருத்தங்களை மேற்கொள்ளுமாறு சுல்தான் கோரப்பட்டார்.

### 4. ருஷிய-துருக்கிப் போர் (1876—78)

துருக்கிப் பேரரசின் நன்மைக்கென்று பல சீர்திருத்தங்களை மேற்கொள்ளுமாறு ஐரோப்பிய அரசுகள் சுல்தானைக் கேட்டுக் கொண்டன. ஆனால், துருக்கி சுல்தான் அச் சீர்திருத்தங்களை அமலுக்குக் கொண்டுவர மறுத்துவிட்ட காரணத்தால், உதுமானியப் பேரரசுக்குள் கலவரங்கள் பல மூண்டன. தமக்குச் சொந்தமான செர்பியா, கிரீஸ், வலேஷியா, மோல்டேவியா முதலிய நாடுகள் ஒன்றன்பின் ஒன்றாகச் சுதந்தரமடைந்து விட்டதைப் பார்த்துக் கவலையுள் மூழ்கிவிட்ட சுல்தானுக்கு, பால்கன் தீபகற்பத்தில் எஞ்சியுள்ள நாடுகளான அல்பேனியா, பல்கேரியா, போஸ்னியா ஆகியவற்றையாவது தமது வசமே கெட்டியாய்ப் பற்றிப்பிடித்து நல்லாட்சி புரிய வேண்டுமென்னும் அவாத் தோன்றிற்று.

[1] Crimea War, 1854—1856.
[2] Protector of the Greek Church.

இதற்கிடையில், 1875-ல் ஹெர்ஜிகோவினு (Herzegovina) விலுள்ள விவசாயிகள் புதிதாக விதிக்கப்பட்ட நிலவரி ஒன்றை எதிர்த்துக் கிளர்ந்தெழுந்து ஒரு சிறிய துருக்கிப் படையைத் தோற்கடித்து விட்டனர். செர்பியா நாட்டு விவசாயிகளும் இதற்கு உதவி நல்கினர். இதனுல் கலகம் மேலும் வலுத்தது. ஆனுல், துருக்கிப் படையோ கடும் நடவடிக்கையை மேற் கொண்டு கலகக்காரர்களை முற்றும் நசுக்கிவிட்டது. ருஷியா கிறித்தவ விவசாயிகளை ஆதரித்து வீர முழக்கம் செய்தது.போர் தொடங்கிற்று. துருக்கியர் அப் போரில் தோற்றனர். தலைநக ரான இஸ்தம்பூலுக்கே ஆபத்து விளையும் நிலை தோன்றிற்று. இதனுல் அவமானமுற்றுவிட்ட சுல்தான், சமாதானத்தைக் கோரினுர். சான் ஸ்டீஃபனே (San Stefano) என்ற இடத்தில் ருஷியாவின் விருப்பப்படி சமாதான நிபந்தனைகள் வரைந்து கொள்ளப்பட்டன. இவ் வுடன்படிக்கையின்படி, ருமேனியா, செர்வியா, மான்ட்டிநீக்ரோ எனும் நாடுகளின் சுதந்தரத்தைப் பரிதாபத்துக்குரிய துருக்கி சுல்தான் ஏற்ருர். பல்கேரியா என்ற ஒரு புதிய கிறித்தவ நாட்டுச் சுதந்தரத்தையும் சுல்தான் அங்கீ கரிக்க வேண்டிய அவசியத்துக்கு உள்ளானுர்.

மேலே கூறப்பட்ட சமாதான நிபந்தனைகளைச் சற்று மாற்றி யாக வேண்டுமென்று ருஷியாவைப் பிரிட்டிஷ் பிரதமர் டிஸ் ரேலி (Disraeli) மிரட்டினுர். இது நரித் தந்திரமான ஓர் இராஜ தந்திர யுக்தியாகும்.

### 5. பெர்லின் சமாதான மாநாடு (1878)

ஐரோப்பிய வல்லரசுகளான பிரிட்டன், ஆஸ்திரியா, ஜெர் மனி, இத்தாலி ஆகிய நாட்டுப் பிரதிநிதிகளும், வென்ற நாட் டவர்களின் பிரதிநிதிகளும் (ருஷியா), தோற்ற நாட்டவர் களின் பிரதிநிதிகளும் (துருக்கி) பெர்லின் மாநாட்டில் வந்து கூடினுர்கள். கி.பி. 1815ஆம் ஆண்டில் வியன்னுவில் கூடிய மாநாட்டிற்குப் பிறகு இந்த பெர்லின் மாநாடுதான் முக்கிய மாநாடாக விளங்கிற்று. பிஸ்மார்க்கின் தலைமையில் இம் மாநாடு 1878-ல் பெர்லினில் கூடிற்று.

#### புது நிபந்தனைகள்

(1) பல்கேரியாவின் பரப்பளவு குறைக்கப்பட்டு, அதற் குச் சுதந்தரமும் கொடுக்கப்பட்டு, துருக்கி சுல்தானின் பேரர சின் ஓர் அங்கமாக அது ஆக்கப்பட்டது.

(2) செர்பியா, மான்ட்டிநீக்ரோ, ருமேனியா என்னும் நாடுகளுக்கு, சுல்தானுடன் எவ்விதமான தொடர்பும் கொண்டிராத சுதந்தரம் அளிக்கப்பட்டது.

(3) போஸ்னியா, ஹெர்ஜிகோவினா (Herzegovina) என்னும் நாடுகள் ஆஸ்திரிய ஆட்சியின் பாதுகாப்பில் விடப்பட்டன.

(4) ருமேனியாவிலிருந்து பிரிக்கப்பட்ட பெஸ்ஸராபியா (Bessarabia) ருஷியாவுக்குக் கொடுக்கப்பட்டது.

(5) துருக்கியுடன் செய்து கொண்ட இரகசிய ஒப்பந்தம் ஒன்றின்படி, சைப்ரஸ் தீவு (Cyprus) இங்கிலாந்துக்குக் கொடுக்கப்பட்டது.

இவ்விதமாக, 19ஆம் நூற்றாண்டைய ஐரோப்பிய பேரரசுகளால் ஆரம்பிக்கப்பட்டு, தூபமிடப்பட்டு, தூண்டிவிடப்பட்ட ஐரோப்பிய நாடுகளின் தேசியம் என்ற தீ முடிவில் உதுமானியப் பேரரசின் வீழ்ச்சிக்கே மூலகாரணமாக அமைந்துவிட்டது.

## 4. உதுமானிய ஆட்சியும் பல்கலை அறிவு வளர்ச்சியும்

14ஆம் நூற்றாண்டின் ஆரம்ப கால கட்டத்தின் வரலாற்றில் திடீரென்று தோன்றிய உதுமானிய துருக்கி ஆட்சியானது, சிறிது காலத்துக்குள்ளாகவே அந்தச் சகாப்தத்தின் மற்றைய ஆட்சிகளையெல்லாம் விட உன்னத உச்ச அளவுக்கு விரைவில் வளர்ந்து ஒளிச்சுடர் வீசத் தொடங்கி விட்டதென்னலாம். ஆசியா, ஆப்ரிக்கா, ஐரோப்பா ஆகிய மூன்று கண்டங்களிலும் ஆலெனப் படர்ந்துவிட்டது, உதுமானியப் பேரரசு. இதன் காரணமாக, பலப் பல புதிய கலாசாரங்களுடனும் நாகரிகங்களுடனும் பழகவேண்டிய இன்றியமையாத அவசியமேற்பட்டு விட்டமையால், உதுமானியர்களின் பாரம்பரிய கலாசாரங்களும் நாகரிகங்களும் பெருமளவுக்கு மாறித் தீரவேண்டி வந்தன.

உமையா, அப்பாஸிய வமிசங்களின் ஆட்சிக் காலத்தில் வளர்ந்த இஸ்லாமிய கலாசாரங்களையும் நாகரிகங்களையும் உதுமானிய சுல்தான்களும் ஏற்றுக்கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டது. தடுக்க முடியாத நூதன சிந்தனை பெருவெள்ளப் பிரவாகத்தின் கட்டாயத்துக்குட்பட்டு, பண்டைப் பாரம்பரிய இஸ்லாமிய விடாப்பிடி நம்பிக்கைகளும் கருத்துகளும் பகுத்தறிவு வெளிச்சம் போட்டுக் காட்டப்பட வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு ஆளாயின. எனவே, அவற்றைப் பேரறிஞர்களும் தன்னல

மற்ற சமுதாயநலப் போதகர்களும் சீர்ப்படுத்தி, எல்லார்க்கும் விளங்கும்படி முறைப்படுத்தி விட்டார்கள்.

**இமாம்கள் நால்வர்**

(1) அபூ ஹனீஃபா—(Abu Hanifa, d. 767)

(2) மாலிக் இப்னு அனஸ் (Malik Ibn Anas, d. 795)

(3) முகம்மது இப்னு இத்ரீஸ் அல் ஷாஃபி (Muhummad-Ibn-Idris al Shafi, d. 820)

(4) அஹ்மது இப்னு ஹன்பல் (Ahmad Ibn Hanbal, d. 855)

மேற்கூறிய இந் நான்கு இமாம்களும்[1] (Imam—இஸ்லாமிய சமய குரு), சட்ட இயல் (Jurisprudence) என்னும் சமுதாயச் சட்டம்பற்றிய நூலை நுணுக்கம் நுணுக்கமாகத் தொகுத்து வெளியிட்டனர். இமாம் கஜ்ஜாலி (Imam Ghazzali, 1058—1111) என்பவர் இஸ்லாமிய இறைமை நூலின் (Theological) தலையாய கொள்கைகளைத் தொகுத்து வெளியிட்டார். இப்னுல் அரபி (Ibnul Arabi, 1165—1240) என்னும் மாமேதை, இஸ்லாத்தின் மறை பொருள் (Esoteric Islam) என்பதைப்பற்றிப் பெரிதும் விளங்க வைத்தார். உதுமானிய ஆட்சி இவ் விளக்கத்தைப் பயன்படுத்தி, ஸஃபாவீ (Safavid) ஷீஆ (Shia) கொள்கைகளை மோதும் ரீதியில் தங்கள் ஸுன்னீ (Sunni) கொள்கைகளை வற்புறுத்தலாயினர்.

**ஸுன்னீ கட்சிக் கொள்கைகளும் காலத்துக்கேற்ற திருத்தங்களும்**

(1) இஸ்லாமிய இறைமை.

(2) இஸ்லாமிய கலாசாரங்கள்.

(3) இஸ்லாமிய சட்டம்.

(4) இஸ்லாமிய பல்கலை அறிவின் வளர்ச்சி.

(1) இஸ்லாமிய இறைமை (Islamic Theology)

'உலகப் பல்வேறு மதங்களைப் பின்பற்றுகிறவர்களுள் முஸ்லிம்கள் மட்டுமே தங்கள் மத மரபுகளிலிருந்தே தங்களுக்

[1] இந்த நான்கு இமாம்களின் சாதனைகளும், இயற்றிய சட்டத் தொகுப்புகளும்பற்றிய எல்லா விளக்கங்களும் பாட நூல் நிறுவனத்தின் வெளியீடாகிய 'இந்திய இசுலாமியர் சட்டம்' என்னும் நூலில் விவரிக்கப் பட்டுள்ளன.

கென விஞ்ஞான அறிவு என்பதை வளர்த்துக் கொண்டவர்கள் எனலாம்' என்று பேராசிரியர் ஹிட்டி என்னும் அறிஞர்[1] கூறுகிறார்: அந்த விஞ்ஞானமென்பது, இஸ்லாமிய இறைமை நூலிலும், பாரம்பரிய மரபு நூலிலும் காணப்படும். இஸ்லாம் மதத்தின் தூண்டுதலாலேயே இத்தகைய நூதனமான விஞ்ஞான அறிவு வளர்ச்சியடைந்தது. இஸ்லாமிய மதத்தின் மூல நூலான குர்ஆனைப் (Quran) புரிந்து கொள்ளவும், அதை விளக்கவும் தோன்றிய அவசியந்தான், முஸ்லிம் அறிஞர்களின் இத்தகைய நூதன விஞ்ஞான சிந்தனைக்கும் ஆராய்ச்சிக்கும் காரணமாகும். இவ் வகையில்தான் இஸ்லாமிய மத விஞ்ஞானம் வளர்ச்சி அடைந்தது.

இத்தகைய விஞ்ஞான அறிவு வளர்ச்சி யடைந்ததால் தான், அராபிய அறிஞர்கள் உதுமானிய துருக்கிய ஆட்சியாளர்களின் மத சம்பந்தமான பொருள் விளக்கத்தை ஏற்க மறுத்தனர். அதாவது, துருக்கியர் இஸ்லாமிய இறைமையைச் சார்ந்த எந்தச் சட்டத்துக்கும் பொருள் விளக்கம் வழங்கத் தகுதியற்றவர்கள் என்று அராபிய அறிஞர்கள் கருதினர். உதுமானிய சுல்தானுன இரண்டாம் முகம்மது காலத்தில் 'ஷேகுல் இஸ்லாம்' (Shaikhul-Islam) என்ற மத சம்பந்தப்பட்ட மதத்துறை ஒன்று நிறுவப்பட்டது. மாண்புமிகு சுலைமான் காலத்தில் இம் மதத்துறை பேரதிகாரங்களையும் செல்வாக்குகளையும் பெற்று விட்டது. மத விவகாரங்கள் சம்பந்தமான எல்லா அதிகாரங்களும் பிரதம நீதிபதி வசம் ஒப்படைக்கப்பட்டன.

பிரதம நீதிபதியும், இஸ்லாமிய சமயப் பேரறிஞர்களும் (Ulemas) வழங்குகின்ற தீர்ப்புகளை சுல்தான் உட்பட அனைவரும் ஏற்க வேண்டும் என்னும் கோட்பாடு அமலுக்கு வந்தது. இதன் விளைவாக, மத குருமார்களுக்கு ஆட்சியை ஆட்டிப் படைக்கும் அதிகாரமும் அந்தஸ்தும் முளைத்துவிட்டன. ஏனென்ருல், புனிதச் சீசட்டமான ஷரீஅத்துக்கு (Shariat)[2] விரோதமானதென்று சொல்லி, சுல்தானின் எந்த ஓர் உத்தரவையும் தூக்கி எறிந்து விடும் அதிகாரம் பிரதம நீதிபதியின் கரத்திடை அடங்கி விட்டது. உதுமானிய சுல்தான்கள் இவ்வுயர்ந்த மத நிறுவனத்தின் பிரதம நீதிபதியாகத் திறமைமிக்க,

[1] பேராசிரியர் ஹிட்டி, 'அராபிய வரலாறு', பக்கம், 393.

[2] முஸ்லிமாக விளங்கும் ஒவ்வொருவரும் அன்ருட வாழ்க்கையில் பின்பற்றியே தீரவேண்டிய மத அங்கீகாரம் பெற்ற தனி நபர் நடவடிக்கை 'ஷரீஅத்' என்று அழைக்கப்படும்; அதாவது, இஸ்லாமிய சிவில் சட்டம் இது. இச் சொல்லுக்கு 'இறைச் சட்டம்' அல்லது இறைவன் வழியில் செல்லும் பாதை' என்று அகராதியில் பொருள் வழங்கப் பெற்றுள்ளது.

தகுதி வாய்ந்த, பொருத்தமான சட்ட இயல் வல்லுநரையே நியமித்தார்கள்.

ஷீஆப் பிரிவினரைத் தவிர ஏனை எல்லா இஸ்லாமிய உலகுமே இந்த ஷேகுல் இஸ்லாமிய நிறுவனத்தின் கோட்பாடுகளுக்கும், பொருள் விளக்கங்களுக்கும், கருத்துகளுக்கும், உத்தரவுகளுக்கும் மரியாதையுடன் தலைவணங்கிற்று. இதனால், ஸுன்னீ தத்துவத்தின் செல்வாக்கு மேலும் மேலும் சமுதாயத்தில் வளமும் பலமும் பெற்று உறுதியடைந்தது.

(2) இஸ்லாமிய கலாசாரங்கள்

இறைமை மயமான குர்ஆனில் பொறிக்கப்பட்டுள்ள கருத்துத் தொகுதி, முறைமைப்படுத்தப்பட்ட சமயக் கோட்பாடு, வகுக்கப்பட்டுள்ள நெறிமுறைக்கோட்பாடுகள், தொகுக்கப்பட்டுள்ள அமைப்புகள் ஆகியவற்றின் அடிப்படையில்தான் இஸ்லாமிய மதம் நிறுவப்பட்டுள்ளது. இம் முறைகளெல்லாம் முகம்மது நபி நாயகமவர்களின் காலத்திலேயே முறைப்படுத்தப் பட்டுவிட்டிருந்தன. அத்தகைய மேதக்க கொள்கைகளின்மீதே தான் இஸ்லாமிய கலாசாரங்களெல்லாம் குடியரசு என்றும், அரசியல் முறையாய ஆட்சிகளென்றும், பல்வேறு கிலாஃபத் ஆட்சி சகாப்தங்களின் போது ஆதரிக்கப்பட்டு வளர்ச்சி யடைந்தன.

இத்தகைய இஸ்லாமிய கலாசாரங்களேகூட, அதற்கும் முன்னாலான பாரம்பரிய அராபிய-கிரேக்க-ரோமானிய பழக்க வழக்கங்களை ஏற்றுக் கொண்டுவிட்டிருந்தன. ஏனென்றால், உமையா வமிச கலீஃபாக்களும், அராபியப் பேரரசு அனுதாபி களும் அவற்றை ஆதரிப்பவர்களாகவே இலங்கினரன்றோ? உமையாக்களுக்குப் பின் ஆட்சிப்பீடம் ஏறிய அப்பாஸீ கலீஃபாக் களுக்குப் பக்கத் துணையாயிருந்த 'பர்மக்கீகள்' போன்ற கலை நாகரிகம் மிக்க பாரசீகர்கள் அந்த ஆட்சிக் காலத்தில் பெரும் செல்வாக்குப் பெற்றதிலும், ஆங்காங்கே முக்கிய அதிகாரி களாகப் பதவி வகித்ததிலும் வியப்பென்ன இருக்க முடியும்?

உமையாக்களை வீழ்த்திய அப்பாஸியப் பேரரசு நிறுவனத்தின் வெற்றிக்கு முக்கிய காரணமே, முழுக்க முழுக்க அராபிய வெறியுணர்ச்சி சூழ்ந்த உமையாக்களின் பேரரசுமீது அராபிய ரல்லாதவர்கள் கொண்டுவிட்ட அடக்கொணாத வெறுப்புணர்ச்சி தான் ஆகும். இதனால்தான் அப்பாஸீ ஆட்சிக் கால நெடுக வும் இஸ்லாமிய கலாசாரத்தில் பாரசீகக் கலாசாரங்கள் இரண்

டறக் கலந்து விட்டன; பாரசீகமயமான இஸ்லாமிய கலாசாரங்கள் உருவாயின.

உதுமானியப் பேரரசோ அராபியர்களையும் பாரசீகர்களையும் வெறுத்தே ஆட்சி செலுத்த முற்பட்டது. மத விஷயத்தில் முஸ்லிமாகவும், அரசியல் விஷயத்தில் இஸ்லாமும் பைஜான்ஷியமும் இணைந்த ஒரு கலவையாகவும் காட்சியளித்தது உதுமானியரின் போக்கு. அதாவது, அராபிய-பாரசீக-பைஜான்ஷிய கலாசாரங்கள் என்னும் மூன்றும் கலந்ததாயிருந்தன உதுமானியரின் கலாசாரமும் போக்கும்.

மேற்கூறப்பட்ட பல்வேறு கலாசாரங்களும் சமுதாயத்தினிடையே நீண்ட நெடுங்காலம் தலைமுறை தலைமுறையாக வெகு ஆழத்தில் வேரூன்றிக் கிடந்தமையால், அவற்றை ஒழித்துக்கட்டுவது இயலாத காரியமென்று உதுமானிய ஆட்சிக்குத் தெற்றென விளங்கிற்று. இதுவுமன்றி, மேனாட்டு ஐரோப்பிய நாகரிகப் பாணிகளும் கலைகளும் துருக்கிக்குள் புகத் தொடங்கியமையால், வேறு வழியின்றி, எல்லாம் கலந்த கதம்ப கலாசாரத்தைத் துருக்கி ஆட்சியாளர் ஆதரித்தே தீர வேண்டிய கட்டம் உருவாகிவிட்டது.

மேலும், கிறித்தவர்கள் போன்ற துருக்கியரல்லாத, இஸ்லாமியரல்லாத, வேறு மதங்களைச் சேர்ந்த பிரஜைகளைத் திருப்திப்படுத்த, 'Millet System' என்ற சமயப் பிரிவுகளை[1] உதுமானியர் உருவாக்கினர். இஃது உதுமானியர்களின் மதச் சகிப்புத் தன்மைக்கு ஒரு பொது உதாரணமும் எடுத்துக் காட்டுமாகும். அவ்வச் சமயத்தாரைப் பொறுத்தவரை, அவரவரின் வெவ்வேறு பாரம்பரியச் சட்டப்படி, உதுமானியப் பேரரசெங்கும் விசாரிக்க, வெவ்வேறு நீதிமன்றங்களும் காரியாலயங்களும் நிர்மாணிக்கப்பட்டன. மேலும், உதுமானியப் பேரரசில் வசிக்கும் அயல்நாட்டுக் குடிமக்கள் மீது எக் குற்றத்துக்காவது விசாரணை நடத்தும் அதிகாரம் முஸ்லிம் சமய நீதிபதிக்குக் கிடையாது. இம் முறைக்குக் காபிடுலேஷன்ஸ்[2] (Capitulations) எனப் பெயர்.

அதோடு கூட, அயல்நாட்டார்க்குப் பல்வேறு வரிச்சலுகைகளும் துருக்கி ஆட்சியாளரால் அளிக்கப்பட்டன; அவர்

[1] முன் பக்கம் 164 பார்க்க.

[2] துருக்கிப் பேரரசில் வாழும் அயல் நாட்டவரின் பொறுப்புகள், அவர்கள் பின்பற்ற வேண்டிய வழிமுறைகள், சட்டங்கள் ஆகியவற்றை வரையறை செய்து விளக்கும் முறை.

களுடைய சகல அயல்நாட்டுரிமைகளும் சலுகைகளும் காப்பாற்றப்பட்டன.

### (3) இஸ்லாமிய சட்டம் (Islamic Law)[1]

இஸ்லாமிய சமுதாயத்துக்கான சட்ட நியதிகளை வகுத்துத் தந்த சாதனங்கள் நான்காகும்.

அவையாவன:

(1) குர்ஆன்.

(2) பாரம்பரிய மரபுகள் (ஹதீதுகள்).

(3) இஜ்மா— கற்றறிந்த மேதைகளின், பெரும்பான்மை யோரின் கருத்துகள்.

(4) கியாஸ்— தர்க்கவாதப் பிரதிவாத முடிவுகள் (Logical deductions).

இஜ்மா (Ijma—Majority opinion of the Learned), கியாஸ் (analogy) என்னும் துறையிலமைந்த சட்டங்கள், உமையா வமிச அப்பாஸீ வமிச கலீஃபாக்களின் ஆட்சிக் காலங்களில் உருவெடுத்து, நான்கு சட்டப் பிரிவுகளாயின. அவை, (1) ஹனஃபி, (2) மாலிக்கி, (3) ஷாஃபி, (4) ஹன்பலி என்பனவாம்.

#### ஹனஃபி முறைச் சட்டம்

இதுதான் முதலில் தோன்றிய சட்டமாகும்; இது பெரும்பாலான உட்பிரிவுகளையும் சட்ட நுணுக்கங்களையும் கொண்டது; பரந்த மனப்பான்மையும், சமய சமரச மனப்பான்மையும் உடையது. ஹனஃபி தத்துவச் சட்டத்தின் சிறப்பு என்னவெனில், அஃது எல்லோருக்கும் கருத்துச் சுதந்தரம் அளிக்கிறது. அன்றியும், அதுவே ஒத்துணர்வுத் திறமுமுடையது. உலக ஸுன்னீ முஸ்லிம்களில் ஒரு பாதியினர் ஹனஃபிகள். ஹனஃபி சட்டங்களைத் துருக்கியர்களும், இந்திய முஸ்லிம்களும், மத்திய ஆசியாவிலுள்ள ஸுன்னீ முஸ்லிம்களும் ஏற்றுக் கொண்டனர், ஆதரித்தனர்.

அதனுடன் கூட, மதவிற்பன்னர்களின் செல்வாக்குக்குட்பட்ட 'ஷேகுல் இஸ்லாம்' என்பவரின் சட்ட நிறுவனமும், அறி

[1] இது பற்றிய முழு விளக்கங்களும் விவரங்களும் பாட நூல் நிறுவன வெளியீடாகிய 'இந்திய இசுலாமியர் சட்டம்' என்னும் நூலில் இயம்பப் பெற்றுள்ளன.

ஞர்களும், தர்க்க வல்லுநர்களும் ஹனஃபி தத்துவங்களை மேலும் மேலும் வலுப்படுத்தி, மக்களிடையே அவற்றைப் பரத்தினர் கள். உதுமானியரின் ஆட்சி முழுக்க முழுக்க இறைமையை அடிப்படையாகக் கொண்டது (Theocracy). ஷரீஅத் (Shariat) என்ற புனிதச் சட்டம் திருக்குர்ஆனை (Holy Quran) மூலமாகக் கொண்டது. உதுமானியப் பேரரசு முழுதுமே இஸ்லாமிய மய மாகக் காட்சி யளித்தது. பணித்துறை ஆட்சி அமைப்புகள் (Bureaucracy), படிப்படிநிலை அமைப்புகள் (Hierarchy) ஆகிய வற்றையெல்லாம் நடத்துபவர்கள் முஸ்லிம் நீதிபதிகளும் சட்ட நிபுணர்களுமாவார்கள் (Jurists). இவர்களுக்கெல்லாம் மகுடம் வைத்தாற் போன்றவர்தாம் துருக்கிய சமயத்துறை அலுவல் முதல்வர் (Grand Mufti); இவர் இஸ்தம்பூலில் உறைவார்— 'ஷேகுல் இஸ்லாம்' என்ற பட்டமும் பதவியும் இவருக்குண்டு. உதுமானியப் பேரரசில் சுல்தானுக்கு அடுத்தபடி இவருக்குத் தான் பெரும் மதிப்பு இருந்தது.

மற்றும், பள்ளிக்கூடங்கள், நீதிமன்றங்கள், மத நிறுவனங் கள், மக்களின் அன்ருட வாழ்க்கைகள் ஆகிய இவையெல்லாம் குர்ஆனின் சட்ட திட்டங்களில் கைதேர்ந்த உலமாக்கள் (Ulamas)[1] என்னும் இஸ்லாமிய சமயப் பேரறிஞர்களின் கண் காணிப்பில்தாம் நடைபெற்று வந்தன. இவ்வாருக, ஹனஃபி சட்ட திட்டங்கள் மற்றும் தத்துவங்களின்படிதான் நீதிபதி களும், சட்ட வல்லுநர்களும் எழுத்தாளர்களும் மேலும் மேலும் இஜ்மா, கியாஸ் என்னும் முறைகளின்படி சித்தாந்தங்களையும் நடைமுறைகளையும் உதுமானியப் பேரரசு முழுதும் பலப்படுத்தி விரிவாக்கினுர்கள். இவ் வகையில் அவர்கள் இஸ்லாமிய சட்டத் தைப் பெரிதும் வளர்ச்சியுறுமாறு செய்யலானுர்கள்.

### (4) இஸ்லாமிய பல்கலை அறிவின் வளர்ச்சி

ஆரம்ப கால இஸ்லாமிய குடியாட்சி கிலாஃபத்[2] நிலவிய சகாப்தத்தில் சிற்பங்களும் சிலாசாசனங்களும் எங்கோ ஏதோ பெயரளவில் இருந்தனவாகச் சொல்லலாமே தவிர, அவை புகழ் மிக்கனவாக இருந்தனவென்று சொல்வதற்கில்லை. உமை யாக்கள்[3] ஆட்சிக் காலத்திலேதான் உண்மையான கட்டடக் கலையும், சிலாசாசனங்களும் தோன்றி வளர்வதற்கான அஸ்தி

[1] 'கற்றறிந்தவன்' என்னும் பொருளுடைத்து, 'ஆலிம்' என்னும் அரப் சொல் இதன் பன்மையே 'உலமா' (அதாவது, கற்றறிந்த பண்டித சிகாமணிகள்) என்பதாம்.

[2] Republican Caliphate, 632—661 A. D.

[3] Ummayad Caliphate, 661—754 A. D

வாரக் கல் நாட்டப்பட்ட தென்னலாம். உமையா வமிசத் தினர் மிகவும் அக்கறை செலுத்தி, பைஜான்ஷியக் கட்டடக் கலைகளை நன்கு ஆராய்ந்து, அவற்றில் தேவைப்பட்ட சில மாறு தல்களை விளைவித்து, உருவ வழிபாட்டுக்கோ சின்னங்களின் மற்றும் அடையாளங்களின் வழிபாட்டுக்கோ கொஞ்சமும் வழி யுண்டுபண்ணிவிடாத முறையில் இஸ்லாமிய முறையிலான சிற்பக் கட்டடச் சிலாசாசனங்களாகத் தனிப்பட்ட ஒரு சிறப்பு மிகு வகையில் அமைத்துத் தந்தனர். இக் கலையழகு கண்ணை யும் கருத்தையும் ஒருங்கே கவர்வதாகவும், பீடுகெழு கம்பீர மிக்கதாகவும், அதே நேரத்தில் சிக்கனமான செலவில் நூதன வடிவம் பெற்றதாகவும் நின்றிலங்கி வருவதைக் காணலாம். இஸ்லாமிய மதக் கோட்பாட்டிற்கு ஏற்ற வண்ணமும், அதன் போதனைகளின்படியும் அமைந்த அக் கட்டடங்களில் எவ்வித மான மனித—விலங்கு உருவங்களையும் காணமுடியாது. அவற் றிற்குப் பதிலாக அழகு சிந்தும், உள்ளங்கவரும் இயற்கைக் காட்சிகள் அங்குக் காட்சி யளிக்கும்.

அப்பாஸீ கால சிற்ப—கட்டட—சிலாவடிவங்களில், பாரசீக அமைப்பிலான எழிற்காட்சிகள் தோன்றலாயின. உமையா சகாப்தத்தில் பைஜான்ஷிய-சிரியா நாட்டு அமைப்புக் காட்சி களும், அப்பாஸீ சகாப்தத்தில் ஸாசானிய வடிவமான சிற்ப, கட்டட, சிலாசாசனக் காட்சிகளும் இடம் பெறலாயின. உதுமா னியர்கள் ஆட்சிக்கு வருவதற்கு முன்பு தலைமுறை தலைமுறை யாகச் செங்கோலோச்சி வந்த அராபியர்களுக்குரியனவும் பாரசீகர்களுக்குரியனவுமான சிற்ப-கட்டட-சிலாசாசன கலா சாரங்களை அந்த உதுமானியர்கள் தங்களுடையனவாக ஆக்கிக் கொண்டு, அவற்றை மேலும் முன்னேற்றம் பெறுமாறு செய்து கொண்டார்கள். அவற்றுடன்கூட அவர்கள் பைஜான்ஷியர் களின் கலாசாரங்களையும் ஒருங்கிணைத்து முற்றிலும் நவீனமான நான்காவது வகைப்பட்ட அமைப்புடன் கூடிய இன்னொரு சிற்ப கலாசாரமாக அழகுபடுத்தினர். அதாவது, பழங்கால அராபிய, பாரசீக நாகரிகங்களுடன் பைஜான்ஷிய நாகரிகத்தைப் பக்குவ மாய் ஒருங்கிணைத்துத் துருக்கியர்கள் முற்றிலும் வியத்தகு முறை யில் ஒரு நவீன கலாசாரப் புரட்சியை உண்டுபண்ணி வைத் தார்கள் என்று கூறலாம்.

உதுமானிய சுல்தான்களான இரண்டாம் பாயஜீத், முதலாம் ஸலீம், மாண்புமிகு சுலைமான், முதலாம் அஹ்மத் ஆகி யோர் எழில்பொங்கும் கவின்மிகு கலைக் கட்டடங்களைக் கட்டி யமைத்துவிட்டுச் சென்றிருக்கும் பெருமையின் மாட்சியை

எப்படிப் புகழ்வது? உள்ளங் கவரும், கண்களைப் பறிக்கும், மதி மயக்கும் பள்ளிவாசல்களும், இந்தியாவிலுள்ள அழகு பிம்பமான தாஜ்மஹலை நிகர்க்கும் வண்ணம் கம்பீரத் தோற்றமளிக்கும், உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் கல்லறைக் கட்டடங்களும், இன்னம் பற்பல நினைவுச் சின்னங்களும் உதுமானியப் பேரரசெங்கும் விரவிக் கிடப்பதானது அந்த நவீன கலாசாரப் புரட்சியால் விளைந்த புதுவிதமான வடிவங்களுக்கு எடுத்துக்காட்டுகளாகும். மேலும், பைஜான்ஷியப் பேரரசர்கள் கட்டிவிட்டுச் சென்ற பல கிறித்தவ மாதாக் கோவில்களை உதுமானியப் பேரரசர்கள் பள்ளிவாசல்களாக மாற்றியமைத்துக் கொண்டனர்.[1] ஹாஜியா சோஃபியா (Hagia Sophia) என்ற கிறித்தவத் திருச்சபை முஸ்லிம்களின் அயா சோஃபியா என்று ஆயிற்று. உருவ வழிபாடு இல்லா முறையில் பிரார்த்தனை ஆலயம் தூய்மைப்படுத்தப்பட்டதற்கு இஃது ஓர் உதாரணமாகும்.

### கட்டடக் கலை நிபுணர் சினன் (Sinan)

மாண்புமிகு சுலைமானின் ஆட்சிக் காலத்தில் பெரும் பெயரும், புகழும், கீர்த்தியும் பெற்று விளங்கிய சினன் என்னும் கட்டடக் கலை நிபுண சிகாமணியானவர் துருக்கி நாட்டில் வதிந்த ஒப்பாரும் மிக்காருமற்ற சிற்பக்கலைப் படைப்பின் சிகரமாவார். அக்காலத்துக் கட்டட நிருமாணக் கலைஞர்களுள் சினனே தலைசிறந்தவராவார். சுல்தான் முதலாம் சலீம் காலத்தில் நடைபெற்ற இராணுவப் படையெடுப்புகளுடன் இந்தச் சிற்பியும் கலந்து கொண்டார். பிறகு, இவர் சிற்ப-கட்டட நிருமாணத் துறையின் பிரதம இயக்குநராக (Chief Architectural Director) நியமிக்கப்பட்டார்.

இப் புதிய தகுதியின் அடிப்படையில், 81 மிகப் பெரிய மசூதிகளையும், 52 சிறிய மசூதிகளையும், 35 சிறப்புப் பள்ளிகள் ('மத்ரஸாக்கள்' என்று அழைக்கப்பட்ட கல்லூரிகள்), 33 அரண்மனை மாளிகைகள், 33 நீராடும் பொய்கைகள், 19 கல்லறைக் கூடங்கள், பொது மக்களின் வசதிக்கான பல

[1] யூதர்களும், இயேசுவின் காலத்திலிருந்த அவருடைய சீடர்களும், முஸ்லிம்களும் உருவமிலா, எங்கும் பரந்திருக்கும் ஏக இறைவனை வழிபடுவதற்காக வென்றே ஆலயங்களை (அதாவது, பிரார்த்தனை, தொழுகை, ஜெபம் முதலியன நடத்தும் பொதுப் பிரார்த்தனைக் கூடங்களை) நிருமித்து இறை வழிபாடு செய்திருக்க, ரோமன் கத்தோலிக்கர்களும் பைஜான்ஷியர்களும் தங்கள் பிரார்த்தனை ஆலயங்களை உருவமைந்த தேவாலயங்களாக மாற்றிவிட்டதை வெறுத்த துருக்கியர், அந்த உருவங்களை முற்றும் அப்புறப்படுத்தி, சின்னமோ அடையாளமோ சொரூபங்களோ இல்லா வகையில் புனிதப்படுத்தி விட்டார்கள்.

சமையற் கூடங்கள், அனேக மருத்துவ மனைகள், சத்திரம் சாவடிகள் (Caravanserais) முதலிய 235 அரசு நிறுவனக் கட்டடங்களையும் தம் போஷகரான சுலைமானின் விருப்பப்படி கட்டி முடித்துக்கொடுத்தார் இந்தச் சிற்பிகளுள் பெருஞ் சிற்பியான சினன். முன்பு நாம் குறிப்பிட்ட பெரும் புகழ்வாய்ந்த 'ஹாஜியா சோஃபியா' என்ற மசூதியையும் வனப்பிலும் வசீகரத்திலும் மிகைத்து மிளிர்கிறது, 'சுலைமானியா' என்ற தம் போஷகரான மகா சுலைமானின் பெயரால் சினன் நிர்மாணித்துத் தந்த மசூதிகளின் மகுடம்.

இந்த சுலைமானியா மசூதியின் நடுநாயகக் கேந்திரமான மாபெரிய கம்பீர வட்ட வடிவமைந்த கிரீடத்தை நிகர்த்த உன்னதக் கோபுரம், அதற்கு முன் உலகப் பிரசித்தி பெற்று விளங்கிய 'ஜஸ்டீனியன்' (Justinian) கோயில் கோபுரத்தினும் 16 அடி கூடுதலான உயரத்துடன் நிமிர்ந்து நிற்கிறது. உதுமானியப் பேரரசின் தலைநகரான இஸ்தம்பூலில் கம்பீரமிக்க எடுப்பான தோற்றத்துடன் வானளாவ எழுந்து நிற்கும் இம் மசூதியானது, உதுமானியக் கட்டடங்களெல்லாவற்றுள்ளும் பேரழகுமிக்கதாகும். 'சுலைமானியா மசூதி மெய்யாகவே ஊழி யூழிக் காலத்தின் கன்னத்தின்மீது பதிந்துவிட்டிருக்கும் ஆனந்தக் கண்ணீர்த் துளி' எனலாம்.[1]

மகா சுலைமானின் மைந்தரான இளவரசர் முகம்மது என்பவரின் பெயரால் சிற்பி சினனால் கட்டப்பட்ட ஷாஸாதா[2] மசூதி (Shahzade Mosque) யும் சிற்பியின் கைத்திறனையும், கருத்தாழத்தையும் எடுத்துக் காண்பிக்கும், அழகுக்கு அழகூட்டும் சிற்பாலங்காரமாகும். எதிர்காலப் பெரும் சிற்பிகளுங் கூடச் சிற்பி சினனையே தங்களுக்குரிய ஒரு முன்மாதிரியான சிற்பாலங்காரக் குருபீடமாக ஏற்றுத் தங்கள் மிக உன்னதமான வேலைப்பாடுமிக்க சாதனைகளைச் சாதித்தனரென்றால், கட்டடக் கலைஞர்களில் மாணிக்கமெனத் திகழ்ந்த சினனின் சிறப்பை எவ்வாறு பாராட்டுவது ?

### இறுவாய்

உதுமானியர் சகாப்தத்தில் பல்கலை அறிவின் வளர்ச்சி, அபூ ஹனீஃபா என்னும் இமாமின் தீவிரவாதத் தத்துவச் சட்டத்தின் அடிப்படையில்தான் உருவாகத் தொடங்கிற்று.

[1] 'The Sulaymaniyah Mosque is indeed a tear on the cheek of Eternity.'
[2] இளவரசர்—Prince.

ஸஃபாவீ ஷீஆ (Safavid-Shia) தத்துவத்திலிருந்து வேறுபட்ட, மாறுபட்ட ஸுன்னீ தத்துவார்த்த தீவிரவாதிகளாகவேதாம் உதுமானியர் விளங்கினர் என்பதை, அவர்களுடைய ஆட்சியின் எல்லா நிறுவனங்களும் நடைமுறைகளும் விளக்கும். சுருங்கக் கூறுங்கால், உதுமானிய ஆட்சிக் காலத்தில் இஸ்லாமிய கலாசாரங்க ளெல்லாம் ஹனஃபீ தத்துவத்தை அடிப்படையாகக் கொண்ட இஸ்லாமியமே எனலாம். வேறு விதமாகக் கூற வேண்டுமென்றுல், ஷரீஅத் என்னும் புனிதச் சட்டத்திற்கு ஹனஃபீ வகுப்பினர் (Hanafi School) அளித்த பொருள் விளக்கத்தையே உதுமானியர்கள் பின்பற்றி, அதற்கு மேன்மேலும் ஊக்கமூட்டினர். வான் கிரெமர் (Von Kremer), 'ஹனஃபீ தத்துவங்களே இஸ்லாமிய தத்துவங்களின் தன்னிகரற்ற சாதனைகளாகுமெனில், அது மிகைபடக் கூறிய கூற்ருகாது' என்கின்ருர்.[1]

### (5) மத்திய கிழக்கில் உதுமானியப் பேரரசின் வீழ்ச்சி

மத்திய கிழக்குப் பிரதேசம் (Middle East) என்பது ஒரு நாடுமன்று, ஒரு கண்டமுமன்று; அதை ஒரு முக்கியமான பூகோளப் பிரதேசம் என்னலாம். இந்த முக்கியத்துவத்துக்குக் காரணம், பூகோள அமைப்பில் அது பெற்றுக் கொண்டுவிட்டிருக்கும் அமைப்புத்தான்; சரித்திர வரலாற்றிலும் அதற்கேற்பட்ட முக்கியத்துவம் இந்த அமைப்பின் முக்கியத்துவத்தைக் கருதியேதான். இரண்டு நிலப் பகுதிகளைப் பிரிக்கும் ஆற்றின் மீது அல்லது ஏரியின்மீது கட்டப்படும் பாலத்தைக் கொண்டு அப் பிரிவுற்ற நிலப் பகுதிகளை இணைப்பதேபோல், ஆசியா, ஆப்ரிக்கா, ஐரோப்பா ஆகிய முப் பெருங் கண்டங்களையும் ஒருங்கே இணைக்கும் ஒரு கரணையாக இம் மத்திய கிழக்குப் பிரதேசம் பல நூற்ருண்டு வரலாற்றைப் படைக்கப் பெற்றுள்ளது. மற்ெரு விதமாகவும் இப் பிரதேசத்தை நாம் வருணிக்கலாம். அதாவது, தென்மேற்கு ஆசிய பிரதேசத்தையும், எகிப்து நாடு லிபியா நாடு ஆகியவற்றையும் உள்ளடக்கிய ஒரு பூகோளப் பிரதேச அமைப்பு என்றுங்கூட இதை அழைக்கலாம்.

கி.மு. 4000 ஆண்டு காலத்திலிருந்து தொடங்குவதான வரலாற்றுச் சிறப்பு மிக்கது இப் பிரதேசம். அன்றிலிருந்து இன்று வரையிலான 6000 ஆண்டு நீண்ட கால கட்டத்திற்குள், எத்தனை எத்தனை அரசுகள், எத்தனை எத்தனை பெரும் பேரரசுகள்

[1] காண்க, பேராசிரியர் ஹிட்டி, 'அராபிய வரலாறு', பக்கம் 398.

இங்குத் தோன்றின, மறைந்தன! அவையெல்லாம் அவ்வக் காலங்களில் வித்தூன்றி வளர்ந்து உருவாக்கிவிட்ட கலைகளும், சிற்பசாசனங்களும், நாகரிக முன்னேற்றங்களும் ஒன்ரு, இரண்டா! கி.பி. 7ஆம் நூற்ருண்டில் உதயமான இஸ்லாமிய மதத்தைத் தழுவிய அராபியர்கள், இம் மத்திய கிழக்குப் பிர தேசத்தில் எத்தனை எத்தனை நாடுகளைப் பிடித்து ஆண்டு ஆட்சி செலுத்தியிருக்கிருர்கள்! ஆனல், அவ்வாட்சிகளெல்லாம் நிரந் தரமாக நிலைக்காமல் முற்றுப்பெற்றதற் கெல்லாம் எத்தனை எத்தனையோ அயல்நாட்டுப் படையெடுப்புகள்தாம் பெரும் பாலும் காரணமென்றும் நாம் பார்த்திருக்கிரேம்.

சல்ஜூக் துருக்கியர்கள், சிலுவைப் போராட்டப் படை யெடுப்பாளர்கள், மத்திய ஆசிய மங்கோலியச் சூருவளிப் படை யெடுப்பாளர்க ளெல்லாம் இம் மத்திய கிழக்குப் பிரதேச நாடு களைப் பிடித்தாள நிகழ்த்திய அல்லோல கல்லோலமிக்க போராட்டங்கள், போர்கள் எத்தனை, எத்தனை!

**உதுமானிய துருக்கியர் எழுச்சியும், மத்திய கிழக்குப் பிரதேசத்தின்மீது விளைத்த மாட்சியும்**

கி.பி. 14ஆவது நூற்ருண்டின் தொடக்க கால கட்டத்தில் உருவாகிய உதுமானியப் பேரரசு ஒரு நூற்ருண்டுக்குள் ஐரோப்பா, ஆசியா ஆகிய இரு கண்டங்களிலும் பரவி, முக்கிய செல்வாக்கைப் பெற்றுக்கொண்டது. கிறித்தவ உலகப் பெரு மேடை அரியணையெனத் திகழ்ந்த கான்ஸ்டான்ட்டிநோப்பிளைக் கைப்பற்றிய பெருமை உதுமானிய துருக்கியின் பெருஞ் சாதனையாகுமன்ரே! அத் தலைநகரைப் பிடித்த அதே வேகத் தில் உதுமானிய தர்பார் கிழக்குப் பிரதேசங்கள் நோக்கித் தனது கண்ணேட்டத்தைச் செலுத்திற்று. கி.பி. 1258-ல் மங்கோலிய வீரன் ஹிலாகூகான் நிகழ்த்திய படையெடுப்பால் சீரழிந்து காலியாகிவிட்ட அராபிய ஆட்சிப் பீடத்தைப் பிடிப்பதென்று துருக்கியர்கள் தீர்மானித்தனர். அப்பாஸிய பேரரசின் வீழ்ச்சிக் குப் பிறகு, எகிப்து, சிரியா, இராக், அரேபியா போன்ற பல சுதந்தர நாடுகளும், அவ்வவற்றுக்குள்ளும் பல சிற்றரசுகளும் முளைத்தன.

உதுமானிய சுல்தான்களில் ஒருவரான முதலாம் சலீம் (Salim I) அரியணை ஏறிய எட்டாண்டுக்குள் பல அராபிய இராச் சியங்களை வென்று, உதுமானியப் பேரரசின் பரப்பை இரு மடங் காக ஆக்கினர். எகிப்து, சிரியா, மக்கா, மதீனு, அல்ஜீரியா போன்ற இடங்களிலெல்லாம் உதுமானிய வெற்றி வீரக் கொடி

பட்டொளி வீசிப் பறக்கலாயிற்று. முதலாம் சலீமின் மகனான மாவீரன் மாண்புமிகு சுலைமானின் காலத்தில் தூனிசியா, ஏமன், ஏடன், மஸ்கத், திரிப்போலி போன்ற பிரதேசங்கள் அப் பேரரசின் அங்கங்களாயின.

இப் புதிய அங்கங்களிலெல்லாம் மாநில சர்க்கார்கள் நிலை பெறலாயின. பெயரளவில் அவை கப்பங் கட்டினாலும், சுதந்தர மாகவே கோலோச்சின. உதுமானிய மத்திய அரசு நியாயமாய் நடந்து கொண்டு திறமையுடன் செயலாற்றியவரை எல்லாம் நன்றாகவே நடந்த வண்ணமிருந்தன. ஆனால், காலம் செல்லச் செல்ல, மத்திய அரசின் வலிமையும் நேர்மையும் குறையக் குறைய, அது 18ஆம் நூற்றாண்டிலிருந்து பலம் குன்றத் தொடங்கிற்று. மற்றும், ருஷியா, ஆஸ்திரியா, பிரிட்டன், ஃபிரான்ஸ் ஆகிய நாடுகள் மிகவாக முன்னேறித் தங்கள் தங் கள் அரசுகளைப் பெரிதாக்கிக் கொண்டமையாலும், உதுமானி யப் பேரரசு தனது மகிமையில் மங்கத் தொடங்கியது.

இதுவுமன்றி, குழம்பிய குட்டையில் மீன் பிடித்தாற்போன்று உதுமானியப் பேரரசைச் சேர்ந்த மாநில ஆளுநர்களும்கூடத் தங்களுக்கு இன்னம் கூடுதலான சுதந்தரமும், அதிகமான அதி காரங்களும் வழங்கப்பட வேண்டும் என்று கோரிக் கலகங் களும் விளைக்க முற்பட்டனர். மற்றும், வெந்த புண்ணில் வேல் பாய்ந்த கதையாக, மத்திய கிழக்கு நாடுகளில் துருக்கியரின் ஆட்சிமீது மக்களுக்குக் கடும் வெறுப்பும் வளர்ந்து விட்டமை யால், உதுமானியப் பேரரசின் பிரகாசம் மேலும் மேலும் மங்கத் தொடங்கிற்று.

இதற்கான காரணத்தைக் கீழ்க்காணும் தலைப்புகளின்கீழ் ஆராய்ச்சி செய்வோம்:

(1) எகிப்தில் உதுமானியர் ஆட்சி ஆட்டம் காணுதல்.

(2) சிரியாவில் உதுமானியர் ஆட்சி நலிவுறுதல்.

(3) இராக்கில் உதுமானியர் ஆட்சியின் மறைவு.

(4) அரேபியாவில் உதுமானியர் ஆட்சியின் அழிவு.

(5) அல்ஜீரியா, தூனிஸ், திரிப்போலியில் உதுமானிய ஆட்சியின் சிதைவு.

(1) எகிப்தில் உதுமானியர் ஆட்சி ஆட்டம் காணுதல்

எகிப்து நீண்டகால வரலாறு படைத்ததோர் பண்டை நாடு ஆகும். இதைப் போன்ற புராதனப் பெருமை படைத்த நாடுகள் உலக வரலாற்றில் வெகு சிலவே உண்டு. இப் பண்டைய நாட்டைக் கி.பி. 640-ல் முஸ்லிம்கள் கைப்பற்றி ஆளத் தொடங்கினர். உமையாக்களும் அப்பாஸியர்களும் பல நூற்றுண்டுகள் வரை அதை ஆண்டனர். பின், மம்லூக் சுல்தான்கள் ஆண்டனர். கி.பி. 1517-ல் உதுமானிய துருக்கியர்கள் எகிப்தைக் கைப்பற்றி, 280 ஆண்டுகள் வரை அதன்மீது கோலோச்சினர். இத் துருக்கியரின் ஆட்சிக் காலத்தில்தான் ஃபிரெஞ்சு மாவீரர் நெப்போலியன் போனப்பார்ட் எகிப்தில் தமது காலடியை எடுத்து வைத்தார். இஃது ஐரோப்பியரிடையே பேரெழுச்சியையும், பேருணர்ச்சியையும் உண்டு பண்ணி விட்டது.

கி.பி. 1805-ல் முஹம்மது அலீ என்பவரை எகிப்தின் ஆளுநராக உதுமானிய சுல்தான் நியமித்தார். அந்த சுல்தானின் நலிவுற்ற நிலையைக் கண்ட முஹம்மது அலீ எகிப்தில் தன்னாட்சியை நிலைநிறுத்தித் தம் வழித்தோன்றல்கள் அங்குப் பல்லாண்டு காலம் அரசோச்ச வழிவகுத்தார்.

இப் பரம்பரை, 1952 வரையில் தொடர்ந்து எகிப்தை ஆண்டு வந்தது. முஹம்மது அலீ புரிந்த மாபெரும் தொண்டினையும், சீர்திருத்தங்களையும், சேவைகளையும் பாராட்டி அவரை 'எகிப்தின் தந்தை' என்றே மக்கள் அழைப்பார்கள். முஹம்மது அலீயைப் போன்ற அறிவும் ஆற்றலும் உள்ள மற்றொரு முஸ்லிம் அரசரைப் பத்தொன்பதாம் நூற்றுண்டில் காண்பதரிது.

ஆண்டுகள் உருண்டோட ஓட, எகிப்திய ஆளுநர் முஹம்மது அலீக்கு மக்களிடையே வளர்ந்த செல்வாக்கும், அவர் காட்டிய திறனின் தீவிரமும் உயர்ந்தோங்கி வளர்ந்த வண்ணமிருந்தனவே தவிர, சிறிதும் தாழவுமில்லை; தளரவுமில்லை. அவருடைய படைகள் அரேபியாவுக்குள்ளும், கிழக்குச் சூடானுக்குள்ளும், சிரியாவுக்குள்ளும் அணிவகுப்புகளை நிகழ்த்திய வண்ணமே இருந்தன. மேலும், முஹம்மது அலீயின் மைந்தரான இப்ராஹீம் என்பவரின் படை சிரியாவைப் பத்தாண்டுகள் வரை ஆக்கிரமித்திருந்தது.

முஹம்மது அலீயின் தீவிரங் கண்டு ஐரோப்பிய நாடுகளும் கதிகலங்கி, தங்கள் தங்களுக்கும் கீழை நாடுகளின்மீதிருக்கும்

செல்வாக்கு எங்கே குலைந்துபோய் விடுமோ என்று அஞ்சி, முஹம்மது அலீயின் படைகளைச் சிரியாவிலிருந்து எகிப்துக்கு வாபஸ் பெற்றுக் கொள்ளுமாறு செய்தன. துருக்கி சுல்தான் அப்துல் மஜீத், முஹம்மது அலீ வகித்துவந்த எகிப்தின் அரசப் பிரதிநிதி (Viceroy)ப் பதவியை அவருடைய பிற் சந்ததியார்கள் தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து அனுபவித்துவரு மாறுன பதவியாக ஆக்கியதுடன், சூடான் (Sudan) நாட்டுக்கும் அவரை முடிசூடா மன்னராக்கி விட்டார். இவ்வாருக, எகிப்து முஹம்மது அலீயின் சந்ததியினரால் ஆளப்பட்டு வந்தது. முதல் உலகப் போருக்குப் பிறகு, எகிப்து சுதந்தர நாடுதான் என்று 1922-ல் பிரிட்டனும் ஏற்றுக் கொண்டது.

## (2) சிரியாவில் உதுமானியர் ஆட்சி நலிவுறுதல்

மத்தியதரைக் கடலிலிருந்து கரையேறி, பாபிலோனுக்கும் பாரசீகத்துக்கும் போய்ச்சேர்ந்த பண்டைக்கால ஏற்றுமதி இறக்குமதி வர்த்தகங்களின் வாணிபச் செல்வழிகளெல்லாம் (Routes) சிரியா நாட்டினூடேதான் ஊடுருவிச் சென்றன. இன்றைய சிரியா நாட்டை விட, பண்டைக்கால சிரியா நாடு மிகப் பெரிது. காரணம், இராக், ஜோர்தான், லெபனுன், இஸ்ரேல் போன்ற தற்கால நாடுகளின் பல நில வட்டாரங்களெல்லாம் அன்றைய சிரியா நாட்டின் அங்கங்களாய்க் காட்சியளித்தன.

கி.பி. 7ஆவது நூற்ருண்டில் அராபியர்கள் சிரியாவை வென்று, அதுவே தங்கள் பேரரசின் மத்திய பீடமோ, தலைநகரோ அல்லது வர்த்தக வாணிப உலகின் தலைநகரோ என்று மக்கள் வியப்புறும் வண்ணம் முக்கியத்துவமளித்து உயர்த்திவிட்டிருந்தனர். கி.பி. 16ஆவது நூற்ருண்டில் உதுமானிய துருக்கியர்கள் சிரியாவின்மீது படையெடுத்து அதை வென்று, 400 ஆண்டுகள் வரை துருக்கிப் பேரரசின் மாநிலமாக இணைத்து வைத்திருந்தனர்.

ஆனல், நாளாவட்டத்தில் உதுமானியப் பேரரசு கடைப்பிடிக்கத் தொடங்கிய கொடுங்கோன்மை அளவுமீறி அதிகரித்து விட்டமையாலும், துருக்கி மொழியையே பேரரசுக்குள் ஐக்கியப்பட்டிருந்த அனைத்து நாடுகளிலும் ஆட்சி மொழியாகத் திணித்து விட வேண்டும் என்று பேரரசின் அதிகாரிகள் சர்வாதிகார மனப்பான்மையைத் தீவிரமாகச் செயல்படுத்தத் துணிந்தமையாலும் சிரியா நாட்டினர் இயல்பாகவே துருக்கி அதிகார வர்க்

கத்தினர்மீது எரிச்சலுற்று, தங்கள் முழு எதிர்ப்பையும் காண்பிக்க முற்பட்டனர். அதே சமயத்தில் துருக்கியர் இனப் பாகுபாட்டு உணர்ச்சிக்கு இரையாகி, துருக்கியரல்லாதார்மீது வேற்றுமை கற்பிக்கத் தொடங்கவே, சிரியா நாட்டினர் துருக்கியர்மீது கடுஞ் சீற்றங்கொண்டு, சுதந்தர உணர்வு பெற்றுக் கிளர்ச்சி செய்ய ஆரம்பித்தார்கள். இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில், முதல் உலகப் பெரும் போர் (The Great War, 1914—18) நிகழ்ந்தபோது, அராபியர்கள் துருக்கியர்களை எதிர்த்துக் கிளப்பிய சுதந்தரப் போராட்டத்துக்குப் பிரிட்டிஷார் ஆதரவு நல்கினார்கள். கிரேட் பிரிட்டனின் அனுதாபம் அரபு நாடுகளின்மீது பதிந்து விட்டதென்பதை யுணர்ந்த சிரியாவாசிகள் வெளிப்படையாகவே துருக்கியரை எதிர்த்தார்கள்.

இவையெல்லாம்தாம் சிரியாவில் உதுமானிய ஆதிக்கத்துக்கு அழிவு தோன்றுவதற்கான முக்கிய காரணங்கள் ஆகும். முதலாவது உலகப் பெரும் போருக்குப் பிறகு, சிரியாவில் ஃபிரெஞ்சு ஆட்சி நிலைநாட்டப்பட்டது. பின்னர், 1946-ல் சிரியாவுக்குப் பூரண சுதந்தரமே கிடைத்துவிட்டது. இவ்வாருக, முதல் உலகப் போருக்கு முன்பே சிரியாவில் உதுமானியர்களின் ஆட்சி முடிவடைந்தது.

### (3) இராக்கில் உதுமானியர் ஆட்சியின் மறைவு

இன்றைய இராக்கின் பண்டைப் பெயர் 'மெசபொட்டேமியா' ஆகும். அது திஜ்லா என்னும் 'டைகிரீஸ்' நதிக்கும், ஃபுராத் என்னும் 'யூப்ரடீஸ்' நதிக்கும் இடையிலான ஒரு நிலப்பரப்பு. கி.பி. 7ஆவது நூற்றாண்டில் அராபியர்கள் இராக்கை வென்றனர். பலப்பல நூற்றாண்டுகள் நெடுகவும் இஸ்லாமிய கலை, கல்வி, இலக்கியம், வர்த்தகம் ஆகிய துறைகளின் அரியணைப் பீடமாக அது பிரகாசித்திருந்தது. கி.பி. 1534-ல் இராக்கில் ஊடுருவிய உதுமானிய ஆட்சி, எகிப்தில் அப்போது நிலவிய உதுமானிய ஆட்சிக்கு நிகராக இலங்கிற்றென்னலாம்.

இராக்கில் ஷீஆப் பிரிவு முஸ்லிம்களின் தொகை மிக அதிகம்; அவர்கள்தாம் பெரும்பான்மையினர் (Majority). இராக்கை ஆண்ட துருக்கியர்கள் ஸுன்னீ பிரிவினரான சிறுபான்மையோராக (Minority) விளங்கினர். இராக் நாட்டு ஆட்சி யதிகாரமும் செல்வாக்கும் யாரிடமிருப்பதென்பதில் துருக்கியர்களுக்கும் பாரசீகர்களுக்குமிடையே எப்பொழுதும் சண்டை சச்சரவுதான். கி.பி. 16ஆவது நூற்றாண்டிலிருந்து 18ஆவது நூற்றாண்டின் முதல் 25ஆண்டுகள் வரையில் துருக்கியும் பாரசீகமும் பரஸ்

பரம்போரிட்ட வண்ணமே இருந்தன. இராக்கை ஆண்டுகொண்டிருந்த உதுமானியர் தங்கள்மீது ஆட்சி செலுத்தத் தகுதியற்றவர்களென்றும், பாரசீகர்களே தங்களுடைய நண்பர்களென்றும் இராக்கின் பொது மக்களாகிய ஷீஆக்கள் கருதினர். இதற்கும் முக்கிய காரணம், ஷீஆ-ஸுன்னீ (Shia-Sunni) என்ற மதக் கொள்கைகளின் வேறுபாடுகளேயாகும்.

1914ஆம் ஆண்டில் ஆரம்பித்த முதல் உலகப் பெரும் போரின் பயனாக உதுமானியப் பேரரசு சுக்கு நூறாக நொறுங்கி விட்டபோது, இராக் நாட்டு ஆட்சியைப் பிரிட்டனிடம் சர்வ தேச சங்கம் (League of Nations) ஒப்படைத்தது. பின்பு, 1932இல் முதலாம் ஃபைசல் (Faysal I) என்பவரின் ஆட்சியின் கீழ் இராக் சுதந்தர மடைந்தது.

### (4) அரேபியாவில் உதுமானியர் ஆட்சியின் அழிவு

அரேபியாவில் 16ஆம் நூற்றாண்டில் தொடங்கிய உதுமானிய ஆட்சி, உள்நாட்டுச் சிற்றரசுகளுடனும் சிற்றரசர்களுடனும் இரண்டறக் கலந்துவிட்டிருந்தது. அச் சிற்றரசர்களுள் முக்கியமானவர்கள், மக்காவையும் மதீனாவையும் ஆண்டு வந்த ஷரீஃபுகளும் அமீர்களும் ஆவார்கள். இவர்கள் பொதுவாகத் துருக்கிப் பராமரிப்பின் கீழ்ப் பெரும்பாலும் சுதந்தரமாகவே நெடுங்காலம் வரை ஆட்சி புரிந்தனர். அரேபியாவின் நவீன கால வரலாறு 18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்துதான் ஆரம்பமாகிறது. இக் கால கட்டத்தில்தான், முஹம்மது இப்னு அப்துல் வஹ்ஹாப் என்னும் (Muhammad Ibn-Abdul Wahhab) சமய சீர்திருத்தவாதி, இஸ்லாமிய சமயத் துறைகளில் வன்மையான, கண்டிப்பான ஒழுக்க சீலங்களையும் கொள்கைகளையும் புகுத்திக் கடும் பிரசாரம் செய்தார். இதன் மூலம் பண்டைக்கால அப்பழுக்கில்லாத இஸ்லாம் மதத்தை ஒழுங்குறச் சீர்ப்படுத்த அவர் முயன்றார். இதற்காக, மத்திய அரேபியாவின் நஜ்த் என்னும் பிரதேசத்தில் சிற்றரசராயிருந்த முகம்மது இப்னு சுஊத் என்பவரோடு (Muhummad Ibn Saud[1]) சேர்ந்து அவர் தீவிரப் பிரசாரம் செய்தார்.

இதன் காரணமாக, இம் மத்திய அராபிய சிற்றரசரின் செல்வாக்கும் அதிகாரமும், மத்திய அரேபியாவிலும் கிழக்கு அரேபியாவிலும் புகழ் பெறுவனவாயின. இவ்விரு முக்கிய சீர்திருத்தவாதிகளின் படைகளும் கர்பலாவைச் சூறையாடி, மக்காவை

[1] அராபிய மொழியில் 'ஸுஊத்' என்று உச்சரிக்கப்படும்.

யும் மதீனாவையும் கைப்பற்றிக்கொண்டன. இதன் பின்பு, சிரியாவின்மீதும் இராக்கின்மீதும் படையெடுத்து, பல்மைரா (Palmyra)விலிருந்து உம்மான் (Uman) என்னும் பிரதேசம்வரை அவை தம் ஆர்ப்பாட்ட ஆட்சிக் கொடிகளைப் பட்டொளி வீசிப் பறக்க விட்டன.

சமய சீர்திருத்த வாதிகளின் இந்த அட்டகாசங்களைக் கண்டு மிரண்டு அதிர்ச்சியுற்றுவிட்ட உதுமானிய சுல்தானின் வேண்டுகோளுக்கிணங்க, எகிப்திய ஆளுநரான முஹம்மது அலீ அனுப்பிவைத்த சேனையால் சீர்திருத்தவாதிகள் ஒடுக்கப்பட்டதுடன், அவர்களுடைய தலைநகரமும் தரைமட்டமாக்கப்பட்டது. சிறிது காலம் மட்டுமே அடங்கிப்போய்க் கிடந்த அச் சீர்திருத்த இயக்கம் அப்துல் அஜீஸ் இப்னு சுஊத் (Abdul Azeez Ibn Saud) என்பவரால் புதுப்பிக்கப்பட்டதுடன், வஹ்ஹாபி[1] இராச்சியமும் புதுப்பிக்கப்பட்டு, வஹ்ஹாபி அரச வம்சமும் புத்துயிர் பெறலாயிற்று. இருபதாம் நூற்றாண்டின் முதல் கால் நூற்றாண்டில் இப்னு சுஊத் என்பவர் பல பிரதேசங்களை, அதாவது பாரசீக வளைகுடாவிலிருந்து செங்கடல் வரை வியாபித்திருந்த நிலப் பரப்பைப் பிடித்துத் தமது ஆட்சியின்கீழ்க் கொணர்ந்தார்.

மற்றும், 'அராபியர்களின் அரசன்' என்று தம்மைப் பிரகடனப்படுத்திக் கொண்ட ஹுசைன் என்பவரை ஹிஜாஸ் (Hijaz) மாநிலத்திலிருந்து 1924—25இல் அகற்றிவிட்டு, மக்கா, மதீனா உள்ளிட்ட அரேபியா தீபகற்பத்தின் மூன்றிலிரண்டு பாகங்களைத் தமது ஆட்சியின்கீழ்க் கொண்டு வந்தார், இன்னு சுஊத் 1932-ல். இப் புது அராபிய அரசை அவர் 'சுஊதி அரேபியா'[2] என்று தமது வமிசப் பெயரையே சூட்டி ஆள ஆரம்பித்தார்.

### (5) அல்ஜீரியா, தூனிஸ், திரிப்போலியில் உதுமானிய ஆட்சியின் சிதைவு

சிரியா நாட்டையும் எகிப்தையும் வென்றபின், வட ஆப்ரிக்காவின் பக்கல் தன் கவனத்தைச் செலுத்தியது உதுமானிய அரசு. ஆசியாவிலும் ஐரோப்பாவிலும் தங்களது ஆட்சியை நிலை

[1] முற்சொன்ன முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாப் என்பவர் சுத்தமான இஸ்லாமியக் கோட்பாடுகளை நான்கு இமாம்களும் (ஷாஃபீ, ஹனஃபீ, ஹன்பலீ, மலிக்கீ) மாசுபடுத்தி விட்டனர் என்றும், திருநபீ அக் காலத்தில் உபதேசித்தவாறும், திருக்குர்ஆன் போதிக்கிற வண்ணமும் மட்டுமே இஸ்லாமிய சமயம் பின்பற்றப்பட வேண்டுமென்றும் போதித்தார் அவரைப் பின்பற்றுவோர் 'வஹ்ஹாபிகள்' என்று அழைக்கப் பெறுவர்.

[2] 'சுஊதி அரேபியா' என்னும் பெயரே ஐரோப்பிய மொழிகளில் 'Saudi Arabia' என்று வழங்கி வருகிறது.

நாட்டியபின், வட ஆப்ரிக்காவிலுள்ள மற்றைய அரசுகளைத் தங்களின் ஆட்சியின்கீழ்க் கொணர உதுமானியர் விழைந்தனர். உதுமானிய வமிச சுல்தான்களான முதலாம் சலீம், மாண்புமிகு சுலைமான் இவர்களின் ஆட்சிக்காலத்தில், அல்ஜீரியா, தூனிஸ், திரிப்போலி, ஏமன், ஏடன், மஸ்கத் போன்ற அரசுகள் இப் பேரரசின் ஆட்சியின்கீழ் வந்தமர்ந்தன!

வட ஆப்ரிக்காவில் உதுமானியப் பேரரசின் ஆதிக்கத்திலிருந்து பழைய அராபிய அரசுகள்தாம் முதன் முதலில் விடுதலையாயின. தென் ஐரோப்பாவுக்கு அண்மையிலிருந்தமையாலும், மத்திய அரசின் ஆட்சி நிறுவனத்திலிருந்து வெகு தூரத்திலிருந்தமையாலும், இஸ்லாமிய பாரம்பரியத்துக்குரிய பலஹீனத்தாலும், விடுதலை வேட்கை மக்களை ஆட்கொண்டு விட்டமையாலுமே அவை விடுதலை பெற்றன. அராபியர்களுக்குச் சொந்தமான பழைய அல்ஜீரியாதான், உதுமானியப் பேரரசிலிருந்து விடுதலையான முதல் நாடு ஆகும்.

கி.பி. 1830-ல் ஃபிரெஞ்சுத் தூதரை அல்ஜீரியாவிலிருந்த ஆளுநர் அவமதித்ததால், ஃபிரெஞ்சுப் படைகள் பழிக்குப்பழி வாங்கும் நோக்குடன் அல்ஜீரியாவில் வந்திறங்கின. 1848-ல் அந்த ஃபிரெஞ்சுப் படைகள் அல்ஜீரியாவை ஆக்கிரமித்துக் கொண்டன. இதுதான் ஆப்ரிக்காவில் உதுமானியப் பேரரசு இழந்த முதன் முதலான நாடு ஆகும். கி.பி. 1881-ல் உதுமானியர்களுக்குச் சொந்தமான தூனிசியாவை ஃபிரான்ஸ் பிடித்துத் தனதாக்கிக்கொண்டது. 1911—12-ல் நிகழ்ந்த துருக்கி-இத்தாலிப் போரின் போது, உதுமானியர்களுக்குச் சொந்தமான திரிப்போலியை இத்தாலி கைப்பற்றிக் கொண்டது.

இப்படியாகத் திறமை, திடம், ஆர்வம், ஆற்றல், வளர்ச்சி ஆகிய பண்புகளுக்கெல்லாம் பிறப்பிடமாகவும் இருப்பிடமாகவும் ஒரு காலத்தில் காட்சியளித்த உதுமானியப் பேரரசு, 18ஆம் நூற்றுண்டின் காலம் மாறிப்போன கோலத்தாலும் கூற்றாலும் அப் பெரும் ஆற்றல்களை யெல்லாம் இழந்து மெலிந்து பரிதாப மிக்கதாகக் காட்சியளிக்கும் நிலைக்கு வந்து விட்டது.

துருக்கியர்களின் இந்த நலிவுற்ற நிலையைக் கண்ட மத்திய கிழக்கு நாடுகள் ஐரோப்பிய நாடுகளின் சதியாலோசனை

மிக்க உதவியுடன், எல்லோரும் சேர்ந்து கூட்டுக் கொள்ளை யடிப்பதே போல், உதுமானியப் பேரரசைச் சூறையாடி, கிடைத்தது லாபமென்று தன் தன் வெற்றிக் கொடிகளை நாட்டிப் பறக்க விட்டுக் கொண்டன. இவ்விதமாக, மத்திய கிழக்கில் ஒரு காலத்தில் பரந்து விரிந்து சிறப்பாய்த் தோற்ற மளித்த உதுமானியப் பேரரசு பூண்டற்று, புகழற்று, புல் முளைத்த காடோவென்று ஆகிவிட்டது.

# 7 முஸ்லிம் தேசிய அரசுகளின் எழுச்சி

## (1) தென்மேற்கு ஆசியாவில் ஃபிரெஞ்சு, ஆங்கிலேய வெற்றிகளும் ஆதிக்கமும்

கி.பி. 1789ஆம் ஆண்டில் நிகழ்வுற்ற ஃபிரெஞ்சுப் புரட்சி ஐரோப்பாக் கண்டத்து வரலாற்றின் போக்கையே அடியுடன் மாற்றிவிட்டதென்னலாம். சுதந்தரம், சமத்துவம், சகோதரத்துவம் என்னும் உயர்ந்த மனிதாபிமானமிக்க தத்துவங்களால் உருவான தேசியம் என்ற ஆவேசப் பிரகாசமும் குரலொலியும் உலகெலாம் பரவக் காரணமாயிற்று, அந்த ஃபிரெஞ்சுப் புரட்சி. ஜெர்மனி, இத்தாலி, பால்கன் ஆகிய நாடுகள் விழிப்படைந்தன.

இதன் விளைவாக, நெடுங்காலமாக உதுமானிய சுல்தானின் எதேச்சாதிகாரங்களுக்கு அடிமைப்பட்டுக் கிடந்த பால்கன் பிரதேசக் கிறித்தவ நாடுகள் 19ஆம் நூற்றாண்டில் தேசிய உணர்வுடனும், விடுதலையடைய வேண்டுமென்னும் துணிவுடனும் வீறிட்டெழத் தொடங்கின. ஐரோப்பிய வல்லரசுகளின் உதவியைக் கொண்டும், தூண்டுதலைக் கொண்டும் அனேக சிறு சிறு கிறித்தவ அரசுகள் சுல்தானை எதிர்த்துப் போராடிச் சுதந்தரமும் அடைந்தன.

### 19ஆம் நூற்றாண்டில் துருக்கியின் நிலைமை

19ஆம் நூற்றாண்டு கால கட்டத்தில் துருக்கியின் நிலைமை பரிதபிக்கத்தக்கதாய்க் காட்சியளித்தது. பண்டைய வீரம், தீரம், செல்வம், செல்வாக்கு, கம்பீரம், திறமை திடம் ஆகியவெல்லாம் மங்கி மழுங்கி ஊழல்கள் மலிந்தமையாலும், மற்றும் பற்பல பலவீனங்களாலும் துருக்கி சிறகிழந்த பறவைபோன்றாகி விட்டது. இவ்வளவு பலஹீனமுற்ற நிலையில் துருக்கிப் பேரரசு

இருந்தபோதும், அதன் ஆட்சியின் கீழ்ப் பல பரந்த விரிந்த நிலப் பாகங்கள் இருந்துதான் வந்தன. ஆனல், உண்மையில் இந் நில வட்டாரங்களில் துருக்கி சுல்தானின் நிலே அல்லது அந்தஸ்து நாடக மேடை 'ராஜா' போன்றே இருந்தது.

இப் பரிதாபக் காட்சிக்கிடையில் ஐரோப்பிய வல்லரசுகளான ருஷியா, ஆஸ்திரியா, இங்கிலாந்து, ஃபிரான்ஸ் ஆகிய நாடுகள் பிணம் தின்னும் கழுகுகளே போன்று, தங்கள் தங்கள் அரசியலதிகாரங்களேயும் ஆதிக்கங்களேயும், அயல் நாட்டுச் செல்வம் செல்வாக்குகளேயும், வெளிநாட்டுக் கொள்ளே லாப வாணிபங்களேயும் விருத்தி செய்துகொள்வதற்காக, 'ஐரோப்பாவின் தீராத நோயாளி' (The Sickman of Europe) எனும் துருக்கிப் பேரரசாகிய, மரணப்படுக்கையில் கிடந்த இக் கொழுத்த சவத்தைப் பங்கு போட்டுக் கொள்வதற்கான சமய சந்தர்ப்பங்களேயும், உரிய காலத்தையும் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தன. துருக்கி ஆட்சியை எவ்வகையாலேனும் ஐரோப்பாக் கண்டத்திலிருந்து துரத்தியடிக்க வேண்டு மென்பது ஐரோப்பிய வல்லரசுகளின் பேராவலா யிருந்தது. மேலும், பால்கன் தீபகற்பத்திலிருந்த சிறு சிறு கிறித்தவ நாடுகளின் பெயரைக் கொண்டு, அவர்களுடைய சாக்கில், ஐரோப்பிய வல்லரசு நாடுகள் தாம் தாமும் பயனடைய ஆவலுற்றுத் தக்க வாய்ப்பை எதிர்பார்த்துக்கொண்டிருந்தன. ஆதலால், துருக்கியில் எந்த ஓர் அற்பக் காரணம் தென்பட்டாலும், உருவானுலும், ஐரோப்பிய வல்லரசு நாடுகளான ருஷியா, ஃபிரான்ஸ், ஆஸ்திரியா, இங்கிலாந்து போன்றவை அதில் தலேயிட்டுத் தன் தன்னுடைய தன்னலத்துக்கு அதைப் பயன்படுத்திக் கொண்டன. துருக்கியை அடியுடன் அழித்துத் தீர்ப்பதென்பதே ருஷியாவின் நோக்கமாக இருந்தது.

## அல்ஜீரியா, தூனிசியாவில் ஃபிரெஞ்சு ஆதிக்கம்

துருக்கியின் பலவீனத்தைச் சாக்காகக்கொண்டு, கி.பி. 1830-ல் ஆப்ரிக்கா கண்டத்து அல்ஜீரியாவை ஃபிரான்சு ஆக்கிரமித்ததைத் தொடர்ந்து, 1848-ல் தன் பேரரசின் ஓர் அங்கமாகவும் அதை ஆக்கிக்கொண்டது. அடுத்து, கி.பி. 1881 ஆம் ஆண்டில், தூனிசியா என்னும் நாட்டையும் அது தனது ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டு வந்தது. இப்படியாக, வட ஆப்ரிக்காவிலிருந்த தனது பரந்து விரிந்த பிரதேசங்களே உதுமானியப் பேரரசு இழந்தது. உதுமானியர் ஆட்சி வட ஆப்ரிக்காவில் மறைந்து, ஃபிரெஞ்சு ஆதிக்கம் அங்கே ஓங்கலாயிற்று!

**ஆசியாவில் ஆங்கில ஆதிக்கம்**

இங்கிலாந்துக்குச் சொந்தமான சில நாடுகள் ஆசியாவிலிருந்தன; அந்தக் கிழக்கு நாடுகளுக்குப் போகும் வழியில் சுயெஸ் கால்வாய் (Suez Canal) அமைந்திருந்தது. அதனுல் அதைச் சுற்றியுள்ள வட்டாரங்களில் தனக்குச் செல்வாக்கு இருக்கவேண்டுமென இங்கிலாந்து விரும்பியது.

இங்கிலாந்துக் கெதிராகவோ, ருஷியா போட்டியிட்டது. ருஷியாவின் செல்வாக்கும் சுயெஸ் கால்வாயை நெருங்கிக் கொண்டிருந்தது. துருக்கிப் பேரரசின் பிரதேசங்களிலும் ருஷியாவின் செல்வாக்கு வளர்ந்து கொண்டிருப்பதைக் கண்டு இங்கிலாந்துக்குப் பீதி ஏற்பட்டது.

இந்தியா நோக்கிச் செல்லும் வழிக்குத் தலைவாயில் போல் இருந்த எகிப்தை ஆக்கிரமிக்க இங்கிலாந்து ஆவலுற்று விட்டது. கி.பி.1869-ல் சுயெஸ் கால்வாய் திறக்கப்பட்டதிலிருந்து எகிப்து நாட்டுக்குச் சர்வதேச முக்கியத்துவமும் செல்வாக்கும் தோன்றி விட்டன.

எகிப்தின் அரசனுன இஸ்மாயீலின் வகைதப்பிய முறைகளும் கொடுங்கோன்மையும், ஊதாரித்தனமான போக்கும் எகிப்தை ஓட்டாண்டியான நிலைக்குக் கொண்டுவந்து விட்டமையால், ஐரோப்பிய வல்லரசுகளின் தலையீட்டுக்குப் பெரும் வாய்ப்பு ஏற்பட்டுவிட்டது. 1879-ல் இங்கிலாந்தும் ஃபிரான்சும் இணைந்து, பரிதாபத்துக்குரிய எகிப்தின் ஆட்சியை மேற்பார்வையிட வேண்டிய அவலநிலை தோன்றிற்று. அஹ்மத் அரபி என்பவரின் தலைமையில் கலகக் கிளர்ச்சியொன்று தொடங்கியது. அதை 1882-ல் பிரிட்டிஷ் படை அடக்கி விட்டது. வெறும் பெயரளவில் அங்கே துருக்கியரின் ஆட்சியே நிலவிற்றென்று கருதப்பட்டதெனினும், பிரிட்டிஷ் படைதான் எகிப்தை ஆக்கிரமித்துக் கொண்டிருந்தது. முதல் உலகப் பெரும் போர் 1914-ல் ஆரம்பித்ததிலிருந்து பிரிட்டிஷ் இரட்சிப்பின் கீழ்த்தான் எகிப்து நாட்டின் ஆட்சி நடைபெறத் தொடங்கியது. இப்படியாக, அது பிரிட்டிஷாரின் ஆதிக்கத்தின் கீழ் வரலாயிற்று.

**உதுமானியப் பேரரசின் வீழ்ச்சி**

அராபி மொழி பேசப்படுகிற பிரதேசங்களை உதுமானியத் துருக்கியர் தங்கள் ஆட்சியின்கீழ்க் கொணர்ந்தன ரென்பதை

நாம் ஏற்கெனவே படித்திருக்கிறோம். துருக்கியின் பலவீனத்தின் காரணமாகச் சில ஐரோப்பிய நாடுகள் உதுமானியப் பேரரசின் பிரதேசங்கள் சிலவற்றைத் தங்கள் செல்வாக்கின் கீழ்க் கொணர்ந்தனவென்றும் நாம் படித்திருக்கிறோம்.

கடைசியாக, வெற்றெலும்புக்கூடாகிய துருக்கியை அடியுடன் வீழ்த்திவிட்டு, தங்கள் தங்கள் ஆட்சியை ஆங்காங்கே நிலைநாட்டிக் கொள்ளவும் அவ்வைரோப்பிய வல்லரசுகள் தீர்மானித்துக் கொண்டன. ஆங்கிலேயரும் ஃபிரெஞ்சுக் காரரும் துருக்கியர்களைத் தங்கள் பகைவர்களென்று கருதவும் தொடங்கினர்.

## ஐரோப்பிய நாடுகளின் இராஜதந்திர வெற்றி

சில வெற்றிகரமான இராஜதந்திர முறைகளையும் துரோகமிக்க வழிகளையும் கடைப்பிடித்து, 19ஆம் நூற்றுண்டில் பல சிறிய கிறித்தவ நாடுகளை உதுமானியப் பேரரசிலிருந்து மீட்டன, சில கிறித்தவ வல்லரசுகள்.

இவ்வாருகத் தென்கிழக்கு ஐரோப்பிய பிரதேசங்களை மீட்டதன் பின், ஆசியாவின் தென்மேற்குப் பிரதேசங்களையும் மீட்பதற்கு அவ்வைரோப்பிய வல்லரசுகள் முயற்சி செய்தன. அரசியல், வாணிபம் ஆகிய துறைகளில் தத்தம் செல்வாக்கையும் ஆதிக்கத்தையும் பெருக்கிக் கொள்வதே இம் முயற்சிகளின் அடிப்படை நோக்கமாகும்.

இதற்காக, சூழ்ச்சி மிக்க, வஞ்சகமிக்க, தந்திரமிக்க ஐரோப்பிய வல்லரசுகள் அராபியர்களைப் பிணைத்து, அவர்களை உதுமானியர் ஆட்சிக்கெதிராகத் தூண்டிவிட்டன; ஏவி விட்டன. முதல் உலகப் பெரும் போரின் ஆரம்ப கால கட்டத்தில்கூட அராபியர்கள் உதுமானியப் பேரரசின் குடிமக்களாகத் தாம் விளங்கினர்.

## முதல் உலகப் பெரும் போரும் முந்நாட்டுக் கூட்டும்

முதல் உலகப் போரின்போது துருக்கி ஜெர்மனியுடன் சேர்ந்து கொண்டது. இங்கிலாந்தும் ஃபிரான்சும் துருக்கி மீது போர் தொடுத்தன. இதற்கு அனுகூலமாக, அவையிரண்டும் அராபியர்களைத் துருக்கிக்கு எதிராக ஏவி விட்டன. பிரிட்டிஷாரின் வாக்குறுதியை நம்பி, அரபு நாட்டின் ஷரீஃப் ஹுசைன் துருக்கியர்களை எதிர்த்துப் புரட்சி செய்தார். அராபியர்களின் உதவியைக் கொண்டு ஐரோப்பிய படைகள்

துருக்கிப் படைகளைத் தோற்கடித்து, பாலஸ்தீனம், சிரியா, ஹிஜாஸ் (Hijaz), மெசபொட்டேமியா (Mesopotamia) போன்ற பல முக்கிய மத்திய கிழக்கு நாடுகளைப் பிடித்துக் கொண்டன. இதன் காரணமாக, உதுமானியப் பேரரசு மரணப் படுக்கை மீது கிடப்பது போன்று காட்சியளித்தது. 1918-ல் துருக்கி சரணுகதியடைந்தது. துருக்கிப் பேரரசு சிறு சிறு கூறு களாக ஆக்கப்பட்டு, பல ஐரோப்பிய வல்லரசுகள் அவற்றைத் தங்களுக்கிடையே பங்கு போட்டுக்கொண்டன. முடிவில், 1923ஆம் ஆண்டு அக்டோபர் 29ஆம் தேதி, உதுமானியப் பேரரசு என்னும் விண்மீன் நிரந்தரமாக அஸ்தமித்தே போயிற்று!

**சர்வதேச சங்கப் பாதுகாப்பில் மத்திய கிழக்குப் பிரதேசம்**

செவ்ரே (Sevres) உடன்படிக்கையில் சம்பந்தப்பட்ட நாடுகள் கைச்சாத்திடும் முன்னரே, உதுமானியப் பேரரசை எவ்வெவ்வாறு தமக்குள் பங்கிட்டுக் கொள்வதென்னும் பிரச்சினை அவற்றினிடையே ஆரம்பமாகி விட்டது. வெற்றி யடைந்த நேசக்கட்சி நாடுகள் 1918-ல் இஸ்தம்பூலைப் பிடித்து ஆக்கிரமித்ததிலிருந்து,1923-ல் மறுபடியும் துருக்கிப் படையால் அது மீட்கப்படும் வரையில், அரசியல் அடிப்படையில் உதுமா னியப் பேரரசை எவ்வெவ்வாறு பங்கு போட்டுக் கொள்வது என்ற பெரும் பிரச்சினை 1920-ல் ஐரோப்பிய அரசுகளால் ஒருவாறு தீர்மானிக்கப்பட்டது. ஐரோப்பா, ஆசியா கண்டங் களில் பரவியிருந்த உதுமானியப் பேரரசை எவ்வாறு பங்கு போட்டுக் கொள்வதென்ற உத்தேசத் திட்டம் ஐரோப்பிய அரசு களால் தயார் செய்யப்பட்டது. இந்தப் பங்குகளில் இங்கிலாந் தும் ஃபிரான்சும்தாம் பெரும்பாலானவற்றைப் பெற்றுக் கொண்டன. குறிப்பாக, இங்கிலாந்துக்குத்தான் பெரும் பங்கு கிடைத்தது—'சிங்கத்தின் பங்கு'(Lion's Share) என்பார்களே, அப்படி!

தாராள மனப்போக்குள்ள சமத்துவ சிந்தனையாளரான உட்ரோ வில்சன் என்னும் அமெரிக்க ஜனுதிபதியின் பெரு முயற்சியால் சர்வதேச சங்கம் (League of Nations) என்னும் நிறுவனம் உருவாக்கப்பட்டது. அச் சங்கத்தால் முடிவு செய்யப் பட்டதற்கிணங்க, இராக் (Iraq), சிரியா (Syria), லெபனுன் (Lebanon), ஜோர்தான் அக்கரைப் பிரதேசம் (Trans-Jordan), எகிப்து (Egypt) முதலிய பகுதிகள் இங்கிலாந்து, ஃபிரான்சு ஆகிய இரு வல்லரசுகளின் பாதுகாப்பின்கீழ்க் கொண்டுவரப் பட்டன.

சர்வதேச சங்கத்தின் உரிமைக் கட்டளைத் திட்டத்தின்படி, பாலஸ்தீனம், ஜோர்தான் அக்கரைப் பிரதேசம், இராக் ஆகிய நாடுகள் இங்கிலாந்துக்கும், சிரியா நாடும் லெபனன் நாடும் ஃபிரான்சுக்கும் கொடுக்கப்பட்டன. துருக்கியின் கொடுங்கோலாட்சியிலிருந்து அராபியர்கள் சுதந்தரம் பெற்று, ஆங்கில அரசுக்கும் ஃபிரெஞ்சு அரசுக்கும் அடிமையாயினர்! இவ்வாருக, இங்கிலாந்தும் ஃபிரான்சும், இராஜதந்திரமும் நம்பிக்கைத் துரோகமும் கலந்த கபடத்தனமான கொள்கையைப் பின்பற்றி; அராபிய நிலங்களைத் தங்கள் ஆதிக்கத்தின் கீழ்க் கொணர்ந்தன.

சர்வதேச சங்கத்தின் புதிய திட்டத்தின்படி துருக்கிய ஆட்சியிலிருந்து அராபியர்கள் சுதந்தரமடைந்தாலும், இவ்விரு ஐரோப்பிய நாடுகளின் தூண்டுதலுக்கு இரையாகி, உதுமானிய ஆட்சியை எதிர்த்துப் போராடியது பெருந்தவறுதான் என்பதை அராபியர்கள் விரைவில் உணர்ந்து கொண்டார்கள். ஓர் ஐக்கிய அராபிய இராச்சியத்தை உருவாக்கித் தருவதாக இங்கிலாந்தும் ஃபிரான்சும் அளித்திருந்த வாக்குறுதியை நிறைவேற்றும் எண்ணமே அந் நாடுகளுக்குக் கிடையாதென்பதையும் அராபியர்கள் சீக்கிரமே உணர்ந்து கொண்டனர்.

கடைசியில், தங்களுக்குக் கிடைத்தது சுதந்தரமன்று, ஆனல் பிரிட்டிஷாருக்கும் ஃபிரெஞ்சுக்காரருக்கும் அடிமைப்பட்டதுதான் மிச்சம் என்பதையும் அவர்கள் கண்டு கொண்டனர். இதன் பலனுக, முதல் உலகப் போர் முற்றுப்பெற்ற அதே சூட்டில், தங்கள் முழுச் சுதந்தரத்துக்காக பிரிட்டிஷ், ஃபிரெஞ்சு வல்லரசுகளை எதிர்த்துப் போராடுவதைத் தவிர வேறு வழியில்லை என்ற உண்மையையும் அராபிய நாடுகள் உணரலாயின. உதுமானியரிடம் அடிமைப்பட்டிருந்த விலங்கினின்று விடுபட்டு, பிரிட்டிஷ்-ஃபிரெஞ்சுக்காரர்களின் புது விலங்கில் மாட்டிக்கொண்ட அராபியர் பரிதாபத்திற்குரியவரே! ஏனென்ருல், கொதிக்கிற சட்டியை விட்டுத் துள்ளி, எரிகிற தீயில் விழுந்த கதையா யிலங்கிற்று அவர்களின் கதி!

## துருக்கிய தேசியமும் முஸ்தஃபா கமாலின் சாதனைகளும்

ஃபிரெஞ்சுப் புரட்சியால் ஐரோப்பாக் கண்டமும் ஐரோப்பிய வரலாறும் பாதிக்கப்பட்டன வென்று இதற்கு முன்னரே நாம் படித்திருக்கிருேம். ஃபிரெஞ்சுப் புரட்சியின் தத்துவங்களால் ஆவேசங்கொண்ட பால்கன் தீபகற்பக் கிறித்தவ

நாடுகள் பல, ஐரோப்பிய வல்லரசுகளால் தூண்டப்பட்டும் ஊக்குவிக்கப்பட்டும் உதுமானியர்களை எதிர்த்துப் போராடி விடுதலை யடைந்தன வென்பதையும் கண்டோம். துருக்கியும் கூட ஃபிரெஞ்சுப் புரட்சியாலும் அதனுடைய மனிதாபிமான தத்துவ விளக்கங்களாலும் கண்திறந்து பார்க்கவும், எங்கும் தேசிய வேகம் வளர்ச்சியடையவும் வாய்ப்புப் பெற்றன.

### இளந்துருக்கியர் இயக்கமும் தேசிய பிரசாரமும்

தங்கள் தாய்நாட்டின் பலவீனத்தையும் அதன் பரிதபிக்கத் தக்க நிலைமையையும் கண்டு கலக்கமும் துன்பமும் துயரமு மடைந்த துருக்கிய அறிஞர்கள் பலர், பல சீர்திருத்தங்களின் மூலம் நாட்டை நாகரிக மிக்கதாக மாற்றியமைக்கவும், அறிவும் தேசிய உணர்வும் பலமடையவும் தீவிர பிரசாரம் செய்ய முயன் றனர். இத்தகு இலட்சிய நோக்கங்களின் புனருத்தாரணத்துக் காக ஒரு புது இயக்கமே உருவெடுத்தது, 'இளந்துருக்கியர் இயக்கம்' என்னும் பெயரால். 19ஆம் நூற்றுண்டின் ஆரம்ப கால கட்டத்தில் துருக்கி நாட்டின் நிலைமை மிகவும் அவல கதியை எட்டிவிட்டிருந்தது. 'ஐரோப்பாக் கண்டத்து நோயாளி மனிதன்' என்றழைக்கப்பட்டது துருக்கி. ஏனெனில், அது தன் தவிர்க்க முடியாத மரணமென்னும் படுபாதாள வீழ்ச்சி நோக்கித் தள்ளாடித் தத்தளித்துப் பெருநடை போட்டுக் கொண்டிருந்தது.

இப் பரிதாபத்துக்குரிய கால கட்டத்தில்தான், ஃபிரெஞ்சுப் புரட்சியால் மெய்சிலிர்த்துவிட்ட பல துருக்கிய அறிஞர்கள், 'இளந் துருக்கியர்' (Young Turks) என்ற ஒரு பெரும் பிரசாரப் படைக் கட்சியையே துவக்கிவிட்டனர். எப் பாடு பட்டாவது, எதற்கும் அஞ்சாது, எதையும் எதிர்த்துப் போராடி நாட்டைச் சீர்திருத்தி விடுவதென்னும் உயர்ந்த தேசிய லட்சியம் ஒன்றே அவர்களது குறிக்கோளாக இலங்கிற்று.

துருக்கி நாட்டில் அன்னியரால் விளைக்கப்பட்ட அட்டூழியங் கள், துருக்கி சுல்தானின் கொடுங்கோன்மை, ஊதாரித்தனத் தால் நாட்டுக்கு விளைந்த பொருளாதாரச் சீர்கேடுகளினுல் துருக்கிப் பேரரசு சுருங்கிக்கொண்டே வந்து கொண்டிருக்கும் நிலைமை, இன்னோரன்ன துயருறத்தக்க காரணங்களால், வேறேதும் வழியின்றி, வித்தூன்றினுல் செடி முளைப்பது போல், துருக்கிய இளைஞர் இயக்கம் (Young Turk Movement) வித்தூன்றி முளைத்து, இளந் துருக்கியர் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக உருவெடுத்துவிட்டார்கள். இத்துணை வருந்தத்

தக்க பயங்கர மாறுதலுக்கிடையிலும் துருக்கி சுல்தான் யாதொரு கவலையோ துன்பமோ அடைந்ததாகத் தெரியவேயில்லை.

தங்கள் பரிதாபத்துக்குரிய நாட்டையும், ஏழை மக்களையும், தங்கள் பாரம்பரிய கலாசாரங்களையும், நாகரிகங்களையும் காப்பாற்றிச் சீர்திருத்திப் புத்துயிரூட்டிக்கொள்ளும் லட்சியத்தைக் குறிக்கோளாய்க் கொண்ட இளந் துருக்கியர் இயக்கத்தைத் துருக்கிய சீர்திருத்த அறிஞர் சமுதாயத்தினர் மக்களின் இயக்கமாக ஆரம்பித்து வைத்தனர்.

மற்றும், இப் புதுச் சீர்திருத்த இயக்கம் ஆரம்பமாவதற்கு முன்னரே துருக்கிப் பேரரசிலிருந்த அயல்நாடுகளெல்லாம் சிறுசிறு கூறுகளாகப் பிரிந்து விடவே, பரந்திருந்த அந்தப் பேரரசு பனிக்கட்டிபோல் சிறுகச் சிறுகக் கரைந்து, இருந்த இடம் தெரியாமல் சிதறுண்டு போயிற்று. இந்த அவலமிக்க நிலையிலான துருக்கிப் பேரரசுப் பெருவெள்ள உடைப்புகளும், துருக்கிப் பொது மக்களின் பலவித கோபாவேசங்களும் அவ்வப்போது 'இளந் துருக்கியர் இயக்கத்தை' எரிகிற தீயில் எண்ணெய் விட்டாற்போல் மேலும் கொழுந்து விட்டெரியச் செய்துகொண்டே யிருந்தன. ஆனால், முற்றிலும் ஒடுங்கிச் சுருண்டு கிடந்த துருக்கி சுல்தானோ, இளந் துருக்கியர் இயக்கத்தை எப்படியும் நசுக்கியே விடுவதென்று தீர்மானித்தார்.

இத்தகைய உதவாக்கறையான சுல்தானை, நாடகமேடைக் கொலுப் பொம்மையை எடுத்தெறிய, 1876ஆம் வருடகால கட்டத்துக்குள் பலவிதப்பட்ட மக்கள் கிளர்ச்சிகளும் கலகங்களும் நிகழ்த்திய பிறகுதான், மித்ஹத் பாஷா (Midhat Pasha) என்ற சிறந்த அரசியல் சீர்திருத்தவாதியின் தலைமையில் இளந் துருக்கியர் கட்சி மலரத் தொடங்கியது.

கிறித்தவ ஐரோப்பிய நாடுகளின் அறிவையும் ஆற்றலையும் முன்னேற்றங்களையும் சுட்டிச் சுட்டிக் காட்டி, தங்கள் தாய் நாட்டையும் அவ்வாறே முன்னேற்றிவிடப் பலப் பல சீர்திருத்தச் சட்டங்களை நிறைவேற்றிச் செயல்படுத்துமாறு சுல்தானை வற்புறுத்தவும் கட்டாயப்படுத்தவும் நிரம்பவும் கிளர்ச்சி செய்துகொண்டே இருந்தது இளந் துருக்கியர் இயக்கம். இதனால்:

(1) மக்களுக்குப் புது உரிமைகள் வழங்கப்பட்டன.

(2) எல்லா உரிமைகளையும் உள்ளடக்கிய அரசியல் சட்டம் நிறைவேற்றப்பட்டது.

(3) இரண்டு சபைகளடங்கிய சட்ட மன்றம் நிறுவப் பட்டது.

இவ்வாருக, ஆரம்பக் கட்டத்திலேயே இளந் துருக்கியர் இயக்கம் வெற்றிக்கொடியை உயர்த்திப் பிடித்துவிட்டது. ஆனல், துருக்கி சுல்தான் இம் மக்களியக்கத்தை எப்படியும் நசுக்க முயன்ருர்; அதில் சற்றே வெற்றியும் பெற்ருர். ஆனலும், எத்தனை காலத்துக்கு, எவ்வளவு தூரத்துக்கு, எத்துணை அளவுக்குத்தான் மக்களின் ஆவேசமிக்க எதிர்ப்புப் பெருவெள்ளத்தை அணைபோட்டுத் தடுத்து நிறுத்த முடியும்? வெடிக்கும் பீரங்கிக் குழாயின் வாயில் கைவைத்து மூடி, சீறிப்பாயும் வெடிக் குண்டைத் தடுக்கவா முடியும்?

1908-ல் அன்வர் பே (Anwar Bey) என்ற இராணுவத் தலைவர் ஒருவர் துருக்கியில் முன்னின்று நடத்திய மக்களின் பெருங் கலகக் கிளர்ச்சியைக் கண்டு கதிகலங்கிய சுல்தான், புதிய அரசியல் சட்டத்தை ஏற்றுக்கொள்ளும்படியான கட்டத்துக்கு உள்ளாயினர். ஆனல், அடுத்து 1909-ல் மறுபடியும் அந்த அரசியல் சட்டத்தைத் தூக்கி யெறிந்துவிட்டுத் தமது பழைய எதேச்சாதிகாரத்தைப் புதுப்பிக்க சுல்தான் முனைந்தபோது அவருடைய முயற்சி தோல்வி அடைந்ததுமட்டுமின்றி, புரட்சிக் காரர்களின் படை தலைநகரையே ஆக்கிரமித்துக் கொண்டு விட்டது. மேலும், அப் புரட்சிக்காரர்கள் சுல்தானை அரியணை மீதிருந்து இறக்கி, அவருடைய சகோதரரான ஐந்தாம் முகம்மது என்பவரை சுல்தானக நியமித்து, இராணுவமே ஆட்சியை நடத்திற்று.

இவ்விதமாக, மன்னராட்சி கவிழ்ந்து தேசிய உணர்வு மிக்க மக்களாட்சி முதன் முதலாகத் துருக்கியில் வென்றது. முதல் உலகப் போர் தொடங்கியபோது துருக்கி ஜெர்மனியுடன் சேர்ந்து கொண்டது; ஆனல், அந்தப் பெரும் போரில் அது தோல்வியடைந்தது. புது சுல்தானும் தோல்வி உடன்படிக் கையை ஏற்க வேண்டியவராயினர். இப்படிப்பட்ட துரதிருஷ்ட கால கட்டத்தில்தான் முஸ்தஃபா கமால் துருக்கியின் இரட்சகராக வந்துதித்தார்.

### முஸ்தஃபா கமால் பிறப்பும் வளர்ப்பும்

சலோனிக்கா என்ற துறைமுகத்தின் அலுவலகத்தில் அலீ ரஜா (Ali Reza) என்பவர் ஒரு சாதாரண எழுத்தர். இலட்சியமோ, கொள்கையோ இன்னதென்றே அறியாத ஓர்

அப்பாவியாவார் அவர். ஆனால், அவருடைய மனைவியான சுபைதா என்னும் பேரழகியோ, அவருக்கு நேரெதிரான அச காய சூர ஆற்றலே உருவான ஓர் அறிவாளி! இத்தகைய நேர் முரணான பண்புகளையுடைய தம்பதிகளுக்கிடையே தோன்றிய பிள்ளைதான், எதிர்கால துருக்கியின் அறிவு மண்டலச் சுடராகிய முஸ்தஃபா கமால் பாஷா என்ற மக்கள் தலைவராவார். இவர் கி.பி. 1881-ல் பிறந்தார். இவர் ஒன்பது வயது சிறுவராயிருந்த போதே தந்தை மறைந்தார்.

தந்தையை இழந்த சிறுவன் கமால் பள்ளியில் சேர்ந்து அரைகுறையாய்ப் படித்துக்கொண்டிருக்கும்போதே, படிப்பு முற்றுப்பெறு முன்னரே, பள்ளியை விட்டுவிட வேண்டிய சூழ் நிலை உருவாயிற்று. மிகுந்த அன்புடன் ஆதரவளித்த சிற்றப்ப ரால் இந்தப் பாலகன் சிப்பாயாக இராணுவத்தில் சேர்க்கப்பட் டான். சீக்கிரமாகவே இராணுவப் பள்ளியில் சேர்ந்து, எதிர் பார்க்கப்பட்டதற்கு முன்னரே இராணுவ அதிகாரியானார் இவர். அம்மட்டோ! தாய்நாட்டு விடுதலை வீரப் புரட்சியாளர்களுடன் இரண்டறக் கலந்து, ஃபிரெஞ்சுப் புரட்சி போன்ற விவரங்கள் அடங்கிய வரலாற்று நூல்களைப் படித்து, ஆராய்ச்சியிலாழ்ந்து, அரசியல்வாதியாகவே மாறிவிட்டார், துருக்கிய இளஞ்சிங்க மாகிய முஸ்தஃபா கமால்.

### சிறப்புமிக்க சிப்பாய்

துருக்கி சுல்தானின் இரகசியப் பொலீசும் உளவர்களும் துப்பறிந்து, அவ்வப்போது சுல்தானுக்கு அறிவிப்புக் கொடுக்கும் அலுவலகங்கள் நாடெல்லாம் பரவி, சுறுசுறுப்பாக வேலைசெய்து வந்தன. வாலிப இராணுவ அதிகாரியாகிய கமாலின் பயங்கர அரசியல் அபிப்பிராயங்களையும் இலட்சியங்களையும் அவ் வுளவர் மூலமறிந்த துருக்கி சுல்தான் மிகவும் அச்சத்தால் நடுக்க முற்று, அவரைக் கைதுசெய்து சிறையில் அடைத்தார். ஆனால், சீக்கிரத்திலேயே அவர் விடுதலை செய்யப்பட்டார். இதற்குள்ளாக, பால்கன் நாடுகளை எதிர்த்து நடந்த போர்களில் பெரும் பங்கேற்றுக்கொண்ட கமால், ஒரு சிறந்த போர்வீரன், தளபதி என்றுங்கூடப் போற்றப் பெற்று நற்கியாதியுற்றுவிட் டார்.

ஐரோப்பிய படைகளை எதிர்த்துப் போராடித் தோற்கடித்து இஸ்தம்பூலைக் காப்பாற்றிய வீரமிக்க சேவையில் கமாலுக்கும் பெரும் பங்குண்டு. இராணுவ தீரத்தில், வாள்வீச்சு வீரத்தில்,

போர் முறையில் கமாலுக்கு நிகர் கமாலே, எனப் பெயர்பெற்று விட்டார் வாலிப வீரர் கமால். 1914-ல் நடந்த முதல் உலகப் பெரும் போரில் துருக்கி தோல்வியுற்றது. தோற்றுப்போனதாகக் கைச்சாத்திடப்பட்ட செவ்ரே (Sevres) உடன்படிக்கையைத் துருக்கி சுல்தானின் வணங்கா முடியும் வணங்கி ஏற்கவேண்டிய தாயிற்று.

ஆனால், கமாலும், துருக்கியின் பெரும்பான்மையான மக்களும் இவ்வுடன்படிக்கையை ஏற்றுக்கொள்ளவில்லை. சுல்தானின் தொடைநடுங்கித் தனமான போக்கைக் கமால் விரும்பவில்லை. அதனால், சுல்தானை அவர் அரியணையிலிருந்து இறக்கி விட்டு, நேசக் கட்சிப் படைகளை எதிர்த்துப் போரிட விரும்பினார். கமாலின் அவ் வீரமிக்க திட்டப்படி நடந்த போரில் துருக்கி வெற்றி பெற்றது. நேசக் கட்சியினர் கிரீசைத் துருக்கி மீது ஏவினர். ஆனால், கிரேக்கப் படையும் துரத்தியடிக்கப் பட்டது, கமாலின் கைத்திறமையினால்.

### துருக்கியில் மக்களாட்சி நிறுவப் பெறல்

இதனையடுத்துப் பொதுமக்களிடையே கமாலின் செல்வாக்கும் சக்தியும் துருக்கியெல்லாம் கொடிகட்டிப் பறக்க வாரம்பித்தன! 'துருக்கியின் இரட்சகர்' என்ற பட்டத்தையும் அவர் பெற்றார். யாவரின் வாயும் அவரை வாழ்த்தின. முடியாட்சியை நீக்கிக் குடியாட்சியை நிருமிக்க அவர் மெல்ல மெல்ல முயன்றார். இராஜதந்திரம், தீரம், தைரியம், விடாப்பிடியான கண்டிப்பு ஆகிய சக்திகளையும் சமயோசித சந்தர்ப்பவாதங்களையும் தீவிரமாக அனுசரித்து, அங்க்காராவைத் (Ankara) தலைநகராகக் கொண்ட அனட்டோலியா என்ற இராச்சியத்தை நிறுவினார் வீரர் கமால். 1922-ல் 'பழைய கந்த'ஞகிய சுல்தான் துருக்கி நாட்டை விட்டே வெளியேற வேண்டியதாயிற்று. 1923-ல் துருக்கி நாட்டைக் குடியாட்சி நாடாக்கினார், கமால். 1924-ல் மதம் வேறு, அரசியலும் ஆட்சி இயலும் வேறு என்று பிரகடனப் படுத்தப்பட்டன. இவ்வாறாக, 600 நீண்ட நெடும் ஆண்டுகளாக முடியரசாகக் காட்சியளித்த துருக்கி, 1924 முதல் குடியரசாக மாறி, நவீனமான ஒரு காட்சியைத் தோற்றுவித்தது.

### பொருளாதாரச் சீர்திருத்தங்கள்

சர்வ அதிகாரங்களும் படைத்த துருக்கிக் குடியரசின் ஜனாதிபதியாகக் கமால் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர் புரிந்த சாதனைகள் எண்ணிலடங்கா.

(1) அனைத்துத் துறைகளிலும் தீவிர மாறுதல்கள்.

(2) வலிமை, உறுதி பெற்ற நிலைமை, ஐரோப்பிய நவீன மகிமை யாவும் பல்வேறு துறைகளிலும் ஆர்ப்பரித்தன.

(3) ஏழை, பணக்கார வேற்றுமை நீக்கம்.

(4) பொருளாதாரச் சமத்துவ நிறுவனச் சீர்திருத்தம்.

(5) எல்லாத் தொழிற்சாலைகளையும் தேசிய மயமாக்கல்.

(6) பட்டு, கம்பளி, பருத்தி ஆகிய துணிமணிகள் நெய்வதற்குத் தனித்தனி ஆலைகள் திறக்கப்பட்டன.

(7) பொதுமக்கள் நல விருத்திக்கான 12 ஆண்டு திட்டம் —இருப்புப்பாதை, துறைமுகங்கள், நீர்ப்பாசனக் கால்வாய்கள், மோட்டார்ப் பாதைகள், நவீன சிறு தொழில் நிலையங்கள் அமைப்பதெல்லாம் இத் திட்டத்தில் அடங்கின.

(8) நவீன முறை வங்கிகள் (Banks). இத்தகைய சிறந்த சீர்திருத்தங்களால் விரைவிலேயே பழைய துருக்கி புதுப் பிறவி எடுத்து, புத்துயிர் பெற்று நவீனமாக்கப்பட்டது. பொருளாதாரத்திலும் சமத்துவம் தவழ்ந்தது.

**அரசியல் முன்னேற்றமும் சீர்திருத்தங்களும்**

அதுவரையில் பழமையிலேயே உழன்று, யாதொரு முன்னேற்றமும் பெறாமல், எங்கெங்கும் ஏழ்மையே காட்சியளித்து வந்த துருக்கி நாட்டைச் சுற்றிலும் தன்னலமும், ஆக்கிரமிப்பு அபிலாசைகளும், தன் தன்னினப்பற்றும், தன்தன் நாட்டுப் பற்றும், பிற நாடுகள்மீது வெறுப்பும் கொண்டிருந்த கிறித்தவ ஐரோப்பிய நாடுகள் சூழ்ந்திருக்க, அவற்றினிடையே நெடுகவும் நோயாளியாகவே அது காலம் தள்ள வேண்டிய இடைஞ்சலில் சிக்கித் தவித்தது. தங்கள் தாய்நாடான துருக்கி தன் காலும் தன் கையுமே தனக்கு உதவி என்ற உயர்ந்த இலட்சியத்துடனும் கண்டிப்புடனும் பிற நாடுகளுக்குச் சமமாகக் காட்சியளிக்க வேண்டுமானால், அந்தச் சுயநலமிக்க ஐரோப்பிய வல்லரசுகள் எவ்வாறு நவீன கால விஞ்ஞான முறைகளையெல்லாம் கடைப்பிடித்துச் செயல்படுத்தி மின்னல் வேகத்தில் முன்னேறினவோ, அதே நவீன முறைகளையும் விஞ்ஞான முறைகளையும் முற்றிலும் கடைப்பிடித்து, அவற்றினும் சிறப்பாக முன்னேறுவதற்கு வெட்கப்படக் கூடாதென்றும், பின்வாங்குதல் கூடாதென்றும், அதைரியமடைதல் கூடாதென்றும் அழுத்தந் திருத்தமாக, பசுமரத்தில் ஆணி அறைந்தது போல், முஸ்தஃபா கமால் என்னும் மூதறிஞர் வற்புறுத்தினர்; பாமர மக்களுக்கு

எடுத்துரைத்தார். அவர் நாடெங்கிலும் சுற்றுப் பிரயாணம் செய்து, துருக்கி மக்களுக்குத் தமது கொள்கைகளையும் கருத்துகளையும் தெற்றென விளங்கும்படி எடுத்துரைத்தார். அதுமட்டுமின்றி, அச் சீர்திருத்தச் செம்மல் மதச்சார்பற்ற அரசியலாட்சியை நிறுவினர்; தேசியம் என்ற உயர்ந்த இலட்சியமுள்ள சுடர்மிக்க ஒளியை நாலா பக்கங்களிலும் பரப்பினர்; முடியரசை வீழ்த்தித் துருக்கியை ஒரு குடியரசு நாடாக ஆக்கினர். பகுத்தறிவு மேதையென்றும், பாமரத் துருக்கியின் அறிவுச் சுடர் என்றும், துருக்கர்களின் ஒப்பற்ற புரட்சித் தலைவர் என்றும், சோதனைகள் பல கண்டு சாதனைகள் பல சாதித்த மாபெரும் மக்கள் தலைவர் என்றும் உலகோர் அவரை மெச்சிப் புகழ்ந்ததில் வியப்பென்ன இருக்க முடியும் ?

துருக்கிய சிங்கம் முஸ்தஃபா கமால், சட்டத்தின் கண்ணெதிரே எல்லா மக்களும் சமம் என்று உரத்த குரல் கொடுத்து வாதித்தார், பிரசாரம் புரிந்தார். மேலும், ஆட்சிப் பீடத்துக்கும் மதத்துக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை என்று புதிய புரட்சிக் குரலையும் அவர் எழுப்பினர்; உயர்வு தாழ்வற்ற ஒரு புதிய சமுதாயத்தை உருவாக்க இரவும் பகலும் அயராது உழைத்தார். அவருடைய காலத்தில்தான் துருக்கியில் புரட்சி அலைகள் மோதி, துருக்கி ஒரு நவீன வலிமை மிக்க நாடாக மாற்றப்பட்டது. மேலும், 1924-ல் கிலாஃபத் (Caliphate) என்ற பண்டைய நிறுவனத்தையே ஒழித்து விட்டார் கமால்; அவரே துருக்கிக் குடியரசின் முதல் ஜனாதிபதியாகப் பதவியும் ஏற்றார்.

### சமுதாயச் சீர்திருத்தங்கள்

தலைமுறை தலைமுறையாகச் சில குருட்டு மதத் தலைவர்களின் தவருன போதனைகளாலும், அடித்தளமேயில்லாத மூட நம்பிக்கைகளாலும் சீரழிந்து போன ஏழைப் பாமரர்களாகிய பெரும்பான்மையான மக்களின் வாழ்வு ஒளிபெற வேண்டுமானல், பழைய மூடநம்பிக்கைகள் எல்லாமே அடியோடு ஒழிக்கப்படுவதைத் தவிர வேறு வழியே இல்லை எனும் அசைக்க முடியாத முடிவுக்கு வந்த முஸ்தஃபா கமால், கீழ்க்காணும் புரட்சிகரமான சமுதாயச் சீர்திருத்தங்களை வரையறுத்தார்:

(1) மேல்நாட்டு நவீன நடை உடை பாவனைகளைத் துருக்கி மக்கள் ஏற்க வேண்டும்.

(2) நீண்ட காலமாக வழக்கிலுள்ள ஃபெஸ் (Fez) தொப்பி அணியும் பழக்கத்தை அகற்றி, மேல்நாட்டுக் குல்லாய் (Hat) அணியவேண்டும்.

(3) ஃபெஸ் தொப்பி யணிந்தால் தண்டனை விதிக்கப் படும்.

(4) முஸ்லிம் பெண்ணின் முகமூடியைக் கிழித்தெறியச் சட்டமியற்றினர் கமால்.

(5) ஆணும் பெண்ணும் சரிநிகர் சமானர்கள் என்று ஆயிற்று.

(6) சட்டப்படியும், அவரவர் விருப்பப்படியும் நடக்க எப் பெண்ணுக்கும் உரிமை வழங்கப்பட்டது.

(7) பெண்களுக்கும் வாக்குரிமை வழங்கப்பட்டது. இதன் விளைவாக, 1934 பொதுத் தேர்தலில் 17 பெண்கள் பாராளு மன்ற உறுப்பினராயினர், துருக்கி நாட்டு வரலாற்றிலேயே முதன் முதலாக! இது, முஸ்தஃபா கமாலின் விலைமதிக்க முடி யாத வீரமிக்க சாதனையாகும்.

## மொழித் துறையிலும் இலக்கியத் துறையிலும் சீர்திருத்தங்கள்

அராபிய எழுத்துப் படிவம் துருக்கி மொழிக்குப் பொருந்திய தாக இருக்கவில்லை. மேலும், அராபியர்கள்மீது துருக்கியர்களுக்கு வெறுப்பும் கசப்பும் அதிகம். ஆகவே, 1928-ல் லத்தீன் மொழி யின் அடிப்படையில் ஒரு புதிய துருக்கி எழுத்துத் தொகுதியை மாபெரும் துருக்கிய தேசிய மன்றம் மேற்கொண்டது; அதோடு, 1929-லிருந்து இப் புதுத் துருக்கி எழுத்துத் தொகுதியானது கட்டாயமாக்கப்பட்டது. நூல்கள், பத்திரிகைகள் எல்லாம் இப் புது எழுத்து முறையையே கடைப்பிடித்தன. இவ்வாறாக, மொழித் துறையிலும் இலக்கியத் துறையிலும் புரட்சி ஏற்படுத் தினர், புரட்சித் தலைவர் கமால் பாஷா.

## மதத் துறைச் சீர்திருத்தங்கள்

தனி மனிதனின் சொந்தச் சொத்தாக வேண்டுமானால் மதம் என்பது அவரவரின் விருப்பப்படி இருந்துவிட்டுப் போகட் டும்; ஆனால், அது நாட்டின் பொதுச் சொத்தன்று, அதில் கட்டாயம் கூடாதென்றார் கமால். அவர் மதப் பிரசாரகர்களும் தர்வேஷ்களும் (துறவிகள்) இன்றியமையாதவர்களல்லர் என் றார். ஆதலால், துறவிகளின் குழுக்களுக்குத் தடை விதிக்கப் பட்டது. மேலும், இச் சட்டத்தின் விளைவாக, புனிதக் கல்லறைகள் யாவும் மூடப்பட்டன. மூடப் பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், திருவிழாக்கள் யாவும் நிறுத்தப்பட்டன. வெள் ளிக்கிழமைக்குப் பதில் ஞாயிறு விடுமுறை நாளாக்கப்பட்டது. மேலும், முஸ்லிம் நாட்காட்டி கைவிடப்பட்டு, அதற்குப் பதிலாக

ஐரோப்பிய கிறித்தவ நாடுகள் பின்பற்றிய கிரிகோரியன் (Gregorian) நாட்காட்டி முறை துருக்கியின் புது அரசாங்கத்தால் மேற்கொள்ளப்பட்டது. ஒருவனுக்கு ஒருத்திதான் மனைவி என்ற புதிய சட்டத்தைக் கமால் இயற்றினார். இஸ்லாமிய நாடாகிய துருக்கி, 1939ஆம் ஆண்டுக்குள் ஒரு சமயச் சார்பில்லா நாடாயிற்று. இவ்வாறாக வெல்லாம் தன் தாய் நாட்டைக் கைதூக்கி நிறுத்தினார், துருக்கியின் மக்கள் தலைவர்[1] முஸ்தஃபா கமால்.

### கமால் அத்தாத் துர்க்கின் அரிய சாதனைகள்

சிறந்த சிப்பாய் மட்டுமல்லர், ஈடு இணையில்லா சீர்திருத்தவாதியுங்கூட அத்தாத் துர்க் முஸ்தஃபா கமால் பாஷா. அறிவுக் களஞ்சியமான அவர் போற்றத்தக்க இராஜதந்திரி மட்டுமல்லர், பெரும் செங்கோல் வேந்தருங்கூட! வீரத் துருக்கியர் மரபிலே தோன்றிய மாபெரும் தலைவரவர். வெற்றியோ தோல்வியோ, உயர்வோ தாழ்வோ, முன்வைத்த காலைப் பின்வைத்தறியாதவர் அவர். ஒரு பெரிய வலிமைமிக்க யானையாய் இருப்பினும், அது ஆழமான சேற்றிலே மாட்டிக்கொண்டு விட்டால், சின்னஞ் சிறு நரிகளே அதைக் கடித்துக் கொன்று விடுமாம். அதைப் போல், உதுமான் என்பவரின் காலத்திலிருந்து படிப்படியாய் முன்னேறி, சுலைமான் என்பவரின் காலத்தில் அதியுச்சத்தை எட்டிப் பிடித்து, பீடுகெழு பெருமைமிக்க பெரும் பேரரசாயிலங்கிய ஒரு 'மகத்தான சாம்ராஜ்யத்தின்' வாரிசுகளாய் வந்து வாய்த்து, மிகவான அவக்கேட்டை விளைத்த மத யானையை நிகர்த்த சுல்தான்களை, எங்கோ ஒரு மூலையிலிருந்து முளைத்த கமால் பாஷா என்பவர் தொலைத்துத் தீர்த்துக் கட்டி விட்டார்.

ஒவ்வோர் அரசு ஆட்சித் துறையிலும் பழையன கழிந்தன, புதியன புகுந்தன. பழைய ஆட்சி முறைகளை எல்லாம் கமால் இரக்கமின்றி வேரோடு கல்லி எறிந்தார்; மாற்றியமைத்தார். புதுப்புதுச் சட்டதிட்டங்கள் உருவாயின; போக்குவரத்து மார்க்கங்கள் விரிவடைந்தன; வரி வசூல் பெருகிற்று; விவசாயமும் தொழிலும் அபிவிருத்தியடைந்தன; பெண்ணடிமைத்தனம் நீக்கப்பட்டது; நவீன நாகரிக ஐரோப்பிய உடை அணியப் பெற்றன; அராபிய எழுத்துக்குப் பதில் ஆங்கில லிபி (Roman

[1] கமாலை 'அத்தாத் துர்க்' (துருக்கியரின் தந்தை) என்றே மக்கள் அழைத்தனர். 'அத்தா' என்னும் தமிழ்ச் சொல்லுக்கு உள்ள பொருளே துருக்கி மொழி 'அத்தா' என்னும் சொல்லுக்கும் உண்டு.

Script) நுழைக்கப்பட்டது. இவை போன்ற பல புரட்சிகரமான சீர்திருத்தங்களை உண்டுபண்ணி, அவற்றைக் கடைப்பிடித்துத் தமது தாய்நாட்டை வலிமை மிக்க ஓர் ஐரோப்பியமயமான நவீன நாடாக்கினார், முஸ்தஃபா கமால். புரட்சிகரமான இச் சீர்திருத்தங்களை எல்லாம், நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக இஸ்லாமிய நாடாக விளங்கிய துருக்கி நாட்டில் அவ்வளவு குறுகிய கால அளவில், அவ்வளவு விரைவில் நிறைவேற்றியமை அற்ப சொற்பச் சாதனைகளாமோ! எல்லாவற்றுக்கும் மேலாக, 1453ஆம் ஆண்டிலிருந்து துருக்கியின் தலைநகராகக் காட்சி யளித்த இஸ்தம்பூலை விட்டுவிட்டு, அங்க்காரா (Ankara) என்ற பட்டணத்தைப் புதுத் தலைநகராக்கியது கமால் புரிந்த மாபெரும் அரிய சாதனையல்லவா!

பழைய பத்தாம் பசலி நாடுகளைப் புத்தம் புதிய நாடுகளாக்கிப் புது வரலாறு படைத்த வரலாற்று வீரர்களின் வரிசையில் முஸ்தஃபா கமாலுக்கு முதலிடம் கொடுத்தால், எவரே அதை மறுக்க முன்வருவார்? 'அத்தாத் துர்க்' (Ata Turk) அல்லது 'துருக்கியர்களின் தந்தை' என்ற பட்டத்தைத் தெரியாமலா நன்றியுள்ள நவீன நாகரிகத் துருக்கி நாடு வழங்கியது, அண்ணலுக்கு?

இன்னும் துருக்கியை முன்னேற்றிவிட அவர் கருதியிருந்த எத்தனையோ திட்டங்களை, நினைவுகளை, கனவுகளையெல்லாம் நிறைவேற்றி முடிக்கு முன்னரே 1938-ல் கண்துஞ்சி விட்டார். துருக்கி மக்களெல்லாம்—ஏன்? உலகெங்குமுள்ள மனிதாபிமானிகளெல்லாம்—அவரது மரணச் செய்தி கேட்டுக் கண் கலங்கினர்; கதி கலங்கினர். ஷேக்ஸ்பியர் என்னும் ஆங்கில நாடகாசிரியர் சொல்லிப் புலம்பினது போல்: 'When comes such another!' (இத்தகைய மற்றொரு தலைவர் எப்போது வருவார்?)

பேராசிரியர் புகாரீ புகலுகிறார்: 'முஸ்தஃபா கமாலை எதேச்சாதிகாரி என்று சிலர் தூற்றுகிறார்கள். அது தவறு. பிழை செய்யும் பிள்ளைகளைப் பிதா தண்டிப்பதன்மூலம் சீர்திருத்துவது பிழையாகுமா!'[1] எப்படிப் பிள்ளைகளின் எதிர்கால நன்மைக்காகத் தந்தைமார் தம் பிள்ளைகளைத் தண்டிப்பது பிழையாகாதோ அதேபோல், தலைமுறை தலைமுறையாகப் பன்னெடுங்காலமாகக் கண்மூடித்தனமாக வாழ்ந்து இனியும்

[1] பேராசிரியர் புகாரீ, 'பொது இஸ்லாமிய வரலாறு' ப. 264.

படுபாதாளப் பாழுங்கிணற்றில் விழப்போன பிறவிக் குருடனைக் கை கொடுத்துத் தூக்கி விட்டு நல்வழிக்குத் திருப்பிவிட்ட பேருபகாரி—கண்டிப்புவாதியான பிதா—என்று வேண்டுமானால் நம் கமாலுக்குப் பகுத்தறிவு உலகப் புகழ் மாலையைச் சூட்டிப் புகழலாம். அப் பேரறிஞனை மனிதாபிமானமிக்க 'நல்லெண்ணங் குடிகொண்ட சர்வாதிகாரி' என்றோ, 'நன்மை பயக்கும் சர்வாதிகாரி' என்றோ வேண்டுமானால் சொல்லுங்கள்; அவ்வண்ணலும் அதை ஏற்றுக்கொள்வார்.

## (3) அரபுநாடுகளில் மேற்கு நாட்டவரின் கருத்தும் நல்லறிவும் நுழைதலும் அவை விளைத்த மாற்றமும்

14ஆம் நூற்றாண்டின் ஆரம்ப கட்டத்தில் உதுமானிய துருக்கியர்களின் அரசியல் செல்வாக்கு ஆரம்பமானதுபற்றியும் அது பரவினதுபற்றியும் நாம் ஏற்கெனவே படித்திருக்கிறோம். ஆசியா மைனரில் ஆரம்பித்து, அக்கம்பக்கத்தில் வியாபிக்க முனைந்து, ஒரு நூற்றாண்டுக்குள் ஆசியாவிலும் ஐரோப்பாவிலும் உதுமானியப் பேரரசு ஒரு பெரும் சக்தியாக உருவெடுத்தது. 'வெற்றி வீரன்' எனப் புகழப் பெற்ற சுல்தான் இரண்டாம் முகம்மதின் தலைமையில், கி.பி. 1453-ல், கான்ஸ்டான்ட்டி நோப்பிளைத் துருக்கியர்கள் பிடித்துக் கொண்டனர்.

இதனால், அத் தலைநகரிலிருந்த பல கிரேக்க அறிஞர்களும், கலைஞர்களும், மேதைகளும் அந் நகரை விட்டே வெளியேறி, விலை மதிக்க முடியாத பல கிரேக்க நூல்களையும், கலைச் செல்வங்களையும், கலாசாரக் கருவூலங்களையும் தங்களுடன் எடுத்துக் கொண்டு ஓடிப் பல ஐரோப்பிய நாடுகளில் அடைக்கலம் புகுந்தனர்.

இவர்களின் பகுத்தறிவு விளக்கங்களால், சமுதாய முறைச் சட்டம், அரசியல், ஆட்சி இயல், விஞ்ஞானம், தத்துவ ஞானம், மதம், இலக்கியம், கலைஞானம் ஆகிய துறைகளி லெல்லாம் பலப்பல மோதல்களும் மாறுதல்களும் இணைப்புகளும் ஏற்படத் தொடங்கி, பண்டைக்காலத் தோற்றங்களெல்லாம் நவீன காலத் தோற்றங்களாக உருமாற ஆரம்பித்தன. இத்தாலி நாட்டின் ஆல்ப்ஸ் (Alps) மலைப் பிரதேசங்களைக் கடந்து, ஐரோப்பாவின் மேற்குப் பிரதேசங்களுக்குள்ளெல்லாம் புனருத்தாரண கலாசாரங்கள் ஒவ்வொன்றாக வெகு விரைவில் பரவ ஆரம்பித்தன.

உதுமானிய துருக்கியர்களும் கிரேக்கர்களால் விட்டுச் செல்லப்பட்ட கலைச் செல்வங்களையும் நாகரிகங்களையும் தமதாக்கிக் கொண்டனர். 16ஆம் நூற்றுண்டின் ஆரம்ப கால கட்டங்களில் அராபிய நாடுகளில் உதுமானிய ஆட்சி வெற்றிக் கொடியை நாட்டியபோது, ஏற்கெனவே அது கிரேக்க கலாசாரங்களைத் தனதாக்கிக் கொண்டது போலவே, இப்போது அராபிய கலாசாரங்களையும் தனதாக்கிக் கொண்டது. இந்த மூன்று வகைப்பட்ட கலாசாரங்களும் ஒன்றுடனென்று இணைந்து, வெகு காலம்வரை செழிப்புற்று வளர ஆரம்பித்தன.

16ஆம் நூற்றுண்டிலிருந்து தங்கள் வாணிப வளர்ச்சிக்காகவும் அதன் அபிவிருத்திக்காகவும், தங்கள் அரசியல் செல்வாக்கு வளர்ச்சியடைதற்காகவும் உதுமானியப் பேரரசுடன் ஐரோப்பிய வல்லரசுகள் பலப்பல உடன்படிக்கைகளைச் செய்து கொண்டன. ஃபிரான்சும் இங்கிலாந்தும் இவ்வாறு ஒப்பந்தம் செய்துகொண்டவற்றுள் மிக முக்கியமான ஐரோப்பிய நாடுகளாகும்.

இதனுல், அராபிய நாடுகளிலும் ஐரோப்பிய அறிவும் கலாசாரமும் நாகரிகமும் பரவ ஆரம்பித்தன.

**எகிப்தில் ஊடுருவிய மேல்நாட்டுச் செல்வம்**

16ஆம் நூற்றுண்டின் ஆரம்ப கால கட்டத்தில் உதுமானிய சுல்தானுன முதலாம் சலீம் எகிப்தில் தமது வெற்றிக் கொடியை நாட்டிவிட்டிருந்தார். அதிலிருந்து 300 ஆண்டுகள் வரை எகிப்து உதுமானியப் பேரரசின் அங்கமாகக் காட்சியளித்தது. இந்தியாவுக்குச் செல்லும் வழியில் எகிப்து நாடு அமைந்திருந்ததால், ஆங்கிலேயர்கள் ஆங்கே தங்கள் செல்வாக்கையும் வர்த்தக வழிகளையும் வளர்த்துக் கொண்டிருந்தார்கள். இவ்வாறு வளர்ந்து வரும் ஆங்கிலேயரின் செல்வாக்கை அழித்து விடும் நோக்கங்கொண்டு, கி.பி. 1798-ல் ஃபிரெஞ்சு மாவீரன் நெப்போலியன் போனப்பார்ட் எகிப்தின்மீது படையெடுத்து, எகிப்திய படைகளைத் தோற்கடித்து விட்டார். இதனுல், எகிப்து மேலும் உலகப் பிரசித்தி பெற்றுவிட்டது. கீழ்நாடுகளுடன் உள்ள வர்த்தகத் தொடர்பையும் அரசியல் செல்வாக்கையும் வளர்த்துக் கொள்வதற்கு இன்றியமையாத கேந்திரமாக விளங்கி வரும் எகிப்தின்மீது தத்தம் ஆதிக்கத்தையே நிலைநாட்டிவிட வேண்டுமென்று பிரிட்டனும் ஃபிரான்சும் மும்முரமாகப் போட்டியிட ஆரம்பித்தன.

முகம்மது அலீயின் எழுச்சி

எகிப்தின்மீது நெப்போலியன் படையெடுத்ததிலிருந்து, எகிப்தின் வரலாற்றுப் பாதையே மாற்றியமைக்கப்பட்டுவிட்ட தென்னலாம். நெப்போலியனின் படையெடுப்புக் காலப்போக்கில் தோல்வியே அடைந்ததென்றுலும், மேல்நாட்டு விஞ்ஞானத்திலும், கல்வி யறிவிலும், ஆட்சி முறைகளிலும் எகிப்தை விட மேல்நாடுகள் எத்துணேயோ மடங்கு முன்னேறிவிட்டிருந்தன வென்னும் உண்மைகளேயும் நிலேமைகளேயும் சில எகிப்திய பேரறிஞர்கள் நன்கு புரிந்து கொள்வதற்கு வாய்ப்பாக அது அமைந்துவிட்டது. அத்தகைய அறிஞர்களில் முகம்மது அலீயும் ஒருவராவார். ஃபிரெஞ்சுப் படைகள் எகிப்தை ஆக்கிரமித்துக் கொண்டபோது, உதுமானிய சுல்தானுன மூன்றும் சலீம் என்பவர் ஒரு சிறு படையை அனுப்பி, எகிப்தை மீட்டார்.

எகிப்தை மீட்க முக்கிய காரணமாயிருந்தவர் முகம்மதலீ என்ற கல்வி வாசனேயே இல்லாத ஒரு சாதாரண இராணுவ அதிகாரியே ஆவார். ஆனல், அவரொரு பெரும் மேதை! படித்தால்தான் மேதையா? தமது சிறப்புமிகு திறமையாலும், இராஜதந்திரத்தாலும் முகம்மதலீ மெல்ல மெல்லப் பெயரும் புகழும் பெற்று, அரசியல் அனுபவ முக்கியத்துவத் துறையில் முன்னுக்கு வரலானர். 1806-ல் அவரை உதுமானிய சுல்தான், எகிப்தின் அரசப் பிரதிநிதிப் பதவிக்கு உயர்த்தினர்.

19ஆம் நூற்றுண்டைய வேறெந்தக் கீழை நாட்டு ஆட்சியாளர்களேக் காட்டிலும் முகம்மதலீயே அறிவும் ஆற்றலும், இராஜதந்திரமும் வீரமும் நிரம்பப் பெற்றவராய்க் காணப்பட்டாரென்னலாம். தாமும், தம் சந்ததியார்களுமே எகிப்தைப் பாரம்பரியமாக ஆண்டனுபவிக்க வேண்டுமென்பது இவரது பேராவல். தாமே எகிப்தை ஆள முழுச் சுதந்தரத்தையும் அதிகாரத்தையும் தமக்கு சுல்தான் அளிப்பாரே யாயின், அவரைத் 'தம் சுல்தான்' என்றுகூடப் பெயரளவில் கூறிக் கொள்ளத் தாம் தயங்குவதில்லே என்று முகம்மதலீ பிரகடனம் செய்தார். அப்படியே, எகிப்தைச் சர்வ சுதந்தரத்துடன் தாம் ஆளவேண்டுமானல், தமக்கொரு தரைப்படையும் கப்பற் படையும் உடனடியாகத் தேவை என்றும், அத்தகைய இரு படைகளும் மேனுட்டு முறைகளில் பயிற்சி பெற்றிருக்க வேண்டியது மிகவும் அவசியமென்றும், ஒரு மகத்தான பேருண்மையை ஃபிரெஞ்சுப் படையெடுப்புக் காலத்திலிருந்து முகம்மதலீ நன்கு புரிந்து கொண்டுவிட்டிருந்தார்.

அந் நோக்கத்துடன், மேனாட்டு இராணுவத் தளவாடங்களுக்காகவும் பயிற்சி முறைகளுக்காகவும் உதவியை நாடி, அவர் பிரிட்டனுக்கு வேண்டுகோள் விடுத்தார். ஆனால், கிரேட் பிரிட்டன் அக் கோரிக்கையை ஏற்க மறுத்து விட்டது. எனவே, முகம்மதலீ ஃபிரான்சை உதவிக்கு வேண்டினார். ஃபிரான்சோ, உடனே அவ் வேண்டுகோளை ஏற்றுக்கொண்டு, ஃபிரெஞ்சு இராணுவ மருத்துவர்களையும், இராணுவ அதிகாரிகளையும், இராணுவ ஆலோசகர்களையும் ஏராளமாக எகிப்துக்கு ஏற்றுமதி செய்தது. கல்வி, கட்டடக்கலை, கலை நுட்பங்கள், இராணுவ விஞ்ஞானம் ஆகிய துறைகளெல்லாம் சீர்திருத்தப்பட்டு மாற்றியமைக்கப்பட்டு வலுவாக்கப்பட்டன.

போக்குவரத்துக்கான கால்வாய்கள், பள்ளிகள், பாலங்கள், பொது மக்கள் வசதிக்கான ஆட்சிமுறைக் காரியாலயங்கள் ஆகியன நிறுவப்பட்டன. சுதேசத் தொழில்களும் தொழிற்சாலைகளும் விருத்தி செய்யப்பட்டன. இத்தகைய பெரும் நிபுணத்துவம் பெற்ற ஃபிரெஞ்சு பற்கலா பேரறிஞர்கள் மாட்டு முகம்மதலீ மிகவும் மரியாதையுடனும் கண்ணியத்துடனும் நடந்து கொண்டு, தமது அபார அரசுதோரணை ஞானம் வெளிப்படத் தோற்றமளித்தார். கெய்ரோவும் அலெக்ஸாந்திரியாவும் நவீன நகரங்களாயின. எகிப்திய இளைஞர்களைப் பாரிசுக்கு அனுப்பி, அவர்கள் புதுப் புதுப் பயிற்சிகள் பெறும் வண்ணமும், மேற்படிப்புப் படித்துப் பட்டதாரிகளாக மிளிரும் வண்ணமும் செய்தார் முகம்மதலீ. எகிப்துக்குத் திரும்பிவந்த அப் பட்டதாரிகள்மூலம் மக்களறிவுச் செல்வத்தையும், விஞ்ஞானத்தையும் வளர வழிவகை செய்தார் அவர்.

ஃபிரெஞ்சு அறிவியல் நூல்களையும் பற்பல கலா நூல்களையும் அராபியில் மொழிபெயர்த்து, பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் அவற்றைப் பாடப் புத்தகமாக வைத்து, பொது அறிவை அவர் வளர்த்தார். இவ்வாறாக, அவர் நாற்பது ஆண்டு காலம்வரை நல்லாட்சி நல்கித் தன்னிகரற்று எகிப்தை ஆண்டு வந்தார். ஃபிரெஞ்சுப் படையை முன்மாதிரியாக வைத்து, எகிப்தியப் படைகளுக்கு இராணுவப் பயிற்சியை நவீன முறையில் அளித்து அதை வலுப்படுத்தினார், ஒரு நிபுணத்துவம் வாய்ந்த ஃபிரெஞ்சுப் படைப் பகுதி முதல்வர் (Colonel) எகிப்திய கப்பற்படையையும் துறைமுகத்தையும் மற்றொரு ஃபிரெஞ்சு நிபுணர் சீர்திருத்தி வலுப்படுத்தினர். அல்லாமலும், கூடுதலாகவே ஒரு புத்தம் புதிய கப்பற்படையை நிறுவினார் முகம்மதலீ! அயல் நாட்டுப் பொறியாளர்கள் அடங்கிய பட்டாளம் போன்ற பெரியதொரு

நிறுவனத்தையே தோற்றுவித்தார், முகம்மதலீ. அவர் அதைக் கொண்டு, எகிப்தின் சுயத்தேவைக்கும், முடியுமானல் ஏற்று மதிக்கும்கூட வசதி யுண்டுபண்ணும் தொழில் உற்பத்திப் பொருள்களைப் பெருக்கும் நாடாக்கினர். இவ்வாருக, எகிப்தை ஒரு பெரும் இராணுவத் தளமாகவும் தொழிற்சாலையாகவும் காட்சியளிக்கச் செய்தார் முகம்மதலீ.

1848-ல் அவர் மறைவதற்கு முன், எகிப்தின் பழைய முகத்தை மாற்றிப் புதுமுகமாகவே அதை உருவாக்கிவிட்டார். ஒரு தனிப்பட்ட மனிதனின் அளப்பரும் சாதனைக்கு ஓர் எடுத்துக்காட்டு அவரது வெற்றிநடை. முகம்மதலீயின் இத்தகு பெரிதும் மெச்சற்குரிய சாதனைகளால் அக்கால மற்றெல்லா முஸ்லிம் நாடுகளையும்விட எகிப்து முன்னேறிவிட்டது. பிறப்பினல் முகம்மதலீ அராபியரல்லர் என்றாலும், அராபிய மக்களின் மறுமலர்ச்சிக்கும் அராபிய தேசிய உணர்ச்சி வளர்ச்சிக்கும் அவரே காரணபூதமாய் விளங்கினர். பரநலத் தியாகி அவர்.

### முஸ்தஃபா கமாலுக்கேகூட முகம்மதலீயே முன்மாதிரி

துருக்கியின் உதய சூரியனாகவும், மாபெரும் புகழ் பெற்ற மக்கள் தலைவனாகவும் தோன்றவிருந்த மாமேதை முஸ்தஃபா கமாலின் காலத்துக்கேகூட முன்னோடியாகவும், விடிவெள்ளியாகவும் முகம்மதலீ காட்சியளித்தார். ஏனென்றால், மேனாட்டுக் கல்வியையும் கலாசாரத்தையும் பண்பாடுகளையும் முகம்மதலீ எகிப்தில் புகுத்திவிட்டமையால்தான், அந் நாடு உருப்பட்டுக் கடைத்தேறிற்று என்னும் உண்மையைக் கமால் கண்டு கொண்டார். அந்தத் துணிச்சலான முன்மாதிரியைக் கமால் துணையாகக் கொண்டே தமது தாய்நாடாகிய துருக்கியிலும் அப்படிப்பட்ட புரட்சிகரமான அருஞ் சாதனைகளை நிறைவேற்றி முடித்தார். எனவே, முஸ்தஃபா கமாலுக்கு வழிகாட்டிய பெருமை முகம்மதலீக்கே உரித்தாகும்.

மேலும், முகம்மதலீயின் பரந்த மனப்பான்மையாலும், ஊக்கத்தாலும், பெருமுயற்சியாலும் எகிப்து ஏனை இஸ்லாமிய நாடுகளுக்கும் அவற்றின் பிரச்சினைகளுக்கும் தலைமை வகித்துத் தொண்டாற்றிற்று. முகம்மது அலீயின் மறைவுக்குப் பின்னர் எகிப்திய அறிஞர்கள் மத்திய கிழக்கு நாட்டில் வாழ்ந்த மக்களுக்குப் புத்துயிர் அளிக்கலாயினர் என்று சொன்னாலுங்கூட அக்கூற்று மிகையாகாது. அவர் மறைந்தார், அவர் வமிசமும் மறைந்து விட்டது; ஆனாலும், அவர் ஆற்றிய தொண்டும்

புரிந்த சாதனைகளும் அவரது புகழை இன்னும் பறை சாற்று கின்றன.

### சிரியாவும் மேனாட்டு அறிவு விருத்தியும்

கி.பி. 1516ஆம் ஆண்டில் உதுமானிய சுல்தான் முதலாம் சலீம் என்பவரால் வெல்லப்பட்ட சிரியாவில், நானூறு ஆண்டுகள்வரை உதுமானியக் கொடி பறந்து நின்றது. 19ஆம் நூற்றாண்டில் ஐரோப்பிய அறிவும் நாகரிகமும் கலாசாரமும் சிரியாவை ஆட்கொண்டுவிட்டன. முகம்மதலீயால் நவநாகரிக நாடாக மாற்றி விடப்பட்ட எகிப்தின் ஐரோப்பிய மயமான முன்னேற்றப் புயல் சிரியாவையும் அணைத்துக் கொண்டது. சிரியா 1833-ல் முகம்மதலீயின் மைந்தனால் வெல்லப்பட்டது. தந்தையைப் போலவே இந்த இப்ராஹீம் பாஷாவும் சிறப்பு மிக்கவர், பரந்த நோக்கமுடையவர், ஆழ்ந்த அறிவும், குறிப்பிடத்தக்க ஆற்றலுமுடையவர். அவர் ஐரோப்பிய-அமெரிக்கக் கிறித்தவ மதப் பிரசாரகர்களை சிரியாவில் குடிபுகவும் அனுமதித்தார்.

ஆங்கிலப் பாதிரிமார்களும், ஃபிரெஞ்சுப் பாதிரிமார்களும் சிரியாவின் அறிவு முன்னேற்றத்துக்காக, ஒருவருடனொருவர் போட்டியிட்ட வண்ணம் உழைக்கலானார்கள். கல்வி விருத்திக்கென்றும், அராபிய இலக்கிய முன்னேற்றத்துக்கென்றும், ஃபிரெஞ்சு, அமெரிக்கப் பாதிரிமார்கள் மேற்கொண்ட தன்னலமிலா உழைப்புகளாலும் சாதனைகளாலும் மேனாட்டு அறிவும் தேசிய உணர்வும் நாளுக்குநாள் வளரலாயின. சிரியாவில், குறிப்பாக லெபனான் பிரதேசக் கிறித்தவர்களிடையே, மேனாட்டுக் கல்வி கலாசாரமும் நவநாகரிகமும் மிக வேகமாகப் பரவலாயின.

### அராபியப் புனருத்தாரணப் பேரறிஞர்கள்

ஃபாரிஸ்-அஷ்-ஷித்யாக் (Farish-ash-Shidyaq), நசீஃபுல் யாஸிஜி (Nasif-al-Yaziji), புத்ருஸுல் புஸ்தானி (Butrus-al-Bustani) போன்றவர்கள் அராபியப் புனருத்தாரணத்தின் கலங்கரை விளக்கங்களெனலாம். மேனாட்டு அறிவும், கருத்துகளும், செயல்முறைகளும் ஆரம்பகால தேசியவாதிகளைப் பெரிதும் சிந்திக்க வைத்து, உதுமானியப் பேரரசின் அடிமைத் தளையிலிருந்து தங்கள் நாட்டை (இராக்) விடுவித்துக் கொள்வதற்குக் கிளர்ச்சி செய்யும்படி தூண்டின. மேனாட்டுக் கருத்துகளும் செயல்முறைகளும் சிரியா நாட்டு அறிஞர்களை மிகவும்

கவர்ந்தன. இதன் விளைவாக, சிரியா முழுதுமே துருக்கிய ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற ஆயத்தமாகிவிட்டது.

**இராக் விடுதலைக் கிளர்ச்சி**

கி.பி. 1639-ல் உதுமானியர்களால் வெற்றிக் கொடி நாட்டப்பட்ட இராக் நாடு, வெகு காலம்வரை அவர்களுடைய ஆதிக்கத்திலிருந்தது. 19ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்தும் ஃபிரான்சும் இராக்கில் செல்வாக்குப் பெற ஆரம்பித்தன. ஆனால், எகிப்திலும் சிரியாவிலும் அவர்களுக்குக் கைகூடியிருந்த செல்வாக்கைவிட, இராக்கில் குறைவுதான். ஆனாலும், எப்படியோ ஐரோப்பிய அறிவுக் காற்று நுழைந்தமையால், பல பள்ளிகளும், இராணுவத் தளவாடங்களை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகளும், பத்திரிகைகளும், மருத்துவமனைகளும், மற்றும் இவை போன்ற பல நவீன அறிவுச் சாதனங்களும் இராக்கில் தோன்றி விட்டன. துருக்கியர்களை இராக்கிலிருந்து வெளியேற்றவும், நாட்டில் சுதந்தர அரசை நிலைநாட்டவும், இவற்றுக்காகக் கிளர்ச்சி நடத்தவும் தேசிய சங்கம் ஒன்று பாக்தாதில் நிறுவப்பட்டது.

**அரேபியாவின் விடுதலைக் கிளர்ச்சி**

அரேபியா நாடும் உதுமானியப் பேரரசின் ஓர் அங்கமாகத் தானிருந்தது. ஆயினும், ஏமன், ஹிஜாஸ் மாநிலங்களை ஆண்டு வந்த சில சிற்றரசர்கள், சுதந்தரமிக்க ஆட்சியாளர் போல் நடந்து கொண்டிருந்தார்கள். கி.பி. 19ஆம் நூற்றாண்டில் அராபி மொழியைத் தங்கள் தாய்மொழியாகக் கொண்ட மக்கள் வாழும் பிரதேசங்களில் ஐரோப்பிய கல்வியும், அறிவும், நாகரிகமும் நுழைந்து மக்களைச் சற்றே கண்விழிக்கச் செய்து கொண்டிருந்தன.

**வஹ்ஹாபிகள் (Wahhabis)**

இந்த நவீனக் கண்விழிப்புக்கு முந்திய கால கட்டத்தில் நீண்ட நெடுங்காலமாகச் சமுதாயத்திலும் அரசியல் துறையிலும் அறிவுச்சலனம் ஏதுமில்லாது, அறிவு மழுங்கிய மேகமண்டலமும் மதியின்மையும் நிலவியபோது அரேபியாவின் தீபகற்பப் பகுதியில் மட்டும்தான் இஸ்லாமிய மதச் சீர்திருத்தமென்னும் ஒரு கிளர்ச்சி தோன்றி வளர்ந்து கொண்டிருந்தது. இக் கிளர்ச்சியின் தலைவர், முகம்மது அப்துல் வஹ்ஹாப் ஆவார்.

இச் சமயக் கிளர்ச்சி பின்னர் ஓர் அரசியல் கிளர்ச்சியாகவே உருமாறிப் புயலாகச் சீறி, மின்னல் வேகத்தில் தீபகற்ப அரேபியாவின் பெரும் பகுதிகளை ஆட்கொண்டுவிடத் தொடங்கியது. அக் கால கட்டத்தில் இப் பிரதேசத்தில் ஐரோப்பிய அறிவுக் காற்று அவ்வளவாக நுழையவில்லை. ஆட்சிவர்க்கத்தினரான துருக்கியர்களுக்கும் அராபியப் பொதுமக்களுக்குமிடையே கடும் வெறுப்பே நிலவிற்று. இப் பகைமையைச் சமய சந்தர்ப்பமாக ஒரு தந்திர யுக்தியாகப் பயன்படுத்திக் கொண்ட ஆங்கிலேயர்கள், முதல் உலகப் பெரும் போரில் அராபியர்களின் துணை கொண்டு துருக்கியர்களைத் தோற்கடித்து விட்டனர். 1930க்குப் பிறகுதான், இப்னு சுஊத் (Ibn Saud) என்ற அராபிய அரசர் அரேபியாவை ஐரோப்பிய பாணியில் நவீன மயமாக்கினார். இவ்வரசரும், இவருடைய குடும்பமும் சந்ததிகளும்தாம் நவீன ஐரோப்பிய கலாசார நாகரிகங்களின் சரிநிகர் சமமான பிரதி பிம்பங்களாகக் காட்சியளித்து வருகின்றனர்.

முதல் உலகப் பெரும் போர் முற்றுப் பெற்றதும், சர்வதேச சங்கம் வகுத்த முறைப்படி, ஆங்கிலேயர்களும் ஃபிரெஞ்சுக்காரர்களும் தோல்வியடைந்த உதுமானியப் பேரரசின் ஓர் அங்கமாயிருந்த அரேபியாவைப் பங்கிட்டுக் கொண்டனர்.

இவ்விதமாக, அராபிய தேசியவாதிகளின் கனவுகள் நீர்க்குமிழிகள் போல் தோன்றி மறையலாயின! இந்த மகத்தான அரபு நாடுகளின் பெரும் ஏமாற்றம் அராபிய தேசிய வளர்ச்சியாக மாறி, முடிவில் அராபியக் கூட்டாட்சியில் தோற்றமளித்தது. இதைப்பற்றி அடுத்த பிரிவில் ஆராய்வோம்.

## (4) மத்திய கிழக்கில் அராபிய தேசிய உணர்ச்சி வளர்ச்சியும், அராபிய கூட்டாட்சியின் தோற்றமும்

கி.பி. 19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மத்திய கிழக்கு (Middle East) மாநிலங்களில் முஸ்லிம் நாகரிகமும் கலாசாரங்களும் பரிதபிக்கத்தக்க நிலைக்கு இழிந்து, அலங்கோலமாகக் காட்சியளித்தவண்ணமிருந்தன. இயற்கை வளர்ச்சிப் பரிணாம நியதிப்படி ஐரோப்பிய நாடுகளின் பழைய அநாகரிகங்களெல்லாம் பறந்தோடி, புத்தம் புது நாகரிகங்களும் புதுப்புதுக் கலாசாரங்களும் கண்டோர் கண்களைக் கவர்ந்து, கேட்போர் செவிக்கெலாம் சுவையூட்டி, உள்ளங்களையெல்லாம் குளிர்வித்து மகிழ்ச்சி விளைத்திருக்க, ஆசியா கண்டத்தின் மேற்குப் பிரதேச

நாடுகளோவெனில், கி.பி. 19ஆம் நூற்றுண்டு முழுதுமே—ஏன், சில பிரதேசங்களில் 20ஆம் நூற்றுண்டிலும்கூடப் பண்டைப் பழம் நீண்ட நெடுநாளைய அறிவு முதிர்ச்சியடையாத, அநாகரிக மான காரிருளே சூழ்ந்திருந்தது.

மாறுக, உதுமானியப் பேரரசிலோ, 18ஆம், 19ஆம் நூற்றுண்டுகளில் ஆட்சி செலுத்தி வந்த சுல்தான்கள் மேனுட்டுக் கிறித்தவ அரசியல், ஆட்சி இயல் கருத்துகளால் தூண்டப் பட்டு, நல்லாட்சி நடத்தலாஞர்கள். இத்தகைய மேனுட்டு ஐரோப்பிய முன்னேற்றக் கருத்துப் புயல், துருக்கி நாட்டை நோக்கி வீசவும் ஆரம்பித்ததால், 19ஆம் நூற்றுண்டின் துருக்கிய அறிஞர்கள் பெரிதும் சிந்திக்கத் தொடங்கி, பரவச மடைந்து, துருக்கிய இளைஞர்களிடையே பிரசாரம் செய்ய முனைந்த காரணத்தால், 'இளந்-துருக்கியர் இயக்கம்' என்ற அதிதீவிரக் கண் திறப்பு இயக்கம் நாளொரு மேனியும் பொழு தொரு வண்ணமுமாக வளர்ந்தோங்க ஆரம்பித்தது. இப் புது விழிப்புணர்ச்சியின் காரணமாக, கி.பி. 1908ஆம் ஆண்டின் புரட்சிக் கலகம் வரையில், மத்திய கிழக்குப் பிரதேச நாடுகளி லிருந்த துருக்கியரல்லாத மக்களிடையே முளைவிட்டு அரும்பிய புதுப்புதுக் கிளர்ச்சிகளைக்கூடத் துருக்கிப் பேரறிஞர்கள் சிலரே தலைமை வகித்து நடத்தவும் முற்பட்டார்கள். இதனுல் அராபி யர்களும்கூட விழிப்படைந்து, தங்கள் தங்கள் பிரதேசங்களின் தேசிய உணர்ச்சிகளுக்கும் சுதந்தரங்களுக்கும் வித்திட்டுத் தீவிர பிரசாரத்தில் மூழ்குவதற்கு வாய்ப்பு ஏற்பட்டுவிட்டது.

### அராபிய தேசிய ஆவேசமும் அதைத் தூண்டிய காரணங்களும்

கீழ்நாடுகளுக்கு மேனுடுகள் அளித்த எத்தனையோ நற்பரிசு களுள் தலையாயது நவீன தேசிய உணர்ச்சியேயாகும். நூற்றுக் கணக்கான ஆண்டுகளாக அராபியர்கள் துருக்கியரின் கொடுங் கோன்மைக்கு ஆளாகித் துன்பப்பட்டு வந்திருந்தது வரலாறு நிரூபிக்கும் உண்மையாகும். உதுமானியப் பேரரசின் தலைமைப் பீடமாகிய துருக்கி நாட்டிலேயே உருவாகிவிட்ட 'இளந் துருக் கியர் இயக்கம்' அராபியர்களிடையே தேசிய உணர்வைத் தூண்டி விட்டு, அடிமைத்தளைகளை அறுத்தெறிய வழிவகுத்துத் தந்ததோ வெனலாம். மேற்கு ஆசிய அராபிய உலக மக்களும், வட ஆப்ரிக்க மக்களும் மேனுட்டு நாகரிக வாசனையால் பாதிக் கப்பட்டுப் பெரிதும் விழிப்படைந்தனர்.

நாளை தேசிய மயமாகப் போகிற, அதையடுத்து விடுதலை யடையப்போகிற அராபிய நாட்டின் தாய் மொழியைப் பேசு

வோர் உலகின் எப்பகுதியி லிருந்தபோதிலும் அவர்களெல்லா ருமே அரேபியாவில் நிகழ்கிற புது மலர்ச்சிபற்றிய செய்தி களாலும், அவை ஊட்டிய உணர்ச்சிகளாலும் பெரிதும் உந்தப் பட்டு உற்சாகம் பெற்றுக் களிப்படைந்தார்கள். தேசிய உணர்ச்சி வளர்ச்சி, முதல் உலகப் பெரும்போர் ஆரம்பித்த ஆண்டாகிய 1914-க்கு முன்னர் அவ்வளவு தீவிரமாக அராபிய சமுதாயத்தினிடையே இருந்ததில்லை.

சுல்தான் அப்துல் ஹமீத் என்பவரின் ஆட்சிக் கால கொடு மைகளாலும், இளந்துருக்கியர் புரட்சிக்குப் பிறகு தோன்றிய ஐக்கிய ஆட்சிக்குழு ஆட்சியின் இடர்ப்பாடுகளாலும், 1914-போர்க் காலத்தில் அராபியர்களுக்கேற்பட்ட அல்லல்—இன்னல் களாலும் அராபிய தேசியம் காட்டுத் தீப்போல இங்கணும், அங்கணும், எங்கணும் திடீர் திடீரெனக் கடும்வேகமாய்ப் பர விற்று. அராபிய தேசிய இயக்கவேகம் ஆரம்பக் கட்டத்தில் உதுமானிய ஆட்சிக் கொடுமையை எதிர்த்தும், பிற்காலத்தில் மேனாட்டுப் பேரரசுகளின் தீவிரப் பரவுதலை எதிர்த்தும் சூடு பிடித்தது.

### கிறித்தவ மேனாடுகளின் கலாசார முதிர்ச்சியும், அராபிய தேசிய வளர்ச்சியும், விடுதலைக் கிளர்ச்சியும்

மேனாடுகளின், முக்கியமாக, ஃபிரெஞ்சு நாட்டின் அரசியல், சமுதாய இயல், தத்துவ இயல் ஆகியவற்றின் வளர்ச்சி மத்திய கிழக்குப் பிரதேசங்களில், முக்கியமாக, அராபியர்களிடையில் அறிவுப் பேராவலைப் பெருமளவுக்குத் தூண்டி விட்டு விட்டது. அராபிய நாடுகளில் பொது மக்களிடையே பொதுச்சேவை செய்து கொண்டிருந்த ஃபிரெஞ்சுக் கத்தோலிக்க சங்கங்களும் நிறுவனங்களும் ஃபிரெஞ்சுக் கலாசாரங்களைப் போதிப்பதிலும், மக்களிடையே கல்வி அறிவுகளை வளர்ப்பதிலும், புத்துணர்ச்சிகளைப் புகுத்திப் புனருத்தாரணம் செய்வதிலும் மாபெரும் ஆவலுற்று அன்னியோன்ய அன்பு மனப்பான்மையை விதைத்து விட்டன.

### அமெரிக்கப் புராட்டஸ்டன்ட் மிஷனின் சேவை

ஈதன்றி, அராபிய மொழி பயிலும் அபிவிருத்திக்கும் அராபிய இலக்கிய வளர்ச்சிக்கும் என்று அமெரிக்காவிலிருந்து வந்து, அராபியர்களிடையே பொதுச்சேவையின் பொருட்டும் மக்கள் சேவையின் பொருட்டும் கைம்மாறேதும் கருதாமல், அச்சு யந்திர சாதனங்களைப் புராட்டஸ்டென்ட்கள் நிறுவினர்.

இதனால் அராபிய மொழியில் பள்ளி, கல்லூரிப் பாடப் புத்தகங்களும், நற்பயன்தரும் ஆங்கில நூல்களும் அச்சிட்டு வெளியிடப் பட்டன. நவீன போதனு முறைகளாலும் அறிவு வளர்ச்சியாலும் அராபிய மக்களிடையே புத்துணர்ச்சியும், சிந்தனு சக்தியும், பற்பல கலப்படமிக்க கலாசாரங்களும் மடைதிறந்தாற்போல் பரவலாயின. அறிவுக்கண் திறக்கவே, அரசியல் கண் திறந்தது; அதனுல் நீண்ட கால அரசியல் நித்திரை நீங்கிப் புதிதாக அரசியல் சுறுசுறுப்பும் தீவிரமும் புகுந்து விட்டன.

**சிரியாவாசிகளின் புராட்டஸ்டென்ட் கல்லூரி**

அராபிய முஸ்லிம்களுக்கும் கிறித்தவர்களுக்கும் சிரியாவாசிகளான புராட்டஸ்டென்ட்கள் நிறுவிய கீர்த்திமிக்க சிரியா கல்லூரியானது அறிவின் சிகரமாக, அழகுக்கு அழகு செய்வது போல் அலங்கரித்து நின்றது. நாஸிஃப் யாஸிஜி (Nasif Yaziji), புத்ரூஸ் புஸ்தானி (Butrus Bustani) என்னும் இரு பெரும் பேரறிஞர்கள் அராபிய மொழி இலக்கியங்களிடையேயும், அராபிய மக்களிடையேயும் தேவைப்பட்ட அறிவுக் கலாசாரப் புனருத்தாரணங்களுக்குத் தலைமை வகித்து ஒழுங்குற நடத்தி வைத்தார்கள்.

கடந்த நூற்றுண்டின் மத்திய கால கட்டங்களில் அராபிய கலாசாரங்களின் மறுமலர்ச்சி ஆரம்பமாகி, உதுமானியப் பேரரசைச் சேர்ந்த அராபிய மாநிலங்களிலும் பரவ ஆரம்பித்தது. ஜார்ஜ் அன்ட்டோனியஸ் என்ற ஒரு கிறித்தவ அராபிய தேசியவாதி, 'சிரியாவாசிகளின் விஞ்ஞான சங்கத்தின் இரகசியக் கூட்ட மொன்றில்தான் அராபிய தேசிய இயக்கத்திற்கான முதல் குரல் ஒலித்ததென்னலாம். அதுவும், இப்ராஹீம் யாஸிஜி என்ற ஒரு கவிராயர், தாமியற்றிய கவி ஒன்றன் மூலம், அராபியர்களை நெடுநாளாகக் கொடுமைப் படுத்தி வந்துள்ள துருக்கியர்களை எதிர்த்துக் கலகம் செய்து போராடி விடுதலை பெறுதல் வேண்டுமென்று வற்புறுத்துகிருர்' என்று கூறுகிருர்.

அவ் வாரம்பக் குரலுக்குப் பிறகுதான் பலப்பல அராபிய எழுத்தாளர்களும் அராபிய சங்கங்களும் அராபியர்களைத் தட்டி யெழுப்பிப் பிரசாரம் செய்து, அராபிய தேசிய விடுதலை இயக்கத்தை நாடெங்கும் பரப்பினுர்கள். இந்த அராபிய விடுதலைக்கு வழிவகைகளை வகுத்துக் கொடுத்தவர்கள் அராபிய கிறித்தவ மேதைகளேயாவர். கி.பி. 1909-ல் துருக்கி சுல்தான் அப்துல் ஹமீதின் ஆட்சி வீழ்ச்சியடைந்த போது, அராபியர்களுக்கு

அதிகப்படியான சுதந்தரமும், கிராமச் சுயாட்சி முறைகளும் அதிகாரமும் அனுமதிக்கப்படுமென்று அராபிய தேசியவாதிகள் நம்பிக்கையுடன் எதிர்பார்த்தார்கள். ஆனால், கிட்டிய பலனோ ஏமாற்றமே! இதனால் அதிருப்தியும் ஆத்திரமும், அதிர்ச்சியும் ஆவேசமும் அடைந்த அவர்கள் பலப்பல அரசியல் சமுதாய இயல் சங்கங்களை நிறுவி, அராபியர்களையும் துருக்கியர்களையும் வேற்றுமையின்றிச் சரிநிகர் சமத்துவமாகப் பாவித்து, உதுமானியப் பேரரசு முழுவதுமே யாவர்மீதும் உயர்வு தாழ்வற்ற சமதர்ம முறையில் ஆட்சி நடைபெறுவதற்கான வழிவகைகள் உண்டுபண்ணப்படல் வேண்டுமென்று வற்புறுத்திப் பிரசாரம் செய்யலானார்கள்.

### பாரிசில் செய்யப்பட்ட முடிவு

முற்கூறப்பட்ட சமத்துவக் கிளர்ச்சியை அடுத்து, விரைவாகவே 1911-ல் பாரிஸ் (Paris) நகரில் இரகசியமாகக் கூடிப் பேசிய அராபியப் புரட்சி முஸ்லிம் தலைவர்கள், 'அராபிய இளைஞர் சங்கம்' என்னும் பெயருடன் இரகசியப் புரட்சிச் சங்கங்களை அராபிய நாடெங்கும் நிறுவிக் கிளர்ச்சி செய்வதென்னும் உறுதியான முடிவுக்கு வந்தார்கள். மேலும், துருக்கியர்களுடன் யாதொருவிதமான சம்பந்தமும் வைத்துக் கொள்ளக் கூடாதென்றும், அராபியர்கள் தனித்தியங்கியே தங்கள் விடுதலைக் கிளர்ச்சியை நடத்த வேண்டுமென்றும், மேற்கு ஆசியாவில் 'அராபியத் தனி ஆட்சி' நிறுவப்பட வேண்டுமென்றும், அதற்கான கிளர்ச்சிகளில் தீவிரமாக ஈடுபட வேண்டுமென்றும் அராபிய தேசியவாதிகள் முடிவு செய்தார்கள்.

### துருக்கி அரசின் அடக்குமுறைகள்

அராபிய தேசியவாதிகளின் கிளர்ச்சிகளைத் துருக்கி அரசாங்கம் ஆத்திரமூட்டத் தக்கதான, அவசரமான, முட்டாள்தனமான முறைகளால் அடக்கவும் நசுக்கவும் ஆரம்பிக்கவே, 1916-ல் அராபியப் புரட்சி இயக்கத்துக்குப் பெருஞ் சூடு பிடித்தது. மேற்கு ஆசியாவைச் சேர்ந்த சிரியாவும் லெபனானும் அராபியப் புனருத்தாரண இயக்கத்துக்கும் தேசியப் புரட்சி இயக்கத்துக்கும் தலைமைப் பீடமாக அமைந்து செயல்பட்டன. ஆனால், அராபியத் தாயகத்தில் அத்தகைய புனருத்தாரண இயக்கமும் நவீன தேசிய இயக்கமும் சில தலைவர்களிடையே தவிர, பொதுமக்களிடையே ஏதும் குறிப்பிடத்தக்கதான விழிப்புணர்ச்சியையோ எழுச்சியையோ உண்டுபண்ணிவிட்டதாகத் தெரியவில்லை.

18ஆம் நூற்றுண்டின் பிற்பகுதிக் கால கட்டத்தில் தோன்றி முக்கியத்துவம் அடைந்த வஹ்ஹாபிகள் எழுச்சியின் பயனுக, 1800ஆம் ஆண்டில் சுஊதி வமிசம் (Saudi Dynasty) அரேபியாவின் பெரும் பாகங்களில் செல்வாக்குப்பெற்று ஆட்சி நடத்த ஆரம்பித்தது. துருக்கியரின் அரசுக்கு வஹ்ஹாபிகள் தெரிவித்த எதிர்ப்பாலும், சிரியா, இராக் நாடுகளைத் தாக்கி நிகழ்த்திய நடவடிக்கைகளாலும், வஹ்ஹாபி கொள்கைகளைப் பின்பற்றிய வஹ்ஹாபிக் குடும்பம், அதாவது, இப்னு சுஊத் வமிசம் (Saudi Dynasty) துருக்கியர்களின் எதிரியாகக் கருதப்பட்டது.

அரேபியாவிலுள்ள ஹிஜாஸ் (Hijaz) என்னும் மாநிலத்தையாள ஆளுநர் ஒருவரை உதுமானிய அரசு நியமித்திருந்தாலும், அதன்மீது உண்மையான அதிகாரத்தைச் செலுத்தி ஆண்டவர் மக்காவின் ஷரீஃபே ஆவார். மக்காவின் ஷரீஃபாக (தலைவராக)விருந்த ஹுஸைன் (Husain) என்பவரைப் பிரிட்டிஷ்காரர்கள் தூண்டிவிட்டு, துருக்கியர்களை எதிர்க்குமாறு செய்தனர். ஹுஸைனும் அவருடைய நான்கு மகன்களும் தீவிர அராபிய தேசியவாதிகளாவர். முதல் உலகப் பெரும் போரின்போது அவர்கள் யாவரும் பிரிட்டனுடன் சேர்ந்து துருக்கியை எதிர்த்துப் போராடினுர்கள்.

துருக்கி தோல்வியடைந்த கதியில் 1918–ல் உலகப் போர் முடிவடைந்தவுடன், ஆங்கிலேயரும் ஃபிரெஞ்சுக்காரரும் உதுமானியப் பேரரசைச் சேர்ந்த அராபிய பிரதேசங்களைத் தங்களிடையே, சர்வதேச சங்கத்தின் அனுமதியுடன், பங்கு போட்டுக் கொண்டனர். இந்தத் துரோகச் செயலாலும், யூதர்களின் இயக்கமான ‘ஜியோனிசம்’ (Zionism)[1] என்னும் தனித் தாயகம் கோரும் கிளர்ச்சியாலும் அராபிய தேசிய இயக்கம் அதிதீவிரமடைந்து, ‘அராபியர் லீக்’ (அராபியர் கூட்டணி) ஒன்று (Arab League) உருவாயிற்று.

1914ஆம் ஆண்டில் உலகப் போர் ஆரம்பிக்கும் தறுவாயில், அராபியப் பெரும்பான்மை மக்கள் ஐரோப்பிய நாட்டினருடன் சேர்ந்து கொண்டு துருக்கியர்களை எதிர்த்து நின்றனரென்பதைப்பற்றியெல்லாம் நாம் ஏற்கெனவே படித்தறிந்துள்ளோம். துருக்கிப் பேரரசின் அடிமைத்தனத்திலிருந்து தங்களை விடுவித்துக் கொண்டு, சர்வ சுதந்தரமுள்ள தனி அரபு நாட்டை

[1] ‘Zionism’ is a movement resulting in the re-establishment of a Jewish nation, Israel, in the former Palestine. இதுபற்றிய விவரம் பிற்சேர்க்கையில் காண்க.

அமைத்துக்கொள்ள வேண்டுமென்ற பேரவாவால் தூண்டப் பட்டே அரபு மக்கள் அவ்வாறு ஐரோப்பிய நாட்டினருடன் நட்புக் கொண்டனர்.

ஆனால், எதிர்பார்த்ததற்கு மாருக, பிரிட்டனும் ஃபிரான் சும் துருக்கிப் பேரரசில் அடங்கியிருந்த அராபிய நாடுகளைத் தங்களுக்கிடையே பாகப் பிரிவினை செய்து கொண்டன.

அரபு மக்களின் எழுச்சியும் ஏக்கமும் இறுதியாக ஏமாற்றத் தில்தான் முடிவடைந்தன. சர்வ தேச சங்கம் வகுத்த திட்டப் படி, இராக், ஏமன், பாலஸ்தீனம், ஜோர்தான், சிரியா, எகிப்து, சூடான், லெபனான் ஆகிய அரபு நாடுகளை மேற் பார்வையிட்டு ஆட்சி நடத்தும் அதிகாரங்கள் முழுதும் பிரிட் டனையும் ஃபிரான்சையும் சேர்ந்தனவாயின. எனவே, அரபு நாடுகள் இலவு காத்த கிளிகளாயின. அதாவது: அந்த அரபு நாடுகளெல்லாம் கிரேட் பிரிட்டனின், ஃபிரான்ஸின் அயல்நாட் டுத் துறைகளாக ஆயின. அரபு நாட்டுத் தேசியவாதிகளின் பழைய வீரக் குரல்களெல்லாம் இப்பால் ஒப்பாரிக் குரலாயின.

**யூதர்களின் தாயகம் கோரும் கிளர்ச்சி**

வரலாற்றில் மூவாயிரம் ஆண்டுகட்கு மேலாக யூதர்கள் உல கின் பல நாடுகளில் பரவிக் கிடந்து, தங்களுக்கென்று ஓர் அரசோ நாடோ இல்லாமல் திரிந்து அவதிப்பட்டுக் கொண்டிருந் தார்கள். இந் நூற்ருண்டின் தொடக்கத்தில் அவர்கள் விழிப் படைந்து, பழைய பாலஸ்தீனத்தில்—தாவீதும் சாலொமோனும் ஆட்சி செலுத்திய நில வட்டாரத்தில்—தங்களுக்கென்று ஒரு தாயகத்தைப் பெற்று, அங்கே யூத மதத்தையும், சுதந்தர ஆட்சியையும் நிலைநாட்டிவிட வேண்டும் என்று தீர்மானித் தனர். இதற்காக எப்படிப்பட்ட பலாத்காரத்தையும் பிரயோகிப் பதே சரியென்றும் அவர்கள் துணிவு கொண்டார்கள். முதல் உலகப் பெரும்போர் மூண்டபோது, பிரிட்டிஷ்–ஃபிரெஞ்சு நேசக் கட்சியினர்க்கு நிரம்பப் பொருளுதவி தேவைப்பட்டது. பெருஞ் செல்வந்தர்களாகிய யூதர்கள் அதை நிறைவு செய் தனர். இதற்குக் கைம்மாருக, அரப் நாட்டில் முஸ்லிம் ஆதிக் கத்திலுள்ள பாலஸ்தீனத்தை யூதர்களுக்குரிய ஒரு தனி நாடா கப் பிரித்துத் தந்துவிடுவதாக பிரிட்டனின் வெளியுறவு அமைச் சர் வாக்களித்தார். இந்த வாக்குறுதிக்கு 'Balfour Declaration' என்று பெயர். யூதத் தாயகம் கோரிய கிளர்ச்சியாளர்களுக்கு (Zionists) இது ஒரு வரப்பிரசாதமாக அமைந்து விட்டது. அரா பிய முஸ்லிம்களுக்கோ இது தீராத தலைவலியையும் வயிற்றெரிச்

சலேயும் உண்டுபண்ணிவிட்டது. உதுமானியர்களின் சர்வாதி காரத்தை வெறுத்த அராபியர் பிரிட்டிஷ்-ஃபிரெஞ்சுக்காரர் களின் ஆதிக்கத்துக்கு அடிமைப்பட்டது போதாதென்று, அந்த ஐரோப்பியர்கள் அரபு நாட்டின் ஒரு பகுதியைப் பிய்த்து யூதர் கள் வசம் ஒப்படைப்பதென்று முடிவு கட்டிய பரிதபிக்கத்தக்க நிலைக்குப் பலியாகியும் விட்டார்கள். பாலஸ்தீனத்தின் ஒரு பகுதி யூத நாடாக ஆயிற்றே யன்றி, மறு பகுதி இன்றும் கதி யற்றுக் கிடக்கிறது.

### இரண்டாவது உலகப் பெரும் போருக்கு முன்னும் பின்னும்

இரண்டாவது உலகப் பெரும் போர் துவங்குமுன், அரேபி யாவில் இப்னு சுஊத் அரசரா யிருந்தார்; எகிப்து, இராக், ஜோர்தான் ஆகியன சுதந்தரமடைந்து விட்டன. போரில் இவை எவையும் பங்கெடுத்துக் கொள்ளவில்லை. சிரியாவும் லெபனானும் 1946ஆம் ஆண்டு முடியுமுன், ஃபிரெஞ்சு ஆதிக் கத்திலிருந்து விடுபட்டன. நாசரின் காலத்தில் பிரிட்டன் சுயெஸ் கால்வாயிலிருந்து வெளியேற வேண்டியதாயிற்று. இவ்வாருக, அரபு நாடுகளிலிருந்து ஐரோப்பிய ஆதிக்கம் நீங்கி முடி வடைந்தது.

### விசால சிரியா

சிரியா, லெபனான், பாலஸ்தீனம், ஜோர்தான் ஆகிய வற்றை உள்ளடக்கிய 'விசால சிரியா'வை (Greater Syria) உரு வாக்க வேண்டுமென்று ஜோர்தான் அரசரான அப்துல்லா தமது யோசனையை வெளியிட்டார். இந்த யோசனையை இதற்கு முன்னரே வெளியிட்டவர், இராக்கிய அரசியல்வாதி யாகிய நூரி சயீத் என்பவர் ஆவார். அதனால், அவரும் அரசர் அப்துல்லாவை ஆதரித்ததோடு, இராக்கையும் பிணைத்து, 'அரபு யூனியன் அல்லது அரபு ஒற்றுமை அரசு' ஒன்றை நிறுவ வேண்டும் என்ற மற்றொரு யோசனையையும் கூறினார். ஆரம்பத்தில், இப் புது யோசனையை லெபனான், சிரியா, சுஊதி அரேபியா ஆகியன எதிர்த்தாலும், பின்னர் எகிப்தின் தலைமையில் ஆதரித்தன.

### அராபிய நாடுகளின் கூட்டாட்சி (1945)

அராபிய நாடுகளின் தனித்தனிச் சுதந்தரத்தில் தலையிடாத, ஆனால், அவை எல்லாவற்றையும் பாதிக்கும் விஷயத்தில் மட்டுமே ஒருங்கிணைந்து செயல்படும் ஒரு கூட்டாட்சியில் எல்லா

அரபு நாடுகளும் பிணைந்தன. அக் கூட்டாட்சியில் இன்று 14 நாடுகள் அங்கம் வகிக்கின்றன.

அராபிய கூட்டணியின் தலைமைப் பீடம் கெய்ரோ ஆகும். அதன் கிளைகள் மற்ற ஐரோப்பிய நாடுகளிலுமிருக்கின்றன. ஒவ்வொரு நாட்டுக்கும் ஒவ்வொரு தேர்வு வாக்குரிமை (Vote) உண்டு. அதாவது, மொத்தம் 14 வாக்குகள். எவ்வளவோ மேடு பள்ளங்களிடையேயும் அரபு லீக் (Arab League) தன்னுலான வரையில் வெகு நன்றாக வேலை செய்து வருகிறது எனலாம்!

## அரேபியாவிலும் ஆப்ரிக்காவிலும் முஸ்லிம் தேசிய அரசுகளின் எழுச்சியும் வளர்ச்சியும்

முதல் உலகப் பெரும் போரில் ஜெர்மனியுடன் துருக்கி கூட்டுச் சேர்ந்து பிரிட்டன் போன்ற நேசக் கட்சியினரை எதிர்த்துப் போரிட்ட காரணத்தால், உதுமானியப் பேரரசே இருந்த இடம் தெரியாமல் அழிந்து போனதுடன், அஃது ஐரோப்பிய நாடுகளிடையே துண்டு துண்டாகப் பங்கு போட்டுக் கொள்ளவும்பட்டது. பழைய உதுமானியப் பேரரசிலிருந்தனவும், மேற்கு ஆசியாவைச் சேர்ந்தனவுமாகிய அராபிய நாடுகளான சிரியா, லெபனன், ஹிஜாஸ், பாலஸ்தீனம், ஜோர்தான், இராக், எகிப்து போன்ற நாடுகளை இங்கிலாந்தும் ஃபிரான்சும் சர்வதேச சங்கத்தின் ஆணையின்படி ஆக்கிரமித்துக் கொண்டன என்பதை ஏற்கெனவே நாம் ஆராய்ந்துள்ளோம்.

### அரேபியாவில் தேசிய இன மோதல்கள்

பண்டைய பாரம்பரிய இனப் பிரிவுகள் தங்கள் தங்களுக்கென்று தனித்தனி நாட்டைக் கோரும் தேசிய உணர்ச்சியை உருவாக்கி, வேட்கை மிக்க அவ் வுணர்ச்சியை வளர்த்துக் கொள்ளத் தொடங்கின. இத்தகைய வேறுபாட்டுணர்ச்சிகளைத் தட்டிக் கொடுத்து, ஐரோப்பிய வல்லரசுகள் தங்களுடைய வழக்கமான இராஜதந்திரக் குயுக்தி அரசியல் முறையான, ‘பிரித்தாளல்’ (Divide and Rule) என்னும் தந்திரத்தை வெற்றியுடன் கடைப்பிடித்தன.

‘வென்ற கோழி என் கோழி!’ எனும் பழமொழிப்படி, இனப் பிரிவால், தேசியப் பிரிவால் ஏற்பட்ட மோதல்களில் வெற்றி பெற்ற கட்சியைச் சேர்ந்த நாடுகளைத் தங்கள் நட்புக்குரிய நாடுகளெனத் தம்பட்டம் கொட்டிக் கொண்டன,

ஐரோப்பிய வல்லரசுகள். தாங்கள் சொன்னபடி செய்து முடிக்கும் கைப் பொம்மைகளாக அத்தகு தேசிய உணர்ச்சிமிக்க நாடுகளை ஆள விட்டன அவ் வல்லரசுகள்.

செழிப்புமிகு இளம்பிறை நாடுகள் (Land of the Fertile Crescent)

இராக், சிரியா, லெபனான், ஜோர்தான், இஸ்ரேல் என்னும் நாடுகளையே 'இளம்பிறை நாடுகள்' (Crescent Lands) என்பார்கள். இவற்றை ஐரோப்பிய வல்லரசினர் தங்கள் சுய நலத்தினிமித்தம் பாலஸ்தீனம், சிரியா, இராக், ஜோர்தான், லெபனான், ஹிஜாஸ், இஸ்ரேல் என்னும் சுதந்தர நாடுகளாக ஆக்கி விட்டார்கள். அம்மட்டோ! தங்கள் சுயநலத் திட்டங்களை நிறைவேற்றிக் கொள்ளும் பொருட்டு, இராக்குக்கும் சிரியாவுக்கும், பாலஸ்தீனத்துக்கும் எகிப்துக்கும், சுஊதி அரேபியாவுக்கும் ஜோர்தானுக்கும் இடையே சிண்டுமுடிந்து சண்டை மூட்டிவிட்டன ஐரோப்பிய வல்லரசுகள்.

## அரேபியாவிலும் ஆப்ரிக்காவிலும் தோன்றிய புது முஸ்லிம் தேசிய நாடுகளின் சுருக்கமான வரலாறு

### பாலஸ்தீனம்

யூத மதம், கிறித்து மதம், இஸ்லாம் என்னும் மூன்று உலகப் பெரு சமயங்களின் தாய்நாடாகும் பாலஸ்தீனம். உதுமானியப் பேரரசின் நீண்ட நெடுங்கால அங்கமாக அது விளங்கிற்று என்பது வரலாறு அறிந்த உண்மை.

1918-ல் முதல் உலகப் பெரும்போர் முடிந்தவுடன், பாலஸ்தீனம் துருக்கி ஆதிக்கத்திலிருந்து விடுபட்டு, பிரிட்டனின் பிடியில் சிக்கிவிட்டது, 'பழம் நழுவிப் பாலில் விழுந்தது' என்னும் பழமொழிப்படியும் சர்வதேச சங்கத்தின் ஏற்பாட்டின்படியும். பழம் பண்டைப் பெருமை வாய்ந்த யூத மக்களுக்குத் தாயகமாக ஒரு சுதந்தரமிக்க தேசிய நாட்டை உருவாக்கித் தருவதாக பிரிட்டன் முன்பே வாக்களித்திருந்தது. இந்த வாக்குறுதிக்குத்தான் 'பால்ஃபர் அறிக்கை' (Balfour Declaration) என்று பெயர் என்பதை முன்பே குறிப்பிட்டோம். இவ் வறிக்கையைப் பிரிட்டனின் ஆட்சிக்குழுவும் அமெரிக்காவும் ஆதரித்தன; பின்னாளில், ஃபிரான்சும் இத்தாலியும் இதனை ஏற்றுக் கொண்டன.


கிரீஸ்
துருக்கி
டுனீஷியா
மத்தியதரைக கடல்
லெபனன்
இஸ்ரேல்
சிரியா
டமாஸ்கஸ்
பாக்தாத்
தெஹ்ரான்
ஆப்கானிஸ்தான்
இராக்
இரான்
அம்மான்
ஜோர்டான்
கைரோ
குவேத்
பாகிஸ்தான்
லிபியா
எகிப்து
ரியாத்
கடார்
ஓமான்
மஸ்கட்
சவுதி அரேபியா
நைஜர்
அரபிக்கடல்
சூடான்
ஏமன்
சாத்
சானா
மத்திய கிழக்கு நாடுகள்
ஏடன்
எதியோப்பியா

படம் 8.

இங்ஙனமாகப் பாலஸ்தீனத்தை யூதர்களின் தாய்த்திரு நாடாக ஆக்கிவிடுவது என்னும் ஏற்பாடு, பாலஸ்தீனத்து மக்கள் தொகையின் மிகப் பெரும்பான்மையான அராபிய மக்களை அதிர்ச்சிக்குள்ளாக்கிற்று. ஏனென்றால், போர் முடிவுக்குப்பின் அதே பாலஸ்தீனத்தில் வாழ்ந்த அராபிய மக்களுக்கும் சுதந்தரம் வழங்கப்படுமென்றும் முற்கூட்டியே ஒரு வாக்குறுதி வழங்கப்பட்டிருந்தது. முன்னுக்குப் பின் முரணான, ஏட்டிக்குப் போட்டியான இவ் வாக்குறுதி பிரிட்டனைச் சங்கடமான சிக்கலில் கொண்டுபோய்த் தள்ளிவிட்டது.

## யூதர்களின் வாதம்

'எகிப்து நாட்டுக் கொடுங்கோலனாகிய ஃபேரோ மன்னனின் பிடியினின்று இஸ்ரவேலர்களாகிய எங்களை விடுவித்து, செங்கடலைக் கடந்து, எங்களைக் கொணர்ந்து கரையேற்றி மீட்பித்தார் மோசே. அப்பொழுது நாங்கள் வந்து குடியேறிய புண்ணிய பூமிதான் பாலஸ்தீனம். ஏதோ அறியாமையாலோ அல்லது மூர்க்கத்தனத்தாலோ எங்கள் முன்னோர்கள் சில தவறுகளிழைத்து, யூதகுல வேந்தர்களின், தீர்க்கதரிசிகளின் முனிவுக்கு ஆளாகி, தாயகமிழந்து, தறிகெட்டு, உலகெங்கும் பரவி, பல நாடுகளிலும் சிதறுண்டு போய் விட்டார்கள். அவர்களுடைய வழித்தோன்றல்கள் நாங்கள். மோசே காலத்து, தாவீது காலத்து, சாலொமோன் காலத்துப் பாலஸ்தீனம் எங்களுக்கே உரியது. இதற்குத் தெய்விக அனுமதியும், வேத பூர்வமான அத்தாட்சியுமுண்டு. எனவே, பல ஆயிரம் ஆண்டுகள் கடந்துவிட்டன என்றாலும், எங்கள் வாரிசுரிமைச் சொத்து எங்களுக்கேதான் உரியது; இச் சொத்தை எங்கள் வசமே மீட்பித்துத் தந்துவிட வேண்டும். 'பாலஸ்தீனம் எமதே!'—இதுவே யூதர்களின் கூக்குரல்.

## அராபியர்களின் எதிர்வாதம்

'உங்கள் யூதகுலத்து வேந்தர்களும் தீர்க்கதரிசிகளுமான மோசே, தாவீது, இயேசு ஆகியோரின் கோபத்துக்கும் சாபத்துக்கும் நீங்கள் இரையானவர்கள். இறைவனே உங்கள்மீது முனிவுற்று, உங்களைத் தண்டித்து, விஷமம் புரிந்த உங்களை நாடுகடத்தி, நீங்கள் சிதறுண்டு போகும் வண்ணம் செய்து, பாலஸ்தீனத்தை எங்களுக்கு உரிமையாக்கித் தந்துவிட்டான். உங்கள் விவிலிய வேதமும் எங்கள் குர்ஆன் திருமறையும் இதற்குப் போதிய சாட்சியங்களை வழங்குகின்றன. உங்கள் தவற்றால், பாவத்தால் உங்கள் நிலையை நீங்கள் இழந்தீர்கள்;

இல்லத்தைத் துறந்தீர்கள்; அதை நிரந்தரமாய்ப் பறிகொடுத்து விட்டீர்கள். எனவே, உங்களுக்கு வீடு இல்லையென்றால், எங்கள் வீட்டிலிருந்து எங்களை விரட்டியடிப்பதா? இது இறைத் தூஷணம்!' என்பது அராபியரின் எதிர்வாதம். மற்றும், 'எங்கள் மதத்தவர்களான துருக்கியரை எதிர்த்து ஆங்கிலேயர்களுக்கு ஆதரவாக முதல் உலகப் பெரும் போரில் உதவி நல்கிப் போர் புரிந்தோமே! அதற்காகவாவது, அந் நன்றிக்காகவாவது எங்களுக்குச் சுதந்தர நாடு என்று ஒன்றைக் கொடுக்கா விட்டாலும், எங்களைச் சுதந்தரமாகக்கூட வாழவிடாமல், பெரும்பான்மையான மக்களான எங்களைத் துண்டு போட்டுச் சிறுபான்மையோராக ஆக்கிவிடுவதா? நீண்ட நெடுங்காலமாக, தலைமுறை தலைமுறையாக நாங்கள் வாழ்ந்துவரும் எங்கள் நாட்டை எங்களுக்கும் யூதர்களுக்குமிடையே பங்கிடுவது என்ன நியாயம்?' என்றும் கிலேசத்துடன் வாதிடுமளவுக்கு, யூதர்கள் மீது அராபியர்களுக்கு அடக்கொணா உதிரக் கொதிப்பு ஏற்பட்டது.

### நிலம் வாங்கல்-விற்றல் சட்டம்—அராபியரின் மற்றோர் அவதி

அராபியர்களுள் பெரும்பாலானோர் ஏழைகள்; யூதர்களோ, ஏறத்தாழ எல்லோருமே பணக்காரர்கள். நிலத்தை வாங்கலாம்-விற்கலாம் என்னும் உரிமைச் சட்டம் பிறப்பிக்கப்பட்டது. சிறுகச் சிறுக இதனால் அராபிய நிலங்களெல்லாம் ஏழை அராபியர்களின் கையை விட்டுப் பணக்கார யூதர்களின் கைக்கு மாறிவிடலாமே! அராபியர்கள் என்றென்றைக்கும் தலைமுறை தலைமுறையாய்க் குடியிருந்து வந்த தங்கள் சொந்தத் தாய் நாட்டிலேயே (அதாவது பாலஸ்தீனத்தில்) ஏழை யாசகரான பரதேசிக்கோலத்தில் வாழவேண்டிய நிலைமைதானே வந்து விடியும்? 'இதற்கோ உதிரம் சிந்தினோம், முதல் உலகப் பெரும் போரில்!' என்பது அராபியரின் அவலக் கவலை.

### ஜெர்மன் யூதர்கள் பாலஸ்தீனத்துள் வெள்ளம் போல் புகுந்தமை

மேற் கூறப்பட்ட உதிரக் கொதிப்புகளெல்லாம் போதா என்பதுபோன்று, ஜெர்மானி நாட்டுச் சர்வாதிகாரியாகிய ஹிட்லரின் எதேச்சாதிகார சகாப்தத்தில், யூதர்கள் அனைத்துத் துறையிலும் கொள்ளையர்களாய் விளங்குகிறார்கள் என்று குற்றஞ் சாட்டி, நாஜிகளென்னும் ஜெர்மானிய நாட்டுத் தீவிர தேசிய வாதிகள் அவர்களைக் கொடுமைப்படுத்தி, துன்பங்களுக்கு உள்ளாக்கி, வேதனைப்படுத்தி, நாட்டைவிட்டே விரட்டியடிக்கவே, வேறு வழியின்றி யூதர்கள் தங்கள் தாய்நாடென்னும் பாலஸ்

தீனத்துக்குள் கூட்டம் கூட்டமாகச் சென்று 1934-35-ல் குடி புகுந்தார்கள். முன்பு 1929-ல் தொடங்கிய அராபிய-யூத மோதல்களும் இரத்தக்களரிகளும் மேலும் மூர்க்கமடைய ஆரம்பித்து, 1936-ல் பொது வேலை நிறுத்தங்களாகவும், புரட்சி இயக்கமாகவும் உருவெடுத்து விட்டன.

இப் புரட்சி இயக்கம் மிகவும் கொடூரமான முறைகளால் பிரிட்டிஷ்காரர்களால் அடக்கப்பட்டது. பிரிட்டன் பல தூது கோஷ்டிகளையும், ஆணைக் குழுவுகளையும் பாலஸ்தீனத்துக்கு அனுப்பி அமைதியை நிலைநாட்ட முயற்சித்தும் பலனேற்படவில்லை. இரண்டாம் உலகப் பெரும் போர் முடிந்தவுடன், அமெரிக்காவும் பிரிட்டனும் பாலஸ்தீனத்தைச் சுதந்தர நாடென்று பிரகடனப்படுத்தவே, 'இஸ்ரேல்'[1] என்ற யூதர்களின் தாய்நாடு உருவெடுத்தது! அமைதி நிலவட்டுமே என்று பாலஸ்தீனத்தின் சில பாகங்கள் அராபியர்களின் சுதந்தர அதிகாரத்திலும் விடப்பட்டன.[2]

### சிரியா

உதுமானியப் பேரரசின் ஒரு மாநிலமாயிருந்த சிரியாகூட முதல் உலகப் பெரும் போரின் போது பிரிட்டிஷ் நேசக் கட்சிக்குத் துணையாக நின்று, துருக்கியை எதிர்த்துப் போரிட்டது. போர் முடிந்த பிறகு தங்களுக்குச் சுதந்தரம் கிடைக்குமென்று சிரியாவாசிகள் நம்பிக்கை வைத்திருந்தார்கள். ஆனால், 1918-ல் போர் ஓய்ந்ததும் அமீர் ஃபைசல் (Faisal) என்பார் 1920-ல் தம்மை சிரியாவின் அரசராகப் பிரகடனப்படுத்திக் கொண்டார்; எனினும், சான் ரீமோவில் கூடிய சர்வ தேச சங்க மாநாடு சிரியாவை ஃபிரான்சின் மேற்பார்வையில் விட்டு விட்டது. ஃபிரான்ஸ் சிரியாவை ஐந்து கடலோரப் பகுதிகளாகப் (Littorals) பிரித்து ஆட்சியைத் தொடங்கியது.

[1] 'இஸ்ராயீல்' என்பதே சரியான பெயர் உச்சரிப்பாகும். ஆங்கிலத்தில் இது Israel என்று வரையப்படுவதால், தமிழகப் பத்திரிகையாளர்கள் 1948 முதல் இதை 'இஸ்ரேல்' என்று தவருக வரைந்து, மக்களுள்ளத்துள் அத் தவற்றை உறுதிப்படுத்தி விட்டார்கள்.

[2] பாலஸ்தீனத்தில் யூதர்கள் சிறுபான்மையினராகவும், முஸ்லிம்கள் பெரும்பான்மையினராகவும் 1930ஆம் ஆண்டு வரையும் அதற்குப் பின்னரும் விளங்கி வந்தும், பல காரணங்களை முன்னிறுத்தி யூதத் தாயகம் கோரிய தீவிரவாதிகள் (Zionists) இலட்சக்கணக்கில் ஜெர்மானியிலிருந்தும் பல்வேறு ஐரோப்பிய அமெரிக்க நாடுகளிலிருந்தும் யூதர்களைத் தருவித்துப் பாலஸ்தீனத்தில் குடியேற்றி, அதை வெள்ளைக்கார யூதர்களின் பெரும்பான்மை நாடாக ஆக்கிவிட்டனர். அங்கே இன்றும் அமெரிக்க-ஐரோப்பிய யூதர்களின் அதிகாரமும் ஆதிக்கமுமே நீடிக்கின்றனவன்றி, ஆசியா, ஆப்ரிக்க நாடுகளிலிருந்து சென்று அங்கு நுழைந்த 'கறுப்பு' நிற யூதர்களுக்கு எந்தச் சலுகையோ, சகிப்புத்தனமோ காண்பிக்கப்படுவதில்லை என்று பல குரல்கள் குறை கூறி ஒலித்த வண்ணமிருக்கின்றன.

சிரியா நாட்டுத் தேசியவாதிகள், பண்டைய ரோமப் பேரரசின் 'பிரித்தாளும் முறை' (Divide and rule) ஆகும் இது என்றும், தங்களுக்குத் தீங்கிழைக்கப்படுகிறதென்றும், கிறித்தவர்களுக்கு மட்டும் சலுகைகளும் பாரபட்சங்களும் காட்டப்படுகின்றன வென்றும் கண்டித்துக் கிளர்ச்சி செய்யலானார்கள். ஃபிரெஞ்சு ஆட்சி சிரியா தேசியவாதிகளையும் மக்களையும் மேலும் அதிருப்தியும் வெறுப்பும் கொள்ளுமாறு செய்தது. சிரியாவை எட்டுப் பிரிவினை மாநிலங்களாக உருவாக்கி, ஃபிரான்சு பொது மக்களின் அபிப்பிராயங்களையும் எதிர்ப்புகளையும் மதிக்காமல் தன்னிச்சைப்படி நடந்து கொண்டது. இதன் விளைவாக, நாட்டில் மேலும் கலகமும் புரட்சியும் ஓங்கின.

### சிரியாவில் புரட்சி (1925)

இத்தகைய காரணங்களால் சிரியா நாட்டு மக்கள் கொதித்தெழுந்தனர். இக் கலகங்களை ஃபிரான்சு மிகக் குரூரமான வகையில் நசுக்கிவிட்டது. இப் புரட்சியின் முக்கிய அம்சம் என்னவெனில், முஸ்லிம்களுடன் கிறித்தவர்களான மரோனியர்கள் (Maronites) ஆர்மீனியர்கள் (Armenians) போன்றவர்களும் ஒன்று சேர்ந்து இணைந்து கொண்டனர். எனவே, முழு நாடே ஃபிரான்சை எதிர்த்துப் புரட்சி செய்தது.

### உலகப் பாதுகாப்புச் சபையின் தலையீடு

ஐக்கிய நாடுகள் சங்கத்தின் அங்கமான பாதுகாப்புச் சபையின் வற்புறுத்தலின்மீது ஃபிரெஞ்சுப் படைகள் சிரியாவை விட்டு வெளியேறின (1946). பிறகு, ஃபிரான்சுக்கும் சிரியாவுக்கும் ஏற்பட்ட உடன்படிக்கையின்படி, அது சுதந்தர அராபிய நாடாகியது.

### இராக்

1920-ல் சர்வதேச சங்கத்தின் ஆணையின்படி, இராக் கிரேட் பிரிட்டனின் மேற்பார்வைக்கும் அதிகாரத்துக்கும் முதல் உலகப் பெரும் போரின் முடிவுக்குப் பின் அடிமையாயிற்று. இராக்கும் போரில் பிரிட்டனை ஆதரித்து நின்று, துருக்கியை எதிர்த்துப் போர் புரிந்தது; இறுதியில் சுதந்தரம் அடைந்து விடலாம் என்ற நம்பிக்கையும் வைத்திருந்தது. பிரிட்டனும் அவ்வாறு வாக்குறுதி யளித்திருந்தது. ஆயின், அவ் வாக்குறுதியை அது நிறைவேற்ற வில்லையே என்று இராக்கிலுள்ள குடிமக்கள் கொதிப்புற்றனர்.

### இராக் சுதந்தரப் போருக்குக் காரணங்கள்

(1) சுதந்தர வாக்குறுதி நிறைவேற்றப்படாமை.

(2) அராபிய சுதந்தர இயக்க வளர்ச்சி.

(3) ஆசியா கண்டத்தில் அமைதியின்மை.

(4) மேனுட்டு ஆதிக்க நாடுகள்மீது எழுந்த கசப்பு.

இத்தகைய காரணங்களால் பிரிட்டனின் ஆதிக்கத்தை எதிர்த்து இராக்கியர் 1920-ல் கொதித்தெழுந்தனர். ஆனால், பிரிட்டனே அக் கலகங்களை யெல்லாம் அடக்கிவிட்டது. 1921-ல் ஃபைசல் என்பார் பிரிட்டனின் சம்மதத்தின்மீது இராக்கின் அரசராக முடிசூட்டப்பட்டார். ஆனாலும், பூரணமான முழுச் சுதந்தரம்தான் தேவை என்னும் கிளர்ச்சி ஓயவில்லை.

### இராக் சுதந்தர நாடாயினமை (1932)

இறுதியாக, 1932-ல் இராக்கும் சுதந்தர நாடாக ஏற்றுக் கொள்ளப்பட்டதுடன், அது சர்வதேச சங்கத்தின் முழுச் சுதந்தர அங்கத்தினனுகவுமாயிற்று. இவ்வாறுக, இராக்கும் சிரியாவைப் போல் மற்றொரு சுதந்தர அராபிய நாடாகியது.

### ஜோர்தான்

'ஜோர்தான் நதியின் அக்கரை நாடு' என்று அழைக்கப்பட்ட பிரதேசம் முதல் உலகப் பெரும் போர் முடிவில் 'ஜோர்தான்' (Jordan) என்ற புதுப் பெயருடன் சர்வதேச சங்கத்தின் ஆணையின்படி பிரிட்டனின் மேற்பார்வையிலும் ஆதிக்கத்திலும் கண்காணிக்கப்பட்டது. முதல் உலகப் பெரும் போர் நிகழ்வுற்ற காலத்தில் அராபியர்களான ஹுஸைன் அலீயின், மற்றும் அவருடைய இரு மைந்தர்களான அப்துல்லா, ஃபைசல் ஆகியோரின் தலைமையில் அராபிய மக்கள் எல்லோருமே பிரிட்டனுக்கு உதவியாகத் துருக்கி சுல்தானை எதிர்த்துப் போராடினுர்கள். இந் நன்றிக்கடனுக்காக, 1923-ல் பிரிட்டன் ஜோர்தான் அக்கரைப் பிரதேசத்தின் பழைய அரசரான ஹுஸைன் என்பவரின் மகனுன அமீர் அப்துல்லா என்பவரைத் தாற்காலிகமாகச் சுதந்தர நாடாக ஆக்கப்பட்ட ஜோர்தானின் மன்னராக ஆக்கிற்று. அதிலிருந்து அப்துல்லா தமது தந்திரமிக்க திறமையைக் கொண்டும், இராஜதந்திர யுக்திகளைக் கடைப்பிடித்தும் 1946-ல் தமது நாட்டைப் பூரண சுதந்தரமுள்ள நாடாக ஆக்கிக் கொண்டார். 'ஜோர்தான் என்கிற ஹாஷிமீ இராச்சியம்'

(Hashimite Kingdom) என்னும் புதுப் பெயரை அந் நாடு பெற்றுக்கொண்டது.

**லெபனன்**

முதல் உலகப் பெரும் போரின் ஆரம்பகாலம் வரையில் லெபனனும் உதுமானியப் பேரரசின் ஓர் அங்கமாகத்தா னிருந்தது. துருக்கி ஜெர்மானியுடன் கூட்டுச் சேர்ந்தவுடன், பிரிட்டிஷ்-ஃபிரெஞ்சுப் படைகள் லெபனனின் கடற்கரைப் பிரதேசங்களை ஆக்கிரமித்துக் கொண்டன. 1918-ல் போர் நின்ற பிறகு, லெபனனின் ஆட்சிப் பொறுப்பு ஃபிரான்சின் வசம் ஒப்படைக்கப்பட்டது. 1926-ல் லெபனனுக்கென்று ஃபிரான் சால் தயாரிக்கப்பட்ட அரசியல் சட்டம் கைகூடாமற்போகவே, 1932-ல் அச் சட்டம் நிறுத்திவைக்கப்பட்டது. இதனல் புரட்சியும் கிளர்ச்சியும் பரவ ஆரம்பிக்கவே, 1936-ல் ஃபிரெஞ்சு-லெபனன் உடன்படிக்கை ஒன்று ஏற்பட்டது.

1937-ல் மற்ருேர் அரசியல் சட்டம் பிரகடனப்படுத்தப் பட்டது; ஆனல், 1938-ல் ஃபிரான்ஸ் 1936ஆம் ஆண்டைய உடன்படிக்கையை நிராகரித்துவிட்டது. இதனல், மறுபடியும் லெபனனில் அமைதி குலைந்தது. 1941-ல் லெபனனுக்கு ஃபிரான்ஸ் சுதந்தரம் வழங்குவதாக அறிவித்தது. 1943-ல் நடந்த பொதுத் தேர்தலில் தேசியவாதிகள் மிகப் பெரும் பாலான இடங்களைப் பிடித்தனர். ஃபிரெஞ்சுக்காரர்கள் எப்படி யாவது லெபெனனைக் கைந்நழுவவிடக் கூடாதென்னும் கபடத் தனமான எண்ணங் கொண்டு, பலவிதமான இடையூறுகளையும் இடைஞ்சல்களையும் இழைத்த வண்ணம் இருந்தனர். ஆட்சி நிர்வாகத் துறைகளை இடம் விட்டு இடம் மாற்றுவது போன்ற பிரச்சினைகளில் ஃபிரெஞ்சுக்காரர்களுக்கும் லெபனன்வாசிகளுக் கும் இடையே ஏற்பட்ட கருத்து வேற்றுமைப் பூசல்களின் காரணமாக மோதல்கள் முற்றிவிடும் நிலைமை தோன்றவே, லெபனனின் ஜனதிபதியைக் கைது செய்து, அரசியல் சட்டத் தையும் செயலிழக்குமாறு செய்து விட்டது ஃபிரான்ஸ்.

ஆனல், ஏனைய அராபிய நாடுகளும், பிரிட்டனும், அமெரிக்காவும் லெபனன்வாசிகளின் (Lebanese) கோரிக்கை களை ஆதரிக்கலாயின. முடிவில், ஃபிரான்சுக்கும் லெபனனுக்கு மிடையே கையொப்பமிடப்பட்ட ஒப்பந்தப்படி, லெபனனி லிருந்து ஃபிரெஞ்சுப் படைகள் வாபசாகி, அதைச் சுதந்தர நாடாக 1946-ல் ஆக்கிவிட்டன.

**ஹிஜாஸ்**

ஹிஜாஸ் என்ற மற்றோர் அராபிய நாட்டுக் கதையும் பிற அராபிய நாடுகளின் கதையைப் போன்றதே! முதல் உலகப் பெரும் போரில் ஹிஜாஸின் அரசரான ஹுஸைன் என்பவர் பிரிட்டனுடன் தோழமை பூண்டு, துருக்கியை எதிர்த்தார். ஹிஜாஸையும் சுதந்தர நாடாக ஆக்குவதாக வாக்குறுதி தந்திருந்த பிரிட்டன் போர் நிறுத்தத்துக்குப் பின்னர் அவ் வாக்கை நிறைவேற்றாததால், தம்மையே அரசராக அமர்த்தி, ஹிஜாஸைச் சுதந்தர நாடாக்கிக்கொள்ள விழைந்த ஹுஸைனின் திட்டத்தை பிரிட்டனும் ஃபிரான்சும் ஏற்றுக்கொள்ள மறுத்தன. ஆனால், இராஜதந்திர யுக்தியுடன் அவை பின்னர்ச் சம்மதம் தெரிவித்தன.

சில ஆண்டுகளுக்குப் பின்னர், அப்துல் அஜீஸ் இப்னு சுஊத் (Abdul Azeez ibn Saud) என்ற வலிமையும் செல்வாக்கும் மிக்க மற்றொரு சிற்றரசர் தலைதூக்கவே, ஹுசைனின் இன்பக் கனவுகளெல்லாம் சிதறுண்டுபோயின. அரசியல் அறிவும், ஆற்றலும், இராஜதந்திரமும், தோள்வலிமையும் மிக்க இப்னு சுஊத் ஹுஸைனைத் தோற்கடித்து, ஹிஜாஸைத் தமது பிரதேசத்துடன் இணைத்துக் கொண்டுவிட்டார்.

இதனால், பிரிட்டன் தனக்கே உரித்தான நரித்தந்திர யுக்தியைக் கடைப்பிடித்து, தன் பழைய நண்பரான ஹுஸைனைக் கைவிட்டு, இப்னு சுஊதை ஆதரிக்க வாரம்பித்தது. 19_6-ல் மக்காவை அவர் கைப்பற்றியவுடனே அவரையே ஹிஜாசுக்கும் அரசராக்கி, 'சுஊதி அரேபியா' (Saudi Arabia) என்ற புதுப் பெயர் பூண்ட ஐக்கிய அராபிய நாடு முழுதுக்கும் அவரையே மன்னுதி மன்னராக 1932-ல் அராபியர்கள் ஏற்றுக்கொண்டு விட்டனர். இவ்வாறாக, 'சுஊதி அரேபியா' என்ற புது அராபிய அரசு நிறுவப்பட்டுவிட்டது.

**இஸ்ரேல்**

அராபிய முஸ்லிம் ஒற்றுமைக்கொரு முட்டுக்கட்டையாகவே ஐரோப்பிய வல்லரசுகள் இஸ்ரேல் (Israel) என்ற ஒரு புதிய நாட்டை இஸ்லாமிய மண்ணில் உற்பத்தி செய்து நிலைநாட்டியிருக்க வேண்டுமென்று முஸ்லிம் அறிஞர்களும் அரசியல்வாதிகளும் யூகிப்பதாகத் தெரிகிறது. ஆசியாவையும் ஐரோப்பாவையும் இணைக்கும் பெரும்பாகமான மத்திய கிழக்குப் பிரதேசமென்னும் பெரும் பாலத்தின் நடுவேயுள்ள 'இஸ்ரேலை' எவர்

தங்கள் செல்வாக்குக்கும் அதிகாரத்துக்கும் இரையாக்கி வருகிறார்களோ, அவர்களேதாம் ஐரோப்பா, ஆசியா, ஆப்ரிக்கா ஆகிய முக் கண்டங்களிலும் ஆதிக்கம் பெற்று உயர முடியும் என்பது ஐரோப்பிய வல்லரசுகளின் அனுபவபூர்வமான வரலாற்றுக்காரர்களின் பேராசையும்வரலாற்றுக் கணிப்புமாகும். இதுதான் 'இஸ்ரேல்' உற்பத்தியானதன் முக்கிய முதல்தர மான அரசியல் இரகசியமாகும்.

### இஸ்ரேல் தோற்றத்தின் வரலாற்றுச் சுருக்கம்

முதல் உலகப் பெரும் போரின் ஆரம்ப ஆண்டான 1914 வரையில் இன்றைய இஸ்ரேல் பிரதேசம் துருக்கி ஆதிக்கத்தில் தான் இருந்து வந்தது. முதலாவது உலகப் போர் முடிவில், 'பாலஸ்தீனம்' என்ற பழைய பெயர் தாங்கிய இப் பிரதேசம், சர்வதேச சங்கத்தின் ஆணையின்படி பிரிட்டனின் மேற்பார்வை யில் விடப்பட்டது.

### பால்ஃபர் அறிக்கை (Balfour Declaration)

அக்கால பிரிட்டனின் வெளிநாட்டு அமைச்சரான பால்ஃபர் பிரபு (Lord Balfour) என்பவரின் பெயரைத் தாங்கிய இப் பிரகடனம் யூதர்களுக்கென்று ஒரு தாயகம் தோற்றுவிக்கப் படும் என்பதை முக்கிய அடிப்படையாகக் கொண்டதாகத் திகழ்ந்தது. ஆனால், பாலஸ்தீனத்தின் மக்கள் தொகையில் பெரும்பான்மையோர் அராபியர்களாவர்.

மேற்கண்ட இத்தகைய இக்கட்டான, சங்கடமான சூழ்நிலை யில் பால்ஃபர் பிரகடனமும், ஜெர்மானிய யூதர்களின் தொடர் கும்பல் பாலஸ்தீனத்துள் வெள்ளம்போல் புகுந்தமையும், யூதர் களின் தனித் தாய்த் திருநாட்டுக் கோரிக்கையும், திக்கு முக்காடித் திணறடிக்கும் ஐரோப்பிய அரசுகளின் ஆழ்ந்த இராஜதந்திர போக்கும் அராபியர்களையும் யூதர்களையும் இன வெறியாட்டங்களில் மோதுறும்வண்ணம் முறுக்கிவிட்டமையால், இரத்த வெள்ளம் பாலஸ்தீனமெங்கும் ஆறுய்ப் பெருக்கெடுத் தோடியது.

### இஸ்ரேல் தோற்றம் (1948)

இவ்வளவு துன்ப மிகுந்த பிரசவ வேதனைகளுக்குப் பிறகு அமெரிக்கா-பிரிட்டனின் பிரசவ மருத்துவத்தினிடையே, நெடு நாளைய மலடியோர் செல்லக் குழந்தையை—செல்வக் குழந்தையைப் பெற்றுளென, 'இஸ்ரேல்' என்னும் யூதப் புது


இஸ்ரேல்
ஆக்கிரமித்துள்ள ஸ்தலம்
மத்தியதரைக் கடல்
லெபனான்
சிரியா
அம்மான்
ஜெருசலம்
ஜோர்டான்
இஸ்ரேல்
எகிப்து
சூயஸ்
அரேபியா
செங்கடல்

படம் 9.

நாடு பிறந்தது 1948-ல். சிறிய நாடாக இருந்தபொழுதிலும், இஸ்ரேல் தென்மேற்காசியாவில் ஒரு வலிமை மிக்க, சிறப்பு மிக்க, செல்வமிக்க நாடாக விளங்குகிறது. கஷ்டங்களைச் சமாளித்து, துன்பங்களை எதிர்த்துப் போராடி, 'வாழ்ந்தே தீருவோம்!' என்ற இலட்சியத்தை இஸ்ரேல் கைப்பிடித் திருப்பது போற்றிப் பாராட்டற்குரியதே.

## வட ஆப்ரிக்காவில் முஸ்லிம் தேசிய நாடுகளின் தோற்றம்

வட ஆப்ரிக்கா நெடுகிலும் பல்லாண்டுகளாக அன்னியப் பேரரசுகளின் ஆதிக்கத்தி லிருந்துவந்த பலப்பல முஸ்லிம் நாடுகள் இன்று சுதந்தர நாடுகளாக மாறியுள்ளன. அவற்றுள் மிக முக்கியமானவை, எகிப்து, அல்ஜீரியா, தூனிஸ், லிபியா ஆகியனவாகும். அவற்றின் தோற்றமும், வளர்ச்சியும்பற்றிய வரலாற்றுச் சுருக்கம் பின்வருமாறு:

### எகிப்து (Egypt)

உதுமானியப் பேரரசின் அங்கமாக எகிப்து பல நூற்றாண்டு களாக இருந்து வந்தது. 1882-லிருந்து, பிரிட்டன் எகிப்தில் பல்வேறு துறைகளிலும் பெருஞ் செல்வாக்குட னிருந்துவந்த தெனினும், 1914 வரையில் துருக்கி சுல்தானின் ஆட்சிக் கொடிதான் எகிப்தில் பறந்துகொண்டிருந்தது. முதல் உலகப் போர் ஆரம்பித்தபோது, எகிப்தின் பாதுகாப்பையும் ஆட்சியை யும் பிரிட்டன் ஏற்றுக்கொண்டு, போர் முடிவில் எகிப்துக்குச் சுதந்தரமளிப்பதாக வாக்குறுதியும் அளித்தது.

எகிப்தின் பெரும் தலைவர்களும், சீர்திருத்தவாதிகளும், சிந்தனைவாதிகளும், அறிஞர்களுமான ஜமாலுத்தீன் ஆப்கானி, முகம்மது அப்து (Mohamed Abduh), ரஷீத்ரசா (Rasheed Raza), ஃபரீத் வஜ்தி (Farid Wajdi) போன்றோர் எகிப்திய பொது மக்களிடையே தங்கள் நாட்டின் முன்னேற்றப் பாதைக்கான பேரெழுச்சியையும் விழிப்புணர்ச்சியையும் எகிப்திய தேசியத் துறைகள் பலவற்றிலும் ஊட்டிவிட்டு, ஊக்குவித்து, பெரும் புனருத்தாரண மாற்றங்களையும் கிளர்ச்சிகளையும் உற்பத்தி செய்து விட்டிருந்தார்கள். ஆனால், 1918-ல் போர் நின்ற வுடனே, சஅத் ஜாஹ்லூல் பாஷா (Saad Zaghul Pasha) என்னும் புகழ் வாய்ந்த, ஆற்றல் மிக்க தேசியத் தலைவரின் குரல் வீர கர்ஜனையை எழுப்பி, எகிப்திய சுதந்தரக் கிளர்ச்சிக் கோரிக்கை யைக் கடலலையென எங்கும் பரப்பிவிட்டது.

**பாரிஸ் மாநாடு**

இது சம்பந்தமாக, சஅத் ஜாஹுல் பாஷாவும் அவர்தம் சகாக்களும் பாரிஸ் மாநாட்டுக்கு அழைக்கப்பட்டனர். ஆனால், எந்த ஓர் ஒப்பந்தமும் திருப்திகரமா யில்லாததால், வெறுங் கையுடன் நாடு திரும்பினர் அத் தலைவர். மறுபடியும் சுதந்தரக் கிளர்ச்சி ஆரம்பிக்கப்பட்டது. இதன் விளைவாக, ஜாஹுல் பாஷா கைது செய்யப்பட்டார். இதனால் நாடெங்கும் கிளர்ச்சி காட்டுத் தீயெனப் பரவிற்று. இதையடக்கி நசுக்க, 60,000 பேர் அடங்கிய பிரிட்டிஷ் படையொன்று தேவைப்பட்டது.

ஆனால், கிளர்ச்சி என்னவோ அடங்கிற்றில்லை. எகிப்திய தேசிய விடுதலை உணர்ச்சியை அடக்க முடியாதென்பது நிரூபணமாகவே, 1922-ல் எகிப்தும் ஒரு சுதந்தர நாடென அங்கீகாரம் பெற்றது. இருப்பினும், அது பலப்பல சங்கடங்களைக் கடக்க வேண்டியிருந்தது. முடிவில், 1937-ல் எகிப்தும் சர்வதேச சங்கத்தில் சரிநிகர் சமானமான அங்கம் வகிக்கலாயிற்று. இரண்டாவது உலகப் பெரும் போரிலும் நேசக்கட்சி நாடுகளுடன் அது சேர்ந்து போர் புரிந்தது; ஐக்கிய நாடுகள் சபையிலும் அது அங்கம் வகித்தது. 1952-ல், ஊழல்களில் நீந்தித் திளைத்துக்கொண்டிருந்த ஃபாரூக் (Farook) மன்னரை வீழ்த்தி, தன்னையொரு குடியாட்சி நாடாகப் பிரகடனம் செய்துகொண்டது, எகிப்து. பதினெட்டு ஆண்டுகட்குப் பின், குடியாட்சி என்ற அதன் பெயரும் மாறி, 1971-ல், 'எகிப்து அரபுக் குடியரசு' (Arab Republic of Egypt) என்ற புதுப் பெயருடன் அது இன்றைய அராபிய உலகில் ஒரு முக்கிய ஸ்தானத்தை வகிக்கிறது. அன்வர் சஅதத் என்பவரின் ஜனாதிபதி ஆட்சி நடைபெறுகிறது இன்றைய எகிப்தில்.

**அல்ஜீரியா (Algeria)**

ஆப்ரிக்கா கண்டத்திலேயே மூன்றாவது பெரிய நாடாகும், வட ஆப்ரிக்காவைச் சேர்ந்த அல்ஜீரியா. கி.பி ஏழாம் நூற்றாண்டில் அல்ஜீரியாவை அராபியர்கள் வென்றார்கள். பெர்பெர் (Berber) வம்சத்தினர் அல்ஜீரியாவை நீண்ட நெடுங் காலம் வரை ஆண்டார்கள். 16ஆவது நூற்றாண்டின் ஆரம்ப ஆண்டுகளில் ஸ்பெயின் நாடு அல்ஜீரிய கடற்கரைப் பிரதேசங்களை வென்றது. பெர்பெர் சுல்தானும் ஸ்பெயின் ஆதிக்கத்தை ஏற்று ஆட்சிநடத்தச் சம்மதித்தார். ஆனால், இதை எதிர்த்து அல்ஜீரிய முஸ்லிம் மக்கள் துருக்கிக் கடற்கொள்ளைக்காரர்களின் உதவியை நாடினர்.

துருக்கி சுல்தானும், வலிமைமிக்க படையொன்றை உடனே உதவிக்கு அனுப்பினார். இதனால், ஸ்பானியர்கள் அல்ஜீரியாவினின்று விரட்டியடிக்கப்பட்டதுடன், அல்ஜீரியாவும் உதுமானியப் பேரரசின் ஓர் அங்கமாயிற்று. இவ் வங்கம் மூன்று நூற்றுண்டுகள் வரை நீடித்தது. 1830-ல் ஃபிரான்சு துருக்கிய அல்ஜீரியாவைத் தாக்கவே, துருக்கிய சம்பந்தம் அல்ஜீரியாவை விட்டு நீங்கியது. ஃபிரெஞ்சுப் படையை எதிர்த்துப் பல ஆண்டுகள் வரை போராடியும் பயனில்லாமல், முடிவில் அல்ஜீரியா ஃபிரெஞ்சு ஆட்சியை 1848-ல் ஏற்றுக் கொள்ள வேண்டியதாயிற்று. 1848-லிருந்து 1962 வரையில் அல்ஜீரிய மக்கள் தங்கள் சுதந்தரத்துக்காகப் போராடினார்கள்— (அதாவது 104 வருடங்கள் வரை).

கணக்கற்ற கலகங்கள், புரட்சிகள், இரத்த வெள்ளங்கள், இனவெறி, மதவெறிக் கொள்ளை கொலைகள் இவற்றுக்கெல்லாம் பிறகு, 1962-ல் ஃபிரெஞ்சு ஜனாதிபதியான சார்லஸ் டி கால் (Charles de Gaulle) காலத்தில் அல்ஜீரியா பிரெஞ்சு ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்றது. முதலாவது தேசியத் தேர்தலுக்குப் பிறகு, 'அஹமத் இப்னு பல்லா' (Ahmad Ben Bella) என்பவரை முதலாவது பிரதம மந்திரியாக ஏற்றுக் கொண்டார்கள் அல்ஜீரிய மக்கள்.

1963-ல் அஹமத் இப்னு பல்லா அல்ஜீரியாவின் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஆனால், இரண்டு ஆண்டுகட்குப் பின் (1965-ல்) அவர் பதவியிலிருந்து அகற்றப்படவே, அல்ஜீரியாவில் இராணுவ ஆட்சி ஏற்பட்டது. இன்று, அல்ஜீரியா அராபிய உலகில் மிக முக்கியமான பங்கேற்றுச் செயலாற்றுகிறது. அல்ஜீரியாவின் இராணுவ ஆட்சியின் தலைவர் கர்னல் ஹூரி பௌமிதீன் (Col. Houri Boumedienne) ஆவார்.

**தூனிஸ் (Tunis)**

இன்று, தூனிசியா என்னும் வட ஆப்ரிக்காவைச் சேர்ந்த நாடு, ஒரு சுதந்தரக் குடியரசு நாடாகும். பண்டைக் காலத்தில் எத்தனையோ அரசுகளால் ஒன்றன்பின் ஒன்றாக ஆளப்பட்டு வந்த இந் நாட்டை, அராபியர்கள் ஏழாம் நூற்றுண்டில் வென்றார்கள். அதன் பின்னர் எத்தனையோ வல்லரசுகளால் ஆளப்பட்டபின் கடைசியில், 1574-ல், உதுமானிய ஆட்சியின் கீழ் வந்தது, தூனிசியா. ஆனால், உள்நாட்டுச் சுதந்தரம் அளிக்கப்பட்டது, உதுமானியப் பேரரசின் கீழ். 1705-ல்

ஆரம்பித்த ஹுஸைன் வம்ச ஆட்சி, 1957-ல் நிறுவப்பட்ட குடியரசுக் காலம் வரையில் நீடித்தது.

1848-ல் ஃபிரெஞ்சு அரசாங்கத்தின் அங்கமாக்கப்பட்டது, அல்ஜீரியா. இக் கதி தனக்கும் ஏற்பட்டுவிடக் கூடாதேயென்று தூனிசியா, 33 ஆண்டுகள் நெடுக ஃபிரெஞ்சுப் படையெடுப்புகளை எதிர்த்துப் போராடத் தன்னைப் பல வகைகளிலும் வழிகளிலும் தயார் செய்து கொண்டிருந்தது. ஆயினுமென்! 1881-ல் ஃபிரெஞ்சுப் படையெடுப்பு நிகழ்வுற்றபோது தூனிசியாவும் ஃபிரெஞ்சுப் பேரரசின் ஓர் அங்கமாக வேண்டி நேர்ந்தது.

முதல் உலகப் பெரும் போர் முடிவடைந்தவுடன், தனக்கு அதிக சுதந்தர அதிகாரங்களை அளிக்க வேண்டுமென ஃபிரெஞ்சு அதிகாரிகளிடம் மன்றாடியது தூனிசியா. ஆனால், பயனேதும் கிட்டவில்லை. இரண்டாம் உலகப் போர்முடிவுற்ற பின், கிழக்கு அரபு நாடுகள் சுதந்தரம் அடைந்ததையும், எகிப்தில் வீறிட்டுக் கிளம்பிய தேசிய சுதந்தர உணர்ச்சிகளையும் கிளர்ச்சிகளையும் கண்ட தூனிசியர்கள், தேசிய சுதந்தர உணர்ச்சி கொண்டு, ஹபீப் பூர்ஜிபா (Habib Bourjuiba)[1] என்ற பெருந் தலைவரின் கீழ், முழுச் சுதந்தரம் கோரி நாடெங்கும் கிளர்ச்சிகள் பல செய்தனர்.

அமைதியான முறைகள் பலனளிக்காது போகவே, முடிவில் கொரில்லா முறைகளான (Guerrilla Warfare) திடீர்த் தாக்கல், திடீர் மறைதல் என்ற திக்குமுக்காடச் செய்யும் சண்டைகளை மக்கள் நாடெல்லாம் நிகழ்த்தத் தொடங்கவே, 1956-ல் ஃபிரான்சு தூனிசியாவுக்குச் சுதந்தரம் அளித்தது. 1957-ல் மன்னராட்சி ஒழிக்கப்பட்டு, அது குடியாட்சி நாடாக மாறியது. ஹபீப் பூர்ஜிபா புதுக் குடியாட்சியின் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

லிபியா (Libya)

பண்டைக் கால கட்டங்களில் முதலில் கிரேக்கர்களாலும், அடுத்து ரோமானியர்களாலும் லிபியா ஆளப்பட்டு வந்தது. ஏழாம் நூற்றாண்டில் அராபியர்கள் லிபியாவை வென்றார்கள்; 1551-ம் வருடம் வரை ஆண்டார்கள். கி.பி. 1551-லிருந்து 1912வரை அதை உதுமானிய துருக்கியர்கள் ஆண்டார்கள். 1911-ல் துருக்கிமீது போர் தொடுத்த இத்தாலி, லிபியாவின்

[1] ஹபீப் அபூ ரக்கீபா என்னும் அராபியப் பெயரின் ஃபிரெஞ்சு உச்சரிப்பு இது.

மீது படையெடுத்தது. துருக்கி தோல்வியடைந்து லிபியாவை 1912-ல் இத்தாலிக்குக் கொடுத்துவிட்டது.

அடுத்து, இருபது ஆண்டு காலம்வரை லிபியாவிலுள்ள மக்கள் ஆயுத பலத்துடன் இத்தாலிய அரசாங்கத்துடன் தொடர்ந்து போராடினர். இரண்டாம் உலகப் போரில் இங்கிலாந்து, ஃபிரான்சு, அமெரிக்கா, ருஷியா ஆகிய வல்லரசுகளின் படைகள் லிபியாவிலிருந்த இத்தாலிய-ஜெர்மானியப் படைகளை எதிர்த்துப் போர் புரிந்தன.

இரண்டாம் உலகப்போரில் ஜெர்மானியர்களும் இத்தாலியர்களும் தோல்வியடைந்த பின்னர், இங்கிலாந்தும் ஃபிரான்சும் லிபியாவை (Libya) ஆளத் தொடங்கின. இறுதியில், பிளவுபட்ட சிறு சிறு பகுதிகளை ஒன்றாக்கி, 1951-ல் லிபியாவுக்குச் சுதந்தரமளித்தது, ஐக்கிய நாடுகளின் சபை. இத்ரீஸ் (Idris) என்பவர் சுதந்தர லிபியாவின் அரசரானார்.

1951-லிருந்து 1969 வரை, அதாவது பதினெட்டு ஆண்டுகள் வரை, சட்டத்திற்கு அடங்கிய அரசாட்சி லிபியாவில் நடைபெற்றது. ஆனால், எதிர்பாராத விதமாக, 1969-ல் செப்டம்பர் மாதத்தில் நடந்த இராணுவப் புரட்சியால் அரசாட்சி நீக்கப்பட்டு, அப் புரட்சியாளர்களால் ‘லிபிய அராபிய குடியாட்சி’ (Libyan Arab Republic) என்னும் அரசியலமைப்புப் பிரகடனப்படுத்தப்பட்டது. இன்று, கர்னல் முஅம்மர் கத்தஃபி (Col. Muammar Gaddafi)என்ற இளம் இராணுவ ஜனாதிபதியின் கீழ் மத்திய கிழக்குப் பிரதேசங்களின் அரசியல்-பொருளாதார-சமுதாய விவகாரங்களில் லிபியா முக்கியப் பங்கேற்றுச் செயல் புரிந்து வருகிறதென்பது குறிப்பிடத்தக்கதாகும். மேலும், கர்னல் முஅம்மர் கத்தஃபியின் இராணுவ ஆட்சியின்கீழ், லிபிய அராபிய குடியாட்சியானது பல துறைகளில் போற்றத்தக்க முன்னேற்றம் அடைந்து வருகிறது. விஞ்ஞானத் தொழிற் புரட்சியின் பயனால், விரைவால் லிபியா நவீன நாடாக மாறி வருகிறது.

## முடிவுரை

## (Epilogue)

இவ்வாறாக, முதலாவது, இரண்டாவது உலகப் பெரும் போர்களுக்குப் பின்னர், அரேபியாவிலும் ஆப்ரிக்காவிலும் பலப் பல புதிய புதிய முஸ்லிம் தேசிய அரசுகள் தோன்றின. சில தேசிய அரசுகள் மன்னர்களால் ஆளப்பட்டு வந்தன; மற்றவை குடியாட்சிகளாகக் காட்சியளித்தன. சில நாடுகளில் அரச ராட்சி ஒழிக்கப்பட்டுக் குடியாட்சி நிறுவப்பட்டது. இந் நவீன முஸ்லிம் அரசுகள் எல்லாம் இன்று 'அராபிய லீக்' (Arab League) என்ற முஸ்லிம் கூட்டாளிகளாக இணைந்து, பிணைந்து, முனைந்து, அனைத்து உலக நாட்டுப் பிரச்சினைகளிலெல்லாம்கூட முக்கியப் பங்கேற்பது நற் செய்தியாகும். இதோடு, ஐரோப்பாவுக்கும் ஆசியாவுக்கும் இடையே உள்ள இப் புது அரசுகள், 'அரசுகளின் சமநிலை வலிமை' உடையனவாக இருக்கின்றன. மேலும், ஐரோப்பியர்களுக்கும் ஐரோப்பியரல்லாத மரபினர்க்கும் இடையேயும் அதே நிலையை அவை கடைப்பிடிக்கின்றன. ஆன்ம நிலையிலும், ஆட்சி நிலையிலும் தோன்றியுள்ள புதிய எழுச்சியுடன், தென்மேற்காசிய நாடுகள் அகில உலக அரசியலில் (International Politics) முடிவுகளை உருவாக்கும் வல்லமை பெற்றவைகளாகத் திகழலாம்.

நாகரிக உலகின் வரலாற்றில் தென்மேற்காசியா பெரும் பங்கு வகித்திருந்தது. வரலாற்றின் விடியற் பொழுதிலிருந்து இந் நில பாகம், ஆசியாவுக்கும் ஆப்பிரிக்காவுக்கும் ஐரோப்பாவுக்குமிடையே ஒரு முக்கிய நிலவியல் பாலமாக (Geographical Bridge) இருந்தது. பண்டைய நாகரிகங்களின் தாயகமாகவும், முப்பெரும் சமயங்களின் பிறப்பிடமாகவும், வரலாற்று முறையில் அது உலகின் பல நாகரிகங்களைப் பாதித்துள்ளது. ஹிந்த் (Hind) எனப்பட்ட இந்தியாவைத் தங்கள் இரண்டாம் தாயகமாகக் கருதுகின்ற அளவுக்குத் தென்மேற்காசிய மக்கள்

இந்திய துணைக்கண்ட (Indian Sub-continent) மக்களுடன் நெருங்கிய வாணிபத் தொடர்பும், பண்பாட்டுத் தொடர்பும் கொண்டிருந்தனர். இத் துணைக் கண்டத்தின் கடற்கரையோரப் பகுதிகளில் அமைந்திருந்த அராபிய குடியிருப்புகளே இதற்குத் தக்க வரலாற்றுச் சான்றுகளாக உள்ளன.

தென்மேற்காசியாவில் நிகழ்ந்த பல வரலாற்றுப் புரட்சிகளால் இந்திய வரலாறு பெரிதும் பாதிக்கப்பட்டது. ஆரியர் காலந்தொட்டு, அகமத்ஷா அப்து அலீ (Ahmad Shah Abdali) காலம் வரையில் அயல்நாட்டுப் படையெடுப்பாளர் அனைவரும் கைபர் கணவாய் (Khyber Pass), போலன் கணவாய் (Bolan Pass) வழியாக நுழைந்து, வட இந்தியாவை ஓர் அரசியல் போர்க்களமாக ஆக்கி, இந்திய வரலாற்று நிகழ்ச்சிகளின் போக்கைப் பெரிதும் பாதிக்கும் வண்ணம் செய்துள்ளனர். இந்திய வரலாற்றுப் போக்குகளையும் எதிர்ப்போக்குகளையும் நன்கு அறிந்துகொள்வதற்குத் தென்மேற்காசிய நாடுகளின் வரலாற்றையும் பண்பாட்டினையும் அறிந்து கொள்வது தவிர்க்க முடியாததாகும்.

தென்மேற்காசியாவில் வீழ்ச்சியுற்ற பல பேரரசர்கள் இந்தியாவில் பல பேரரசுகளை நிறுவியுள்ளனர். மேலும், பல பேராவல் மிக்க, துணிச்சல் மிகுந்த படைத்தளபதிகள் இந்தியாவில் புதிய அரசுகளை நிறுவ, காலத்தோடு பெரிதும் போராடி இருக்கின்றனர். அத்தகைய பேரரசர்களும் அரசர்களும் இந்திய வரலாற்றிலும் இந்திய பண்பாட்டிலும் இந்திய சமூகத்திலும் தங்கள் முத்திரைகளைப் பதித்துச் சென்றுள்ளனர். இந்திய சமுதாயத்தின் வளர்ச்சியை நன்கு அறிவதற்குத் தென்மேற்காசிய வரலாற்றை ஆழ்ந்து கற்பது பெரிதும் அவசியமாகிறது.

**கிலா:பத்—ஒரு மேல்நோக்கு (Caliphate, a survey)**

கி.பி. ஏழாம் நூற்றுண்டின் முற்பகுதியில் ஓர் ஒப்பற்ற, தன்னிகரில்லாத அரசியல்—சமூக—சமய இயல் நிறுவனம் மலரத் தொடங்கியது. அதுவே கிலாஃபத் நிறுவனமாகும்—(Institution of Caliphate). இஸ்லாம் வளர வளர, விரிவடைய விரிவடைய இந் நிறுவனமும் ஒரு முக்கிய அரசியல் சக்தியாக மாறிற்று. மதீனாவில் (Madina) ஆண்ட வைதிகப் பண்புள்ள கலீஃபாக்களால் (The Orthodox Caliphs, 632—661 கி.பி.) உருவாக்கப்பட்ட சமூக இராணுவ (Civil and Military) ஆட்சிமுறையின் அடிப்படைக் கொள்கைகள் டமாஸ்கஸில் (Damascus) ஆண்ட உமையா கலீஃபாக்களால் (Ummayad Caliphs, 661—750

கி.பி.) மேலும் விரிவாக்கப்பட்டன. பாக்தாதை ஆண்ட அப்பாஸிய கலீஃபாக்கள் (Abbasid Caliphs, 750—1258 கி.பி) காலத்தில், சமூக-இராணுவ நிறுவனங்கள் பாரசீக மயமாக்கப் பட்டன. இதன்மூலம் முஸ்லிம் ஆட்சி முறைக்கு வழி கோலப் பட்டது. அதுவே பிற்காலத்தில் இஸ்லாமிய உலகின் பல பகுதி களையும் ஆண்ட சுல்தான்களுக்கு (Sultans) ஒரு முன்மாதிரி யாகவும் அமைந்தது. இந்தியாவை ஆண்ட முஸ்லிம் ஆட்சி யாளர்கள் அனைவரும் தங்களின் ஆட்சிமுறைகளை அப்பாஸியர் களின் ஆட்சிமுறையின்படி அமைத்துக் கொண்டனர். இதுவே பிற்காலத்தில் ஆங்கில ஆட்சியாளர்களால் சற்று மாற்றியும் திருத்தியும் அமைக்கப்பட்டது.

அரசியல்-பண்பாட்டு ரீதியில் தென்மேற்காசியாவின் பெரும் பகுதியை உதுமானிய கலீஃபாக்கள் (The Ottoman Caliphs) நவீன காலத்தின் தொடக்க கட்டத்தில் தங்கள் ஆதிக் கத்தின்கீழ்க் கொண்டுவந்தனர். அந்த உதுமானிய கலீஃபாக் களால் பேருக்கம் பெற்ற பல இந்திய சுல்தான்கள் தங்களின் அரசியல்-பண்பாட்டு நிறுவனங்களை (Political and Cultural Institutions) மீண்டும் சீராக்கிக் கொண்டனர். உதுமானிய கலீஃபாக்கள் ஐரோப்பியருடன் ஒரு போர் நிலையிலேயே இருந் தனர். இதுவே உலகின் இரு பெரு சமயங்களான இஸ்லாத் துக்கும் கிறித்தவத்துக்கும் நீடித்த அரசியல் பூசலுக்குக் காரணமாயிற்று.

புகழ்மிக்க பூகோளக் கண்டுபிடிப்புகளுக்குப் பின்னர் (Geographical Discoveries), போர்த்துகீசிய (Portuguese), டச்சு (Dutch), ஆங்கில (English), ஃபிரெஞ்சு (French) போன்ற பல ஐரோப்பிய வர்த்தக நாடுகள் வாணிபக் குடியேற்ற நாடுகளை (Commercial Colonies) நிறுவுவதில் தீவிர அக்கறை செலுத் தின. ஆசியாவிலும் ஆப்ரிக்காவிலும் குடியேற்ற நாடுகளை நிறுவுவதில், அராபியர்களையும் துருக்கியர்களையும் தங்களின் கடும் எதிரிகளாகவே ஐரோப்பியர்கள் கருதினர். உண்மையில், கிறித்தவர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் வரலாற்றின் தொடக்க காலத்திலிருந்து நிகழ்ந்து வந்திருக்கிற பூசல்களுக்கெல்லாம் காரணம் வர்த்தகப் போட்டியே யன்றி, சமயமன்று.

ஐரோப்பிய நாடுகள் அனைத்தும் மத்திய கிழக்கு நாடுகளைத் தங்களின் பெரும் விரோதிகளாகக் கருதின. இதற்குக் காரணம் மத்திய கிழக்கின் பூகோள அமைப்பும், வர்த்தகமும், அதன் முக்கியத்துவமுமாகும். இம் முக்கிய காரணங்களால் கிறித்தவர்

களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையே பல போர்கள் நடந்தன. அப் போர்களின் எதிரொலியின் அலைகள் இந்திய வரலாற்றின் போக்கைப் பெரிதும் பாதித்தன.

இரண்டாம் உலகப் பெரும் போர் முடிந்தபின், தென் மேற்கு ஆசியாவின் தேசப்படம் பல மாறுதல்களைப் பெற்றுக் கொண்டது. அதில் மிகவும் குறிப்பிடத்தக்க மாறுதல், பாலஸ்தீனத்தில் உருவாக்கிவிடப்பட்ட புதிய யூத நாடாகும். பெய ரளவில் அந் நாடு யூதர்களின் தாயகமென்று அழைக்கப் பட்டாலும், அந்த இஸ்ரேல் நாட்டில் ஐரோப்பிய, அமெரிக்க வெள்ளையர்களே நிரம்பி வழிகிறார்கள். ஆசிய மக்களிடையே உருவான ஓர் அமெரிக்க-ஐரோப்பிய குடியேற்ற நாடாகவே அது காட்சியளிக்கிறது. பாலஸ்தீனத்தில் பிறந்திராத, ஐரோப் பிய நாடுகளிலிருந்துவந்தே பெரும்பாலும் குடியேறியிருக்கிற அன்னியர்கள் நிரம்பியிருக்கிற இஸ்ரேலை இந்திய அரசு இன்றளவும் அங்கீகரிக்காமலிருப்பதற்கு இதுவும் ஒரு காரண மாகும். தென்மேற்காசிய நாடுகளில் வாழ்ந்த உள்நாட்டு மக்கள் அன்னிய ஆட்சியிலிருந்து விடுதலை பெற்றுச் சுதந்தர மடைந்திருக்க, பாலஸ்தீனத்தின் ஒரு பகுதியில் மட்டும் அன்னியர் வந்து குடியேறி, 'யூதத் தாயகம்' என்கிற பெயரால் ஒரு புதிய நாட்டை உருவாக்கி, உலக வரலாற்றில் அதிர்ச்சி யூட்டும் நிலைகளை உண்டுபண்ணி வருவதை நம் இந்திய அரசு துயருடன் கவனித்தே வருகிறது.

இவ்வாறு, இந்திய வரலாற்றை அறிய விரும்பும் ஒரு வருக்குத் தென்மேற்காசியாபற்றிய ஆழ்ந்த அறிவு இன்றியமை யாதது என்பது தெளிவாகிறது. மற்ற மொழிகளிலுள்ள ஆதார பூர்வமான சான்றுகளின் துணைகொண்டு, தென்மேற்காசிய நாடு களின் வாணிக-பண்பாட்டு நாகரிகங்கள் ஆசிய நாடுகளின் வாணிக-பண்பாட்டு நாகரிகங்களை எந்த அளவுக்குப் பாதித் துள்ளன என்பதை இந்நூலில் ஓரளவு விளக்க முயன்றுள்ளேன். மேலும், ஆசிய வரலாற்றின் அடிப்படைப் போக்குகளைத் தெற்றென அறிவதற்கு ஒரு தமிழ் மாணவற்கு இந் நூல் ஓரளவு உதவுமென முழுமனத்துடன் நம்புகிறேன்.

பிற்சேர்க்கை (அ)

# ஆசியாக் கண்டத்தைப்பற்றியும் அதன் பல்வேறு நிலஇயல் பிரிவுகளைப்பற்றியுமான குறிப்புரை

உலகிலேயே மிகப் பெரிய கண்டம் ஆசியாவாகும். இது மேற்கிலுள்ள யூரல்[1] மலைக்கும், கிழக்கிலுள்ள பசிபிக் கடலுக்கும் இடையே ஏறத்தாழ 4400 மைல்களும், வடக்கிலுள்ள வட துருவத்திற்கும், தெற்கில் பூமத்தியரேகைக்கருகிலுள்ள வெப்ப மண்டலப் பகுதிக்கும் இடையே சுமார் 6000 மைல்களும் கொண்டது. மேலும், உலகின் மொத்த நிலப்பரப்பில் மூன்றில் ஒரு பங்கும்[2], உலகின் மக்கள் தொகையில் பாதிக்கு மேலும் உடையது.[3]

ஆசியாவின் மக்கள் பல நூற்றுண்டுகளாக முற்போக்கான நாகரிகத்தையும் கலாசாரத்தையும் பெற்றிருந்தனர். மேலும், ஆசியாவின் வரலாறு, ஐரோப்பாவையும் வட அமெரிக்காவை யும்விடப் பழமையானது; வளப்பமிக்கது. ஆசியாக் கண்டம் 'நாகரிகத்தின் தொட்டில்' (Cradle of Civilisation) என்று அழைக்கப்படும் பெருமைக்குரியது.

உலகப் பெரும் சமயங்களாகக் கருதப்படும் இந்து மதம்[4], யூதமதம்[5], புத்தமதம்[6], கிறித்தவ மதம்[7], இஸ்லாம்[8] போன்ற வற்றின் பிறப்பிடம் என்பது ஆசியாவின் மற்ருெரு தனிச் சிறப்பு ஆகும். கி.பி. 18, 19ஆம் நூற்ருண்டுகளில் ஆசியாவின் பெரும்

[1] Ural Mountains.
[2] The Continent of Asia covers 1,70,00,000 square miles.
[3] Asia contains about 200.00,00,000 people.
[4] Hinduism [5] Judaism [6] Buddhism
[7] Christianity [8] Islam

பகுதி ஐரோப்பிய வல்லரசுகளாகிய இங்கிலாந்து மற்றும் ஃபிரான்சு வல்லரசுகளின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்தது. இன்று ஆசிய மக்கள் எல்லோரும் சுதந்தரம் பெற்றுவிட்டதோடு, அரசியல் நிலைப்பேறு, பொருளாதாரத் தன்னிறைவு, தொழில் நுட்ப முன்னேற்றம் ஆகியவற்றை அடையக் கடுமையாக முயன்றும் வருகின்றனர். உச்சநிலைகளும், வேறுபாடுகளும், முரண்பாடுகளும் கொண்டது ஆசியாக் கண்டம். மேலும், இது உலகிலேயே மிக உயரமான மலையையும்[1], கடல் மட்டத்திலிருந்து மிகத் தாழ்வான நிலப்பரப்பையும்[2] கொண்டது. எல்லா வகையான தட்பவெப்ப நிலைகளையும் கொண்டிருப்பது ஆசியாக் கண்டத்தின் மற்றொரு சிறப்புக்குரிய அம்சமாகும். மிக உச்ச வெப்ப நிலையும் இப் பரந்த கண்டத்தில் நிலவுவதைக் காணலாம்.

ஆசியாக் கண்டம் ஆறு புவியியல் பாகங்களாகப் பிரிக்கப் பட்டுள்ளது. அவையாவன:

(1) கிழக்கு ஆசியா; (2) தெற்கு ஆசியா; (3) தென் கிழக்கு ஆசியா; (4) தென்மேற்காசியா; (5) வடக்கு ஆசியா.

### (1) கிழக்கு ஆசியா

இது 'தூரக் கிழக்கு' (Far East) என்றும் அழைக்கப்படுகிறது. ஆசிய நாகரிகம் சிறப்புற்று விளங்கிய இடங்களுள் இதுவும் ஒன்றாகும். இது, சீனா, கொரியா மற்றும் ஜப்பான், தைவான், ஃபார்மோசா போன்ற தீவுக் கூட்டங்களைத் தன்னகத்தே கொண்டது. இப் பகுதி தெற்கு மற்றும் தென்கிழக்கு ஆசியாவைப் போலல்லாமல், வெப்ப மண்டலத்தினின்றும் தள்ளி இருப்பதால், இங்கு எல்லாவகைப் பருவங்களும்[3] நிலவுகின்றன.

### (2) தெற்கு ஆசியா

சில சமயங்களில் இப் பரந்த நிலப்பரப்பை இந்திய துணைக் கண்டம்[4] என்றும் அழைப்பர். இது இமயமலையிலிருந்து தெற்கே இந்து மகா சமுத்திரம் வரை பரவி ஒரு பெரிய முக்கோண[5] நிலப்பரப்பாகக் காட்சி தருகிறது. இப் பரப்பு மேற்கே

[1] Mount Everest, 29,028 feet.
[2] The Dead Sea, about 1300 feet below sea-level.
[3] Hot, cold, dry, and rainy seasons.
[4] Indian sub-continent.
[5] A huge triangle.

அரபிக் கடலாலும், கிழக்கே வங்கக் கடலாலும், தெற்கே இந்து மகா சமுத்திரத்தாலும் சூழப்பட்டுள்ளது. தெற்கு ஆசியா[1]வை மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம். முதலாவது பகுதி, இமயமலை யின் அடிவாரத்திலுள்ள வடக்குப் பகுதி. அடுத்தது, செழிப் பான கங்கை மற்றும் சிந்து சமவெளிகள். மூன்றுவது, முக் கோண வடிவம் கொண்ட தக்காணப் பீடபூமி.

### (3) தென்கிழக்கு ஆசியா

இது பர்மா, தாய்லாந்து, லாவோஸ், கம்போடியா, வடக்கு வியட்நாம், தெற்கு வியட்நாம், மலேசியா, சிங்கப்பூர், இந்தோ னேஷியா, ஃபிலிப்பைன்ஸ் ஆகிய நாடுகளைத் தன்னகத்தே கொண்ட வெப்பப் பிரதேசமாகும்.

### (4) தென்மேற்கு ஆசியா

இந் நிலப்பரப்பு அண்மைக்கிழக்கு[2] நாடு அல்லது மத்திய கிழக்கு[3] என்று கூறப்படுவதுண்டு. இந்தப் பகுதியில், துருக்கி, ஈரான், சிரியா, இராக், ஏடன் (Aden), ஸன்ஆ (Sana), லெபனன், ஜோர்தான், இஸ்ரேல், குவைத், சவூதி அரேபியா மற்றும் சைப்ரஸ் தீவு ஆகியவை அடங்கும். மேலும், அராபிய ஷேக்குகள் மற்றும் சிற்றரசர்களால் ஆளப்படும் சிறு சிறு பகுதி களும் இதில் அடங்கும். இங்குள்ள சுயெஸ் கால்வாய்[4] ஆசியாக் கண்டத்தையும் ஆப்ரிக்காக் கண்டத்தையும் பிரிக்கும் பிரிவுக்கு எல்லைக்கோடாக விளங்குகிறது. ஆகையால், சுயெஸ் கால்வா யின் கிழக்கிலுள்ள சிறுய் தீபகற்பமும்[5] ஆசியாவின் ஒரு பகுதி யாகக் கருதப்படுகிறது. தென்மேற்காசியா பெரும்பாலும் வெப்ப மான வறண்ட நிலப்பரப்பைக் கொண்டுள்ளது. இங்கு உலகின் மிக உச்சநிலை வெப்பம் நிலவுகிறது. இதன் மொத்த நிலப்பரப்பு முழுதும் மிகக் குறைந்த அளவுக்கே மழை பொழிகிறது. ஆனாலும், மத்தியதரைக் கடலுக்கும் பாரசீக வளைகுடாவிற்கும் இடையே அரைவட்ட அளவில் மிக செழிப்புள்ள நிலப்பரப்பு ஒன்றுள்ளது. அப் பகுதி ‘வளப்பமிக்க வளர்பிறை’[6] என்று அழைக்கப்படுகிறது.

[1] South Asia comprises India, Pakistan, Bangla Desh, Afghanistan, Sri Lanka and the Himalayan States of Nepal, Sikkim and Bhutan.

[2] Near East. [3] Middle East. [4] Suez Canal.

[5] Sinai Peninsula.

[6] 'Fertile Crescent' is used to define a territory, covered by Iraq, Syria, Lebanon, Jordan and Israel.

உலகின் மிகத் தொன்மையான நாகரிகம் இங்கு நிலவியிருக்கலாம் என்பது பெரும்பாலானோரின் கருத்து. ஏறத்தாழ கி.பி. 635 முதல் கி.பி. 1000ஆவது ஆண்டு வரை, ஏறக்குறைய 365 ஆண்டுகள் மட்டும் எகிப்து, அரேபியா, 'வளப்பமிக்க வளர்பிறை' மற்றும் ஈரான் போன்ற நாடுகள் பொதுவான வரலாற்று நிகழ்ச்சிகளைக் கொண்டுள்ளன. கி.பி. 1300 முதல் கி.பி. 1920 வரை துருக்கியும், முற்சொல்லப்பட்ட நாடுகளில் ஈரான் நீங்கலாகப் பிறநாடுகளும் பொதுவான வரலாற்றைக் கொண்டவை.

தென்மேற்காசியாவில் பெரும்பான்மையாக நிலவி வரும் மதம் இஸ்லாம் ஆகும். யூத மதமும், கிறித்தவ மதமும் அடுத்த நிலையில் அந்தஸ்துப் பெற்றுள்ள முக்கிய மதங்களாகும்.

### (5) வடக்கு ஆசியா

இந்தப் பகுதி ஐரோப்பாவிலிருந்து பசிபிக் சமுத்திரம்வரை பரவியுள்ளது. சைபீரியா மற்றும் சோவியத் மத்திய ஆசியா[1]—(துர்க்மென், உஸ்பெக், தாஜீக், கிர்கீஸ், காஸாக் சோவியத் சோஷலிச குடியரசுகள்)[2] இதனுள் அடங்கும். ஆகவே, இந்தப் பகுதி 'சோவியத் ஆசியா' என்றும் வழங்கப்படுவதுண்டு. இப் பரந்த நிலப்பகுதி ஆசியாவின் மூன்றில் ஒரு பகுதியைக் கொண்டது. ஆனாலும், ஆசியாவின் மக்கள் தொகையில் 3% மக்களே இங்கு வாழ்கின்றனர். இந்தப் பகுதி தாதுக்கனிவளம் நிரம்பியது.[3]

## தென் மேற்காசிய நாடுகளைப்பற்றிய புள்ளியியல் செய்திகள்

### அரேபியா தீபகற்பம் (The Arabian Peninsula)

தென் மேற்காசியாவிலுள்ள அரேபியா தீபகற்பம் 10,00,000சதுர மைல்களுக்கு மேற்பட்ட பரப்பை உடையது. இதன் மக்கள் தொகை 1,50,00,000த்தினும் அதிகமானது. அரசியல் அமைப்பில் இது கீழ்க்கண்ட பிரிவுகளாகப் பிரிக்கப் பட்டுள்ளது:

[1] Soviet Central Asia.

[2] The Turkmen, Uzbek, Tadzhik, Kirghiz, and Kazakh Soviet Socialist Republics.

[3] For more details see : (1) Encyc. Brit. (2) W. C. Brice, 'South-west Asia'. (3) The New Book of Knowledge Vol. I. (4) W. B. Fisher—'The Middle East, a Physical, Social and Regional Geography'.

(1) பஹ்ரைன்; (2) குவைத்; (3) உம்மான்; (4) கத்தர்; (5) சுஊதி அரேபியா; (6) ஐக்கிய அரபு சிற்றரசுகள்; (7) ஏடன்; (8) ஸன்ஆ.

### (1) பஹ்ரைன் (Bahrain)

இது கத்தர் தீபகற்பத்திற்கும் சுஊதி அரேபிய நிலப் பகுதிக்கும் இடைப்பட்ட பல தீவுகளைத் தன்னுள் அடக்கிய ஒரு சிற்றரசாகும். இதன் மொத்த நிலப்பரப்பு 230 சதுர மைல்களாகும். இதன் மக்கள் தொகை சுமார் 2,00,000 ஆகும். இந் நாடு தற்போது சுதந்தர நாடாக இருந்தாலும், இதற்கு முன்னர் ஆங்கிலேயரின் பாதுகாப்பிலேயே இருந்தது. இந் நாட்டு வருவாயில் பெரும் பகுதி எண்ணெய் வளத்தின் மூலமாகக் கிடைக்கிறது. பஹ்ரைனின் தலைநகர் மனுமா ஆகும்.

### (2) குவைத் (Kuwait)

இது அரேபியா தீபகற்பத்தின் வடகிழக்கு மூலையில் அமைந்துள்ள ஒரு சிற்றரசாகும். இதன் மொத்த நிலப்பரப்பு 6178 சதுரமைல்களாகும். மக்கள் தொகை சுமார் 5,40,000 ஆகும்.

நாட்டின் அதிகாரபூர்வமான பெயர்—குவைத் அரசு.

தலைநகர்—குவைத்

மொழி—அராபிய மொழி

அரசு—சட்ட வரம்பிற்குட்பட்ட முடியரசு (Constitutional Monarchy)

இது 1961-ல் சுதந்தரம் பெற்றது.

### (3) உம்மான் (Oman)

அரேபிய தீபகற்பத்தின் தென் கிழக்குக் கரையில் அமைந்துள்ள உம்மான், சுல்தானின் ஆளுகைக்குட்பட்டது. இது 82,000 சதுர மைல்கள் பரப்பளவும், சுமார் 5,65,000 மக்கள் தொகையும் கொண்டது. இது, முன்னர் உம்மான் என்றும் மஸ்கத் என்றும் அழைக்கப்பட்டது. இந் நாட்டில் சுல்தானின் வல்லாட்சி நிலவுகிறது. உம்மானின் தலைநகர் மஸ்கத் (Muscat) ஆகும். பெரும்பான்மையான மக்கள் அராபிய மொழியைத் தாய்மொழியாகக் கொண்டுள்ளனர்,

**கத்தர் (Qatar)**

இது பாரசீக வளைகுடாவிலுள்ள ஒரு தீபகற்பத்தில் அமைந்துள்ளது. சுமார் 4000 முதல், 8500க்கு இடைப்பட்ட சதுர மைல்கள் பரப்பையும், சுமார் 1,00,000 மக்கள் தொகையையும் கொண்டது. இந் நாடு இஸ்லாமிய குடிமரபுத் தலைவரின் ஆட்சிக்குட்பட்டது. இந் நாட்டின் பொருளாதாரம் எண்ணெய் உற்பத்தியைப் பொறுத்தது. மக்களின் தாய்மொழி அராபிய மொழியாகும். தோஹா (Doha) என்பதே இதன் தலைநகர் ஆகும்.

**(5) சவூதி அரேபியா (Saudi Arabia)**

இது அரேபியா தீபகற்பத்தின் சுமார் முக்கால் பகுதியைக் கொண்ட சுதந்தர முடியரசு நாடு ஆகும்.

நாட்டின் அதிகார பூர்வமான பெயர்—'சவூதி அரேபிய முடியரசு'.

| | |
|---|---|
| தலைநகரம் | —ரியாத் (Riyadh) |
| அமைப்பு | —தென்மேற்கு ஆசியா |
| மொழி | —அராபிய மொழி |
| அரசு | —பரிபூரண முடியாட்சி |
| அரசின் தலைவர் | —மன்னர் |

**(6) ஐக்கிய அரபு சிற்றரசுகள் (United Arab Emirates)**

ஐக்கிய அரபு சிற்றரசுகள் நாடு பாரசீக வளைகுடாவைச் சார்ந்த கத்தருக்கும் (Qatar) உம்மானுக்கும் (Oman) இடையில் அமைந்துள்ளது. இது 32,000 சதுர மைல்கள் பரப்பளவும், சுமார் 1,86,000 மக்கள் தொகையும் கொண்டது. இதன் ஏழு[1] அரசுகளாவன:—

(1) அபூதாபி; (2) துபாய்; (3) ரஸ் அல் கைமா; (4) ஷர்ஜா; (5) அஜ்மான்; (6) உம்முல் கைவைன்; (7) ஃபுஜைரா.

[1] (1) Abu Dhabi; (2) Dubai; (3) Ras-al-Khaima; (4) Sharja; (5) Ajman; (6) Umm-al-Qaiwain; (7) Fujaira,

அபூதாபியின் ஜனாதிபதியே சங்கத்தின் தலைவராவார். அபூதாபி, துபாய் ஆகிய இரண்டு சிற்றரசுகள் மட்டும் எண்ணெய் வளத்தில் மிக முக்கியப் பங்கு வகிக்கின்றன.

### (7) ஏமன் (Yemen Aden)

ஏமன்[1] என்பது அரேபியத் தீபகற்பத்தின் தென் கரையில் அமைந்துள்ள ஒரு சுதந்தரக் குடியரசு ஆகும். ஏமன் என்கிற நாடு முன்னர் ஆங்கிலேயக் குடியேற்றமாகிய ஏடனும், ஆங்கிலேய ஆளுகைக்குட்பட்ட தெற்கு அரேபியாவும் இணைந்த பகுதியாகும்.

நாட்டின் அதிகார பூர்வமான பெயர்—யமன் மக்கள் ஜனநாயகக் குடியரசு.

தலைநகர்—ஏடன் (Aden).

பரப்பு—1,11,075 சதுர மைல்கள்.

மக்கள் தொகை—சுமார் 12,00,000.

அரசு—குடியரசு.

மொழி—அராபிய மொழி.

அரசின் தலைமை அதிகாரி—ஜனாதிபதி சபையின் தலைவர்.

அங்கம் வகித்தல்—அரபுக் கூட்டாட்சி, மற்றும் ஐக்கிய நாடுகள்.

### (8) ஸன்ஆ (Yemen Sana)

இந் நாடு அரேபியத் தீபகற்பத்தின் தென்மேற்குப் பகுதியில் அமைந்த ஒரு சுதந்தர அரபு நாடாகும். இந் நாடு 1962ஆம் ஆண்டு வரை 'இமாம்' (Imam) என்று அழைக்கப்படும் இஸ்லாமிய சமயத் தலைவர் ஒருவராலேயே ஆளப்பட்டு வந்தது. 1962ஆம் ஆண்டில் ஒரு பெரும் புரட்சி ஏற்பட்டதால், இமாம் என்பவர் பதவி நீக்கம் செய்யப்பட்டு, ஏமன் ஒரு குடியரசாக மாறியது.

நாட்டின் அதிகார பூர்வமான பெயர் யமன் அரபுக் குடியரசு.

தலைநகரம்—சன்ஆ (Sana).

[1] அராபிய மொழியில் 'யமன்' என்று அழைக்கப்படும் இச் சொல் தமிழில் உயிரீர்க்கும் காலனுக்குப் பெயராய் விளங்குகிற காரணத்தால், இதை 'ஏமன்' என்று அழைக்கிறார்கள் போலும்!

பரப்பு—75,290 சதுர மைல்கள்.

மக்கள் தொகை—சுமார் 50,00,000.

மொழி—அராபிய மொழி.

அரசு—குடியரசு.

அரசின் தலைவர்—ஜனாதிபதி சபையின் தலைவர்.

அங்கம் வகித்தல்—அரபுக் கூட்டாட்சி, மற்றும் ஐக்கிய நாடுகள்.

ஈரான் (Iran)

நாட்டின் அதிகார பூர்வமான பெயர்—ஈரான்.

தலைநகரம்—தெஹ்ரான்.

அமைப்பு—தென்மேற்காசியா.

பரப்பு—6,36,294 சதுர மைல்கள்.

மக்கள் தொகை—சுமார் 2,80,00,000.

மொழி—நவீன பாரசீக மொழி, துருக்கி, ஆர்மீனிய, அராபி மொழிகள்.

அரசு—சட்ட வரம்பிற்குட்பட்ட முடியரசு.

அரசின் தலைவர்—மன்னர் (ஷஹின்ஷா).

இராக் (Iraq)

நாட்டின் அதிகார பூர்வமான பெயர்—இராக் குடியரசு.

அமைப்பு—தென்மேற்காசியா.

தலைநகரம்—பாக்தாத் (Baghdad).

பரப்பு—1,67,925 சதுர மைல்கள்.

மக்கள் தொகை—சுமார் 86,00,000.

மொழி—அராபிய மொழி (ஆட்சி மொழி), குர்தீ, பாரசீக மொழி, துருக்கி முதலியன.

அரசு—குடியரசு.

அரசின் தலைவர்—ஜனாதிபதி.

அங்கம் வகித்தல்—அரபுக் கூட்டாட்சி மற்றும் ஐக்கிய நாடுகள்,

**லெபனுன் (Lebanon)**

நாட்டின் அதிகாரபூர்வமான பெயர்—லெபனுன் குடியரசு.

தலைநகரம்—பைரூத் (Beirut).

அமைப்பு—தென்மேற்காசியா.

பரப்பு—4015 சதுர மைல்கள்.

மக்கள் தொகை—சுமார் 25,00,000.

மொழி—அராபி மொழி (ஆட்சி மொழி); மற்றும், ஃபிரெஞ்சும் ஆங்கிலமும்.

அரசு—குடியரசு.

அரசின் தலைவர்—ஜனுதிபதி.

ஆட்சியின் தலைவர்—பிரதம மந்திரி.

அங்கம் வகித்தல்—ஐக்கிய நாடுகள் மற்றும் அரபுக் கூட்டாட்சி.

**சிரியா (Syria)**

நாட்டின் அதிகாரபூர்வமான பெயர்—சிரிய அரபுக் குடியரசு (Syrian Arab Republic).

தலைநகரம்—திமஷ்க்[1] (Damascus).

அமைப்பு—தென்மேற்காசியா.

பரப்பு—71,498 சதுர மைல்கள்.

மக்கள் தொகை—சுமார் 59,00,000.

மொழி—அராபி மொழி (ஆட்சி மொழி); மற்றும், குர்தீ, துருக்கி, ஆர்மீனிய, அரேபிய, ஃபிரெஞ்சு, ஆங்கில மொழிகள்.

அரசு—குடியரசு.

அரசின் தலைவர்—ஜனுதிபதி.

ஆட்சியின் தலைவர்—பிரதம மந்திரி.

அங்கம் வகித்தல்—அரபுக் கூட்டாட்சி, மற்றும் ஐக்கிய நாடுகள்.

**துருக்கி (Turkey)**

நாட்டின் அதிகார பூர்வமான பெயர்—துருக்கிக் குடியரசு.

[1] தூத்துக்குடி என்பது Tuticorin என்று அழைக்கப்படுவது போல, 'திமஷ்க்' என்பது Damascus என்று அழைக்கப்படுகிறது.

தலைநகரம்—அன்க்காரா (Ankara).

அமைப்பு—தென்கிழக்கு ஐரோப்பாவும், தென்மேற்காசியாவும்.

பரப்பு—3,01,381 சதுர மைல்கள்.

மக்கள் தொகை—சுமார் 3,57,00,000.

மொழி—துருக்கி (Turkish).

அரசு—குடியரசு.

அரசின் தலைவர்—ஜனாதிபதி.

ஆட்சியின் தலைவர்—பிரதம மந்திரி.

அங்கம் வகித்தல்—ஐக்கிய நாடுகள், மற்றும் அகில உலகப் பல துறை நிறுவனங்களோடு தொடர்பு.

**ஜோர்தான்** (Jordan)

நாட்டின் அதிகார பூர்வமான பெயர்—ஜோர்தான் ஹாஷிமீ அரசு (Hashimite Kingdom of Jordan).

தலைநகரம்—அம்மான் (Amman).

அமைப்பு—தென்மேற்காசியா.

பரப்பு—37,738 சதுர மைல்கள்.

மக்கள் தொகை—சுமார் 2,11,45,000.

மொழி—அராபி (Arabic).

அரசு—சட்டவரம்பிற்குட்பட்ட முடியரசு (Constitutional Monarchy).

அரசின் தலைவர்—மன்னர்.

அங்கம் வகித்தல்—ஐக்கிய நாடுகள் மற்றும் அரபுக் கூட்டாட்சி.

**இஸ்ரேல்** (Israel)

நாட்டின் அதிகாரபூர்வமான பெயர்—இஸ்ராயீல்[1] அரசு.

தலைநகரம்—ஜெருசலம் (Jerusalem).

அமைப்பு—தென்மேற்காசியா.

பரப்பு—7,992 சதுர மைல்கள்.

[1] முன் பக்கம் 256 பார்க்க,

மக்கள் தொகை—சுமார் 30,00,000.

மொழி—ஹீப்ரு, அராபி (ஆட்சி மொழிகள்). மற்றும், ஆங்கிலம், ஃபிரெஞ்சு, யுத்திஷ் முதலியன

அரசு—குடியரசு.

அரசின் தலைவர்—ஜனாதிபதி.

ஆட்சியின் தலைவர்—பிரதம மந்திரி.

அங்கம் வகித்தல்—ஐக்கிய நாடுகள்.

**சைப்ரஸ்** (Cyprus)

நாட்டின் அதிகார பூர்வமான பெயர்—சைப்ரஸ் குடியரசு.

தலைநகரம்—நிகோசியா (Nicosia).

அமைப்பு—கிழக்கு மத்தியதரைக்கடலில் உள்ள ஒரு தீவு.[1]

பரப்பு—3572 சதுர மைல்கள்.

மக்கள் தொகை—சுமார் 6,22,000,

மொழி—கிரேக்கம், துருக்கி (ஆட்சி மொழிகள்), மற்றும் ஆங்கிலம்.

அரசு—குடியரசு.

அரசின் தலைவர்—ஜனாதிபதி.

1960, ஆகஸ்டு 16 முதல் சுதந்தர நாடாகியது.

ஐக்கிய நாடுகள் சபையில் அங்கம் வகிக்கிறது.

இன்னும் அதிக விவரங்களுக்குக் காண்க:—Hay, R. 'The Persian Gulf States'. 'The New Book of Knowledge' Volumes-3, 9, 10, 12, 17, 18, 20.

[1] சைப்ரஸ் வரலாற்று வகையில் கிரீசுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தாலும், இது ஆசியாவின் ஒரு பாகமாகவே கருதப்படுகிறது.

பிற்சேர்க்கை (ஆ)

# சில முக்கியமான ஆப்ரிக்க முஸ்லிம் நாடுகளின் புள்ளி விவரங்கள்

## (Statistical Information on some important African Muslim Countries)

### அல்ஜீரியா (Algeria)

வட ஆப்ரிக்காவில் அல்ஜீரியா ஒரு சுதந்தர நாடாகும்: மத்தியதரைக்கடல்[1] அதன் வடக்குக்கரையில் இருக்கின்றது. லிபியாவும்[2], தூனிசியாவும்[3] கிழக்கே உள்ளன; மாலி[4], மாரிட்டானியா[5], நைஜர்[6] ஆகியன தெற்கே உள்ளன; ஸ்பானிய சஹாராவும்[7], மொராக்கோவும்[8] மேற்கே உள்ளன. அல்ஜீரியா வின் பரப்பளவு 9,19,593 சதுர மைல்களாகும். அதன் மொத்த மக்கள் தொகை சுமார் 1,33,49,000 ஆகும். அனேக அல்ஜீரி யர்கள் அராபிய மொழி பேசும் அராபியர்கள் ஆவர். பெர்பர்[9] மிக விரிந்த அளவில் பேசப்படும் இரண்டாவது முக்கிய மொழி யாகும். நகரத்திலுள்ள பல படித்த மக்கள் ஃபிரெஞ்சு மொழி யையும் பேசுகின்றனர்.

நாட்டின் அதிகார பூர்வமான பெயர்—அல்ஜீரியக் குடியரசு.

தலைநகரம்—அல்ஜியேர் (Algiers).

அரசு—குடியரசு.

அரசின் தலைவர்—ஜனாதிபதி.

மொழி—அராபி, பெர்பர், ஃபிரெஞ்சு ஆகியன.

[1] Mediterranean Sea.
[2] Libya.
[3] Tunisia.
[4] Mali.
[5] Mauritania.
[6] Niger.
[7] Spanish Sahara.
[8] Morocco.
[9] Berber.

தூனிசியா (Tunisia)

வட மேற்கு ஆப்ரிக்காவிலுள்ள சுதந்தர நாடு தூனிசியா ஆகும். இதன் பர்ப்பளவு 63,378 சதுர மைல்களாகும். இந் நாடு மேற்கே அல்ஜீரியாவாலும், தென்கிழக்கே லிபியா வாலும், கிழக்கு, வடக்கு ஆகிய பகுதிகளில் மத்திய தரைக் கடலாலும் சூழப்பட்டுள்ளது. தூனிசியாவின் மக்கள் தொகை சுமார் 50,27,000 ஆகும். அரேபியர்களால் 'ஜஸீருல் மக்ரிப்' (Djezira-el-Maghrib, அதாவது, மேற்குத் தீவு) என்று அழைக் கப்படும் பகுதியின் ஒரு பாகமாக தூனிசியா விளங்குகிறது. ஏனெனில், ஆப்ரிக்காவிலிருந்து சஹாராவால் இது பிரிக்கப் பட்டுள்ளது.

நாட்டின் அதிகாரபூர்வமான பெயர்—தூனிசிய குடியரசு.

தலைநகரம்—தூனிஸ் (Tunis).

அரசு—குடியரசு.

அரசின் தலைவரும், ஆட்சியின் தலைவரும்—ஜனாதிபதி.

மொழி—அராபி; பெர்பர்; ஃபிரெஞ்சு.

லிபியா (Libya)

வடக்கு ஆப்ரிக்காவிலுள்ள ஒரு சுதந்தர நாடு லிபியா ஆகும். இதன் பரப்பளவு 6,86,500 சதுர மைல்களாகும். மத்தியதரைக் கடலின் வடக்குப் பகுதியில் லிபியா நீண்ட கடற் கரைப் பகுதியைப் பெற்றிருக்கிறது. இதன் எல்லைகளாக மேற்கே தூனிசியாவும் அல்ஜீரியாவும், தெற்கே நைஜரும் சாட் (Chad) வும், கிழக்கில் சூடானும் எகிப்தும் அமைந்துள்ளன. இதன் மக்கள் தொகை சுமார் 18,69,000 ஆகும். பெரும் பாலான மக்கள் முஸ்லிம்கள் ஆவர். லிபியாவில் வசிக்கும் எல்லா மக்களுக்கும் வழிபாட்டு உரிமை வழங்கப்பட்டுள்ளது.

நாட்டின் அதிகாரபூர்வமான பெயர்—லிபிய அரபுக் குடியரசு.

தலைநகரம்—திரிப்போலி (Tripoli).

அரசு—குடியரசு.

அரசியல் தலைவர்—ஜனாதிபதி.

மொழி—அராபி (Arabic).

### மொராக்கோ (Morocco)

வடமேற்கு ஆப்ரிக்காவிலுள்ள மலைகளால் சூழப்பட்ட நாடு மொராக்கோ[1] ஆகும். இதன் பரப்பளவு 1,74,471 சதுர மைல்களாகும். இது கிழக்கிலும் தென்கிழக்கிலும் அல்ஜீரியாவையும், தெற்கில் ஸ்பானிய சஹாராவையும் எல்லைகளாகக் கொண்டுள்ளது. மேற்கில் அட்லான்டிக் கடலில் மிக நீண்ட கரைப் பகுதியைக் கொண்டது. வடக்கில் மத்தியதரைக் கடலில் கரைப் பகுதியைக் கொண்டுள்ளது. மொராக்கோவின் மக்கள் தொகை சுமார் 1,51,50,000 ஆகும். மொராக்கோவின் ஆதிவாசிகள் பெர்பர்களாவர் (Berbers). அவர்கள் இன்றும் மலைப் பகுதிகளில் வாழ்கின்றனர். சில சமயங்களில், மூர்கள் (Moors) என்று அழைக்கப்படுகின்ற அராபியர்கள் வடமேற்கில் குடியிருக்கின்றனர். மேலும், கறுப்பு ஆப்ரிக்கர்களும், யூத (Jewish), ஐரோப்பிய வகுப்பினரும் இங்கு உள்ளனர். பெரும்பாலான மக்கள் முஸ்லிம்களாவர்.

நாட்டின் அதிகாரபூர்வமான பெயர்—மக்ரிபுல் அக்ஸா—(Moghreb-el-Aksa–மொராக்கோ முடியரசு.)

தலைநகரம்—ரபாத் (Rabat).

அரசு—முடியரசு.

அரசின் தலைவர்—மன்னர்.

மொழி—அராபி, பெர்பர், மற்றும் ஃபிரெஞ்சு.

### எகிப்து (Egypt)

எகிப்து[2] நிலவியல் அமைப்பில் ஆப்ரிக்காவின் ஒரு பகுதியாக இருந்தாலும், வரலாற்று ரீதியிலும் கலாசாரத்தின் அடிப்படையிலும் பல காலங்களாக மேற்காசியாவின் ஒரு பகுதியாகவே இது கருதப்படுகிறது. ஒரு வகையில் வட ஆப்ரிக்கக் கூட்டணியிலிருந்தும், மற்றொரு வகையில் அராபிய தீபகற்பக் கூட்டணியிலிருந்தும் வேறுபட்டு, விசால சிரியா, இராக் ஆகிய இரண்டு மிணைந்த அரபுக் கூட்டணியாக இது அமைந்துள்ளது.[3] ஆப்ரிக்காவின் வடகிழக்குக் கோடியில் உள்ள நாடு எகிப்து ஆகும். எகிப்தின் ஒரு பகுதியாகக் கருதப்படுகின்ற சினாய் தீபகற்பம் (Sinai Peninsula) ஆசியாவில் உள்ளது. ஆப்ரிக்காவை

[1] அராபிய மொழியில் இது 'மக்ரிப்' என்று அழைக்கப்படும்.

[2] அராபிய மொழியில் இந் நாடு, அன்றும் இன்றும் 'மிஸ்ர்' என்றே அழைக்கப்படுகிறது.

[3] பேராசிரியர் ஹிட்டி, 'அராபிய வரலாறு,' பக்கம், 719.

யும் ஆசியாவையும் இணைக்கின்ற இடைநெறியில் உள்ள இந் நாட்டின் எழுதப்பட்ட வரலாறு சுமார் ஐயாயிரம் ஆண்டு களுக்கு உட்பட்டது. ஐரோப்பாவுக்கும் ஆசியாவுக்கும் இது நுழைவாயிலாக (Gatewav) இருப்பதோடு, மத்தியதரைக் கடலை யும் (Mediterranean Sea) செங்கடலையும் (Red Sea) இணைக்கின்ற சுயெஸ் கால்வாய் (Suez Canal) எகிப்துக்குச் சொந்தமானது. மேற்கே லிபியாவாலும், வடக்கே மத்தியதரைக் கடலாலும், வட கிழக்கே இஸ்ரேலாலும் (Israel), கிழக்கே அக்கபா வளைகுடா (Gult of Aqaba) மற்றும் செங்கடலாலும், தெற்கே சூடானாலும் எகிப்து சூழப்பட்டுள்ளது. இதன் பரப்பளவு சுமார் 3,86,900 சதுர மைல்களாகும். இதன் மக்கள் தொகை சுமார் 3,25,01,000 ஆகும்.

நாட்டின் அதிகாரபூர்வமான பெயர்—எகிப்து அரபுக் குடியரசு (Jamhuryat Misr—ஜம்ஹூரியத் மிஸ்ர்).

தலைநகரம்—காஹிரா[1] (Cairo).

அரசு—குடியரசு.

அரசின் தலைவரும் ஆட்சியின் தலைவரும்—ஜனாதிபதி.

மொழி—அராபி, ஆங்கிலம், ஃபிரெஞ்சு.

[1] காஹிரா என்னும் அராபிய சொல் Cairo என்று ஐரோப்பிய மொழி யில் திரிந்துவிட்டது.

பிற்சேர்க்கை—(இ)

# யூதர்களின் அதிதீவிர இயக்கம் (Zionism)

'Chambers Encyclopaedia' என்னும் கலைக் களஞ்சியம் 14-ஆவது பிரிவேட்டில் (Volume) 'Zionism' என்ற சொல்லுக்குப் பின்வரும் விளக்கம் தரப்பட்டிருக்கிறது:

'பாலஸ்தீனத்தில் யூதர்கள் ஏறத்தாழ 1200 ஆண்டுகளாகத் தொடர்ந்து ஒரு தேசிய இனத்தினராக (Nation) விளங்கினர். அந் நீண்ட காலப் பகுதியில் மிகச் சொற்ப ஆண்டு இடைவெளியில்தான் சற்றுத் தடங்கல் ஏற்பட்டு, அவர்கள் நாடிழந்து தவித்தனர். எனினும், இன்றளவும் அவர்கள் அந் நாட்டுடன் தொடர்பு கொண்டுதான் உள்ளனர். அவர்களுக்குரிய பிரச்சினைக்கான பரிகாரத்தை அந்தப் பாலஸ்தீனத்தில்தான் தீர்த்துக்கொள்ள முடியும்' என்னும் வாதங்களடங்கிய கோட்பாட்டை அடிப்படையாய் வைத்து, அந் நிலப்பரப்பில் யூதர்களை மீண்டும் குடியேறச் செய்து, அங்கே அவர்களைத் தேசிய இனமாக ஆக்கிப் புனர் நிர்மாணம் செய்துவிட வேண்டும் என்று கிளர்ச்சி செய்யும் ஓர் இயக்கத்துக்குத்தான் 'Zionism' என்று பெயர். இந்த இயக்கம் 1897ஆம் ஆண்டில் தோன்றிற்று.

யூதேயா நாட்டு அரசு (The State of Judaea) ரோமானியர்களால் கி.பி. 70-ல் கைப்பற்றப்பட்டது முதல், அதை எப்படியாவது மீட்கத் திட்டமிட்டு வந்தனர் யூதர்கள். அவர்கள் தங்கள் சுதந்தரத்தைப் பறிகொடுத்த பின்னரும், பார் கோச்பா[1] (Bar-Cochba, 132–135 A.D.) என்பவரின் தலைமையில் ரோமானியருக்கு எதிராகப் பெரும் கிளர்ச்சி செய்தனர். ஆனால் அக் கிளர்ச்சி அடக்கி நசுக்கப்பட்டது. கி.பி. 637-ல் அராபியர்கள் பாலஸ்

[1] Originally Shimon Bar Kosebah, leader of the Jewish Revolt against the Romans in Palestine during the reign of Emperor Hardian. For more details see Encyc. Brit., Vol. III, p. 157.

தீனத்தின்மீது படையெடுத்தபோதுங்கூட அங்கே 3 இலட்சம் முதல் 4 இலட்சம் வரை யூதர்கள் இருக்கத்தான் செய்தார்கள். ஆனுல், காலப்போக்கில் அந்த எண்ணிக்கை சுருங்கிவிட்டது. தங்கள் மதத்தின் முக்கிய கோட்பாடாகிய, யூத தேசிய அரசாட்சியை மீண்டும் புத்துயிர் பெற்றெழச் செய்தல் வேண்டும் (Restoration) என்னும் உத்வேக உணர்ச்சியால் உந்தப்பெற்ற வைதிக யூதர்கள் வரலாற்று மத்திய காலத்திலிருந்து (Middle Ages) கூட்டம் கூட்டமாக அப் புண்ணிய பூமியை நோக்கிப் புனித யாத்திரைகளே மேற்கொள்ளத் தொடங்கினர். அத்தகு பக்தர்களின் கூட்டம் அங்கே சென்று தெய்விக இலக்கியங்களைப் பயிலவேண்டும், அங்கேயே உயிர்த் தியாகம் புரிய வேண்டும் என்பனவற்றையே இலட்சியமாய்க் கொண்டிருந்தது.

கால நெடுகிலும் யூதர்களும் யூதர்களல்லாதவர்களும் யூதர் ஆட்சி மீட்பிக்கப்படத்தான் வேண்டும் என்று விட்டுவிட்டு வாதாடிக்கொண்டேயிருந்தார்கள் என்ருலும், அந்தக் கனவை நனவாக்கும் திட்டத்துக்கு உருப்படியான முதல் முயற்சிகள் 19ஆம் நூற்ருண்டின் நடுப் பகுதிவரை எவராலும் மேற்கொள்ளப்படவே இல்லே. இந்த உணர்ச்சிக்கான ஆக்கபூர்வ ஆலோசனையை முதன் முதலாக ஊட்டிவிட்டவர்களுள் நெப்போலியனும் ஒருவராவார். சிரியா நாட்டுக்கெதிராகத் தம்முடன் யூதர்கள் இணைந்து கொள்வார்களானுல், இந்த யூதர்களுக்குத் தாம் உதவி நல்கச் சித்தமாயிருப்பதாக அவர் அறிவித்தார். இங்கிலாந்திலோ என்ருல், அரசியற் பிரமுகர்கள், பக்த சிகாமணிகள், எழுத்தாளர்கள் ஆகியோரெல்லாம் இந்தக் கோட்பாட்டை வலியுறுத்தத் தொடங்கினுர்கள்; அதிலும் சிறப்பாக, 1838—40 ஆண்டுகட்கிடையே ஷாஃப்ட்ஸ்பரி என்னும் பிரபு (Lord Shaftesbury) இதற்காகத் தீர்க்கமாக வாதாடினுர். இந்தக் கோட்பாட்டுக்காக ஆரம்பத்தில் பாடுபட்ட சர் மோஸஸ் மான்ட்டிஃபியோர்[1] (Sir Moses Montefiore, 1784-1885) என்னும் யூதப் பிரமுகர் ஏழு முறை பாலஸ்தீனத்துக்குப் புனித யாத்திரை சென்று வந்தார். அங்குச் சென்று, ஆங்கிருந்த யூதர்களின் நிலேயை உயர்த்தவும், விவசாயத் துறைக் குடியேற்றங்களை நிறுவவும் அவர் உதவிகளே நல்கினுர். அமெரிக்காவில், அரசியல் வாதியாகிய மோர்டிசாய் மானுவேல் நோவா (Moredecai Manuel Noah) என்னும் பெரியார் (1785-1851) இக் கோட்பாட்டை ஆதரித்தார்; ஃபிரான்ஸில் ஜோஸஃப் ஸ்லாவடார் (Joseph Slavador) என்பவரும், ஜெர்மனியில் ஒரு

[1] இவர்பற்றி Encyc. Brit. வால்யூம் 15, பக். 781 காண்க.

வைதிக யூத மத குருவாகிய ஹிர்ஷ் கலிஷர் (Rabbi Hirsch Kalischer, 1795—1874) என்பவரும், 'ரோமாபுரியும் ஜெருஸலமும்' என்னும் நூலின் ஆசிரியராகிய சோஷலிஸ எழுத்தாளர் மோஸஸ் ஹெஸ் (Moses Hess, 1812—75) என்பவரும் அக் கோட்பாட்டை வலியுறுத்தியவர்களாவர். 'ரோமாபுரியும் ஜெருஸலமும்' என்னும் நூல்தான் யூதர்களின் தேசியப்பற்றுக்கான அடிப்படைகளை மிகவும் நுட்பமாகவும், திறனுய்வுடனும் எடுத்தியம்பிய முதல் நூலாகும்.

ருஷியாவில் 1881 முதல் யூதர்கள் படுகொலை செய்யப்பட்டனர். திட்டமிடப்பட்டுத் தீவிரமாக நிறைவேற்றப்பட்ட குரூரமான அப் படுகொலை வரலாற்றில் 'போகிராம்ஸ்' (Pogroms) என்று குறிப்பிடப்படுகிறது. அதுவே யூத தேசிய இன எழுச்சிக்கு ஒரு வலிமையான தூண்டுதலாக அமைந்தது. அதன்பின் ருஷியாவிலும், ருமேனியாவிலும், இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும் 'சியோன்மீது அபிமானம் மிக்கோர்' (Lovers of Zion[1]) என்னும் பெயர் கொண்ட சங்கங்கள் மிகவாக முளைத்தெழலாயின. அவற்றின் ஒரே குறிக்கோள், பாலஸ்தீனத்தில் மீண்டும் யூதக் குடியேற்றத்தை நிலைநிறுத்துவது என்பதேயாகும். அச் சங்கத்தினர்களின் கிளர்ச்சிக்கு ருஷியாவிலிருந்த சிந்தனையாளர்கள் வரைந்த உணர்ச்சிப் பெருக்குள்ள எழுத்தோவியங்கள் தெம்பூட்டி வலுவூட்டின. அந்த ருஷிய எழுத்தாளர்கள், யூதர்கள் தங்களுக்குரிய புராதனத் தாய்த் திருநாட்டிலே குடியேற்றப்பட்டால் மட்டுமேதான் அவர்களுக்கு விமோசனம் கிட்டும் என்று வாதிட்டார்கள். அவர்களுள் முக்கியமானவர்கள், டேவிட் கார்டன் (David Gordon, 1826—1886), லியோன் பின்ஸ்கர் (Leon Pinsker, 1821—1891) முதலியோராவர். இந்த லியோன் பின்ஸ்கர் 1882-ல் எழுதி வெளியிட்ட 'Auto Emancipation' (இயல்பான விடுதலை) என்னும் பிரசுரம், பெயரளவில் மட்டுமின்றிச் செயலளவிலும் தத்ரூபமாக யூதர்கள் ஒரு தேசிய இனமாகப் பரிமளிக்கவேண்டியதன் இன்றியமையாமையை வலியுறுத்திற்று. அதன் விளைவாக, 1884-ல் போலந்தின் ஒரு மாநிலமாகிய கட்டோவிட்ஸ் (Kattowitz) என்னுமிடத்தில் கூடிய பெரிய யூத மாநாடொன்றில், பாலஸ்தீனத்தில் யூதர்கள் குடியேறி விவசாயப் பண்ணைக் கிராமங்களை நிறுவ வேண்டும் என்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. (இதுபற்றிய முழு விவரங்களும் 'The Jewish people—4000 years of survival' என்னும்

[1] Originally the name of Jebusite stronghold at Jerusalem captured by David.

தலைப்புடன் Max Wurmbrand and Cecil Roth வரைந்துள்ள அழகிய நூலில் காணப்பெறும்.) 1882-ல் முதன் முதலாக இக் குடியேற்றம் தொடங்கிற்று. இந்தக் குடியேற்றம் கடும் எதிர்ப்புகளைச் சமாளிக்க வேண்டியிருந்தது. பாரிஸ் நகரின் பெரும் பிரபு எத்மோ (ன்) த ரத்ஷீத் (Baron Edmond de Rothschild, 1845-1934) என்பவர் மட்டும் உதவி நல்காமற் போயிருப்பாராயின், அக் குடியேற்றங்கள் என்றைக்கோ புதையுண்டு போயிருக்கும்.

இன்றுள்ள தோற்றத்தில் அந்த 'சியோன் இயக்கம்' (Zion Movement) உருவெடுப்பதற்குக் காரணமாயிருந்தவர் தியோடர் ஹெர்ஸல் (Theodor Herzl 1860-1904) என்னும் வியன்னு வாசியாவார். நாடகாசிரியராகிய அவர் 1896-ல் பிரசுரித்த 'The Jewish State' என்னும் ஒரு கையேட்டில், சர்வ சுதந்தரமுள்ள யூதக் குடியேற்ற நாடு நிறுவப்படுவதொன்றே யூதர்களின் பிரச்சினையை நிரந்தரமாகத் தீர்த்து வைக்கக்கூடிய சரியான பரிகாரமாகும் என்று வாதங்களைத் தொகுத்தளித்தார். பல நாடுகளிலிருந்து பிரதிநிதிகள் ஒருங்கே வந்து குழுமிய ஒரு மாநாட்டை ஹெர்ஸல் 1897-ல் பாஸில் (Basle) நகரில் கூட்டுவித்தார். அம் மாநாட்டில்தான் 'சியோன் அமைப்பு' (Zionist Organisation) உருப்பெற்றது. அப்போது நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தில், 'பொதுச் சட்டப் பாதுகாவலுடன் பாலஸ்தீனத்தில் யூத மக்களுக்கான தனித் தாயகம் ஒன்று உண்டுபண்ணப்படல் வேண்டும்' என்னும் திட்டம் (Basle Programme) உறுதிப்படுத்தப் பட்டது. இந்த(க் கிளர்ச்சி) இயக்கத்துக்கான தலைமைக் காரியாலயம் வியன்னு நகரில் நிறுவப்பட்டது; அதிவிரைவில் அந்த இயக்கம் உலகெங்கும் வியாபிக்கத் தொடங்கிற்று; அந்த அந்த நாட்டிலுள்ள அவ்வியக்கக் குழுக்கள் ஒன்று சேர்ந்து ஒரு கூட்டிணைப்பு (Federation) உருவாயிற்று. துருக்கியின் சுல்தானை (இரண்டாம் அப்துல் ஹமீத்)பாலஸ்தீனத்தில் ஒரு பெரும் நிலப் பரப்பை இக் குடியேற்றத்துக்கென்று ஒதுக்கி ஓர் உரிமைப் பத்திரத்தை (Charter) வெளியிடுமாறு செய்வதென்று ஹெர்ஸல் குறி வைத்தார்; இதற்கென்று அவர் லண்டன் மாநகரில் ஒரு வங்கியைப் பெரும் முதலீடு செய்து, 2,50,000 பவுனைப் பல (Share Capital) பங்குகளாகப் பிரித்து, உலகெங்கிலு முள்ளவர்களிடத்திருந்து வசூலித்தார். தியோடர் ஹெர்ஸல் துருக்கி சுல்தானை நேரில் பேட்டி காணப் பலமுறை முயன்றும் அவரால் வெற்றி பெற இயலவில்லை. ஏமாற்றமுற்றும், மனச்சோர்வுற்றும் விட்ட அவர் இறுதியாகத் தாமே சுயமாகப் பிரிட்டிஷ் அரசுக்கு விண்ணப்பமொன்றைச் சமர்ப்பித்தார். அதைப் படித்துவிட்டு,

பிரிட்டிஷார் இரு யோசனைகளை வழங்கினார்கள். அவற்றுள் முதலாவது யோசனை 1902-ல் வழங்கப்பெற்றது. அது என்னவென்றால், சினாய் தீபகற்பத்தில் (Sinai Peninsula) யூதர்கள் வந்து தங்கித் தங்களுக்கான தாயகத்தை உருவாக்கிக் கொள்வது என்பதாகும். அவர்கள் அதை ஏற்க மறுத்தனர்; அந்த நிலப்பகுதியில் போதுமான நீர்ப்பாசன வசதி கிடையாதாகையால், அது குடியேறுவதற்கு அருகதையற்றது என்று அவர்கள் வாதிட்டார்கள். அடுத்த மாற்று யோசனையை 1903–ல் பிரிட்டிஷார் வழங்கினர். அதாவது, பிரிட்டிஷ் கிழக்கு ஆபிரிகாவில் (British East Africa)ஒரு பகுதியில் சர்வ சுதந்தரக் குடியேற்ற நிலபாகத்தைப் பிரத்தியேகமாக ஒதுக்கி, அங்கே யூதரொருவரை ஆளுநராக நியமித்துத் தருவதாகவும், அதை அவர்கள் தங்கள் தாயகமாக ஆக்கிக்கொள்ளலாம் என்பதாகவும் உறுதியளிக்கப்பட்டது. ஆனால், 1905-ஆம் ஆண்டில் கூடிய 'சியோனிய காங்கிரஸ்' (Zionist Congress) பிரிட்டிஷாரின் இந்த முடிவு பாஸில் திட்டத்துக்கு (Basle Programme) முரணானதென்று நிராகரித்து விட்டது.

யூதர்களின் பிரச்சினை அகில உலகையும் பாதிக்கும் சர்வதேச பிரச்சினையாகும் என்பதை யாவரும் ஏற்குமாறு செய்தார் ஹெர்ஸல். சியோனியர்களின் வங்கி (Zionist Bank) மட்டுமின்றி, 'யூத தேசிய நிதி' (Jewish National Fund) என்னும் ஒரு நிதியமைப்பையும் அவர் தோற்றுவித்தார். அந் நிதியைக் கொண்டு பாலஸ்தீனத்தில் விற்பனைக்கு வரும் நிலங்களை வாங்கிக்கொள்வதென்பது அவரது நோக்கம். அவ்வாறு வாங்கப்படும் நிலங்களை யூதர் எவரும் பராதீனப் படுத்தக்கூடாதென்பதும் கடுமையான இலட்சியமாகும். பிரிட்டிஷார் வழங்கிய கிழக்காபிரிக்கத் திட்டத்துக்கு மறுப்புக் கூறப்பட்டதன் காரணமாக யூதர்களின் இயக்கம் பிளவுண்டு, ஒரு கூட்டத்தினர் இஸ்ராயீல் ஜங்க்வில் (Israel Zangwill, 1864—1926) என்பவரின் தலைமையில் பிரிந்துபோய், உலகின் எந்தப் பகுதியிலாயினும் சரியே, அங்கே யூதர்களுக்கென்று தனித் தாயகம் ஒதுக்கித் தரப்பட்டால் அதுவே போதும் என்று சம்மதம் தெரிவித்தார்கள். ஆனால், இக் கூட்டத்தினர் எந்த ஒரு பயனுள்ள முடிவையும் சாதிக்கவில்லையாகையால், 1914 ஆம் ஆண்டின் முதல் உலகப் போருக்குப் பின், ஜங்க்வில் அக் குழுவைக் கலைத்துவிட்டார்.

1914 ஆம் ஆண்டில் தொடங்கிய போரின் காரணமாக, சியோன் தீவிர இயக்கத்தின் நடவடிக்கைகள் தடைப்பட்டன.

எனினும், இங்கிலாந்தில் இருந்த தலைவர்கள் பிரிட்டிஷ் அரசாங்கத்திடம் தூது சென்றார்கள். டாக்டர் செய்ம் வீஜ்மான் (Dr. Chaim Weizmann)[1] என்பவரும், நஹூம் சொக்கலோவ் (Nahum Sokolow)[2] என்பவரும் பால்ஃபர், லாயிட் ஜார்ஜ், சர் ஹெர்பர்ட் சாமுவல் ஆகிய பிரிட்டிஷ் அமைச்சர்களின் ஆதரவைப் பெற்றுக்கொண்டனர். லாயிட் ஜார்ஜ் பிரதமராயிருந்த பிரிட்டிஷ் அமைச்சரவை 2-11-1917 அன்று ஓர் அறிக்கையை வெளியிட்டது. அதில் பால்ஃபர் கையொப்பமிட்டார்.[3] வெளியுறவு அமைச்சரான பால்ஃபர் பிரகடனப்படுத்திய அறிக்கையில் பின்வருமாறு வாசகம் அமைந்திருக்கிறது: 'யூத குல மக்களுக்கென்று பாலஸ்தீனத்தில் ஒரு தேசியத் தாயகத்தை நிறுவ வேண்டும் என்னும் விஷயத்தில் மாட்சிமை தங்கிய மன்னர் பெருமானின் அரசு மிகவும் சாதகமான கருத்தையே மேற்கொண்டிருக்கிறது; இக் கோட்பாட்டை நிறைவேற்றும் பொருட்டு இவ்வரசு தன்னாலியன்ற அத்தனை நன் முயற்சிகளையும் மேற்கொள்ளும். ஆனால், ஒன்றைமட்டும் நன்கு கருத்தில் கொள்ளவேண்டும். அதாவது, தற்சமயம் பாலஸ்தீனத்தில் வாழ்ந்துவருகின்ற யூதரல்லாத ஜாதியினரின் சிவில் மற்றும் மத உரிமைகளுக்குக் குந்தகம் உண்டுபண்ணிவிடும் எந்தவிதமான நடவடிக்கையும் மேற்கொள்ளப்பட மாட்டாது; அல்லது வேறெந்த நாட்டில் வதியும் யூதப் பிரஜைகளின் உரிமையையோ அரசியல் அந்தஸ்தையோ பாதிக்கும் எவ்விதமான செயலும் புரியப்படமாட்டாது.'

24-4-1920 அன்று ஸான் ரீமோ (San Remo) என்னுமிடத்தில் கூடிய சமாதான மாநாட்டின் உயர்மட்டக்குழு (Supreme Council), துருக்கியுடன் செய்துகொள்ளப்படும் சமாதான ஒப்பந்தப் பத்திரத்தில் பால்ஃபர் அறிக்கையின் வாசகம் அப்படியே பொறிக்கப்பட வேண்டுமென்றும், பாலஸ்தீனத்தின் ஆட்சிப் பரிபாலனத்தை ஏற்று நடத்தும் ஒப்பு உரிமைக் கட்டளை (Mandate) கிரேட் பிரிட்டனின் கரத்திடை இருத்தல் வேண்டுமென்றும் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றிற்று.

[1] மிகப் பிரபலமான விஞ்ஞானியாகவும் பெரிய அரசியல்வாதியாகவும் இலங்கிய இவர், ஒரு யூத வர்த்தகரின் 15 குழந்தைகளுள் ஒருவராக, 1874-ல் ருஷியாவிலுள்ள பின்ஸ்க் (Pinsk) என்னுமிடத்தில் பிறந்தார்; 1952-ல் இஸ்ரேலின் ஜனாதிபதியாக மரித்தார்.

[2] 1861—1936 காலத்தில் வாழ்ந்த இவர் ஒரு போலந்து அறிஞர், எழுத்தாளர், சியோன் கட்சியின் தலைமை நிர்வாக நிறுவனத்தின் ஓர் அங்கத்தினர் ஆவார்.

[3] இந்த அறிக்கைதான் யூத நாடு பிறப்பதற்கே முழு முதற் காரணமாகும்.

சர் ஹெர்பர்ட் சாமுவலின் பராமரிப்பின்கீழ் 1-7-1920 அன்று பாலஸ்தீனத்தின் சிவில் நிர்வாகம் நிறுவப்பட்டது. ஜோர்தான் அக்கரைப் பிரதேசம் 1921-ல் பாலஸ்தீனத்தி லிருந்து துண்டிக்கப்பட்டு, அமீர் அப்துல்லாவின் பராமரிப்பின் கீழ் அதன் சிவில் நிர்வாகம் ஒப்படைக்கப்பட்டது. பால்ஃபர் அறிக்கை வாபஸ் பெறப்பட வேண்டும் என்று அராபிய தலைவர் கள் தட்டிக் கேட்க முற்பட்டுப் பெருங்கலகங்கள் மூளும் நிலை உருவாகவே, பிரிட்டிஷ் அரசு 1922-ல் ஒரு வெள்ளையறிக் கையை (White Paper) வெளியிட்டது. அதில், 'பாலஸ்தீனம் முழுதிலும் வதிகின்ற மக்கள்மீது யூத தேசிய இனத்தைப் புகுத்திவிட வேண்டுமென்னும் கெட்ட எண்ணமேதும் தனக்குக் கிடையாதென்று பிரிட்டிஷ் அரசு பிரகடனப்படுத்திற்று; மற்றும், அந் நாட்டின் பொருளாதாரக் கட்டுத்திட்டத்துக்கு உட் பட்ட அளவுக்கு மட்டுமே யூதர்களின் குடியேற்றம் சமன் செய்யப்படுமென்றும் அவ் வெள்ளையறிக்கை குறிப்பிட்டது. 1929-ல் தொடர்ந்து மூண்ட அராபிய எதிர்ப்பு எழுச்சிகளின் விளைவாக, இரு விசாரணைக் குழுக்கள் அடுத்தடுத்து நியமிக்கப் பட்டன. பிறகு (1937-ல்) மன்னர் விசாரணைக்குழு (Royal Commission) ஒன்று, பாலஸ்தீனத்தை இரு தனித் தனி நாடு களாகப் பிரித்து, ஒன்றை அராபியருக்கும் மற்றொன்றை யூதர் களுக்கும் கொடுத்துவிட வேண்டும் என்று யோசனை வழங்கிற்று. ஆனல், மற்றொரு குழுவோ இந்த யோசனை கிஞ்சித்தும் செயல் படுத்த முடியாததாகும் என்று மறுப்புத் தெரிவித்து விட்டது. எனவே, பிரிட்டிஷ் அரசு தானே சுயமாக ஒரு கொள்கையைப் பிரசுரித்தது (மே, 1939). அது என்னவென்றால், அடுத்த ஐந்தாண்டு காலத்துக்குள் மேலும் 75,000 யூதர்கள் மட்டுமே பாலஸ்தீனத்தில் குடியேறலாம்; நில விற்பனை கட்டுப்படுத்தப் படவேண்டும்; இன்னும் பத்தாண்டுகள் சென்று பாலஸ்தீனம் முழுச் சுதந்தரமும் வழங்கப்பட்டு, ஒரு தனி நாடாக ஆக்கப் பட்டுவிடும் என்பனவே அந்தப் பிரசுரத்தின் சாரமாகும். இந்தக் கொள்கைக் கோட்பாட்டை யூதர்களும் அராபியர்களும் வன்மையாய் எதிர்த்தார்கள். அல்லாமலும், சர்வதேச சங்கத் தின் ஒப்புரிமைக் குழுவும் (The Mandates Commission of the League of Nations) இது ஒப்புரிமைச் சட்டத்துக்கு முரணானது என்று ஒதுக்கித் தள்ளிற்று. இருந்தபோதிலும், இதைப் பிரிட்டிஷ் அரசு பலவந்தமாகச் செயற்படுத்தவே முற்பட்டது.

இரண்டாவது உலகப் பெரும்போர் முடிவடைந்த பின்னர், ஜெர்மானிய நாஜிக் கொடுமையில்[1] தப்பிப் பிழைத்த ஓர் இலட்சம் யூத மக்களுக்குப் பாலஸ்தீனக் குடியேற்ற உரிமைப் பத்திரங்களை வழங்குமாறு யூத மகா சங்கம் கோரிக்கை விடுத்தது. மாதந்தோறும் 1500 யூதர்கள் மட்டும் பாலஸ்தீனத்துக்குள் வரலாம் என்று பிரிட்டிஷ் அரசு வழங்கிய சலுகையை அவர்கள் மொத்தமாக வெறுத்தொதுக்கிவிட்டார்கள். 1946ஆம் ஆண்டின் தொடக்கத்தில் அமர்த்தப் பெற்ற ஆங்கில-அமெரிக்கக் குழுவொன்று ஐரோப்பாவில் வாழும் யூதர்களின் கதியையும், பாலஸ்தீனத்தில் நிலவும் நிலையையும் தேர்ந்தாராய்ந்து ஓர் அறிக்கையைச் சமர்ப்பித்தது. பிரிட்டிஷ் அரசு அதைப் பரிசீலித்து, பின் வருமாறு திட்டம் தீட்டியது: முதலாவதாக, நிலப்பிரிவுகளை நிருணயிப்பது (A Scheme of cantonization); இரண்டாவதாக, ஒரு வரையறைக்குக் கட்டுப் பட்ட உள்நாட்டுச் சுய ஆட்சி (Limited Local Self-Government) சம்பந்தமான ஐந்து வருட அறநிலைப் பொறுப்பு ஒப்பந்தம் (Trusteeship Agreement) செய்து கொள்வது என்பனவே அத் திட்டத்தின் அடிப்படையாகும். இந்த இரண்டையுமே அராபியரும் யூதரும் ஏற்க மறுத்துவிட்டார்கள். எனவே, பிரிட்டிஷ் அரசு இம் முழு விவகாரத்தையும் ஐக்கிய நாட்டு நிறுவனத்தின் பார்வைக்குச் சமர்ப்பித்து விட்டது. ஐக்கிய நாட்டு நிறுவனம் அமர்த்திய ஒரு தனி விசாரணைக்குழு, அராபியருக்கும் யூதர் களுக்கும் தனித் தனியே வெவ்வேறு நிலவட்டாரங்களைத் தனி நாடுகளாக ஒதுக்கித் தந்து விடுவதென்றும், ஜெருஸலத்தைச் சகல நாட்டினர் எல்லைக்குட்பட்ட நிலப்பகுதியாக (An International Enclave) அமைப்பதென்றும், இவற்றை ஒரு பொருளாதார ஒன்றியமாக ஐக்கியப்படுத்துவதென்றும் யோசனை வழங்கிற்று. 29-11-1947 அன்று இந்த யோசனையை ஐ. நா. பொதுச்சபை அங்கீகரித்தது. எனவே, 14-5-1948 அன்று பிரிட்டிஷ் அரசு தனது ஒப்பு உரிமைக்கட்டளையைக் (Mandate) கைவிட்டு, தனது அரசியல் நிருவாகத்தைப் பாலஸ்தீனத்தி லிருந்து வாபஸ் பெற்றுக் கொண்டுவிட்டது. அக்கணமே யூத நாடாகிய இஸ்ராயீல் (Israel) பிறந்து விட்டதாகப் பிரகடனப் படுத்தப்பட்டது; சியோன் இயக்கத் தலைவர் (Zionist Leader) செய்ம் வீஜ்மான் (Chaim Weizmann) அதன் முதல் ஜனாதிபதி

[1] ஆண், பெண், குழந்தைகள் உள்ளிட்ட 5 அல்லது 6 இலட்சம் யூதர்கள் மிகக் குரூரமான வகையில் படுகொலை புரியப்பட்டார்கள். ருஷியப் போகிராமை மிஞ்சும் இப்படிப்பட்ட பயங்கரப் படுகொலை வேறெங்கும் நிகழ்ந்ததில்லை. யூதர்கள் இதற்கு முன் இப்படி ஒட்டுமொத்தமாகத் தொலைத்துக் கட்டப்பட்டதற்கு வரலாற்றில் சான்றில்லை.

யாக நியமனம் பெற்றார். (இந்த ஜனாதிபதி தமது அலுவலகத்தில் பணியாற்றிக் கொண்டிருக்கும் போதே, 9-11-1952 அன்று காலமானார்.) இந்தப் புதிய நாட்டின் அதிகாரபூர்வமான பெயர், மதீனத் இஸ்ராயீல் (Medinet Israel) என்பதாகும். ஹீப்ரு, அராபிய மொழிகளில் இப்படித்தான் அது அழைக்கப்பட்டு வருகிறது.

[இதுபற்றிய மேலும் விவரங்களுக்குக் கீழ்க்காணும் நூல்களைக் காண்க: Cohen— 'The Zionist Movement'; N. Sokolow— 'History of Zionism' 2 Vols; P. Goodman— 'The Jewish National Home'; L. Simon—'Studies in Jewish Nationalism'; S. Levenberg — 'The Jews and Palestine'; மற்றும், Encyclopaedia Britannica என்னும் கலைக்களஞ்சியத்திலுள்ள 'Israel', 'Palestine', 'Zionism' என்கிற கட்டுரைகளையும் பார்க்க.]

பிற்சேர்க்கை—ஈ

# வஹ்ஹாபி இயக்கத் தோற்றம்—செய்திச் சுருக்கம்

பதினெட்டாம் நூற்றுண்டின் இடைப்பகுதியில் முஹம்மது இப்னு அப்துல் வஹ்ஹாப் என்பவரால் தோற்றுவிக்கப்பட்ட ஓர் இஸ்லாம் மதச் சீர்திருத்த இயக்கமே 'வஹ்ஹாபி இயக்கம்' (Wahhabism) என்று அழைக்கப்பட்டு வருகிறது. அரேபியா நாட்டின் நஜ்த் மாவட்ட அல் உயய்ஞ என்னுமிடத்தில் இவர் பிறந்தார்; 1791-ல் காலமானுர். அஹ்மது இப்னு ஹன்பல், அஹ்மது இப்னு தைமிய்யா என்னும் இரு இறைமை ஞானிகள் (Theologians) போதனைகளை அடிப்படையாய்க் கொண்டதே இவ்வியக்கமாகும். இவ்விரு ஞானிகளும்[1] திருக் குர்ஆனின் கட்டளைகளையும், இஸ்லாத்தின் திருநபியின் போதனை மரபுகளையும் (Tradition) எழுத்துக்கெழுத்து மாற்றமில்லாமல் ஒழுங்குறப் பின்பற்றுவதொன்றே மதச் சட்டமாகும், நீதிச் சட்டமாகும் என்று கண்டிப்புடன் கூறியவர்களாவர். இஸ்லாம் மதம் தோன்றி ஒரு நூற்றுண்டு கடந்த பின்னர் முளைத்தெழுந்த எல்லாவிதமான நம்பிக்கைகளையும் பழக்கவழக்கங்களையும் முஹம்மது இப்னு அப்துல் வஹ்ஹாப் வெறுத்தொதுக்கியதுடன், அனுசாரங்கள் அல்லது பொய்ச் சீர்திருத்தங்கள் ஆகிய யாவற்றுக்கும் கடுமையான எதிர்ப்புத் தெரிவித்து, கொஞ்சமும் விட்டுக் கொடுக்காத, மறைபொருள் ஏதுமிலா வைதிகக் கண்டிப்புக் கட்டுப்பாட்டு ஒழுக்க நெறியைப் போதித்தார். தூய்மையான, பரிசுத்தமான இஸ்லாம் பொய்ச் சீர்திருத்தங்

[1] இவ்விரு ஞானிகளுள் முதல்வரான அஹ்மது இப்னு ஹன்பல் (780-858) என்பவர்பற்றி, பாடநூல் நிறுவன 'இந்திய இசுலாமியர் சட்டம்' பக். 10 பார்க்க. இப்னு தைமிய்யா (1263—1328) என்பவர் மெஸபொட்டேமியாவிலுள்ள ஹர்ரான் என்னுமிடத்தில் பிறந்த கீர்த்திமிக்க இறைமைஞான போதகராவார். முழு விவரங்களுக்கு Concise Encyclopaedia of Arabic Civilisation, பக். 522 காண்க.

களால் மாசுபடுத்தப்பட்டுவிட்டது என்பது அவரது வாதம். எனவே, அம் மாசுகளனைத்தையும் களைந்தெறிவதே தமது இலட்சியம் என்கிறார் அவர். மகான்களையும் புனித ஞானிகளையும் வணங்குவதும், பரிசுத்த தலங்களையே தெய்வமாகப் பாவித்து அவற்றைத் தொழுவதும் அறவே தகாவென்று அவர் வெறுத்தொதுக்கியதுடன், இவ்வாறு வழிபடல் ஏகதெய்வக் கோட்பாட்டுக்கு மாற்றமான பல தெய்வ வணக்கமாக ஆகிவிடுமென்றும் கண்டித்தார். அனைத்துவிதமான தவமிருக்கும் செயல்களையும், மற்றுமுள்ள அனுசார (வெளியாசார) சடங்குகளையும் பொய்ந் நம்பிக்கைகளையும் அவர் தீர்க்கமாக ஒதுக்கித் தள்ளினார். வேறுவிதமாகச் சொல்ல வேண்டுமென்றால், வஹ்ஹாபிக் கொள்கை என்பது, இஸ்லாத்தின் ஆரம்ப காலப் பரிசுத்தத் தூய்மையான பழக்க வழக்கக் கோட்பாட்டு நம்பிக்கைகள் மட்டுமே நிலவ வேண்டும், அசலான அப்பட்டத் தன்மை மீட்பிக்கப்பட வேண்டும், திருநபியவர்களும், முதல் நான்கு வைதிகப் பண்பாளர்களான கலீஃபாக்கள் அபூபக்கர், உமர், உதுமான், அலீ என்பவர்களும் நல்வழி காண்பித்துச் சென்றுள்ள நேர்த்தியான முன்மாதிரிகளைக் கடைப்பிடித்து ஒவ்வொரு முஸ்லிமும் தன்தன் சொந்த வாழ்க்கையிலும் பொது வாழ்விலும் எளிமையுடனும் பற்றற்ற கண்டிப்புத்தனத்துடனும் ஒழுகிக்கொள்ள வேண்டும் என்று வற்புறுத்துகின்றது. கி.பி. 632-661 காலவரம்புக்குள் கடைப்பிடிக்கப்பட்ட தூயநெறியே நிலவ வேண்டும், பிற் காலத்தில் நுழைக்கப்பட்ட அனுசாரங்கள் ஒழிய வேண்டும் என்கிறது வஹ்ஹாபிக் கொள்கை.

வஹ்ஹாபிகள் கடைப்பிடிக்கிற ஒரு மிக முக்கியமான கோட்பாடு என்னவென்றால், இனமக்கள் வேற்றுமைகள் (Tribal distinctions) முற்றிலும் களையப்பட்டமையாகும். பழங்காலப் பழக்கமாகிய, ஓரினத்தினர் மற்றோர் இனத்தினர்மீது படையெடுத்துப் பாழ்படுத்துவது, பிறகு பழிக்குப் பழியாக இந்த இனத்தினர் அந்த இனத்தினர்மீது எதிர்த்தாக்குதல் நிகழ்த்துவது, இப் பரஸ்பரப் போராட்டப் பெருஞ் சண்டைகளால் உதிர ஆறு பெருக்கெடுத்து ஓடுவது போன்ற குலைநடுங்கும் பயங்கரப் பகைமை தீர்த்துக் கட்டப்பட்டு விட்டது. மதக் கோட்பாடுகள் சம்பந்தப்பட்டமட்டில், வஹ்ஹாபிகள் ஏனை முஸ்லிம்களினின்று மாறுபடும் ஒரு துறை என்னவென்றால், திரு நபியவர்கள் போதித்ததாகக் கற்பிக்கப்படும் பல போதனைகள் (ஹதீதுகள்) போலியான இடைச் செருகல் என்று ஒதுக்கித் தள்ளிவிடுவதாகும். இம் மாதிரியான போலிக் கூற்றுகளாலேயே பரிசுத்த இஸ்

லாம் பாழ்படுத்தப்பட்டுவிட்டது என்றார் அப்துல் வஹ்ஹாப். ஆனாலும், மற்றெல்லா முஸ்லிம்களையும் போலவே வஹ்ஹாபீ களும் திருக்குர்ஆனின் வாசகம் முற்றும் இறைவனின் வாக்கே என்றும், இத் திருமறை ஒன்றே சமுதாயச் சட்டதிட்டங்களுக் கான அடிப்படை மூலநூல் என்றும் மனமார ஏற்றுக் கொள்வர். அவர்கள் தத்தம் தனிப்பட்ட வாழ்க்கையொழுக்கத்திலும் அதே கண்டிப்புடனும் கட்டுப்பாட்டுடனுமே நெறியுடன் ஒழுகிக் கொள்வர். மது, புகையிலை, சூதாட்டம், பால் ஒழுக்கச் சீர்கேடு, ஆடம்பர வாழ்க்கை, இன்பந்துய்த்தல் முதலிய யாவும் கடுமையாக விலக்கப்பட வேண்டும் என்று பிரகடனப் படுத்தப்பட்டதுடன், அத் தீ நெறிகள் வன்மையுடன் கண்டிக்க வும் பட்டன.

நஜ்த் என்னும் மத்திய அரேபிய நிலப்பரப்பின் மாபெரும் அமீராக விளங்கி வந்த முஹம்மது இப்னு ஸுஊத் (1735-65) என்பவர்[1] வஹ்ஹாபிக் கோட்பாட்டைத் தழுவிக் கொண்ட அந்தக் கணமே அவ் வியக்கம் சமுதாய கண்ணியத்தையும் அரசியல் அதிகார வல்லமையையும் பெற்றுக் கொண்டுவிட்ட துடன், இப்னு ஸுஊத் மன்னரின் மாளிகைக்கும் வஹ்ஹாபி களுக்குமிடையே அதிநெருக்கமான, மிகச் செல்வாக்குள்ள அன்னியோன்னிய சமூக உறவையும் நிலைநாட்டிவிட்டது. முஹம்மது இப்னு ஸுஊதின் வமிசத்தினரின் ஆளுகையின் கீழ் வஹ்ஹாபீகள் அதிவிரைவில் மத்திய அரேபியா முழுதும் பரவி விரிவடைந்து விட்டதுடன், மக்காவையும் மதீனாவையும் கூடத் தங்கள் கட்டுப்பாட்டின் கீழ் வசப்படுத்திக் கொண்டார்கள். ஆனால், எகிப்திலிருந்த உதுமானியத் துருக்கிய அரசப் பிரதி நிதியாகிய முஹம்மதலீ என்பவர் 1818 ஆம் ஆண்டில் திடீ ரென்று வஹ்ஹாபீகள் மீது படையெடுத்துத் தாக்கிப் பெருஞ் சேதம் விளைத்த பொழுது[2] அவர்களுடைய வல்லமையும், கண் ணியமும், செல்வாக்கும் முற்றும் சிதைந்து சின்னாபின்ன மாயின. இவ்வாறு தோல்வியுண்ட அவர்கள் மிகவும் அவ மானத்துக்குள்ளாகி, நஜ்துக்கும் மற்றுமுள்ள மத்திய அரேபியப் பாலைவனக் காடுகளுக்கும் ஓடித் தலைமறைவாகி விட்டார்கள். 1828-ல் அவர்கள் துருக்கி சுல்தானை எதிர்த்து நிகழ்த்திய ஒரு போரிலும் தோல்வி கண்டார்கள். ஆனாலும், ஓர் அரை நூற்

[1] The first known ancestor of the family was Saud ibn-Mohammed ibn Muqarin (1725), Shaikh of one of the tribes of the large Anazah Federation with his seat in Dariyah, an oasis settlement in the Najd, famous for its numerous date groves and beautiful horses.

[2] முன்பக்கம் 218 காண்க.

